# சங்கச் சமூகம்:
# உற்பத்தி முறையும் கருத்தியலும்

முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
**க.இளங்கோ** எம்.ஏ.,எம்.ஃபில்.
No.Phd/Regn/31/FT/07/2011/4729

நெறியாளர்

முனைவர் **எஃப். பாக்யமேரி** எம்.ஏ.,பிஎட்.,எம்.ஃபில்.,பிஎச்டி.
இணைப் பேராசிரியர்
உயர் தமிழியல்துறை
மாநிலக் கல்லூரி


UNDE ORTA RECURRIT


உயர்தமிழியல்துறை
மாநிலக் கல்லூரி (தன்னாட்சி)
சென்னை- 600005


அக்டோபர் - 2015

முனைவர் **அர. ஜெயச்சந்திரன்**
பேராசிரியர் மற்றும் துறைத்தலைவர்
உயர் தமிழியல்துறை
மாநிலக் கல்லூரி
சென்னை - 600 005.

# துறைத் தலைவர் சான்றிதழ்

திரு. க. இளங்கோ அவர்கள் சென்னை மாநிலக் கல்லூரி, உயர் தமிழியல் துறையில் முழுநேர ஆய்வாளராக ஆய்வு மேற்கொண்டு **“சங்க சமூகம்: உற்பத்தி முறையும் கருத்தியலும்”** என்னும் தலைப்பில் முனைவர் பட்டப் பேற்றிற்காக அளிக்கப்படும் இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கோ ஆய்வரங்கிற்கோ அளிக்கப்படவில்லை என்று சான்றளிக்கிறேன்.

**அர. ஜெயச்சந்திரன்**
துறைத்தலைவர்

இடம் :

நாள் :

முனைவர் அர. ஜெயச்சந்திரன்
இணைப் பேராசிரியர்
தமிழ்த் துறைத் தலைவர்
மாநிலக் கல்லூரி
சென்னை - 600 005

முனைவர் **எஃப். பாக்யமேரி**
இணைப் பேராசிரியர்
உயர் தமிழியல்துறை
மாநிலக் கல்லூரி
சென்னை - 600 005.

# மேற்பார்வையாளர் சான்றிதழ்

**''சங்கச் சமூகம்: உற்பத்தி முறையும் கருத்தியலும்''** என்னும் தலைப்பில் திரு.க. இளங்கோ அவர்கள் மேற்கொண்டுள்ள இவ்ஆய்வு மாநிலக் கல்லூரி, உயர் தமிழியல் துறையில் எனது நெறியாண்மையின் கீழ் முழு நேர ஆய்வாக மேற்கொள்ளப்பட்டது என்றும், இவ்ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு வழங்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

**எஃப். பாக்யமேரி**
ஆய்வு நெறியாளர்

இடம் : சென்னை -5

நாள் : 20.10.15

முனைவர் எஃப். பாக்யமேரி
எம்.ஏ.,பி.எட்.,எம்.ஃபில்.,பி.எச்டி.
இணைப் பேராசிரியர்,
உயர்தமிழியல்துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை-5.

**க. இளங்கோ**
முனைவர் பட்ட ஆய்வாளர்
உயர் தமிழியல் துறை
மாநிலக் கல்லூரி
சென்னை - 600 005.

# ஆய்வாளர் உறுதி மொழி

**''சங்கச் சமூகம்: உற்பத்தி முறையும் கருத்தியலும்''** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக மேற்கொள்ளப்பெற்ற இவ்ஆய்வு என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன் வேறு எந்தப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேட்டினை அளிக்கவில்லை என்றும் உறுதி அளிக்கிறேன்.

க. இளங்கோ

**(க. இளங்கோ)**
ஆய்வாளர்

இடம் : சென்னை - 5

நாள் : 20/10/2015

# நன்றியுரை

**'சங்கச் சமூகம்; உற்பத்தி முறையும் கருத்தியலும்'** எனும் தலைப்பில் ஆய்வு மேற்கொள்வதற்கு அனுமதி அளித்திட்ட சென்னைப் பல்கலைக் கழகத்திற்கும், சென்னை மாநிலக் கல்லூரி உயர் தமிழியல் துறையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள இசைவளித்து உரிய காலத்தில் ஆய்வினை முடித்திட உறுதுணையாய் இருக்கும் கல்லூரியின் முதல்வர் அவர்களுக்கும், மேற்கண்ட தலைப்பில் ஆய்வு மேற்கொண்டிருந்த நிலையில் என்னையும் நிதி நல்கைக்குரிய ஆய்வாளராக தேர்வு செய்து இரண்டாண்டு காலம் நிதி நல்கை வழங்கிய செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்திற்கும் முதலில் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

உயர் தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் அர. ஜெயச்சந்திரன் அவர்கள் இம்முனைவர் பட்டப் பேற்றிற்கான ஆய்வேட்டினை உரிய காலத்தில் முடித்திட பல்லாற்றானும் உதவியமைக்கு நன்றிகளும், வணக்கங்களும் உரித்தாகும்.

எனக்குப் பெறாத அன்னையாய் விளங்கும் பேராசிரியர் பெருந்தகை முனைவர் எஃப். பாக்யமேரி அவர்கள் எனது சூழ்நிலைகளை அனுசரித்து, அதற்கேற்ப தக்க நிலைமைகளில் நெறிப்படுத்தி ஆய்வினை உரிய காலத்தில் செவ்வனே முடித்திட வழிவகையும் செய்து கொடுத்துள்ளமைக்கும், அவர்களின் புலமை சான்ற நெறியாண்மைக்கும் நான் என்றும் நன்றிக்கடன் பட்டவனாவேன்.

எம்.ஃபில் படிப்புடன் விட்டுவிட்ட என்னை முனைவர் பட்டம் மேற்கொள்ளத்தூண்டி ஊக்கப்படுத்திய மார்க்சிய அறிஞர் தேவ. பேரின்பன் அவர்கள் இன்று நம்முடன் இல்லை. ஆனாலும் அவரை நினைவு கூர்ந்து நன்றி நவில்கின்றேன். அரும்பெரும் தோழர் இரா. நல்லகண்ணு அவர்களுக்கும் எனது நன்றியறிதலை தெரிவித்துக் கொள்கிறேன். ஆய்வு நிலைமைகளை எந்நேரமும் கேட்டறிந்து ஊக்கப்படுத்தியவர்களாகிய முனைவர் உலோ. செந்தமிழ்க் கோதை, தொல்லியல் அறிஞர் ர. பூங்குன்றன், சமூக விஞ்ஞானம் காலாண்டிதழின் ஆசிரியராக விளங்கும் முனைவர் மே.து. ராசுகுமார் ஆகியோருக்கு எனது நன்றிகள் பலவாகும். மேலும் பலவாறான உதவிகள் புரிந்த, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்-ன் முதன்மைச் செயன்மையர் தோழர் சண்முகம் சரவணன் அவர்களுக்கும், (NCBH) பொது மேலாளர்

தி. ரத்தின சபாபதி, பாவை பொது மேலாளர் தோழர் சண்முகநாதன், தோழர் செ. புஷ்பராஜ் ஆகியோருக்கும் நன்றிகள் பலவாகும்.

தவிர்க்கவியலாத முறையில் ஏதோ ஒரு வகையில் எனது முயற்சிகளுக்கும், முன்னேற்றங்களுக்கும் காரணமாய் இருந்து வரும் சென்னை பல்கலைக்கழக சைவ சித்தாந்தத்துறை தலைவர் மற்றும் பேராசிரியர் முனைவர் நல்லூர் சா. சரவணன் அவர்களுக்கும், இராமகிருஷ்ணா மடம் விவேகானந்தா கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் கா.மு. பாபுஜி, முனைவர் ம. இளங்கோவன் ஆகியோருக்கும் இந்நேரத்தில் நன்றிக் கூற கடமைப்பட்டுள்ளேன்.

இந்த ஆய்வேட்டினை சிறப்பான முறையில் தட்டச்சு செய்துக் கொடுத்த தோழர் கே.சி. கருத்திருமன், தோழர் ஜீவானந்தம், வடிவமைப்பு செய்த தோழர் ச. கிருஷ்ண மூர்த்தி ஆகியோருக்கும் தோழர் ப. விஜயன் பாவை ஆகியோருக்கும் எனது நன்றிகள் பலவாகும்.

பத்து வயதில் தந்தையை இழந்தபோதும் இன்றுவரை என்னை வளர்த்து ஆளாக்கி, படிக்கவைத்து, பாதுகாத்து வருகின்ற எனது அன்னையாருக்கு இந்நேரத்தில் எனது அன்பையும் வணக்கங்களையும், நன்றியினையும் செலுத்துகின்றேன்.

**க. இளங்கோ**

# சுருக்க குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம், அக | = | அகநானூறு |
| ஆ. கோ. | = | ஆசாரக்கோவை |
| ஏலாதி | = | ஏலாதி |
| ஐங், ஐங்குறு | = | ஐங்குறுநூறு |
| கலி | = | கலித்தொகை |
| கலி, முல்லை | = | கலித்தொகை, முல்லைக்கலி |
| குறுந், குறு | = | குறுந்தொகை |
| குறிஞ்சி | = | குறிஞ்சிப்பாட்டு |
| குறள் | = | திருக்குறள் |
| சிறு, சிறுபாண் | = | சிறுபாணாற்றுப்படை |
| சிறுபஞ்ச | = | சிறுபஞ்சமூலம் |
| சிலம்பு | = | சிலப்பதிகாரம் |
| சீ.சி. | = | சீவகசிந்தாமணி |
| சூளாமணி | = | சூளாமணி |
| திரி | = | திரிகடுகம் |
| திரு | = | திருமுருகாற்றுப்படை |
| தொல் | = | தொல்காப்பியம் |
| தொல். பொருள் | = | தொல்காப்பியம், பொருளதிகாரம் |

| | | |
|---|---|---|
| தொல். பொருள். புற | = | தொல்காப்பியம், பொருளதிகாரம், புறத்திணையியல் |
| நற் | = | நற்றிணை |
| நாலடி | = | நாலடியார் |
| நான்மணி | = | நான்மணிக்கடிகை |
| நெடுநல் | = | நெடுநல்வாடை |
| நீலகேசி | = | நீலகேசி |
| பதிற் | = | பதிற்றுப்பத்து |
| பதிற். பதி | = | பதிற்றுப்பத்து, பதிகம் |
| பதிற். நம்பத்து | = | பதிற்றுப்பத்து, நம்பத்து |
| பரி | = | பரிபாடல் |
| பட்டின | = | பட்டினப்பாலை |
| புறம், புற | = | புறநானூறு |
| பெரும்பாண், பெரும் | = | பெரும் பாணாற்றுப்படை |
| பொருந | = | பொருநராற்றுப்படை |
| மலை | = | மலைபடுகடாம் |
| மணி | = | மணிமேகலை |
| மது, மதுரை | = | மதுரை காஞ்சி |
| முல்லை | = | முல்லைப்பாட்டு |
| யா.வி. | = | யாப்பருங்கல விருத்தியுரை |

# கருத்தியல் குறியீட்டு விளக்கம்

 உலகாயதம்

 பௌத்தம்

 சமணம்

 ஆசீவகம்

 யோகம்

 சாங்கியம்

 வைசேடிகம்

 நியாயாம் (அ) நையாயிகம்

 மீமாம்சை

 பார்ப்பனியம்

 சைவம்

 வைணவம்

# பொருளடக்கம்

# உள்ளடக்கம்

## இயல்-1

## சங்க கால அரசு உருவாக்கமும் சமூகக் கட்டமைப்பும்

## இயல்-2

## சங்க கால உற்பத்திச் சமூகமும் அடிமை நிலையும்

# இயல் - 3

## சங்க காலக் கருத்தியல்களும் பார்ப்பனியம் மேலாண்மை பெறலும்

தனித் தமிழியக்க காலம் தொடங்கியே தமிழாய்வாளர்கள் சங்க இலக்கியங்களையும் அரச தலைமுறைகளைக் கொண்டே ஆராய்ந்து வந்துள்ளனர்.[1] இதனால் தமிழ்ச்சமூக வரலாறு வேந்தர்களின் வரலாறாகவே தோற்றமளிக்கின்றது.[2] இன்னொருபுறம் கால வரையறை பற்றிய ஆய்வுகளும் தொடர்கின்றன. *இறையனார் களவியலுரையி*னை அடிப்படையாகக் கொண்டுத் தமிழின் தொன்மை கி.மு.1000 முதல் கூறப்பட்டது.[3] அதனை மறுத்து, கிறித்து சகாப்தத்துடன் இணைத்தும் கூறப்பட்டது;[4] வணிகப் பண்பாட்டு உறவுகளின் அடிப்படையிலும் பிந்தையதாக கணிக்கப்பட்டது.[5] இப்போக்கு மாறி, தற்காலத்தில் இலக்கியச் சான்றுகள் மட்டுமின்றி தொல்லியல், மானுடவியல், வரலாற்றியல் அடிப்படையிலான ஆய்வுகளும் மேற்கொள்ளப்படுகின்றன.

அகழாய்வுகளில், புதையுண்டிருக்கும் பொருட்களில் பொதிந்துள்ள கரிமத்தின் (Corban) அளவினைக் கொண்டு காலத்தின் தொன்மையினைச் சரியான முறையில் வரையறுக்க உதவும் அறிவியல் அணுகுமுறையான கரிமம்$^{14}$ காலக் கணிப்புமுறை (Corban$^{14}$ Dating) யும் தமிழாய்வின் புதிய வரவாக உள்ளது.[6] பொருந்தல் அகழ்வாய்வில் கிடைக்கப் பெற்ற பானையில் இருந்த நெல்லைக் கரிமம்$^{14}$ காலக்கணிப்பிற்கு உட்படுத்தி கி.மு.500-ஐச் சார்ந்தது என்றும் நிறுவப்பட்டது. எனவே அப்பானையின் மீது பொறிக்கப்பட்டிருந்த தமிழ்ப்பிராமி எழுத்து கி.மு. 500-ஐச் சார்ந்தது என்பது உறுதியானது. இதனால் தமிழ்ச் சமூகத்தின் வரலாற்றுக் காலம் கி.மு.500-க்கு அறிவியல் அடிப்படையிலேயே முன்னகர்த்தப்பட்டுள்ளது.[7] இத்தகு கால எல்லை மேலும் முன் செல்லும் வாய்ப்புகள் மிகுதி.

இலக்கியங்களின் அடிப்படையில் வேந்தர் வரலாறாகத் தமிழ்ச் சமூக வரலாற்றைக் கட்டமைப்பதும் மற்றும் காலக் கணிப்பில் ஏற்படும் மாற்றங்கள் பற்றிய ஆய்வுகளுடனும் மட்டும் நிற்காமல் சங்க காலத்தின் சமூக உற்பத்திப் பொருளியல் வாழ்நிலை அடிப்படையிலான ஆய்வுகளையும் மேற்கொள்வது இன்றியமையாததாக உள்ளது. இஃது இன்றைய தேவையுமாகும். இதனால் காலந்தோறும் நிலவிய சமூக பொருளியல் உற்பத்தி உறவுகளின் அடிப்படைகளை விளங்கிக் கொண்டு அவற்றில் ஏற்பட்டு வந்துள்ள மாற்றங்களையும் அறிவதன் மூலம் எதிர்கால சமூக மாற்றத்திற்குப் பயன்படும்படியும் நாம் ஆராய்ந்து தெளிய முடியும்.

**ஆய்வுத் தலைப்பு**

சங்கச் சமூகம் : உற்பத்தி முறையும் கருத்தியலும் என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

* சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியப்படும் உற்பத்திப் பொருட்களையும், உற்பத்திக் கருவிகளையும், உற்பத்தியில் ஈடுபட்டோரையும், ஈடுபடுத்தியோரையும் தொகுத்துரைத்தல்.

* உற்பத்தி முறைகளை இனங்காணுதல்

* உற்பத்தி முறையின் அடிப்படையில் கட்டமைக்கப்பட்டிருந்த சமூகக் கட்டமைப்பினையும் பல்வேறு பிரிவுகளுக்கு இடையிலான கருத்து நிலைகளையும் கண்டறிதல்

* படிநிலைச் சமூகத்தின் பல்வேறு கருத்து நிலைகளுக்கு இடையிலான மோதலையும், ஆதிக்கச் சமூகத்தின் பார்ப்பனிய கருத்துக்கள் மேலாண்மை அடைதலையும் கண்டு நிறுவுதல்.

**கருதுகோள்**

சங்க காலச் சமூகத்தில் நிலவிய உற்பத்தி முறைகளைப் பற்றி அறிந்து கொள்ள நாம் முதலில் அக்காலத்தியதாக அறியப்படும் உற்பத்திக் கருவிகள் மற்றும் உற்பத்தி உறவுகளை அறிந்து விளக்குவதன் மூலமாகவே ஆராய்ந்து நிறுவ முடியும். உலகம் முழுவதும் நிகழ்ந்து வந்துள்ள சமூக மாற்றங்கள்அனைத்தும் உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் ஏற்பட்டவை. இந்தியச் சமூகத்தின் உற்பத்தி சக்திகளும் உற்பத்தி உறவுகளின் தனித்தன்மைகளும் ஐரோப்பிய உற்பத்தி முறையிலிருந்து மாறுபட்டது.

ஆசிய வகை உற்பத்தி முறை எனத் தனித்துச் சிறப்பிக்கப்படும் தன்மை வாய்ந்தது. இத்தகு சிறப்பிற்குத் தமிழ்ச் சமூகத்தின் உற்பத்தி முறை அடிப்படையாகக் கொண்ட திணைக் கோட்பாடுகள் அடியூற்றாக விளங்குகின்றது[8] என்னும் கருதுகோள் ஆய்வில் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

பழந்தமிழகத்தில் நிலவிய இயற்கை வழிபாடுகள்,சடங்குகள், நம்பிக்கைகள், ஆகியவற்றிலிருந்து முன்னிலைக் கருத்தியல்கள் (Proto Philosophies) தோன்றி வளர்ந்தது.[9] நாளடைவில் பல்வேறு சமூகப் பிரிவுகளுக்கு ஏற்ப அவை பலவிதமான கருக்களாக முதிர்ச்சி பெற்றன. இவற்றில் பன்முகத் தன்மைகளைப் பயன்படுத்திப்

பார்ப்பனியம் தன்னை வளர்த்துக் கொண்டது, வெற்றி கொண்டது. இச்சமூக உண்மையே கருத்தியல் என்னும் சொல்லாடல் வாயிலாக ஆய்வுத் தலைப்பில் சுட்டப்படுகின்றது. வேளாண்மை தொழில்சார் மக்களை அடக்கிய முறையும், பார்ப்பனர்களின் ஆதிக்க முறையினையும் சங்கச் சமூகம் வழி வெளிப்படுத்துவதே ஆய்வின் கருதுகோளாக அமைகின்றது.

**ஆய்வு எல்லை**

தற்போது கொடுமணல், பொருந்தல் அகழ்வாய்வு முடிவுகள் கிடைக்கப் பெற்றபின் சங்க காலம் என்பது கிமு 500 எனக் கால எல்லை முன்னகர்த்தப் பட்டுள்ளது. எனவே இதன்படி நோக்கும்போது,

1. குழு - குடிகளிலிருந்து அரசுகளின் தோற்றம்

2. மூவேந்தர்களின் எழுச்சியும், நிலைத்த ஆட்சி மேற்கொள்ளலும்

3. சங்கம் மருவிய காலம் அல்லது மூவேந்தரின் வீழ்ச்சிக்காலம்

என அறுதியிட்டு இக்காலப்பகுப்பில் தமிழ்ச்சமூக உற்பத்தி உறவுகள் ஆராயப்படுகின்றன.

களப்பிரர் காலம் அல்லது இருண்ட காலம் என்பது உற்பத்தி தடைப்பட்டு தேக்கமடைந்து, சமூகக் கலகங்கள் தோன்றிய காலம். அதன் பின்னர் ஏற்படும் பல்லவர் காலமும் வணிப நோக்கங்களுக்காவும், உற்பத்தி முறையில் ஏற்படும் மாற்றத்தின் காரணமாகவும் அடுத்த கட்ட வளர்ச்சியை நோக்கி முன்னேறுகின்றது. இக்காலப் பகுதியில் பார்ப்பனியத்தின் செயல்பாடு வலிவுடையதாகக் காணப்படுகின்றது.

இவற்றின் அடிப்படையில்,

* அரசின் தோற்ற நிலை
* அரசின் வளர் நிலை
* அரசின் உயர் நிலை
* அரசின் சிதைவு நிலை (அல்லது) புதிய சமூக உருக் கொள்நிலை

ஆகியவை நிகழ்ந்தேறுவதை இவ்வாய்வு வெளிப்படுத்துகின்றது.

**முதன்மைச் சான்றுகள்**

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, ஐம்பெருங்காப்பியங்கள், ஐஞ்சிறு காப்பியங்கள், பதினெண் கீழ்க்கணக்கு, வீரசோழியம், இறையனார் களவியலுரை ஆகியன முதன்மையான அடிப்படை நூல்களாகும்.

**துணைமைச் சான்றுகள்**

உரையாசிரியரின் உரைகள், சங்ககாலம் பற்றிய தமிழறிஞர்களின் ஆய்வு நூல்கள், தத்துவ நூல்கள், மானுடவியல், வரலாறு, தொல்லியல் தொடர்பான தமிழ், ஆங்கில நூல்களும் இவ்வாய்வுக்கான துணைமை நூல்களாக அமைகின்றன. சமூகவியல், பொருளாதாரவியல் சார்ந்த மார்க்சிய நூல்களும் துணை செய்கின்றன எனலாம்.

**ஆய்வு முன் பதிவுகள்**

கலாநிதி க. கைலாசபதி தொடங்கி முனைவர் ராஜ் கௌதமன் வரை எழுவரின் ஆய்வுகள் முன்னோடி ஆய்வுகளாக அமைந்துள்ளன. அவர்களின் ஆய்வு நூல்கள் பின்வருமாறு:-

1. க. கைலாசபதி, *பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்*, குமரன் புத்தக இல்லம், சென்னை
2. க. கைலாசபதி, *தமிழ் வீரநிலைக்கவிதை*, குமரன் புத்தக இல்லம், சென்னை
3. கா. சிவத்தம்பி, *பண்டைத்தமிழ்ச்சமூகத்தில் நாடகம்*, குமரன் புத்தக இல்லம், சென்னை
4. கா. சிவத்தம்பி, *தமிழில் இலக்கியவரலாறு*, NCBH, சென்னை
5. ர. பூங்குன்றன், *தொல்குடி - வேளிர் - அரசியல்*, புது மலர் பதிப்பகம், கோவை
6. பெ. மாதையன், *சங்க கால இனக்குழு சமுதாயமும் அரசு உருவாக்கமும்*, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை-14.
7. பெ. மாதையன், *சங்க இலக்கியத்தில் வேளாண்மை*, NCBH , சென்னை
8. பெ. மாதையன், *சங்க இலக்கியத்தில் குடும்பம்*, NCBH , சென்னை

9. ராஜ் கௌதமன், *ஆகோள் பூசலும் பெருங்கற்கால நாகரிகமும்*, 2009, தமிழினி, சென்னை.

10. ராஜ் கௌதமன், *தமிழ்ச்சமூகத்தில் அறமும்ஆற்றலும்*, 2008, விடியல் பதிப்பகம், கோவை.

11. தேவ. பேரின்பன், *தமிழர் தத்துவம்*, NCBH , சென்னை

12. முப்பால் மணி, *தமிழகத்தில் உலகாயதம்*, NCBH , சென்னை

என அறியலாம்.

**ஆய்வு அணுகுமுறை**

சமுதாய மாற்றத்தின் நிகழ்வுப் போக்குகள் மனிதர்களாலேயே நிகழ்த்தப்படுகின்றது. அதன் இயக்கப் போக்குகள் அதன் உள் முரண்பாடுகளாகிய எதிர்மறையான உட்கூறுகள் ஒன்றுடன் ஒன்று மோதியும் ஒன்றுபட்டும், பகைமுரணான அவை தமக்குள் ஒத்திட்டும், விலக்கியும் வளர்ந்து செல்லும் தன் வளர்ச்சிப் போக்கினைக் கொண்டு விளக்கும் **இயக்கவியல் பொருள் முதல் வாத அணுகுமுறை** ஆய்வில் கைக்கொள்ளப்பட்டுள்ளது. தொல் பொதுவுடமைச் சமூகம், அடிமைச் சமூகம், நிலவுடைமைச் சமூகம் என்று காலந்தோறும் மாற்றமடைந்து வந்துள்ளதை விளக்கும் **வரலாற்றுப் பொருள் முதல் வாத அணுகுமுறை** ஆய்வில் மேற்கொள்ளப்பட்டுள்ளது. தொல்லியல், மானுடவியல், தத்துவ இயல் துணை கொண்டு ஆராயப்படுவதால் **பல்துறை நோக்கீட்டு அணுகுமுறை** ஆய்வாகவும் அமைகின்றது.

**ஆய்வேட்டின் அமைப்பு**

**சங்கச் சமூகம்: உற்பத்தி முறையும் கருத்தியலும்** என்னும் தலைப்பில் மேற்கொள்ளப்படும் இந்த ஆய்வானது முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களாக பகுக்கப்பட்டுள்ளது.

அவை,

**முன்னுரை**

**இயல் 1. சங்க கால அரசு உருவாக்கமும் சமூகக் கட்டமைப்பும்.**

**இயல் 2. சங்க கால உற்பத்திச் சமூகமும் அடிமை நிலையும்.**

**இயல் 3. சங்க காலக் கருத்தியல்களும் பார்ப்பனிய மேலாண்மையும் .**

முடிவுரை

என்பன.

## முன்னுரை

இந்த ஆய்வின் நோக்கம், அணுகுமுறை, ஆய்வு எல்லை, ஆய்வு முன்னோடிகள், ஆய்வின் இன்றியமையாமை ஆகியன பற்றிய விவரங்கள் முன்னுரையில் விளக்கப்படுகின்றன.

## இயல் 1 சங்க கால அரசு உருவாக்கமும் சமூகக் கட்டமைப்பும்.

குழு-குடி வாழ்க்கை அழிந்து திணைச் சமூகங்கள் மாற்றமுற்று அரசு உருவாக்கம் நிகழ்ந்ததை முதல் இயல் ஆராய்கின்றது. அக்கம் பக்கமாக நிலவியிருந்த முன்னேறிய சமூகங்களுக்கிடையே, பின்தங்கிய வாழ்க்கை முறையும் அவற்றுக்கிடையிலான மாறுபட்ட வாழ்க்கை சூழலும் ஏற்றத்தாழ்வான வளர்ச்சியும் பற்றி ஆராய்வதுடன், அவற்றை எல்லாம் ஒருங்கிணைத்து அரசு மேலெழுந்ததையும், நிலைப்பட்ட ஆட்சி முறை நீடிக்காமல் பின் வந்தோரின் குடிநாட்டமில்லாத அரசாட்சியால் வீழ்ச்சியுற்றதையும், வீழ்ச்சியடைந்தோரும், வீழ்ச்சிக்கு காரணமானோரும் பற்றியும் ஆராய்ந்த்துரைக்கின்றது.

## இயல் 2 சங்க கால உற்பத்திச் சமூகமும் அடிமை நிலையும்

எழுதப்பட்ட வரலாறு தொடங்குவதற்கு முன்பிருந்தே நிலவியிருந்த சமூக அமைப்புகள் பற்றியும், அவர்களுடைய பொருளாதார வாழ்வியல் பற்றியும் அவர்களின் கல்லாயுதங்களைக் கொண்டு விளக்குவதுடன், அவர்களது வாழ்க்கை முறை உலோக காலமான இரும்பு பயன்பாட்டுக் காலத்தில் பெரிதும் மற்றமுற்று பாய்ச்சல் வேகத்தில் முன்னேறியதையும் உபரி உற்பத்தி பெருகியதையும், இதன் அடிப்படையில் அரசு கட்டமைக்கப்பட்டதையும் ஆராய்வதுடன், அவற்றின் வீழ்ச்சிக்குரிய தன்மைகளையும் அது எவ்வாறு தன்னகத்தே கொண்டிருந்தது? இறுதியில் எவ்வாறு வீழ்ந்தது? என்பதையும் இவற்றுக்கெல்லாம் காரணமாக இருந்த உற்பத்தி முறையின் துணைக் கொண்டு ஆராய்கின்றது.

## இயல் 3 சங்க காலக் கருத்தியல்களும் பார்ப்பனிய மேலாண்மையும்

ஒரு குறிப்பிட்ட உற்பத்தி முறையின் மீது கட்டமைக்கப்படும் சமூகமானது பல திறப்பட்ட கருத்தியல்களின் துணை கொண்டும், அவற்றிற்கிடையிலான மோதலிலிருந்து செழுமை பெற்று தன்னை நிலைப்படுத்திக் கொள்கிறது. நாளடைவில் ஆட்சியாளர்களின் நலனுக்கேற்ற கருத்தியல் வலிமைபெற்று பிற

கருத்தியல் போக்குகளை வீழ்த்துவதுடன் அது தம்மை நிலைநாட்டிக் கொள்கின்ற முறையினையும் இவ்வியல் ஆராய்கின்றது.

**முடிவுரை**

மேற்குறித்த மூன்று இயல்களில் மேற்கொண்ட ஆய்வில் கண்டறியப்பட்ட முடிவுகள் தொகுத்து தரப்பட்டுள்ளன. புதிய ஆய்வுக்களங்கள் சுட்டப் பெறுகின்றன. துணை நூல் பட்டியல் இடம்பெறுகின்றது.

ஆய்வுக்கு அடிப்படையான செப்பேடுகள், அட்டவணைகள் பின்னிணைப்பில் அடங்கியுள்ளன.

**மேற்கோள் விளக்கம்**

ஆய்வில் முதன்மைச் சான்றுகளிலிருந்து செய்யுள் வரிகள் எடுத்தாளப்படும்பொழுது தடித்த எழுத்துக்களில் பக்க விலக்களித்து (Indent) வலது புறம் தள்ளி பாடல் எண், வரி எண் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன.

துணைமைச் சான்றுகளிலிருந்தும் எடுத்தாளப்பட்ட கருத்துக்கள் மேற்கோள் குறிக்குள் பக்க விலக்களித்து (Indent) சாய்ந்த எழுத்துருக்களில் (Italic) தடித்த எழுத்துக்களில் (Bold) தொடர்ச்சியாக சான்றெண்கள் இடப்பட்டு வடிவமைக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு இயலின் இறுதியிலும் சான்றெண் விளக்கம் தரப்பட்டுள்ளது.

**பிற செய்திகள்**

ஆய்வேட்டில் சுருக்கக் குறியீட்டு விளக்கங்களும் பொருளடக்கமும் உள்ளடக்கமும் கொடுக்கப்பட்டுள்ளன. இயலின் இடையே பொருத்தமான வரைபடங்களும் இடம்பெறுகின்றன. கருத்தியல்களுக்கு பொருத்தமான குறியீட்டுப்படங்களும் இடம்பெற்றுள்ளன. கருத்தியல் குறியீட்டு விளக்கமும் இடம்பெற்றுள்ளன. முடிவுரைக்கு அடுத்து ஆய்வின் இறுதியில் முதன்மைச்சான்றுகள், துணைமைச்சான்றுகளின் பட்டியல் தரப்பட்டுள்ளது. பின்னிணைப்பு எனும் பகுதியில் செப்பேடுகள் இடம்பெறுகின்றன.

- - - - -

# சான்றெண் விளக்கம்


1. ஔவை சு. துரைசாமி பிள்ளை, *சேரமன்னர் வரலாறு,* பக்கம் 9, 2009, பூம்புகார் பதிப்பகம், சென்னை - 108.

2. சதாசிவ பண்டாரத்தார், தி.வை., *பாண்டியர் வரலாறு,* பக்கம் 9, மூன்றாம் பதிப்பு, 2013, மணிவாசகர் பதிப்பகம், சென்னை - 108.

3. முனைவர் பாக்யமேரி, *வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,* பக்கம் 51, பூவேந்தன் பதிப்பகம், சென்னை - 4.

4. சிவத்தம்பி கார்த்திகேசு, *பண்டைத்தமிழ் சமூகத்தில் நாடகம்,* பக்கம் XXII, 2005, குமரன் புத்தக இல்லம், சென்னை.

5. மாதையன், பெ., *தமிழ்ச் செவ்வியல் படைப்புகள், - கவிதையியல் சமுதாயவியல் நோக்கு,* பக்கம் 176, 2007, NCBH

6. சுப்பிரமணியன், தி., 'கரிமம் 14 காலக்கணிப்புமுறை' எனும் கட்டுரை *சமூக விஞ்ஞானம்* இதழ் 7, மலர் 25, பக்கம் 53.

7. இராஜன், கா., *சமூக விஞ்ஞானம்* இதழ் மலர்.

8. சிவத்தம்பி, கார்த்திகேசு., திணைக்கோட்பாட்டின் சமூக அடிப்படைகள், கட்டுரை, *ஆராய்ச்சி* (மலர் 2, இதழ் 3), 1971, ஜூலை.

9. பேரின்பன். தேவ., *தமிழர் தத்துவத்தின் தோற்றமும் வளர்ச்சியும்,* பக்கம் 86, செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்துக்கு அளிக்கப்பட்ட ஆய்வேடு, 2013.


- - - - -

## 1.1.0. இயல் முன்னுரை:

உலக செவ்வியல் இலக்கியங்கள் வரிசையில் சங்க இலக்கியங்கள் இடம் பெற்றுள்ளன. சங்க காலச் சமூக அமைப்பு பற்றி ஆராய *தொல்காப்பியமும்* எட்டுத் தொகை பத்துப்பாட்டு நூல்களுமே துணை புரிகின்றன. தற்போது தொல்லியல் அகழ்வாய்வுச் சான்றுகளும் பெரிதும் வலு சேர்க்கின்றன. வரலாற்றியல், அறிவியல் நோக்கில் ஆராயும்போது '' சங்க காலம்'' என்று குறிப்பிட்டவுடன் அது கடைச் சங்க மென்றும் அதற்கு முன்பே தலைச்சங்கம், இடைச்சங்கம் இருந்ததென்றும் குறிப்பிடும் *இறையனார் களவியல் உரை* தவிர்க்க முடியாமல் இடையீடு செய்கின்றது.[1] எனவே சங்கச் சமூகத்தின் கட்டமைப்பை ஆராயும்வேளையில் முச்சங்கம் பற்றிய தெளிவுடனும் ஆராய்வது சிறப்பானதாக அமையும்.

## 1.1.1. முச்சங்கங்கள் பற்றிய கருத்து.

முதற் சங்கம் குமரிக்குத் தெற்கே கடல் கோளுக்கு முன் பரந்திருந்த நிலப்பகுதியில் இருந்த தென் மதுரையில் நிலவியிருந்த தென்றும் அச்சங்கத்தில் அகத்தியரும், திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும், குன்றெறிந்த முருகவேளும், முரிஞ்சியூர் முடி நாகராயரும், நிதியின் கிழவனும் முதலிய 549 புலவர்கள் இருந்தனர் என்றும், அவர்களால் பாடப்பட்டவை *பரிபாடல், முது நாரை, முது குருகு* முதலான நூல்களென்றும் அச்சங்கம் 4440 ஆண்டுகள் நிலவிற்று என்றும் *அகத்திய*மே அங்கு இலக்கண நூலாக நிலவிற்று என்றும் *இறையனார் களவியல்* உரை கூறுகின்றது.

மேலும்இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், தொல்காப்பியனாரும் இருந்தையூர் கருங்கோழி மோசியும், வெள்ளூர்க் காப்பியனும், சிறுபாண்டரங்கனும், திறையன் மாறனும், துவரைக் கோமானும், கீரந்தையும் உள்ளிட்ட 59 புலவர்கள் வீற்றிருந்தனர் என்றும், அவர்கள் *கலி, குருகு, வெண்டாளி வியாழ மாலை* முதலிய நூல்களை இயற்றினார்கள் என்றும், அவர்களுக்கு *அகத்தியமும் தொல்காப்பியமும்* இலக்கண நூலாய் அமைந்தன வென்றும் அச்சங்கம் 3700 ஆண்டுகள் நிலைத்திருந்தன வென்றும் இப்புலவர்கள் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரமென்றும் அந்நூல் கூறுகின்றது.

கடைச்சங்கப் புலவர்கள் சிறு மேதாவியார், சேந்தம் பூதனார், பெருங்குன்றூர் கிழார், மதுரையாசிரியர் நல்லந்துவனார், மருதனிளநாகனார், கணக்காயனார் மகனார் நக்கீரனார் முதலிய 49 பேர் ஆவார். அவர்களால் பாடப்பட்டவை *நெடுந்தொகை நானூறு, பதிற்றுப்பத்து, நூற்றைம்பது கலி, எழுபது பரிபாடல்* என்றும் அவர்களுக்கு இலக்கண நூலாய் அமைந்தவை *அகத்திய*மும் *தொல்காப்பிய*மும் என்றும் அச்சங்கம் 1800 ஆண்டுகள் நிலவியது என்றும் அது மேலும் குறிப்பிடுகின்றது. *இறையனார் களவியலு*ரையின் இக்கூற்று முழுவதும் உண்மையென்று எஸ். வையாபுரிப்பிள்ளை ஏற்கவில்லை.[2]

### 1.1.2. கடைச்சங்கமே உண்மை எனல்

கடைச் சங்க காலத்து புலவர்களும், அவர்கள் இயற்றியதாகக் கூறப்படும் நூல்களுமே உண்மையில் கிடைக்கப் பெற்றுள்ளதே காரணமாகும். அது மட்டுமல்லாமல் முதல் சங்கத்தில் சிவனும், முருகனும் இடைக்காலத்தில் அகத்தியரும் இருந்ததாக கூறப்படுகின்றனர். கடைச்சங்கத்து இலக்கண நூலான *தொல்காப்பியம்* இடைச்சங்கத்திலும் இருந்ததாக கூறப்படுகிறது. இதனால் இதன் முதல் நூல் *அகத்தியம்* என்று நிறுவும் முயற்சி இதுவாகும். ஏனெனில் *தொல்காப்பியத்தின்* முதல்நூல் *ஐந்திர*மா?, *அகத்திய*மா? என்ற கேள்விகளும் உள்ளது. கடவுள்களும் அவர்களது அருள் பெற்ற தேவர்களும் இருந்து பாடியதாக கூறுப்படுவதாலேயே இதனை ஏற்க இயலாதென்பது பெரும்பான்மை ஆய்வாளர்கள் கருத்தாக உள்ளது.

### 1.1.3. ஆய்வாளர்களின் கருத்து

அந்த தலைச்சங்கம், இடைச்சங்கம் பற்றி கடைச்சங்க காலத்து இலக்கண நூலான *தொல்காப்பியம்* எதுவும் கூறவில்லை. கடவுள், தேவர் இருந்து நடத்தியது'' பற்றிய குறிப்புக்களை அதற்கு பாயிரம் பாடிய பனம்பாரனாரும் கூறாத நிலையில் பிற்காலத்து எழுந்த *இறையனார் களவியலுரை* இவ்வாறு கூறுவது சைவ மையமாக்கத்துக்கான முயற்சியாகவே கொள்ள முடியும் என்பது **கலாநிதி கா.சிவத்தம்பி**யின் கருத்தாக அமைக்கின்றது.[3] மேலும் *இறையனார் களவியலு*ரையின்படி சிவனிடமும், முருகனிடமும் அகத்தியர் தமிழ்கற்றார் என்பதற்கு மாறாக *வீரசோழியத்தின்* அவையடக்கப் பாடலில் புத்தமித்தரனார்.

**ஆயும், குணத்(து) அவலோகிதன்**
**பக்தல அகத்தியன் கேட்(டு)**
**ஏயும் புவனிக்(கு) இயம்பிய தண்டமிழ்**
**ஈங்(கு) உரைக்க**

### 1.1.5. தொன்மம் கற்கால வரலாற்றுடன் பொருந்துதல்

தமிழ்ச் சமூகத்தையும் வரலாற்று வழி நோக்கும்போது இத்தொன்மமாக்கம் ஏற்றத்தாழ்வற்ற ஆதி பொதுவுடைமைச் சமூகத்தைத் தாய் வழிச் சமூகத்தை குறிப்பது முதற்சங்க காலம். பிற்காலத்து பார்ப்பனிய சமய மயமாக்கத்தின்போது பெருங்கடவுளான சிவன் தாய் வழிச் சமூகத்தை மறுத்து அதனிடத்தில் வைக்கப்பட்டுள்ளது அல்லது கடவுளும், தேவரும், மனிதரும் சமமாக இருந்த ஏற்றத்தாழ்வுகளும் வேறுபாடும் கருதாத சமூகம், இத்தகையப் பண்பு நலன்களை ஆதி பொதுவுடைமைச் சமூகத்திலேயே காண முடியும்.

அதற்கு அடுத்த நிலையிலான இனக்குழு - குடி சார்ந்த சமூக வாழ்க்கை முறையே கடவுளின் அருள் பெற்றவர்கள் வாழ்ந்த சமூகம் ஆகும். இச்சமூக அமைப்பில் தலைவனுக்கும் குடிகளுக்கும் இடையில் வேறுபாடு கருதாத நிலையும், குடிகளுக்காகவே வாழும் பண்பும் ஆகிய இயல்புகள் கடவுளின் ஆசிபெற்றவர்கள் வாழ்ந்த சமூகம் என்று கருத இடமளிக்கின்றது. மேலும் கிடைத்ததை சமமாக பகிர்ந்துண்ணும் பண்பு, உழைப்புச் சுரண்டலற்ற, உபரி உற்பத்தியற்ற சமூக வாழ்க்கையினை மேன்மையானதென நோக்கும் இயல்பும் இதிலிருந்து வெளிப்படுகின்றது. மேலும் தலைச்சங்கம் இடைச்சங்கத்துக்குரிய கால அளவும் வரலாற்றடிப்படையில் நோக்கும் போது நுண்கற்காலத்திலிருந்து, புதிய கற்கால அளவுகளை ஒத்திருக்கின்றன. அக்கால வாழ்க்கை முறையினைச் சுட்டுவதாகவே இத்தொன்மங்கள் அமைந்துள்ளன. தாய்தெய்வ வழிபாட்டையும், வளமை வழிபாட்டையும் கொண்டிருந்த இச்சமூகத்திற்குரியதாக சிவனை முன்னிறுத்தியது பிற்காலத்துச் சமயவாக்கத்திற்கான முயற்சியே. மாயோள் மகன் முருகன் என்ற அடிப்படை இவ்வாறு மாற்றம் பெற்றுள்ளது. ஆனால் தாய்வழிச் சமூகத்திலிருந்து தந்தை வழிச் சமூகத்துக்கு மாறிய நிலையில் சிவனின் மகன் முருகன் என்ற நிலை ஏற்பட்டது. இது பல ஆயிரம் ஆண்டுகால பரிணாம வளர்ச்சியில் முகிழ்த்தது. களவியலுரை எழுதப்பட்ட காலச் சமூகத்திற்கு முந்தைய வரலாற்றை களவியலுரை இவ்வாறு படைத்துக் காட்டியுள்ளது. முச்சங்கங்கள் என்ற கருத்தும் தமிழ்ச் சமூக வரலாற்றை கூறுவதாகவே இதனால் அமைகின்றது.

### 1.1.6. தொடக்க கால வளர்ச்சி குறைந்த சமூகத்தை சிறப்பிப்பது தொன்மம்

உண்மையில் வளர்ந்து வரும் சமூகமே, மாற்ற மடைந்து முன்னேறும் சமூகமே அடுத்த கட்டத்தை எதிர் நோக்கியுள்ள சமூகமே மேம்பட்ட சிறந்த சமூகம் ஆகும். கடந்துவிட்ட சமூக அமைப்புகளைவிட நிலவுகின்ற சமூகங்கள் எவ்வளவு ஏற்றத்தாழ்வுகளையும், பகைமுரண்பாட்டையும் கொண்டிருந்தாலும் அவை பரிணாம வளர்ச்சியில் அடுத்த கட்டத்தில் முகிழ்த்தவை என்பதால் முந்தைய

உற்பத்தி உறவுகளில் இருந்து மேம்பட்ட வளர்ந்த உறவுகளை கொண்டியங்குவதால் அவையே சிறந்த சமூகம் ஆகும். ஆனால் நிலவும் சமூகத்தின் சிக்கல்களுக்கு மாற்றாக புதிய சமூகத்தை எதிர்கொண்டு மாற்றத்தை வேண்டுகிற தருணத்தில், அத்தகைய எதிர்பார்ப்புகளைக் கைவிட்டு முந்தைய சமூகங்களின் மேன்மையும், சிறப்பையும் கண்டு மனநிறைவு காணச் செய்வது (மதங்களின்) சமயங்களின் தன்மையாகும். இது நிலவுகின்ற சமூகங்களின் சிக்கல்களையும் குறைபாடுகளையும் களையவும் எதிராக போராடவும் முனைபவர்களுக்கு எதிரான தன்மையினாலேயே இப்போக்கு மேலெழுகின்றது. ஆகவே இத்தகைய தன்மையும் தலைச்சங்கம், இடைச்சங்கம் பற்றிய தொன்மத்தில் அடங்கியுள்ளது. சமூக பொருளிய வாழ்நிலை அடிப்படையில் நோக்கும் போது தொடக்க காலத்து வளர்ச்சி குறைந்த சமூகத்தை அவற்றின் பண்பு நலன்களை மட்டுமே கருதுவதன் மூலம் சிறந்த தெனக் கொள்ளும் மரபு தொன்மைக் கதைகளில் அடங்கியுள்ளது. தலைச்சங்கம், இடைச் சங்கம் சார்ந்த நூல்கள் கிடைக்கப் பெறவில்லை. ஆயினும், கடைச்சங்க காலத்து புலவர்களும், இலக்கிய இலக்கண நூல்களும் கிடைக்கப் பெற்றுள்ளன. கடைச்சங்க காலத்து எட்டுத்தொகை பத்துப்பாட்டும், *தொல்காப்பிய*மும் கொண்டு சங்கச் சமூகம் இத்தன்மையது என்ற ஆய்வுகள் வெகுவாக நடைபெற்றுள்ளன.

### 1.2.0 சங்கச் சமூகம்

சங்கச் சமூகத்திற்கான அடைப்படைகள் திணைச் சமூகங்களை உள்ளடக்கியதாகும். பல்வேறு நிலவியல், சமூகவியல் வாழ்க்கை முறைகளையும், உற்பத்தி முறைகளையும் பிரதிபலிக்கும் வகையில் இயல்பாகவே அவ்வந் நிலங்களில் தோன்றிய இலக்கியங்களும் தொகையாக்கம் பெறும் போது திணையின் பேராலே தொகுக்கப்பட்டன. சங்கச்சமூகத்தின் நால்வகை திணை வாழ்வியல் முறைகளையும், அதன் வேறுபட்ட குண இயல்புகளையும் அவை எடுத்துக் காட்டின. *தொல்காப்பிய*ரும் இச்சமூகத்தின் ஏற்றத்தாழ்வான சீரற்ற வளர்ச்சியும் பின்தங்கிய நிலைமைகளையும், வேறுபட்ட சூழமைவும், சூழமைவுக்கு தக்க மாறுபடும் வாழ்க்கை முறைகளையும் தனது திணைக் கொள்கைகள் மூலம் வகுத்தளித்துள்ளார்.

### 1.2.1. நிலப்பிரிவுகளை ஒருங்கிணைத்தல்

நானிலத்தின் வேறுபட்ட உற்பத்தி முறைகளின் அடிப்படையிலும், வேறுபட்ட நிலவியல் சுற்றுச்சூழல் வாழ்க்கை முறைகளின் அடிப்படையிலும், அக்கம்பக்கமாக அமைந்துள்ள ஐந்து நிலத்தின் மாறுபட்ட தன்மைகளை **கலாநிதி கா.சிவத்தம்பி** அவர்கள் (Asiotic Mode) என்று குறிப்பிடுகின்றார்.[6] **இயக்கவியல் வரலாற்றியல்**

என்று குறிப்பிடுகின்றார். அதாவது அகத்தியர் அவலோகிதன் எனப்படும் புத்தரிடம் தமிழ்க் கற்றார் என்பது பொருளாகும். இங்கு முச்சங்கங்கள் பற்றிய குறிப்பு ஏதும் இல்லை, மேலும் தமிழ்ச் சமூகம் சமய மயமாகும்போது அந்தந்த சமய சார்புக்கு ஏற்ப உருவாக்கப்பட்ட தமிழ்ச் சமூகத்துக்கான புராண மூதாதைதான் அகத்தியர் என்று **புலவர். ஆ.சிவசுப்பிரமணியன்** தமது ஆய்வில் குறிப்பிடுகின்றார்.[4] எனவே இலக்கிய வரலாற்று அடிப்படைகள் ஏதுமற்ற புராணத்தை அடிப்படையாகக் கொண்ட தொன்மக்கதைகள் இவை என்பது தெளிவாகின்றன. ஆனாலும் தொன்மங்களை முற்றும் பொய்யானவை, கற்பனையானவை என்று ஒதுக்கி விடுவதும் சரியான வழிமுறையாகாது.

### 1.1.4. தொன்மங்கள் கூறும் உண்மை

தொன்மங்கள் கூறும் உண்மைக்கு மாறான, நம்பமுடியாத கற்பனைகளும், கால விரிவுகளும், இயற்கைக்கு மாறான புனைவுகளும் கொண்ட புராணங்களின் கட்டுக்கதைகளுக்கு கட்டுப்பாடோ வரையறையோ இல்லை. ஆயினும், அவை மனிதனின் நடைமுறை வாழ்க்கை அனுபவங்களிலிருந்தே தோன்றுவதால் அவற்றிலிருந்து விலகிச் செல்வதில்லை. அக்கால மக்களின் சொந்த அனுபவங்களே புராணங்களுக்கான கதைக் கருக்களாக அமைகின்றன. பெருங்கற்பனைகளுக்கிடையே நூலிழையென உண்மை பொதிந்துள்ளதை ஆராய்ந்து வெளிப்படுத்த முடியும்.

உலகச் செம்மொழிகளில் ஒன்றான கிரேக்கத்தின் பண்டைய இலக்கியக் கர்த்தாவான ஹீசியட் மனித இனத்தின் வரலாற்றை வகைப்படுத்தும் போது தங்க இனத்தினர், வெள்ளி இனத்தினர், இரும்பு இனத்தினர் என்று வகைப்படுத்துகின்றார். இதன்படி நோக்கும் போது,

**(1) தங்க இனத்தினர் எனப்படுவோர் கடவுள்களாக வாழ்ந்தவர் ஆவார்.**

**(2) வெள்ளியினத்தினர் கடவுளின் அருள் பெற்ற தேவர்களாவர்.**

**(3) இரும்பு இனத்தினர் என்போரே உயர் குடி பிறப்பாளர்களாகிய வீர இனத்தினர் ஆவார்.**

பண்டைய கிரேக்கத்தின் அடிமையுடைமைச் சமூகத்தில் நிலவிய உயர்குடியினர் ஆட்சியும், வீர இனத்தினர் தலைமையும் ஏற்றிருந்த சமூக அமைப்பே இரும்பு இனத்தினர் வாழ்ந்த சமூகம் என்று கொள்ளப்பட்டு அதற்கு முந்தைய சமூகங்களான ஏற்றத்தாழ்வற்ற, பிரிவினை வேறுபாடுகள் அற்ற சமூகங்களை தங்க, வெள்ளி இனம் என்று குறிப்பிடுவதையும் அறியமுடிகின்றது.[5]

### 1.1.5. தொன்மம் கற்கால வரலாற்றுடன் பொருந்துதல்

தமிழ்ச் சமூகத்தையும் வரலாற்று வழி நோக்கும்போது இத்தொன்மமாக்கம் ஏற்றத்தாழ்வற்ற ஆதி பொதுவுடைமைச் சமூகத்தைத் தாய் வழிச் சமூகத்தை குறிப்பது முதற்சங்க காலம். பிற்காலத்து பார்ப்பனிய சமய மயமாக்கத்தின்போது பெருங்கடவுளான சிவன் தாய் வழிச் சமூகத்தை மறுத்து அதனிடத்தில் வைக்கப்பட்டுள்ளது அல்லது கடவுளும், தேவரும், மனிதரும் சமமாக இருந்த ஏற்றத்தாழ்வுகளும் வேறுபாடும் கருதாத சமூகம், இத்தகையப் பண்பு நலன்களை ஆதி பொதுவுடைமைச் சமூகத்திலேயே காண முடியும்.

அதற்கு அடுத்த நிலையிலான இனக்குழு - குடி சார்ந்த சமூக வாழ்க்கை முறையே கடவுளின் அருள் பெற்றவர்கள் வாழ்ந்த சமூகம் ஆகும். இச்சமூக அமைப்பில் தலைவனுக்கும் குடிகளுக்கும் இடையில் வேறுபாடு கருதாத நிலையும், குடிகளுக்காகவே வாழும் பண்பும் ஆகிய இயல்புகள் கடவுளின் ஆசிபெற்றவர்கள் வாழ்ந்த சமூகம் என்று கருத இடமளிக்கின்றது. மேலும் கிடைத்ததை சமமாக பகிர்ந்துண்ணும் பண்பு, உழைப்புச் சுரண்டலற்ற, உபரி உற்பத்தியற்ற சமூக வாழ்க்கையினை மேன்மையானதென நோக்கும் இயல்பும் இதிலிருந்து வெளிப்படுகின்றது. மேலும் தலைச்சங்கம் இடைச்சங்கத்துக்குரிய கால அளவும் வரலாற்றடிப்படையில் நோக்கும் போது நுண்கற்காலத்திலிருந்து, புதிய கற்கால அளவுகளை ஒத்திருக்கின்றன. அக்கால வாழ்க்கை முறையினைச் சுட்டுவதாகவே இத்தொன்மங்கள் அமைந்துள்ளன. தாய்தெய்வ வழிபாட்டையும், வளமை வழிபாட்டையும் கொண்டிருந்த இச்சமூகத்திற்குரியதாக சிவனை முன்னிறுத்தியது பிற்காலத்துச் சமயவாக்கத்திற்கான முயற்சியே. மாயோள் மகன் முருகன் என்ற அடிப்படை இவ்வாறு மாற்றம் பெற்றுள்ளது. ஆனால் தாய்வழிச் சமூகத்திலிருந்து தந்தை வழிச் சமூகத்துக்கு மாறிய நிலையில் சிவனின் மகன் முருகன் என்ற நிலை ஏற்பட்டது. இது பல ஆயிரம் ஆண்டுகால பரிணாம வளர்ச்சியில் முகிழ்த்தது. களவியலுரை எழுதப்பட்ட காலச் சமூகத்திற்கு முந்தைய வரலாற்றை களவியலுரை இவ்வாறு படைத்துக் காட்டியுள்ளது. முச்சங்கங்கள் என்ற கருத்தும் தமிழ்ச் சமூக வரலாற்றை கூறுவதாகவே இதனால் அமைகின்றது.

### 1.1.6. தொடக்க கால வளர்ச்சி குறைந்த சமூகத்தை சிறப்பிப்பது தொன்மம்

உண்மையில் வளர்ந்து வரும் சமூகமே, மாற்ற மடைந்து முன்னேறும் சமூகமே அடுத்த கட்டத்தை எதிர் நோக்கியுள்ள சமூகமே மேம்பட்ட சிறந்த சமூகம் ஆகும். கடந்துவிட்ட சமூக அமைப்புகளைவிட நிலவுகின்ற சமூகங்கள் எவ்வளவு ஏற்றத்தாழ்வுகளையும், பகைமுரண்பாட்டையும் கொண்டிருந்தாலும் அவை பரிணாம வளர்ச்சியில் அடுத்த கட்டத்தில் முகிழ்த்தவை என்பதால் முந்தைய

உற்பத்தி உறவுகளில் இருந்து மேம்பட்ட வளர்ந்த உறவுகளை கொண்டியங்குவதால் அவையே சிறந்த சமூகம் ஆகும். ஆனால் நிலவும் சமூகத்தின் சிக்கல்களுக்கு மாற்றாக புதிய சமூகத்தை எதிர்கொண்டு மாற்றத்தை வேண்டுகிற தருணத்தில், அத்தகைய எதிர்பார்ப்புகளைக் கைவிட்டு முந்தைய சமூகங்களின் மேன்மையும், சிறப்பையும் கண்டு மனநிறைவு காணச் செய்வது (மதங்களின்) சமயங்களின் தன்மையாகும். இது நிலவுகின்ற சமூகங்களின் சிக்கல்களையும் குறைபாடுகளையும் களையவும் எதிராக போராடவும் முனைபவர்களுக்கு எதிரான தன்மையினாலேயே இப்போக்கு மேலெழுகின்றது. ஆகவே இத்தகைய தன்மையும் தலைச்சங்கம், இடைச்சங்கம் பற்றிய தொன்மத்தில் அடங்கியுள்ளது. சமூக பொருளிய வாழ்நிலை அடிப்படையில் நோக்கும் போது தொடக்க காலத்து வளர்ச்சி குறைந்த சமூகத்தை அவற்றின் பண்பு நலன்களை மட்டுமே கருதுவதன் மூலம் சிறந்த தெனக் கொள்ளும் மரபு தொன்மைக் கதைகளில் அடங்கியுள்ளது. தலைச்சங்கம், இடைச் சங்கம் சார்ந்த நூல்கள் கிடைக்கப் பெறவில்லை. ஆயினும், கடைச்சங்க காலத்து புலவர்களும், இலக்கிய இலக்கண நூல்களும் கிடைக்கப் பெற்றுள்ளன. கடைச்சங்க காலத்து எட்டுத்தொகை பத்துப்பாட்டும், *தொல்காப்பிய*மும் கொண்டு சங்கச் சமூகம் இத்தன்மையது என்ற ஆய்வுகள் வெகுவாக நடைபெற்றுள்ளன.

### 1.2.0 சங்கச் சமூகம்

சங்கச் சமூகத்திற்கான அடைப்படைகள் திணைச் சமூகங்களை உள்ளடக்கியதாகும். பல்வேறு நிலவியல், சமூகவியல் வாழ்க்கை முறைகளையும், உற்பத்தி முறைகளையும் பிரதிபலிக்கும் வகையில் இயல்பாகவே அவ்வந் நிலங்களில் தோன்றிய இலக்கியங்களும் தொகையாக்கம் பெறும் போது திணையின் பேராலே தொகுக்கப்பட்டன. சங்கச்சமூகத்தின் நால்வகை திணை வாழ்வியல் முறைகளையும், அதன் வேறுபட்ட குண இயல்புகளையும் அவை எடுத்துக் காட்டின. *தொல்காப்பிய*ரும் இச்சமூகத்தின் ஏற்றத்தாழ்வான சீரற்ற வளர்ச்சியும் பின்தங்கிய நிலைமைகளையும், வேறுபட்ட சூழமைவும், சூழமைவுக்கு தக்க மாறுபடும் வாழ்க்கை முறைகளையும் தனது திணைக் கொள்கைகள் மூலம் வகுத்தளித்துள்ளார்.

### 1.2.1. நிலப்பிரிவுகளை ஒருங்கிணைத்தல்

நானிலத்தின் வேறுபட்ட உற்பத்தி முறைகளின் அடிப்படையிலும், வேறுபட்ட நிலவியல் சுற்றுச்சூழல் வாழ்க்கை முறைகளின் அடிப்படையிலும், அக்கம்பக்கமாக அமைந்துள்ள ஐந்து நிலத்தின் மாறுபட்ட தன்மைகளை **கலாநிதி கா.சிவத்தம்பி** அவர்கள் (Asiotic Mode) என்று குறிப்பிடுகின்றார்.[6] **இயக்கவியல் வரலாற்றியல்**

**பொருள் முதல்வாத அணுகுமுறை**யில் தமிழ்ச் சமூகத்தை அணுகும் போது பெற்ற அறிவியல் வழிப்பட்ட முடிவாகும் இது. ஒவ்வொரு நிலம் சார்ந்தும் முதல் பொருள், கருப் பொருள், உரிப் பொருள் ஆகியவற்றை தொல்காப்பியர் வகுத்தளித்தார். அன்றே ஆசிய உற்பத்தி முறையின் தனித் தன்மைகளை எடுத்துக்காட்டும் விதத்தில் திணையியல் கருத்துக்களை முன் வைத்ததுடன் அரசு உருவாக்கத்திற்கென பல்வேறுபட்ட சமூக வாழ்நிலை கொண்ட, பண்பாடு பழக்க வழக்கங்களைக் கொண்ட மக்களையும் ஒருங்கிணைக்கும் வகையில் திணை மயக்குறுதலும் *தொல்காப்பியரா*ல் விளக்கப்பட்டது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப்பிறகு ஆசிய சமூகம் குறித்து மார்க்ஸ் சமூக மாற்றத்தில் அக்கறை கொண்டு ஆராய்ந்து கூறியதைப் போன்றே தொல்காப்பியர் அன்றைய சமூக மாற்றத்திற்காகவும், சமூக கட்டமைப்பை விளக்கும் வகையிலும் திணை இயல், திணைமயக்கம் முதலியவற்றைப் படைத்தளித்துள்ளார். இதன் மூலம் இயல்பான நிலப் பிரிவுகள் ஒருங்கிணைக்கப்பட்டு நானிலந்தாங்கிய வேந்துருவாக்கம் சாத்தியமானது.

### 1.2.2. ஆசிய வகை உற்பத்தி முறை

சமனற்ற, ஏற்றத்தாழ்வான வளர்ச்சிப்போக்கும், உற்பத்தி சக்திகள் உற்பத்தி உறவுகளில் வேறுபாடுகளும் தனித்தன்மைகளும் பண்டைத் தமிழ்ச் சமூகத்துக்கான இயல்பானக் கூறுகளாக அமைந்திருந்தன. துவக்கத்தில் நிலவியல் அடிப்படையில் இயற்கையாக அமைந்திருந்தன. இயற்கையாக அமைந்த இம்மாறுபாடுகள் பிற்காலத்தில் அந்தந்த பகுதிகளுக்கேற்ப தன்னிறைவு பெற்ற சுயதேவை பூர்த்தி கிராமங்களாக உருப் பெற்றன. அக்கிராம அமைப்பிற்குள் ஏற்பட்டிருந்த பல்வேறு விதமான வேலைப் பிரிவினைகள் பிற்காலத்தில் சாதிகளாக உருமாறவும் செய்தன. ஆசிய வகை உற்பத்தி முறையின் இக்கூறுகள் ஐரோப்பிய வகையிலான உற்பத்தி முறையிலிருந்தும் சமுதாய அமைப்பிலிருந்தும் மாறுபட்டிருந்ததால் கார்ல் மார்க்ஸ் அவர்களால் இப்பெயரிடப்பட்டு அழைக்கப்பட்டது.[7]

### 1.2.3. ஆசிய வகை உற்பத்தி முறை வழியில் திணைக் கோட்பாடு

சங்கச்சமூகத்தில் காணப்பட்ட இவ்வியல்புகளை விளக்கும் முகமாகத்தான் சங்க இலக்கியத்தின் வழியாகவும், தொல்காப்பியரின் திணை இயல், திணை மயங்கியல் அடிப்படையிலும் தமது திணைக் கோட்பாட்டை கார்த்திகேசு சிவத்தம்பி அவர்கள் முன் வைத்தார். இதன் மூலம் ஆசியவகை உற்பத்தி முறை என்று மார்க்சால் குறிப்பிடப்பட்ட உற்பத்திமுறையினை அறிவதற்கான திறவு கோலை அவர் நமக்களித்தார் எனலாம்.

நானிலப் பிரிவுகளில் வளமும் செல்வாக்கும் மிகுந்ததாக மருத நிலம் இருந்தது. மருத நிலத்திற்கு ஒப்பாக நீர்வளத்தை ஏற்படுத்தி 'வன்புல வேளாண்மையினை மென்புல வேளாண்மையாக மாற்றுவதற்கான வாய்ப்புகளை கொண்டிருப்பதாக முல்லை நிலம் அமைந்திருந்தது. எனவே பரந்த அளவிலான வேளாண் உற்பத்திக்கு ஏரிகளும், குளங்களும் வெட்டப்பட்டு ஆற்று நீரையும் பயன்படுத்தியும், பருவ மழைகளை தேக்கியும் மென்புலமாக்கல் இவ்விரண்டு நிலங்களிலும் மேற்கொள்ளப் பட்டன. சமதளங்களில் இல்லாத, குன்று, மலைகளில் நடைபெறும் குறிஞ்சி வேளாண் உற்பத்தியானது குறுகிய எல்லைக்குள், வரையரைக்குட்பட்டே மேற்கொள்ளத் தக்கதாகும். நெய்தல் நிலம் உப்பு விளைவித்தலுக்குரியது, பிற வகையில் நோக்கும் போது மணற்பரப்பு மிகுந்துள்ளதால் ஆதி விவசாயமான தோட்ட வேளாண்மையை உள்ளடக்கியதாகும். ஆகவே இங்கு ஏற்றத்தாழ்வான சமச்சீரற்ற உற்பத்தி முறைகளும் வேறுபட்ட பொருளாதார அடிப்படைகளும் கொண்டு நானிலங்களை உள்ளடக்கியதாக தமிழ் சமூக அமைப்பு விளங்கியது. அதுமட்டுமின்றி ஒவ்வொரு நிலத்திலும் ஒவ்வொரு பருவங்களுக்கு ஏற்ப மேற்கொள்ள வேண்டிய வேளாண் உற்பத்தி முறை மாறுபட்டது. எனவே அவர்களின் உணவு பழக்கவழக்கங்களும் வாழ்க்கை முறையும் மாறுபட்டது. இதனால் ஒவ்வொரு நிலம் சார்ந்தும் அமைந்திருந்த சமூகங்கள் அவ்வற்றுக்கே உரிய தனித்தன்மையுடனும் சுயதேவை பூர்த்தி கிராமங்களாகவும் (தன்னிறைவுச் சமுதாயங்கள்) அமைந்திருந்தன. ஒரு குறிப்பிட்ட சமூகத்திற்குள் நடைபெற்ற உற்பத்தி அச்சமூகத்துக்குள்ளாகவே பகிர்ந்துக் கொள்ளப்பட்டது. சமூக பொருளியல் நோக்கில் பார்த்தோமானால் அங்கு பண்டப் பரிவர்த்தனை நடைபெறவில்லை. ஒரு குறிப்பிட்ட நிலம் சார்ந்த கிராம சமுதாயத்தில் பல்வேறு தொழில்களும் வேளாண் உற்பத்தியை சார்ந்து நடைபெற்றன. வேலை பிரிவினையின் அடிப்படையில் பல்வேறு தொழில்களைச் செய்து உற்பத்தியில் ஈடுபட்ட அவர்களுக்கு உற்பத்தியின் முடிவில் பகிர்ந்தளிக்கப் பட்டது. இங்கு அந்த சமுதாயத்துக்குள்ளாகவே உற்பத்தி செய்துக் கொள்ள முடியாதவை உப்பு, இரும்பு ஆகியவை மட்டுமே. இதுவும் ''உப்புக்கு நேரே நெல்லை மாற்றிக் கொள்வீராக'' என்று பண்ட மாற்றுமுறையில் பரிமாறிக் கொள்ளப்பட்டது.

எனவே பிற நிலங்களுக்கும் சென்று பண்ட பரிமாற்றம் நிகழ்த்தியவர்களாக உமணர் விளங்கினர். இங்கு சங்கச் சமூக கட்டமைப்பினுள் வாணிபம் நிகழவில்லை. இங்கு பணம், அல்லது நாணயத்திற்கான தேவை இருக்கவில்லை. மருதம் முல்லை ஆகிய வளமான நிலங்களில் பெற்ற உபரி உற்பத்தி ஏரி, குளம் முதலான நீர் நிலைகளை ஏற்படுத்தி வேளாண் நிலங்களை பெருக்குதல் நகரங்களையும், கோயில்களையும் ஏற்படுத்துதல் முதலான செய்கைகளுக்கும் பிற கலை பண்பாட்டு ஆக்க நிகழ்வுகளுக்கும் ஆட்சியாளர்களால் பயன்படுத்தப்பட்டது.

வெவ்வேறு விதமாக பல்வேறு தொழில்களில் ஈடுபட்டோர், விளைவித்தோர். அந்தந்த நிலைமைகளிலேயே தனித்தனியே வேறுபடுத்தி பிரித்து வைக்கப் பட்டிருந்தனர். ஒவ்வொரு குழுவினரும் பிறருடன் தொடர்பின்றி பிரிந்தே இருந்தனர். இத்தகைய குழு- குடிகளுக்கிடையிலான தடை செய்யப்பட்ட இவ்வுறவு முறை நிலையானதாகப் பேணப்பட்டதுடன் சாதி உருவாக்கத்துக்கான அடிப்படையாக இவை அமைந்திருந்தன. இத்தகைய தன்னிறைவு பெற்ற சமூக அலகுகளாக தமிழ்ச் சமூகம் இயங்கிக் கொண்டிருந்த அதே வேளையில், இவற்றுக்கு புறத்தே அல்லது மேலாக அரசு பிற நாடுகளுடனான வாணிபத்தில், கடல் கடந்த வாணிபத்தில் ஈடுபட்டதன் மூலம் செல்வத்தை ஈட்டியது.

சங்கச் சமூகத்தை அடிமைச் சமூகம் என்று கருத இடமளிக்கும் வகையில் பொருளாதாரமும் உற்பத்திமுறையும் அமைந்திருக்கவில்லை. அன்றைய அரசு பொருளீட்டியது எல்லாம் அயல்நாட்டு வாணிகத்தின் மூலமாக கடல் வாணிபத்தின் மூலமாகத்தான். அவை அனைத்தும் Prestigious goods மதிப்புறு பண்டம் இயற்கையில் விளைந்தவை. அவை அடிமைகளைக் கொண்டு உற்பத்தி செய்யப்பட்டவையல்ல. யானை தந்தம், முத்து, சந்தனம், கண்ணாடி மணிகள், மிளகு முதலியனவற்றைக் கொண்டு சென்று விற்றதன் மூலமாகவே பொருள் ஈட்டினர் என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.[7] இக்கருத்து முற்றிலும் ஏற்புடையதல்ல.

உள்நாட்டு வேளாண் உற்பத்தி எவ்விதமான பரிவர்த்தனைக்கும் உள்ளாகாமல் நுகரப்பட்டுவிட்டது. அது பொன் வெள்ளி முதலான நாணயங்களுக்கு மாற்றாக பரிவர்த்தனை செய்யப்படவில்லை. அத்தகைய அடிமை உற்பத்தி மதிப்புடையதாக ''சங்கச் சமூகத்தில்'' கருதப்படாததும் ஒரு காரணமாகும். ஆனால் கிடைத்தற்கரிய முத்து, பவளம், யானை தந்தம், சந்தனம், மிளகு முதலியன உற்பத்தி செய்யப்படாதவை. இயற்கையில் சேகரிக்கப்பட்டவை. அதன் அரிதான தன்மையினாலும் கிரேக்கம், எகிப்து, பாலஸ்தீனம் முதலிய நாடுகளின் உயர்குடி ஆட்சியாளர்களால் விரும்பப்பட்டதாலும் கடல் வாணிபம் செழித்திருந்தது. இதன் காரணமாகவே வணிக வர்க்கம் உருவாகி சமூகத்தின் முதன்மையான ஆற்றல் மிக்கவராய் மேலெழுந்தனர்.

மேலும் குறிஞ்சி, முல்லை நிலங்களில் இத்தகைய இயற்கைப் பொருட்களைச் சேகரித்தல், அல்லது அவற்றின் இயற்கை செல்வ வளங்கள் ஆகியவற்றுக்காவும் மருத நிலத்து முதுகுடி மன்னர்களுடன் மட்டுமல்லாமல் முல்லை நிலத்து சீறூர் மன்னரையும், குறிஞ்சி நிலத்து வேளிரையும் கைப்பற்ற முனைந்தனர். இத்தகைய இயற்கைச் செல்வங்களை கைப்பற்ற ஏற்படுத்தப்பட்டதே வணிகப் பெருவழிகள் (Trade route) ஆகும்.

> ***''திணை முறைமையினுள்ளே உள்ளார்ந்து நிற்கும் பொருளியல் ஒழுங்கமைவுகளைப் பரிசீலிக்கும் போது மருதம் நெய்தல் தவிர்த்த மற்றய பொருளாதாரச் சூழமைவுகளுள் இத்தகைய ஒரு ஆசிய உற்பத்திப்பாங்கு அவற்றின் அடிநிலையில் செயல்படுவதை கண்ணுற முடியும். பெரும்பாலான பின்தங்கிய இந்திய குடியிருப்புச் சூழல்களிலேயே இப்பண்பினை பொதுவாகக் காணலாம்''***

என **கா. சிவத்தம்பி** குறிப்பிடுகின்றார்.[9]

இந்திய சமூகம் தொன்மையானது; சின்னஞ்சிறு சமூகங்களை அலகுகளாகக் கொண்டது. அவற்றில் சில இது நாள் வரை நீடித்து வருகின்றன.

சமூகங்களின் அடிப்படைகளான நிலம் சமூகத்தில் உள்ள அனைவருக்கும் சொந்தம்; விவசாயமும் கைத்தொழிலும் இரண்டறக் கலந்துள்ளன. மாற்ற முடியாத முறையில் உழைப்பு பிரிக்கப்பட்டுள்ளது. ஒரு புதிய சமூக மாற்றம் ஏற்படும் போதெல்லாம் இதே திட்டம் அதன் தயாராக உள்ள திட்டத்தின் உருவத்தை வடிவமைக்கின்றது. தேவை போக மீதியுள்ள உபரிதான் விற்பனைப் பண்டமாகின்றது. இந்தியாவின் புராதன சமூகங்களின் சுயதேவை பூர்த்தி அமைப்பு இந்தியாவின் வெவ்வேறு பாகங்களில் வெவ்வேறு வகைகளாக இருக்கிறது (மூலதனம், தொகுதி 3) என்று கார்ல் மார்க்ஸ் குறிப்பிடுகின்றார்.

மேலும் இந்தியாவைப் பற்றிய ஆய்வில் 'ஆசிய வகைப்பட்ட உற்பத்தி முறை என்று கார்ல் மார்க்ஸ் குறிப்பிட்டது கீழ்கண்ட சில தன்மைகளை அடிப்படையாகக் கொண்டுதான்.

1. **தன்னிறைவு சமுதாயங்கள்: அதாவது சரக்கு என்ற பொருளில் உற்பத்தி இன்மை.**
2. **தனியார் நிலவுடைமை இல்லாமை (அரசுதான் நிலத்தின் உச்சபட்ச உடைமையாளன். நிர்வாகத்திற்காகவும், குறிப்பிட்ட சில பணிகளுக்காகவும் சேவைகளுக்காகவும் அரசனால் பகிர்ந்தளிக்கப்பட்டு, நில மான்யம் வழங்கப்பட்டு நிலம் உற்பத்திக்கு வந்தது. ஐரோப்பாவைப் போல் அல்லாமல் வாடகை-வரி இரண்டும் ஆறிலொரு பங்காக பொதுவாக வசூலிக்கப் பட்டது.**
3. **அரசுகள் விழுவதும் எழுவதுமான நிலையற்ற தன்மை**

4. **அன்னியப் படையெடுப்புக்கு எளிதாக இரையாகும் தன்மை.**

5. **விவசாயத்திற்கும், கைவினைத் தொழிலுக்கும் உள்ள இணைப்பு. இந்த இணைப்பே பட்டரைத் தொழிலுக்கு முன்னேறிச் செல்லத் தடையாக இருந்தது. இவைதான் ஆசிய வகை உற்பத்தி முறையின் முதன்மை இயல்புகள்.**[10]

கார்ல் மார்க்ஸ் வாழ்நாள் முழுதும் அர்ப்பணித்துக் கொண்டு முதலாளித்துவ பொருளாதாரத்தையே முதன்மையாக ஆராய்ந்தார். (பண்டைய, நிலப் பிரபுத்துவ பொருளாதாரங்களை விளக்க அவகாசம் இருக்கவில்லை) முதலாளித்துவ பொருளாதார வளர்ச்சிக்கான ஊற்றுக்கண்களை ஆராயும் முகமாகத்தான் பிரிட்டனின் வளர்ச்சிக்கு அடிப்படை வழங்கிய இந்தியாவைப் பற்றியும் ஆராய்ந்தார். அதோடு மட்டும் நிற்காமல் பிரிட்டனின் முதலாளித்துவ சமூக வளர்ச்சிக்கு அமெரிக்கத் தங்கமும், ஆப்பிரிக்க அடிமையுழைப்பும் கூட எவ்வாறு அடிப் படையாக இருந்தன என்பதையெல்லாம் அவர் ஆராய்ந்து மூலதனம் என்ற நூலை எழுதினார். நம்மைப்பற்றியும் இனிவரப் போகும் நம்முடைய சந்ததியினரைப் பற்றியும் கூட மார்க்ஸ் நன்றாக அறிந்திருந்தார்.

> ***''ஆசிய, பண்டைய, பிரபுத்துவ, பூர்ஷ்வா முறைகளிலான உற்பத்தி முறையை சமூக பொருளாதார அமைப்பின் முற்போக்கு சகாப்தங்களாக நாம் விரிவாக பகுக்கமுடியும்''***

என்று **மார்க்ஸ்** குறிப்பிட்டார்.[11] ஐரோப்பிய உற்பத்தி முறை போன்றே முற்போக்கான உற்பத்தி முறை என்றுதான் ஆசிய உற்பத்தி முறையை குறிப்பிட்டார். மேலும் அவர் குறிப்பிட்ட தன்னிறைவுச் சமுதாயங்கள், சாதி, வர்ணம் பற்றி எல்லாம் நாம் விளக்க வேண்டியுள்ளது.

### 1.2.4 தன்னிறைவுச் சமுதாயங்கள்

ஐரோப்பாவில் ஒவ்வொரு குடும்பத்தின் உறுப்பினர்களுக்கு இடையிலும் வேலை பிரிவினை இருந்தது. ஆனால் இந்தியாவில் குடும்ப உறுப்பினர்களுக்கு இடையில் வேலைப் பிரிவினை இல்லாமல் சமூகத்தின் உறுப்பினர்களுக்கு இடையில் செயல்பட்டிருந்தது. சமூக உறுப்பினர்களில் ஒரு பகுதியினர் விவசாய வேலையிலும், கைவினைத் தொழில்களில் வெவ்வேறு சமூக உறுப்பினர்களும் ஈடுபட்டனர். கை வினைஞர்களுக்கு அறுவடையில் ஒரு பகுதி தரப்பட்டது. அவர்கள் விவசாயத் தொழில் புரிபவருக்கு தமது கைவினைப் பொருட்களை வழங்கினர். உழைப்பின் இத்தகைய அமைப்பு முறை கிராம சமூகத்தின் பலமான அக உறவுகளைப் பேணி வளர்த்தது. வெளியுலகத்திலிருந்து அதன் நிலையானத்

தன்மைகளையும் சுதந்திரத்தையும் உருவாக்கி பாதுகாத்தது. இது நாட்டின் பொருளாதாரத்திலிருந்து பிரிவினையை நிரந்தரப்படுத்தியது. நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் இடையிலான உழைப்பு பிரிவினையைத் தடை செய்தது. உள்நாட்டுக்குள் சந்தையையும் சரக்கு என்ற பொருளில் சந்தைப் படுத்துதலையும் நோக்கிச் செல்வதையும் தாமதப்படுத்தியது. அதே போல இந்தியாவில் நிலவிய சாதி முறை சமூகங்களுக்கு உள்ளேயே குறுகிய, நிலையான அக உறவுகளை வளர்த்துக் கொண்டன. இதனால் குறிப்பிட்ட சாதியில் பிறந்த விவசாயி அதில் நிரந்தர உறுப்பினராக இருப்பதையும் அவன் செய்யவேண்டிய வேலையையும் முன்கூட்டியே விதித்தது. இந்திய வண்ணத்தை ஏற்றுக் கொண்ட சாதி முறையானது கிராம சமூகங்களைச் சேர்ந்த ஒவ்வொரு நபரும் பொது உழைப்பில் பங்கெடுக்கும் சட்டங்களை வண்ணக் கொள்கையாக வகுத்துத்தந்து அதனை நடைமுறைப் படுத்தியது.

### 1.3.0 வண்ணம்

வண்ணங்களின் தோற்றம் பற்றி ஆராய்வது மிகவும் கடினமானது. பண்டைய இந்திய சமூகத்தில் சாதிகளோடு கூடவே வண்ணங்களும் நிலவின. வர்க்கங்களற்ற சமூகத்திலேயே அதாவது சொத்துடைமையற்ற சமூகத்திலேயே தோன்றிவிட்ட மிகத் தொன்மைவாய்ந்த ஏற்பாடு இது. முன்னர் வர்க்க சமூகத்தில் இது நிலைப்படுத்தப்பட்டு இதற்குப் புனிதத் தன்மை அளிக்கப்பட்டது.

ஆயினும் வண்ணங்களின் தோற்றத்திற்கு தொடக்ககால கூட்டு சமுதாய அமைப்பின் சீர்கேடும் சமூக உடைமை ஏற்றத்தாழ்வின் வளர்ச்சியும் காரணமாக அமைகின்றது. அதாவது இனக்குழுத்தலைவர்களைப் புரோகிதர்கள் பேராசைக்காரர் களாக மாற்றி பிறர் செல்வங்களைக் கவர்தல், வெற்றியீட்டுதலுக்காக தூண்டினர். இதனால் ஓயாத போர் நிகழ்ந்தது. இதனை வீர யுகம் என்கின்றோம். வீர காப்பியங்கள் (இராமாயணம், மகாபாரதம்) உருவாயின. தமிழ்ச்சமூகத்தில் வண்ணங்கள் காப்பியங்களில்தான் முதன்முதலில் அறியப்படுகின்றன.

### 1.3.1. தொடக்கத்தில் மூன்றே வண்ணம்

வட இந்தியாவில் பரவி குடியேறியதற்கு ஏற்ப இந்தோ ஆரியர்கள் வட்டார இனக்குழுக்களுடன் தொடர்பு கொண்டார்கள். இந்த இனக்குழுக்களின் சமுதாய அமைப்பில் தனித் தன்மைகள் இந்தியாவில் வண்ண அமைப்பு தோன்றிட காரண மாயின. போரில் ஈடுபட்டவர் சத்திரியர் ஆயினர். புரோகிதர்கள் பிராமணர்கள் ஆனார்கள். மற்ற சமுதாயத்தினர் அனைவரும் வைசியராக இருந்தனர். ரிக்வேதம் இந்த மூன்று சமுதாயத்தினரையே பல இடங்களில் குறிப்பிடுகின்றது. உலகின் மற்ற

இடங்களிலும் சாதிய கூறுகளைக் கொண்ட இனக்குழு சமூகங்கள் இருந்ததுபோலவே பண்டைய ஈரானிலும் இனக்குழுக்களிடையே சமூக வகுப்புகள் நிலவின. இவை பிஷ்த்ரா (வண்ணம் அல்லது நிறம் என்ற பொருளுடையது இந்த சொல்) எனப்பட்டன. இதிலிருந்து இந்தோ-ஈரானிய காலப்பகுதியிலேயே இந்தியாவில் வண்ணங்கள் தோன்றிவிட்டன என்று கருதுகின்றது.

### 1.3.2. நான்கு வண்ணம் ஏற்படுத்தப்படல்

பிற்காலங்களில் உருவான ரிக் வேதத்தின் பத்தாவது மண்டலத்தில் நான்கு வண்ணங்கள் கூறப்படுகின்றன. பிராமணர்கள் ஆதிபுருசனின் நெற்றியில் இருந்தும், சத்திரியர்கள் தோளிலிருந்தும், வைசியர் வயிற்றிலிருந்தும், சூத்திரர்கள் பாதத்தி லிருந்தும் தோன்றியதாக *புருஷ ஸுக்தம்* கூறுகின்றது. பிந்தைய வேத இலக்கியங்கள் இதனை பல முறை திரும்பதிரும்ப கூறுகின்றன. ஆனால் வண்ணங்கள் முதற் கடவுளான பிரமத்திலிருந்து தோன்றியதாக சொல்வதுடன், வண்ணங்களின் தோற்றத்தையும் நிலைமையையும் புனிதப்படுத்துகின்றனர். பார்ப்பன வகுப்பாரின் மேன்மையை ஆதாரப்படுத்தி தங்களுக்கு தெய்வீகத் தன்மை அளிக்க முயல்கின்றனர். எல்லா வேத நூல்களும் பார்ப்பனர்களுக்கு முதலிடமே கொடுக்கின்றன. பார்ப்பனர்கள் வேதத்தை கற்று அறிவதிலும், அறிவைப் பெறுவதிலும் புனித சடங்குகள் வேள்விகள் செய்வதிலும் தங்களது தனிச் சலுகைகளையும், உரிமைகளையும் தீவிரமாகக் காத்து போராடி வருகின்றார்கள். நாளடைவில் தீண்டத்தகாதவர்கள் தோன்றினர். இவர்கள் வண்ண முறைக்கு வெளியே இருந்தனர். மிகவும் கீழான நிலையிலிருந்தனர். அவர்கள் துப்புரவு வேலை செய்பவர்களும் மயானத்தில் எரியூட்டுபவர்களும் முதலியோராவர். மேல் வண்ணத்தார் தீண்டத்தகாதவர்களுடன் கலந்து பழக அனுமதிக்கப்படவில்லை. இவர்களுக்கு எவ்வித ஆன்மீக அரசியல் உரிமைகளும் இல்லை. கட்டாய உழைப்பும், அடிமையுழைப்பும் தோன்றிய காலம் இது எனலாம்.

### 1.4.0. சாதி

சாதிகளும், சாதி அமைப்பும் நிலவுவது இந்தியாவில் மட்டும்தான் என்று கருதப்படுகின்றது. ஆனால் இந்த எண்ணம் வரலாற்று, மானுடவியல் சான்றுகளுக்கு முற்றிலும் பொருந்துவதல்ல. சாதிகளின் ஒரு சில அடையாளங்களும், சாதி அமைப்பின் சில அம்சங்களும் உலகில் பல மக்களினங்களில் காணப்படுகின்றன. சாதி அமைப்பின் வளர்ச்சிக்கு துவக்கமான தெளிவான உதாரணத்தையே இந்தியா தருகின்றது. எனவே இந்தியாவின் சாதி பாகுபாடு தனித்தன்மையுள்ள சமுதாய அமைப்பாகும். கண்டிப்பான அகமண முறையும் திட்டவட்டமான பரம்பரைத் தொழிலுடன் தொடர்பும், இது போன்ற பிற

தன்மைகளும் கொண்டது. சாதி என்பது இனக்குழு - குடி அமைப்பின் எஞ்சிய வடிவங்களில் ஒன்று என்று கார்ல் மார்க்ஸ் பலமுறை வலியுறுத்தி இருக்கின்றார். இனக்குழு - குடி உறவு சாதியின் வடிவிலேயே ''யாவற்றிலும் கடைகோடியான, யாவற்றிலும் கண்டிப்பான வடிவத்தையே மேற் கொள்கின்றது; இதுதான் இந்திய சாதி அமைப்பின் தனிவகை நிலைமையாகும்'' என்று மார்க்ஸ் குறிப்பிட்டார்.[12]

எல்லா இனக்குழு சமூகங்களும், அக மணமுறை கொண்டவர்களும்கூட அரசு உருவாகி சமூகமயமாகும் போது, அதற்குண்டான கருத்தியல் வளர்ந்த நிலையிலும் அனைத்துப் பிரிவினைகளும் ஏற்றத்தாழ்வுகளும் ஒன்று கலந்து மறைய வேண்டிய சூழலில் அவற்றை பல்வேறு சாதிகளாகவே பிரித்து வைக்கும் அடித்தளமாகவே வண்ணம் இன்றளவும் உள்ளது.

*தொல்காப்பியம்* சாதி என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளது. அது நீர்வாழ் உயிரினங்களைக் குறிக்கும்போது பயன்படுத்தியுள்ளது (*தொல்.* மரபியல் 44:64) *சிலப்பதிகாரம்* அச்சொல்லை பல்வேறு வகைப் பணிகளைச் சுட்டுவதற்காகவும் பயன்படுத்தியுள்ளது (*சிலம்பு.* 8:41;14:187) பிற்சங்க காலத்தில் இச்சொல் மனித சாதியை குறிப்பதாகவும் மாற்றடைந்தது (*பழமொழி* 285) சில குறிப்பிட்ட சாதியினர் தூய்மையற்றவர்களாக கருதப்பட்டு அவர்களுடன் உணவு உண்பது தீட்டு என்ற பாகுபாடும் தோன்றிவிட்டது (*நாலடி.* 80) வேட்டுவர் (*இன்னா.* 12) மீனவர் (*நாலடி.* 136) ஆயர் (*பழமொழி* 285) ஆகியோரை தாழ்ந்த குலத்தினர் என வகுத்திருந்தனர். ஆகவேதான் ஆயர் குல மகளான மாதரி மதுரையில் கண்ணகிக்கும் கோவலனுக்கும் தான் சமைத்து அளிக்காமல் அரிசி காய்கறிகளைக் கொடுத்துச் சமைக்கச் சொல்கிறாள் எனச் *சிலப்பதிகாரம்* (*சிலம்பு.* 16:22-8) குறிப்பிடுகின்றது.

### 1.4.1. சாதிகள் கீழ் மேலாதல்

ஒரு நபர் பொருளாதார மேம்பாடும் சமுதாய மதிப்பும் கிடைக்கப் பெற்றவுடன் அவருடைய சாதியும் உயர்ந்த நிலையை அடையும். பொருளாதார சமூக நோக்கில் தாழ்நிலையில் உள்ள மக்கள் தாழ்ந்த சாதியினை சேர்ந்தவராகிவிடுவர். அதே போல தனி நபரோ, குலங்களோ, தங்கள் சமுதாய மதிப்பில் உயர்ந்தால், அதாவது பெருநிலக்கிழார்கள், வெற்றிப்பெற்ற படைத் தலைவர்கள் அரசராக ஆகிவிட்டால் அவர்களோ, அவர்களது சந்ததிகளோ உயர் சாதியினர் சத்திரியர் அல்லது அதற்கு நிகரான சாதியினர் என்று கூறப்படுவர். வர்த்தகத்தைத் தொழிலாகக் கொண்டிருந்த சூத்திரர்களின் முழுக் குழுக்கள் முடிவில் வைசியர் ஆகிவிட்டனர். தீண்டத்தகாதவர்கள் கூட சில வேளைகளில் சூத்திரர்களுக்கு உரிய இடத்தை முயன்று பெற முடிந்தது. அதே போல உயர் படி வரிசையில் இருந்தவர் தாழ்நிலைக்கு சரிவதும் இயல்பானதுதான். இவ்வாறு கீழ் மேலாக மாறும் போதும்

ஒன்று கலவாமல், கரைந்தழியாமல் நிலவிய சமுதாய அமைப்பை நிலையாக வைத்திருக்க சாதி முறை முதன்மையாக உதவியது. வேளாண்மை, கைத்தொழில்கள், வர்த்தகம் ஆகியன வளர்ச்சி பெற்றதற்கு ஏற்ப இத்தகைய மாறுதல்கள் நிகழவும், சாதியமைப்பு தன்னை இசைவித்துக் கொண்டு வலியதாய் இருந்தது. இருந்து வருகின்றது. இதற்கு அடித்தளமாக விளங்கக்கூடியது வண்ணம்.

சமூகம் நான்கு வண்ணங்களாக தொன்மைக்காலம் முதலே வட இந்தியாவில் இருந்து வருகின்றது. ஒவ்வொரு வண்ணமும் பற்பல சாதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. வேளாண்மை வர்த்தக கம்மியர் சாதிகளில் பெரும்பாலானவை உழைப்புப் பிரிவினையின் விளைவாகத் தோன்றின. சில சாதிகள் மனிதர்கள் வேறிடத்திற்கு குடி பெயர்ந்ததன் விளைவாக ஏற்பட்டன. ஏனெனில் பழக்க வழக்கங்களும், நம்பிக்கைகளும் அவர்களை வட்டார மக்களில் இருந்து வேறுபடுத்தின. பெரும்பான்மையான சாதிகள் இனக்குழுக்களே. இவை சாதிமுறையில் சேர்த்துக் கொள்ளப்பட்டு குறித்த உழைப்புக்கு அல்லது சமுதாய செயலுக்கு உரியவை ஆக்கப்பட்டன. (இவர்களின் வழிபாடுகளும் பெருந்தெய்வங்களுடன் இணைக்கப் பட்டன. சிவன் கழுத்தில் பாம்பு, வாகனம் நந்தி முதலியன) ஒவ்வொரு சாதியும் குறித்த அளவு ''தூய்மை, அல்லது தூய்மை யின்மை'' உள்ளதாக கருதப்பட்டது. பிற சாதிகளுடன் சிக்கலான படிவரிசை உறவு கொண்டிருந்தது.

### 1.4.2. தென்னிந்தியாவில் சாதி

தொன்மை காலத்திலேயே வண்ணங்களும் சாதியமைப்பும் தோன்றி வடஇந்தியாவில் நிலவியிருந்தாலும், தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் கி.பி. ஏழாம் நூற்றாண்டுகளுக்கு பிறகே அவை ஆதிக்கம் பெற்றன. தமிழ்நாட்டின் பேரரசு ஆக்கத்துடன் இந்த ஆசியவகைப்பட்ட உற்பத்தி கூறுகளைப் பொறுத்திப் பார்க்க முடியும். **கார்ல் மார்க்ஸ்** குறிப்பிட்ட ஆசிய வகை உற்பத்தி முறையின் கூறுகளை **இ.எம்.எஸ்., கே. பால தண்டாயுதம், பி. சீனிவாசராவ்** போன்ற முன்னோடி அரசியல் தலைவர்கள் எல்லாம் ஆய்வுக்குட்படுத்த முயற்சித்தனர். ஏனெனில் ஆசிய மர்மங்களைத் திறக்கும் சாவியாக ஆசிய வகை உற்பத்திமுறையின் தனித்தன்மைகளையே மார்க்ஸ் குறிப்பிட்டார். எனவேதான் இதனை சரியாக விளங்கிக் கொண்டு நடைமுறை செயல்பாட்டை அமைத்துக் கொண்டு புரட்சியினைச் சாதிக்க முடியுமென்று அவர்கள் உணர்ந்து செயல்பட்டனர்.

ஆனால், தற்போதுள்ள இடதுசாரி அறிவு ஜீவிகளும், வரலாற்றாய்வாளர்களும் இதனை மறுத்து வருகின்றனர்.

***'உலகம் முழுதும் உள்ள நிலைமைதான் இங்கும் இருந்தது. மார்க்சுக்கு புதிரானதாக தோன்றிய ஆசிய நிலைமை அப்போதே மாறி விட்டது'***

என்று குறிப்பிடுகின்றார் **பிரபாத் பட்நாயக்.**[13] இதனால் சோசலிசப் பாதை துலக்கப்படவில்லை.

### 1.4.3. சாதி பற்றி ஆய்வாளர்கள் கருத்து

இந்தியாவைப் பற்றி கார்ல் மார்க்ஸ் அறிந்ததெல்லாம் ஆங்கிலேய ஆராய்ச்சியாளர்கள் எழுதிய நூல்களைப் படித்ததன் மூலம்தான். நேரடியாக இந்தியாவைப் பற்றி அறியவில்லை. ஆங்கிலேய ஆராய்ச்சியாளர்களின் தேவைக்கும், நோக்கத்துக்கும் ஏற்ப மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளை மார்க்ஸ் அடிப்படையாக கொண்டது எந்த அளவிற்கு பொருத்தமுடையதாக இருக்கும் என்றும் கூட வினவுகின்றனர்.

***இந்திய சமுதாயம் மாறாத்தன்மை கொண்டதாக இருந்தது என்ற ஜேம்ஸ் மில் முதலிய ஆங்கிலேய அறிஞர்கள் கூறிவந்த கருத்தையே தமது ஆசியவகை உற்பத்தி முறை மற்றும் கீழ்த்திசை கொடுங்கோன்மை குறித்த விளக்கங்களில் கார்ல் மார்க்ஸ் பயன்படுத்தியதை ஏற்றுக்கொள்ள முடியாது***

என்று **D.N. ஜா** குறிப்பிடுகிறார்.[14]

இன்னொரு பக்கம் வலது சாரிகள் (பூர்ஷ்வா சிந்தனையாளர்கள்) இந்தியாவில் நிலவுவது ஆசியாவிற்கே உரிய உற்பத்தி முறைதான். இங்கு நிலபிரபுத்துவமே தோன்றவில்லை. ஆகவே இந்திய வகைப்பட்ட முதலாளித்துவமும் தனித்தன்மை யுடையது என்பதால் ''மார்க்ஸ்'' கூறிய சோசலிசம் இங்கு தோன்றாது என்று சோசலிசத்தை மறுக்கின்றனர்.[15]

மேற்கண்ட இந்திய ஆராய்ச்சியாளர்களின் மாறுபட்ட கருத்துக்களும் ஆசிய வகை உற்பத்தி முறையினை மறுப்பதிலேயே முடிவடைகின்றன. இதற்கு காரணம் அவர்களின் தத்துவக் கண்ணோட்டத்தில் அமைந்துள்ள குறைபாடுதான். அகத்திற்கும் புறத்திற்கும் இடையிலான பிரிவினையும் வேறுபாடுகளுமே முக்கியமான குறைபாடாகும்.

### 1.4.4. மார்க்சின் கூற்று

மெய்யியலில் கருத்து முதல்வாதத்தின் தொடக்கப்புள்ளியாகிய நான் என்பது

முற்றிலும் பொய்யானது. அது ஒரே சமயத்தில் 'நான்' மற்றும் 'நீ' யாகவும் உள்ளது. அதாவது தன்னுடைய அகம் பிறருக்கு பொருளாகவும் உள்ளது என்று பிளஹானவ் விளக்குவார்.[16] அதாவது கருத்து முதல்வாதம் அகமாகக் கொண்டு செயல்படும் 'நான்' நுட்பமான வாழ்நிலையுடையது. அது மட்டுமல்ல எனது உடல் என்னுடைய சாரத்திற்கு சொந்தம். என்னுடைய உடல்தான் என்னுடைய 'நான்' ஆகவும் உள்ள தன்றோ? மேலும் நமது வாழ்நிலைமைதான், சமூக வாழ்க்கை தான் சிந்தனையைத் தீர்மானிக்கின்றது. சமூக வாழ்க்கை என்பது சக மனிதர்களுடன் இணைந்து கூட்டாக உற்பத்தியில் ஈடுபட்டு வாழ்வது.

ஆக ஒரே சமயத்தில் புறப்பொருளானது கருத்து முதல்வாதிக்கு சிந்தனையினால் தோன்றியதாகவும், பொருள் முதல்வாதிக்கு பொருள் மட்டுமே உண்மை என்பதாகவும் இருவேறு தோற்றங்களைத் தருகின்றது. இதனால் அகம்-புறம் ஆகியவற்றின் இணை வினையும், அவை ஒன்றை ஒன்று ஒத்தும் விலக்கியும் முரண்பட்டு புதியன உண்டாக்கிச் செல்லும் இயக்கவியல் போக்கினையும் காண இயலாதவர்களாகின்றனர். தனி மனித 'நான்' ஒரே சமயத்தில் 'நான்' ஆகவும் 'நீ'யாகவும் அகமாகவும், புறமாகவும் வேறுபாடாகத் தோன்றுவதைப் போலதான் சமூகமும் அமைந்திருக்கின்றது. இந்திய சமூகத்தில் வாழும் நாம் இந்த சமூகத்தின் Subject ஆக இருக்கின்றோம். ஒரு பகுதியை மட்டுமே உணர்கின்றோம். அதே நேரத்தில் மேலைய நாடுகளிலிருந்து வந்து நமது சமூகத்தை நோக்குபவர்களுக்கு நாம் Object. நம்மைப் பற்றி நாமே அறிந்தவற்றைவிட வேற்று சமூகத்தவர்கள் நம்மைப் பற்றிய இன்னொருப் புறவயப் பகுதியையும் சேர்த்து பதிவு செய்கின்றனர். (இயற்கை, மனிதன், சமுதாயம் என அனைத்திலும் இயக்கவியலின் உட்கூறுகளைக் கண்டு விளக்கும் கார்ல் மார்க்ஸ் இந்திய சமூகம் பற்றிய இவ்விரு பகுதிகளையும் தன்மைகளையும் ஒருங்கிணைத்து வளர்த்தெடுத்து ஆசிய வகை உற்பத்தி முறையினை விவரித்தார்) இந்திய நிலைமைகளைப் பதிவு செய்த ஆங்கிலேய அதிகாரிகளும், ஆய்வாளர்களும் அவர்களுக்குத் தேவையான முறையில் Lab technicianகளைப் போல ஆராய்ந்து சென்றதை ஆதாரமாகக் கொண்டு தேர்ந்த அறுவைசிகிச்சை நிபுணரைப்போல, மருத்துவரைப் போல ஆராய்ந்து ஆசிய வகைப் பட்ட நோயினைக் கண்டறிந்தார். அது மட்டுமல்ல அகம்-புறம் பிரிவினை பிரச்சினையினை, தத்துவக் குறைபாட்டால் நிகழ்ந்து வந்த போராட்டத்தை சரியாக விளங்கிக் கொண்டு அதனை சரிபடுத்தியவர், முடிவுக்கு கொண்டுவந்தவர். இயக்கவில் பொருள் முதல்வாதத்தை தோற்றுவித்த மூலவர்களில் ஒருவர் மார்க்ஸ். அவர் வாழ்நாள் முழுதும் முதலாளித்துவ பொருளாதாரத்தையே ஆராய்ந்தார். அது ஆங்கிலேய மூலதனத்தையும் உற்பத்தி உறவுகளையும் அடிப்படையாகக் கொண்டது. ஆங்கிலேய ஏகாதிபத்திய

உருவாக்கத்திற்கும் அதன் மூலதனக் குவியலுக்கும் இந்திய பொருளாதாரத்தையும், உற்பத்தியையும் சுரண்டி சென்றதே முக்கிய அடிப்படையாக இருந்தது என்ற உண்மையின் முழு பரிமாணத்தையும் உணர்ந்திருந்தார். எனவே இந்திய சமூகத்தை ஆளும் அதிகாரிகளும், நிர்வாகிகளும் இந்தியாவைக் கட்டுப் படுத்தவும், நிர்வகிக்கவும், எதிர்கொண்ட பிரச்சினைகளைத் தீர்க்கவும் வேண்டி நுட்பமாகவும் ஆழமாகவும் ஆராய்ந்து சென்றவற்றை, புறமாக இருந்து ஆராய்ந்து சென்றதைக் கொண்டு அவர் தமது இயக்கவியல் வரலாற்றுப் பொருள் முதல்வாத கண்ணோட்டத்தில் எழுதிச் சென்றார். எனவே அவரை மறுப்பவர்கள், நோய்வாய்ப் பட்டவர்கள் மருத்துவரைப் பார்த்து ஆத்திரப்படுவதைப் போன்றே நடந்து கொள்கின்றனர்.

அவர் பண்டைய, நிலப்பிரபுத்துவ பொருளாதாரங்களை விரிவாக ஆராயவில்லை யாயினும் அதன் தன்மைகளை கண்டறிந்து குறிப்பிட்டுள்ளார். நாம் அவற்றை உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் புரிந்து கொள்வதே நன்மை தரும். இந்தியாவில் முதலாளித்துவத்துக்கு முந்திய சமூகம் ஊர்/சேரி என்ற, உறிஞ்சுபவர்கள்/உழைப்பவர்கள் என்ற பாகுபாட்டின் அடிப்படையில்தான் அமைந்திருந்தது. ஆனால் மேற்கில் ஆண்டான்/அடிமைகள் என்ற பாகுபாடு நிலவியது. ஐரோப்பாவில் ஆதி பொதுவுடைமை சமூகம், ஆண்டான்/அடிமை சமூகம், நிலபிரபுத்துவ சமூகம், முதலாளித்துவ சமூகம், சோசலிசம் என்று வகைப்படுத்தப்பட்டது. இங்கு அவ்வாறு வர்க்க அடிப்படையிலான பாகுபாட்டினை காலந்தோறும் தெளிவாக வகைபடுத்த முடியவில்லை. ஆனாலும் இந்திய சமூகத்தை உற்பத்தி உறவுகளின் அடிப்படையிலேயே ஊர் / சேரி, உழைப்பவர் / உறிஞ்சுபவர் என்ற வர்க்க அடிப்படையில் பிரித்ததுடன் அரசே நிலத்தின் உட்சபட்ச உடைமையாளனாக இருந்து ஐரோப்பாவில் வாடகை, வரி என்று பிரிந்து சென்ற பொருளாதாரம் இந்தியாவில் அவ்விரண்டையும் உள்ளடக்கிய ‘ஆறிலொரு பங்கு’ வரியாக அமைந்திருந்ததையும், கொடுங்கோன்மை அரசு நிலவியதையும் மார்க்ஸ் தெளிவாகவே குறிப்பிட்டுள்ளார்.[17]

## 1.5.0. நில அடிப்படையில் வேறுபட்ட ஆட்சி முறை

நில அடிப்படையில் வேறுபட்டிருந்த பல்வேறு இனக்குழு-குடிகளின் தலைவர்கள் அவ்வந்நிலங்களில் ஆட்சி மேற்கொண்டிருந்தனர். முல்லை நிலத்தில் ஆட்சி மேற்கொண்டவர் சீறூர் மன்னர் என்றும் மருத நிலத்தூர்களைக் கொண்டிருநதவர்கள் முதுகுடி மன்னர் என்றும், மலை சார்ந்த இடங்களில் இருந்து வேளிர் ஆட்சி நடைபெற்றன என்பதையும் சங்க இலக்கியங்களின் வழியே பெ. மாதையன் வகைப்படுத்துகின்றார். இவர்களுள் வேந்து விடு தொழில் மூலம்

நிலக்கொடை பெற்ற வேளாண் குடிகளாக சீறூர் மன்னர் விளங்கினர். இயல்பான வேளாண் குடிகளாக முதுகுடி மன்னர் இருந்தனர்.

இதிலிருந்து மாறுபட்டு நன்செய் நில உருவாக்கம், நன்செய் நிலம் கவர்தல் ஆகிய இரு வழிகளில் அரசு உருவாக்கம் நிகழ்ந்தது. வேந்தர்களின் தொழில் இதுவாகும். வேளாண்மைக்காக மருத நிலமும், வணிகத்திற்காக நெய்தல் நிலமும் கைப்பற்றப்பட்டு தம் கட்டுக்குள் கொண்டுவந்தவர் வேந்தராக உயர்ந்தனர்.[18]

இதன்படி,

1. மருத நிலம் - முதுகுடி

2. முல்லை நிலம் - சீறூர் மன்னர்

3. குறிஞ்சி நிலம் - வேளிர்

4. நானிலம் உள்ளடக்கியோர் - வேந்தர்

இலக்கியச் சான்றுகளுக்கு மேலும் வலு சேர்க்கும் வகையில் கல்வெட்டுச் சான்றுகள் அமைந்துள்ளன.

> ***இக்கல்வெட்டுக்கல் கூறும் சங்க காலம் தனிமனித வீரதீரச் செயல்களால் எழுச்சி பெற்றுக் கொண்டிருந்த வீரயுகக் காலம். அக்காலத்தில் அரசியல் கிழார், மன்னன், வேளிர், வேந்தர் என்ற அதிகாரப்படி நிலைகளைக் கொண்டு விளங்குகின்றன***

என்று தொல்லியல் அறிஞர் **ர. பூங்குன்றன்** குறிப்பிடுகின்றார்.[19] இது முனைவர் பெ. மாதையன் அவர்களின் பாகுபாட்டுடன் ஒத்திசைவாகவே காணப்படுகின்றது. சங்க காலத்திற்கும் முன்பே இனக்குழு - குடி அரசுகளின் காலம் இருந்தது. அவற்றை அழித்து அரசுகள் மேலெழுந்த காலமே சங்க காலம் ஆகும்.

மேலும் இவர்களுடைய ஆய்விற்கு அரண் செய்யும் வகையில்

> ***கிழவர், சீறூர் மன்னர், வேளிர், வேந்தர் என்ற அரசு படிநிலை ஏற்படவும், சமண, புத்த, வைதீகம் சமயங்களின் தொடர்ந்த தாக்குதலுக்கு உட்பட்டபோதிலும் தமிழ்ச் சமூகம் தனது சமூகக் கட்டமைப்பை தொடர்ந்து கட்டி காக்கவும், தமிழகம் முழுவதும் பெருங்கற்படைக்காலம் அடிப்படையாக இருந்தது''***

என்று முனைவர் **கா. ராஜன்** தமது ஆய்வில் குறிப்பிடுகின்றார்.[20]

### 1.5.1. சீறூர் தலைவன்

முல்லை நிலத்தில் கால்நடை வளர்ப்பு முதன்மையான தொழிலாக இருந்தது. வரகு, தினை முதலானவற்றை விளைவிக்கவும் கால்நடைகள் அவசியமாக இருந்தன. வன்புலமான முல்லை நிலத்து மக்களுக்குரிய உணவுத் தேவைகளை கால்நடைகளே நிறைவு செய்தன. இறைச்சி, பால், தயிர், நெய் முதலியவற்றை தந்ததுடன் விவசாயத்திற்கும் பயன்பட்டன. ஆடை தயாரிக்க அதன் ரோமங்கள் தோல் ஆகியவற்றையும் பயன்படுத்தினர். முதன்மையான வாழ்வாதாரமாக ஆநிரைகளே அமைந்திருந்தன. அவையே செல்வம் ஆகும். இச்சூழலில் ஒரு குடி அமைப்பிற்குரிய ஆநிரைச் செல்வங்களை, இன்னொரு குடியாகிய சீறூரினர் கவர்ந்து செல்லுதலும், அவற்றை மீட்டலும், பாதுகாத்தலும் ஆகிய செயல்கள் அக்காலத்தில் தவிர்க்க முடியாதனவாயிருந்தது.

உணவுக்காகவும், பிற தேவைகளுக்காவும் வேற்றுப்புலத்துக்குரியோர் திரண்டு சென்று சீறூர்களை கொள்ளையிட்டனர். ஆநிறைகளைக் கவர்ந்து சென்றனர். சீறூர்களை தீயிட்டு அழித்தனர். இவ்வாறு வேற்றுப்புலத்தாரால் பாதிக்கப்படாமல் தற்காத்துக் கொள்ளவும், பகைவர்களிடமிருந்து ஆநிரைகளை மீட்டுவரவும் தலைமை தாங்கிச் சென்ற தகுதியான தலைவர்கள் இருந்தனர். அத்தகைய ஆற்றல் மிக்கத் தலைவர்களை *(புறம்* 314) குறிப்பிடுகின்றது.

**மனைக்கு விளக்கு ஆகிய வாணுதல் கணவன்**
**முனைக்கு வரம்பு ஆகிய வென்வேல் நெடுந்தகை,**
**நடுகல் பிறங்கிய உவல் இடு பறந்தலை,**
**புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்**
**குடியும் மன்னும் தானே; கொடி எடுத்து**
**நிறை அழித்து எழுதரு தானைக்குச் சிறையும் தானே**
**தன் இறை விழுமுறினே.**

*(புறம்* 318) மனைக்கு விளக்காய் குடிக்கு புகழ் சேர்க்கும் பெண்ணின் கணவனாகிய வெற்றியையே தரும் வேல் ஏந்திய வீரன், நடுகற்கள் மிகுந்து சருகுகள் உதிர்ந்து காணப்படும் பாழ்பட்ட இடத்தில், புல்லிய விதைகளையுடைய நெல்லி வளர்ந்துள்ள முல்லையும் குறிஞ்சியும் அமைந்த நிலப்பகுதிகளையுடைய சீறூரின்கண் வாழும் குடிகளுள் ஒருவனாக அவன் உள்ளான். சீறூர், தலைவனுக்கு தாங்கும் தகைமை வாய்ந்தவனும் அவனே ஆவான். சீறூர்த் தலைவன் போரில் விழுமுற்ற போது, விழுமுற்ற இறையின் வாரிசு படைக்கு தலைமை பொறுப்பு ஏற்கவில்லை. மாறாக, விழுமுற்ற இறைக்கு இணையான வீரம் கொண்டவன் தலைமை ஏற்பான் என்பதை மேற்கண்ட பாடலில் ஐயூர் முடவனார் பாடியுள்ளார்.

**கொய்யடகு வாடத் தருவிறகு உணங்க**
**மயிலஞ்சாயல் மா அயோளொடு**
**பசித்தன்றம்ம பெருந்தகையூரே**
**மனையுரை குரீஇக் கறையணற்சேவல்**
**பாணர் நரம்பின் சுகிரொடு வயமான்**
**பெருஞ்செய் நெல்லின் அரியார்ந்து தன்**
**புன்புறப் பெடையொடு வதியும்**
**யாணர்த்தாகும் வேந்து விழுமுறினே**

சீறூர் தலைவன் விழுமுற்றநிலையில், ஊரின் நலன் கெடாதவாறு அக்குடியினுள் ஒருவனாக விளங்கிய அதே வீரமும் தலைமைப் பண்பும் கொண்டவன் தலைமையேற்று போரை நடத்தி வெற்றி ஈட்டியதால் ஊரின் நலன் அழியாதவாறு காக்கப்பட்டதாக மேற்கண்ட பாடல் குறிப்பிடுகின்றது.

மேலும், **வன்புலச் சீறூர் குடியும் மன்னும் தானே** (*புறம்* -314) என்ற அடியின் மூலம் சீறூர் தலைவர்கள் மக்களுள் ஒருவராகவே வாழ்ந்தார்கள் என்பதும் புலனாகும். அவர்கள் தமது சீறூர்களை பாதுகாக்க வீரத்தடன் போரிட்டனர் விழுப்புண் பெற்றனர். என்பதை பின்வரும் பாடல் உணர்த்தும்.

**வாள்வடு விளங்கியச் சென்னிச்**
**செருவெங் குரிசில் ஓம்பும் ஊரே**

*(புறம் 321)* மிக்க வீரமும், ஆண்மையும் பொருந்திய வீரர்கள் தலைமை தாங்கும் ஊரினை பாம்பு உறையும் புற்றைக் கண்டது போல கண்டு பகைவர்கள் அஞ்சினர் என புறப்பாடல் கூறுகிறது.

**..... வரி மிடற்**
**றரவுறை புற்றததற்றே நாளும்**
**புரவலர் புண்கண் நோக்காது இரவலர்க்கு**
**அருகாதீயும் வண்மை**
**உரைசால் நெடுந்தகை ஓம்பும் ஊரோ**

*(புறம்* 329*)* சீறூர்த் தலைவனொருவன் தமது ஊரைக் காக்க தமது எதிரிகளை தனியொருவனாய் நின்று அழித்தான் என்பதை

**மடப்பால் ஆய்மகள் வள்ளுகிர்த் தெறித்த**
**குடப்பால் சில்லுறை போலும்**
**படைக்கு நோயெல்லாம் தான் ஆயினனே''**

(*புறம்* 376) அறிய முடிகின்றது. சீறூர் குடிகளாகிய இளம் மறவர்கள் ஊரவரால் தலைவனாக தேர்வு செய்யப்பட்ட வீரனைத் தம் தலைவனாக ஏற்றுக் கொண்டு அவன் வழி நடந்தனர். அதனை **"வெள்ளை வெள்யாட்டுச் செச்சை போல்** (*புறம்* 286) என்ற புறப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இவ்வாறு இனக்குழு - குடியாக வாழ்ந்த மக்களால் தெரிவு செய்யப்பட்ட தலைவர்கள் தமது பசுக்கூட்டங்களையும் வேற்றவர் கவர்ந்து செல்லாதவாறு பாதுகாத்தனர். அத்துடன் வேற்றுப்புலங்களுக்குச் சென்று வெட்சி சூடி அவர்களின் ஆநிரைகளை கவர்ந்து வந்து தமது சீறூர் குடிகளுக்கு பாதீடு செய்தனர். சீறூரின் செல்வ செழிப்பிற்குத் தலைவர்கள் இவ்வகையில் காரணமாயிருந்தனர். ஆனால் நாளடைவில் சமூக மாற்றங்கள் நிகழ்ந்தன. கால்நடை மேய்த்தலை முதன்மைத் தொழிலாகக் கொண்டிருந்த இச்சமூகத்தில் பரந்து விரிந்த வேளாண் உற்பத்திக்கு முனையும் படியான கால கட்டத்தை நோக்கி உந்தித்தள்ளும் படியான நிகழ்வுகள் நடந்தேரின. புதிய விருப்பங்களும் தோன்றி சமூகத்தை வழி நடத்தின. இங்கு தனிச் சொத்துடமையை அதன் உண்மையான பொருளில் வளர்த்தல் சாத்தியமானது.

### 1.5.2. சீறூர் தலைவன் சீறூர் மன்னனாதல்

தொறு பூசலில் ஈடுபட்டவர்கள் தோற்றவர்களைக் கொன்று அழித்தனர். இது ''முற்றிய ஊர்க்கொலை'' என அறியப்படுகின்றது. இவ்வாறு அழிந்து பாழ்பட்ட ஊர்களை சங்க இலக்கியம் அதிகம் வெளிப்படுத்துகின்றன. நாளடைவில் தோற்றவர்களை கொன்று விடாமல் தம்முடன் இணைத்துக் கொண்டு அவர்களை பலவிதமான வேலைகளில் ஈடுபடுத்தி உற்பத்தி நடவடிக்கைகளை மேற்கொண்டனர். இவ்விடத்தில் புரோகிதர்களாகிய பார்ப்பனர்கள் வேந்தர்களது போர் விருப்பங்களைத் தூண்டினர். தொடக்க நிலையில் சீறூர் தலைவர்கள் போரில் தோற்றவர்களைத் தம்முடனே இணைத்துக் கொண்டதும், அதனை தழிஞ்சி என்ற துறையால் *தொல்காப்பியம்* சுட்டுவதும் இதனால் வென்றவர் தோற்றவரை அடிமைபடுத்த வில்லை. சமமாகவே நடத்தினர் என்ற கருத்தும் உள்ளது. தோற்றவரை எவ்வாறு பயன்படுத்துவது என்பது புலனாகாதபோது அவ்வாறு நடைபெற்றிருக்கலாம். அதன் பிறகு பார்ப்பனர்கள் வம்ப வேந்தர்களின் வெற்றிக்காக வேள்வி நடத்தவும், போருக்காக தூண்டவும், இவ்வழியில் செலுத்தவும் தயாராய் இருந்த போது '' தழிஞ்சி'' மாறிவிட்டது.

நாளடைவில் 'வம்ப வேந்தர்களுக்கு வேந்துவிடு தொழில் செய்து 'தண்ணடை' பெற்று சீறூர் மன்னர்களாக மாறினர். முன்பு தமது குடிகளுடன் கால்நடை மேய்த்தும், வரகு தினை விதைத்தும் அறுவடை செயலிலும் ஈடுபட்ட சீறூர் தலைவர்கள் இப்போது மன்னர்களாகி பாதுகாப்பு பணிகளிலும், போர் நடவடிக்கைகளில் மட்டுமே

ஈடுபட்டனர். தோற்றவர்களை அடிமைகளாக கொண்டு உற்பத்தி பணிகளில் ஈடுபடுத்தினர். இவர்கள் கடைசியரும் வினைவலரும் என்று அறியப்படுகின்றனர். இவர்கள் ஏராளர், அரிஞர், களமர் என்று அவர்கள் செய்யும் பணிகளால் சுட்டப்படுகின்றனர். ஆள், தொழும்பர், தொழுவர், என்றெல்லாம் குறிப்பிடப்படும் அடிமைகளின் உழைப்பைக் கொண்டு விளைந்த தானியங்கள் சீறூர் மன்னர்களின் இல்லில் குவிந்து கிடப்பதை.

**ஏணி எய்தா நீணெடு மார்பில்**
**முகடு துமித்தடுக்கிய பழம் பல்லூணவின்**
**குமரி மூத்த கூடோங்கு நல்லில்**

என்று (*பெரும்* 245 - 47) *பெரும்பாணாற்றுப்படை* குறிப்பிடுகின்றது.

**பொய்கை நாரை போர் விற்சேக்கும்**
**நெய்தலங் கழனி நெல்லரி தொழுவர்**
**கூம்பு விடுமென் பிணி அவிழ்த்த**

ஆம்பல் அகலடை அரியல் மாந்தி (*புறம்*) அறுவடை மேற்கொண்டிருந்த அடிமைகள் ஆம்பல் இலையில் கள் வாங்கி குடித்ததை *புறம்* சுட்டுகிறது.

அதே வேளையில் ‘‘

**யவனர் நன்கலம் தந்த தண் தேறல்**
**பொன் செய்புனை கலத்தேந்தி நாளும்**
**ஒண்டொடி மகளிர் மடுப்ப மகிழ்கிறந்த**
**ஆங்கினிது ஒழுகுமதி**

(*புறம்* 56) மேற்கண்ட பாடல் பொறகலங்களில் மதுவை பெய்து இளம் மகளிர் கொடுக்க உயர்குடியினர் உண்டுகளித்ததை குறிப்பிடுகின்றது. வர்க்க சமூகமாக மாற்ற முற்றுவிட்டதையும், ஏற்றத்தாழ்வுமிக்க சமூகம் இது வென்பதையும் இதன் வழி அறியமுடிகிடின்றது.

### 1.5.3. சீறூர் தன்னிறைவு சமுதாயமாக விளங்குதல்:

போர்த்தொழிலிலும், பாதுகாப்பு பணிகளிலும் ஈடுபடாத பிற குடிகள் வேளாண் உற்பத்தியிலும், பிற தொழில்களிலும் ஈடுபட்டனர். வேளாண்மையில் ஈடுபட்டவர்கள் தினையும், வரகும் ஆட்சியாளர்களுக்கு தமது முறையளவாக கொடுத்தனர். மாடு மேய்ந்தவர்கள் பால், பால் படுபொருள்களை வழங்கினர். அவர்களை தமக்குள் முறை வைத்துக் கொண்டு தினந்தோறும் ஒருவர் வீதம் கொடுத்து வந்தார்கள். இது ‘நெய்ம்முறை’ என்று *சிலப்பதிகாரம்* குறிப்பிடுகின்றது.

ஆய்ச்சியர் குரவையில் ஆய்ச்சியர் தலைவி மாதரி தம் மகள் 'ஐயைக்கு' , நெய்முறை நமக்கு இன்று ஆம்' என்று *சிலப்பதிகாரம்* குறிப்பிடுகின்றது. ஆய்ச்சியர் குரவையில் ஆய்ச்சியர் தலைவி கூறிய அன்றைய தினத்தில் அரண்மனைக்கு நெய் வழங்க வேண்டியுள்ளதை தெரிவிப்பதை இங்கு எண்ணத்தக்கதாகும். அவ்வாறே ஆடு மேய்ப்பவர் ஆடுகளைத் தருவதும், கொல்லவர், தச்சர் முதலானோர் தம் பங்காக தேர், கட்டில், இருக்கை, வாள், வேல் வடித்து தர வேண்டியதும் முறையாகும்., இதனை ''வேல் வடித்து கொடுத்தல் கொல்லற்கு கடனே'' என்று *புறநானூறு* சுட்டும்.

**யான் தன்னிரக்குங்காலைத் தானெம்**
**உண்ணா மருங்குல் காட்டித் தன்னூர்க்**
**கருங்கைக் கொல்லனை இரக்கும்.**
**திருந்திலை நெடுவேல் வடித்திசின் எனவே**

(*புறம்* 180) சீறூரின் குடிகளிடம் இருந்து, உழைக்கும் மக்களிடமிருந்து தான் பெற்றுக் கொண்ட பொருள்களுக்கு ஈடாக தனது ஊரைப் பாதுகாக்கும் செயலில் தலைவன் ஈடுபட்டான். ஆநிரைகளையும் பாதுகாத்தான். அதற்கு ஈடாக 'முறை' என்று குறிக்கப்படும் நுகர்வுப் பொருட்களைப் பெற்றான். இது இடைக்காலம் வரையிலும், 19ம் நூற்றாண்டு வரையிலும் கூட ஏதோ ஒரு வடிவங்களில் நீடித்திருந்தது. நீடித்திருக்கின்றது என்பதை அறிய முடிகின்றது. இது கிராமங்களில் மோரை, மேரை, என்ற பெயர்களில் இன்றும் வழங்கப்பெறுகின்றது.

### 1.5.4. முது குடி மன்னர்

வேந்தர்களிடம் தண்ணடை பெற்றவர்களாக, சீறூர் மன்னர் விளங்கினர். ஆயினும், இயல்பிலேயே தண்ணடை, பணை, பழனம், கழனி ஆக அமைந்துள்ள வயல் வளம் மிக்க மருத நிலத்தூர்களை கொண்டவர்களாக, முதுகுடியாக , தொல்குடியாக விளங்கியவரையே முதுகுடி மன்னர் என்கிறோம். இயற்கையாய் அமைந்து நதிக்கரைகள், கானாறுகள், ஓடைகளை ஒட்டி இயல்பாய் அமைந்த மருத நிலத்தூர்களைக் கொண்டவர்களாக மருத நிலத்தலைவர்கள் விளங்கினர். இவர்களது வளமனைகள் தானியங்கள் பெருகி நிறைந்தவையாக இருந்தன. இவ்வூர்கள் மூதூர் என்றும், முதுகுடி என்றும் அழைக்கப்பட்டாலும் இதன் தலைவர்கள் தொல்குடி மன்னர் என்றே **"தொல்குடி மன்னன் மகளே"** (*புறம்* 353: 11) அறியப்படுகின்றனர்.

**அரைசுபட கடந்தட்டு ஆற்றின் தந்த**
**முரைசு கெழு முதுகுடி முரண்மிகு செல்வற்கு**
**சீர்மிகு சிறப்பினோன் தொல்குடிக்கு உரித்தென**

(*கலி* 105:1-3) இதனால் முது குடி மன்னர்களே தொன்மையான குடியைச்

சேர்ந்தவர்கள்; தொல்குடி இயல்பினின்று மாறாதவர்கள்; சீறூர் மன்னர்கள் தமது சமூகத்துடன் கூட்டாக பகிர்ந்துண்ணும் பண்புடையராக இருந்ததை போன்றே, தொல்குடி சமூகத்தைச் சார்ந்த முதுகுடி மன்னர் இணைமண முறையினராக உள்ளனர் என முனைவர் பெ. மாதையன் குறிப்பிடுகின்றார். மேலும் தமக்கு ஒத்தவராக இல்லாத வேந்தர்களுக்கு பெண் கொடை மறுத்ததாக.

**அளியர் தாமேயிவடன்னை மாதே**
**செல்வம் வேண்டார் செருப்புகல் வேண்டி**
**நிரலல் லோர்க்குத் தரலோ வில்லெனக்**
**கழிப்பிணிப் பலகையர் கதுவாய் வாளர்**

(*புறம்* 345: 12 - 15) மேற்கண்ட பாடல் தெரிவிக்கின்றது. மிகுந்த வீரமும் ஆண்மையும் உடைய முதுகுடி மன்னர்கள் தொல்குடி பண்பிலிருந்து மாறாதவர்களாகவும், மிகுந்த செல்வ வளம் மிக்கோராகவும் உள்ள நிலையில் பெண் கொடை வேண்டுதல் மூலம் வம்பவேந்தர்கள் மகட்கொடை பெற்று தமது நில எல்லையை விரிவாக்குவதும், தமது ஆட்சியின் கீழ் இணக்கமான முறையில் அவர்களை உட்படுத்தியும், அவர்களது வலிமையையும் வீரத்தையும் தமக்கு பயன்படுத்தும் நோக்கத்திலும் முதுகுடி மன்னரிடம் மகட்கொடை வேண்டுதல் நிகழ்ந்தது. ஆனால் எந்த முதுகுடி மன்னரும் மகட்கொடை மறுத்தே உள்ளனர். அவ்வாறு மறுக்கப்பட்ட நிலையில் போரும் அவ்வூரின் அழிவும் பற்றி மகட்பாற்காஞ்சி பாடல்கள் விளக்குகின்றன. சீறூர் மன்னர்கள் நாளடைவில் வேந்தர்களின் கீழ் படைத்தளபதிகளாகவும் மாறினர். ஆனால் தொடக்கநிலை சமூகத்தின் உயர்ந்த பண்பு நலன்களும், நாகரிகமும் வாய்க்கப் பெற்ற முதுகுடி மன்னர்கள் அரசு உருவாக்கத்தின் போது முற்றாக அழிக்கப்பட்டனர். அவர்கள் புதிய அரசுக்கு ஏற்ப இயைந்து வாழும் பண்பினராகவும், மாற்றங்களை ஏற்று உள்ளடங்கி வாழும் இயல்பினராகவும் இல்லாதிருந்தனர். சமதையான ஏற்றத்தாழ்வற்ற அதன் முழு பொருளில் உருவாகாத சமுதாயத்தில் தனிச் சொத்துடைமை கட்டமைக்கப்படாத சமுதாயத்தில், வாழ்ந்திருந்த அவர்கள் இத்தகைய இயல்புடன் மேற்கிளம்பும் அரசியலுடன் இணைந்திருக்க இயலாதவராகிவிட்டனர். பகை முரணான வர்க்கங்கள் தோன்றிவிட்ட சமுதாயத்தில் தொல்குடித் தலைவர்களான முதுகுடி மன்னர்கள் இணைய முடியாமல் அழிக்கப்பட்டதும் அந்நிலப்பரப்புகள் அரசில் இணைக்கப்பட்டதும் தவிர்க்க முடியாத செயலாக அன்று இருந்தன.

### 1.6.0. வேளிர்

இனக்குழுச் சமூகங்களிலிருந்து தொல்குடி அமைப்புகளில் இருந்து அதனுடைய பரிணாம வளர்ச்சியில் வேளிர் உருவாயினர். சீறூர் தலைவர், மூதூராகிய

மருத நிலத்தூர்களுக்குரிய முது குடித்தலைவர்களுக்கு அடுத்த ஒரு பரந்த வலிமையுடைய தலைவர்களாக வேளிர் அறியப்படுகின்றனர். இத்தகைய குடித் தலைவர்களும், அதனினும் வளர்ந்த நிலையில் பல குடிகளையும் இணைத்த இனக்குழு - குடி அரசுகளாக படிமலர்ந்த வேளிர்களும் சங்கச் சமூகத்திற்கு முன்பே உருவாகி நிலைப் பெற்றிருந்தனர். இத்தகைய முடிகளிலிருந்தே மூவேந்தர்கள் எழுச்சி கொள்வதற்கு முன்பே, சங்க காலத்திற்கு முன்பே தமிழ்ச்சமூகம், குடிகள் நிறைந்த சமூகங்களாகவும், இனக்குழு - குடிஅரசு ஆட்சி நிலவிய சமூகமாகவும் நீண்டகாலம் விளங்கியிருந்திருக்கும் என்பது கண்கூடு.

### 1.6.1. சங்க இலக்கியம் காட்டும் வேளிர்

சங்கச் சமூகத்தில் வேள், ஆய்வேள், அழுந்தூர்வேள், அழும்பிள்வேள், மையூர் கிழான் வேள்மான், வெளியன் வேள்மான், பிடவூர் வேள்மான் நெடுவேள் ஆதன். இருங்கோவேள் முதலாகிய வேள்கள் அறியப்படுகின்றனர். (*அகம்* 135) பதினான்கு வேளிரையும், (*அகம்* 246) பதினோரு வேளிரையும், ஐம்பெரும் வேளிரும் அறியப்படுகின்றனர்.

தொடக்கத்தில் இனக்குழு குடிகளிலிருந்து உருவான தலைவர்களும் வேள் என்று குறிப்பிடப்பட்டிருந்தாலும், நாளடைவில் ஏற்பட்ட மாற்றங்கள் இரத்த உறவுள்ள இனக்குழு - குடி மரபு கடந்து பல குழு - குடிகளையும் சேர்ந்த மழவர்களின் தலைவன், மறவர் கூட்டத் தலைவன், பெருவீரன் என்ற பொருளில் இறுதி நிலையில் உருவானது. வேளிர் என்ற சொல்லின் பொருள் இந்நிலையில் விரிந்த பொருள் தருவதாகும். அப்போதுதான் பெருவேள். நெடுவேள், மாவேள் என்ற சொற்கள் பயன்பாட்டிற்கு வந்தன.

இவ்வாறு தொடக்கநிலை குடி அமைப்பின்தலைவர்களான வேள் என்பதில் இருந்த வளர்ந்த நிலையில் உருவான பெருவேள், நெடுவேள், மாவேள் எனப்படும் வேளிர்தான் பெரு வள்ளல்களாகவும் அறியப்படுகின்றனர். சங்கச் சமூகம் அறிந்த வள்ளல்களுள் கடையெழு வள்ளல்கள் முதன்மையானவர்களாவர். வேள்கள் படிமலர்ச்சியின் உயர்ந்த கட்டத்தில் மாவேள், பெருவேள், நெடுவேள் என்ற சுட்டப்படுகின்றனர்.

இந்நிலையில் வேளிர்களைப் புகழும் பாடல்கள் சங்க இலக்கியத்தில் மிகுந்துள்ளன. வேளிர் குடியின் தோற்றம் பற்றியும் அவை எடுத்துரைக்கின்றன. பொன்றாப்புகழும் நீண்ட வரலாற்றுப் பின்னணியும் உடையவர்களாக வேளிர்களைப் புலவர்கள் பாடியமை வேளிர்கள் ஆளத் தகுதியுடையவர்கள் என்பதை வலியுறுத்தவே ஆகும் என தொல்லியலறிஞர் **ர. பூங்குன்றன்** குறிப்பிடுகிறார்.[21]

மேலும் அதியமான்கள் தேவலோகத்திலிருந்து முதன்முதலாக கரும்பைக் கொண்டு வந்தவர்கள் (*புறம்* 99) என்றும், தொண்டைமான் மாயோன் வழித் தோன்றல் என்றும் (*பெரும்பாண்* 30 - 31), நல்லியக் கோடன் முருகனிடமிருந்து வேலைப் பெற்று மாற்றாரைத் தோற்கடித்தான் (*சிறுபாண்* 164 - 70) என்றும் இலக்கியங்கள் சுட்டுவதை அவர் எடுத்துக் காட்டுகின்றார்.

### 1.6.2. வேந்தர் தவிர்த்த எல்லா பெயரும் வேளிர்க்குரியன

சங்கப் புலவர்களால் வேளிர்கள் அவர்களது இயற்பெயருடன், அரசர் எனும் பொதுவானப் பெயரிலும் குறிக்கப்படுகின்றனர். வேந்தர் என்ற சொல்லால் 'எங்குமே' குறிக்கப்படவில்லை.

| | |
|---|---|
| ஆய் அண்டிரன் | **கோன்** (*புறம்* 374 - 15) |
| பாரி | **வள்ளியோன்** (*புறம்* 119- 7 )<br>**பறம்பிற்கோமான்**(*புறம்* 201:4 ) |
| ஓரி | **இறைவன்** (*புறம்* 152:19), **கோ** (*புறம்* 152: 21), **பொருநன்** (*புறம்* 152: 31), **வேட்டுவர்** (*புறம்* 152- 24) **மலைக்கிழவன்** (*புறம்* 52 -11) |
| காரி | **பொருந** (*புறம்* 126 : 8), **கோமான்** (*அகம்* 35: 14)<br>**நாடுகிழவோய்** (*புறம்* 126: 23) |
| இருங்கோவேள் | **அண்ணல்** (*புறம்* 201: 12) **கோ** (*புறம்* 201:13) **நாடுகிழவோய்** (*புறம்* 201: 20), **வரைக்கிழவ** (*புறம்* 201: 18) |
| கண்டீரக் கோப் பெருநள்ளி | **பெருமகன்** (*அகம்* 152: 15) **வேட்டுவன்** (*புறம்* 168: 14) **கொற்றன்** (*புறம்* 171: 7) **பெருந்தகை** (*புறம்* 171: 10) |
| நாஞ்சில் வள்ளுவன் | **பொருந** (*புறம்* 139: 8) **மறவன்** (*புறம்* 380:5), |
| அதியமான் | **பெருமகன்** (*புறம்* 88: 3) |
| நெடுமானஞ்சி | **மழவர் பெரும** (*புறம்* 90: 11) **கோமான்** (*புறம்* 91:3) **அண்ணல்** (*புறம்* 15: 9),<br>**பெருந்தகை** (*புறம்* 93: 15) **தோன்றல்** (*புறம்* 206: 6) |

குமணன் **முதிரத்துக் கிழவன்** (*புறம்* 158: 25) **தோன்றல்** (*புறம்* 161 :20)

கடிய நெடுவேட்டுவன் **கோடைப் பொருந** (*புறம்* 205: 6)

இலக்கியங்கள் குறிப்பிடுகின்றனர்.

### 1.6.3. வேத்தவை

மேலும் இனக்குழு குடி அரசின் தலைவர்களாகிய இவ்வேள்கள் அல்லது வேளிர்கள் வேத்தவை எனும் கூட்டமைப்பு மூலம் தமது குடி அரசமைப்பை ஆட்சியும் நிர்வாகமும் செய்தனர். இவை சங்க இலக்கியத்தில் 'நாளவை' (*அகம்* 331) 'நாள் மகிழிருக்கை (*புறம்* 29, *பதி* 65) எனப்பட்டன.

> ***இனக்குழு அமைப்பின் சபையாக ''நாள் மகிழ் இருக்கை'', இருக்கக்கூடும். நாள் இருக்கை, நாள் அவை, நாள் மகிழ், நறவு மகிழ், நறவு மகிழ் இருக்கை (அகம் 76, 61; புறம் 123, 125, குறுந் 298) என்றும் காணப்படுகின்றது'***

என கா. சுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார்.[22]

### 1.7.0. நானிலந்தாங்கிய வேந்து (அரசு) உருவாக்கம்

வேளிருக்கும் அடுத்தகட்ட வளர்ச்சியிலேயே ''வேந்தர்கள்'' உருவாயினர். இவர்கள் 'வம்ப வேந்தர்' என்று இதனாலேயே குறிப்பிடப்படுகின்றனர். பல குடிகளின் இணைவில் உருவானதே இனக்குழு - குடி அரசு: வேளிர் அரசு; இது குறிப்பிட்ட, பரப்பளவில் நிலவியிருந்தது. இத்தகு குடி அரசுகளே பழந்தமிழகத்தில் உச்சபட்சமாக நிலவி இருந்த நிலையில் சங்க காலத்தில்தான், தமது குடி இயல்பிலிருந்து மாறி, குடி அரசின் பண்பு நலன்களுக்கு மாறாக வம்ப வேந்தர்கள் உருவாயினர். இவர்களை மேலும் மேலும் இச்செயலில் ஈடுபடுத்த வல்லாராய் அந்தணர்களும், பார்ப்பனர்களும் உடன் இருந்தனர்.

> **ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**
> **புதுவதன்று இவ்வுலகத்து இயற்கை**

(*புறம்* 76: 12) என்ற அடிப்படையில் பூசல் தலைவர்களாக வேளிர்களும் பிற சிறு சிறு அளவிலான முதுகுடி மன்னரும், சீறூர் மன்னர்களும் இருந்த நிலை மாறி நாடு பிடிக்கும் நோக்கிலும் உடைமைப் பெருக்கம், தனிச் சொத்துடைமை வளர்ச்சி என்ற அளவிலும் நானிலந்தாங்கிய வேந்து கட்டமைக்கப்பட்டது. பார்ப்பனர்களின்

தூண்டுதலால் நிகழ்ந்தது. அச்சமூகம் அத்தகைய மாற்றத்தை எதிர்நோக்கி இருந்தது. உற்பத்தி குன்றிய இனக்குழு குடி அரசில் தேவைக் கேற்ப உற்பத்தி இன்மையும், மிகுந்த தேவை இருக்கும் சூழலில் பிற பகுதிகளுக்குச் சென்று கவர்தலும் இயற்கை என்று புறப்பாடல் பேசுகின்றது. இந்நிலையில் இத்தகைய பூசல்களை மறுக்கும், சமணர், பௌத்தர்களும் இதற்கான தீர்வினைஅளிக்க இயலவில்லை. தனியுடைமைக்கு எதிரான பௌத்தமும், தொல்குடி சமூகத்தின் செயல்பாட்டை சங்கத்தினுள் கொண்டிருந்த நிலையில், வெளியில் இத்தகைய நாடு பிடிக்கும் கொள்கையை மௌனமாக ஏற்றன. சமணம் வணிகத்தின் மூலம் அது ஒரு பிரிவினருக்குரிய வணிக வர்க்கத்துக்குரிய சமயமாக மாறி வணிக வர்க்கத்தின் வளர்ச்சிக்கும், செல்வாக்குக்கும் அடிப்படையாய் அமைந்திருந்தது. இந்நிலையில் போர் மூலமும், மகட்கொடை மூலமும் நாட்டின் எல்லையை விரிவு படுத்துவதுடன், வன்புலத்தை மென்புலமாக்கும் செயலிலும் வேந்தர்கள் ஈடுபடவும், இதற்காக பழைய சமூக அமைப்பைத் தகர்த்து புதிய அடிமைச் சமூகத்தை கட்டமைத்துக் கொள்ளவும் பார்ப்பனர்கள் இங்கு செயலாற்றினர். அடங்காத விருப்பத்திற்கும், பேராசைக்கும், தக்க முறையில் போர் நிகழ்த்தவும், வெற்றிக்காக வேள்விகள் நடத்துவதன் மூலம் இதுவரை இல்லாத எண்ணிப்பார்த்திராத புதிய வழிகளில் ஈடுபடுத்திடவும் அவர்களுக்கு முடிந்தது. தனிநபர் வளர்ச்சிக்கான, சுய லாபத்துக்கான வழிமுறைகளாக அமைந்துள்ள வேள்விகள் வேந்தர்களின் வாழ்வில் பேரிடம் பிடித்தன.

உலகம் முழுதும் செவ்வியல் காலச் சமூகங்கள் என்பது நகர நாகரிகமும் உயர் குடியினர் ஆட்சியும், அடிமை உற்பத்தி முறையும் கொண்டதாகவே விளங்கியது. இதற்கு இந்திய, தமிழ்ச் சமூகமும் விதிவிலக்கல்ல. ஆனால், இங்கு நிலவும் தனித்தன்மைகளால் ஐரோப்பிய உற்பத்தி முறையிலிருந்து வேறுபடுத்தி பார்க்கும் நிலைமை உள்ளது. இதனால் ஐரோப்பிய உற்பத்தியிலிருந்து மாறுபட்ட ஆசிய உற்பத்திமுறை என்று குறிப்பிடப்படும் சமூகம் பற்றி இங்கு ஆராயவேண்டியுள்ளது. வர்க்கப்பிரிவினைகளின் மீதே ஆசிய தன்மையிலான படிநிலைச் சமூக உருவாக்கம் நிகழ்ந்ததும் காணமுடிகின்றது. நிலையான அரசைக் கட்டமைக்க உணவு உற்பத்தியினைப் பெருக்க வேண்டியதன் அவசியத்தை வேந்தர்கள் உணர்ந்திருந்தனர். குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்ற நிலவியல் அடிப்படையிலான திணைச் சமூகங்களை *தொல் காப்பியம்* குறிப்பிடுகின்றது. இதில் வேந்தர்கள் மருத நிலத்தில் உணவு உற்பத்தியைப் பெருக்கி உள்நாட்டுத் தேவையை நிறைவு செய்தும், நெய்தல் நிலப்பகுதியை கடல் கடந்த வாணிபத்திற்கு பயன்படுத்துவதன் மூலமும் தமது வலிமையைப் பெற்றிருந்தனர். எனவே இவர்களது நகரங்கள் மருத நிலத்தையும், நெய்தல் கடற்கரையையும் ஒட்டியே உருவாகியிருந்தன. இவ்விரு நிலங்களிலும் மூவேந்தர்கள் ஆட்சி அமைந்திருந்தன.

சேரர்கள் பெரியாற்றுப் பாசன பரப்பிலும், சோழர்கள் காவிரியாற்றுப் பாசனப் பரப்பிலும், பாண்டியர்கள் வைகை, தாமிரபரணி ஆற்றுப் பாசனப் பரப்பிலும் தமது ஆட்சியை நிறுவியிருந்தனர். நெல் முதலான உணவு உற்பத்தியினாலும் கடல் வாணிபம் மூலமாகவும் மூவேந்தர் ஆட்சி நிலைப்பெற்றன.

### 1.7.1. வேளிர் நகரம் வேந்தின் தலைநகராதல்

கி.மு. முதல் ஆயிரம் ஆண்டுகளின் பிற்பாதியில் பெரும் சமூக மாற்றங்களும், வளர்ச்சியும், முன்னேற்றங்களும் ஏற்பட்டன. இனக்குழு - குடி அரசுகள் (ஜனபதங்கள்) அழிவின் மீது அரசுகள் கட்டமைக்கப்பட்ட காலமாக இப்பிற்பாதிகாலம் அமைந்துள்ளது. முந்தைய சமூகங்களின் அழிவின் மீது ஒரு புதிய சமூகம் உருக்கொண்டது.

கி.மு. முதல் ஆயிரமாண்டுகளின் பிற்பாதியில் ஏற்பட்ட குறிப்பிடும் படியான இந்நிகழ்வுகளுக்கு போதுமான தொல்லியல், வரலாற்றியல், இலக்கியச் சான்றாதாரங்களும் துணை செய்கின்றன. தற்போது சங்க காலமென்பது கி.மு. ஐந்தாம் நூற்றாண்டு வரை முன்கொண்டுசெல்லப்பட்டுள்ளது. பொருந்தல், கொடுமணல் அகழ்வாய்வினால் உறுதி செய்யப்பட்டுள்ளது. இது வரலாற்றில் இரும்புக் காலம்; நகர நாகரிகங்களை அடிப்படையாக கொண்டது; உயர்ந்த இலக்கியங்களையும், மேம்பட்ட கலாச்சாரங்களையும் பண்பாட்டையும் கொண்டிருந்தது.

சிந்து சமவெளி நாகரிகம் முதல் நகர நாகரிகம் எனக் கொண்டால் இரண்டாவது நகர நாகரிகம் கி.மு. 600 முதல் கி.பி. 200 வரை நடந்தேறியது. இக்காலத்தில் தென்னிந்தியாவில் குறிப்பாக, தமிழகத்தில் நகர நாகரிகங்கள் உருவாயின. சங்ககால நகரங்களாக அறியப்பட்டு அகழாய்வு செய்யப்பட்ட அழகன் குளம், பூம்புகார், வீரை, மாமல்லை, காஞ்சிபுரம், கொடுமணல் பொருந்தல், மதுரை, மாங்குடி, ஆதிச்ச நல்லூர், உறையூர், அழகரை, தகடூர், திருக்காம்புலியூர், மோதூர், ஆண்டிப்பட்டி, மாளிகை மேடு, தேரிருவேலி, கொற்கை, சேந்தமங்கலம் முதலானவை வேளிர் நகரங்களே ஆகும். மூவேந்தர்களின் தலைநகரங்களாகிய புகார், மதுரை, வஞ்சி ஆகியனவும், முன்பு வேளிர்களின் தலை நகரங்களாக இருந்தவையே. எழுச்சி பெற்ற வேந்தர்களால் வெற்றி கொள்ளப்பட்டு அவை கைக்கொள்ளப் பட்டன என்பது தொல்லியல் அறிஞர் ர. பூங்குன்றன் அவர்களின் கருத்து.[23]

**கூடல் வேள் அகுதை** (*புறம்* 347) என்று அறியப்படுவதால் மதுரை அகுதை எனும் வேளின் தலைநகராக இருந்துள்ளது. கொற்கையைத் தலைநகராகக் கொண்டிருந்த பாண்டியர்கள் கூடல் எனப்பட்ட மதுரையை வெற்றி கொண்டு தமது தலை நகராக்கிக் கொண்டனர். இதனை பின்வரும்

***பேரிசைக் கொற்கைப் பொருநன்வென்வேல்***
***கடும் பகட்டியானை நெடுந்தேர் செழியன்***
***மலைபுரை நெடுநகர்க்கூடல்***

(*அகம் 296 : 10-12*) பாடல் சுட்டுகின்றது. அவ்வாறே **தித்தன் .... உறந்தை, நொச்சிவேலித் தித்தன் உறந்தை** (*அகம்* 122) **மாவண் தித்தன் உறந்தைவேலி** (*புறம்* 352) என்றெல்லாம் கூறப்படுவதால் தித்தன் எனும் வேளின் தலைநகராகிய உறந்தை பிறகு சோழர்களால் கைக்கொள்ளப்பட்டு சோழர் உறந்தை எனப்பட்டது. **மறங் கெழு சோழர் உறந்தை** (*புறம்* 39:8, *நற்.* 400:7) சோழர் இன் கடுங்கள்ளின் உறந்தை (*அகம்* 137:3-6) **வளங்கெழு சோழர் உறந்தை பெருந்துறை** (*குறுந்* 116:2) என்ற வரிகளால் அறியலாம். மேலும் வஞ்சியாகிய கருவூர் வேளிர் தலைநகராகவே இருந்தது. பின்னர் சேரர் தலைநகரானது.

### 1.7.2. நகர அரசுகள் அமைதல்

எனவே, மூவேந்தர்களின் அரசுகள் நகர அரசுகளாகவே விளங்கின. இத்தகைய வேந்தர்களின் நகரங்கள் தொடக்கத்தில் தொல் குடித்தலைவர்களான மூதூர் மன்னர், வேளிர்களிடமிருந்தே கைப்பற்றப்பட்டு வேந்தர்களின் நகரங்களாயின. சோழர் உறந்தை முதலில் தித்தன் என்ற வேளின் உறந்தை என்றே அறியப்பட்டது. பிறகுதான் சோழர்களின் உறந்தையானது. அவ்வாறே கருவூர் வேளிர் தலைநகராக இருந்தபிறகே சேரர் தலை நகரானது. பாண்டியர்களின் தலைநகரான கூடல் எனும் மதுரை அகுதை எனும் வேளின் நகரமாக இருந்தது. இதனால் புதிதாக உருவான 'வம்ப வேந்தர்'களாகிய மூவேந்தர்கள் தொல்குடி குடி அரசுகளை ஒழித்து தமது அடிமையுடைமை அரசமைப்பை கட்டியெழுப்பினர். இயற்கையான ஆற்றுப் பாசனத்தில் அமைந்திருந்த மருத நிலத்தூர்களின் தலைவர்களிடம் மகட்கொடை கேட்டல் மூலம் இணக்கமாக தமது நாட்டுடன் மருத நிலத்தை இணைத்துக் கொள்ளலும் அவர்கள் விருப்பமின்றி பெண் கொடை மறுத்தபோது போரின்மூலம் அழித்து தமது நாட்டுடன் இணைத்துக் கொள்ளலும் நடைபெற்றது. இவற்றைப் *புறநானூற்றி*ன் மகட்பாற்காஞ்சி பாடல்கள் விளக்குகின்றன. இதனால் தொல்குடி குடிஅரசான மூதூர் எனப்படும் பழைமையான மருத நிலத்தூர்கள் முழுவதும் வேந்தர்களால் கைப்பற்றப்பட்டுவிட்டன.

நெய்தல் நிலங்களும் உள்ளடக்கி ஆட்சி மேற்கொண்டபோதும் கடல் வாணிபத்தில் மதிப்புறு பண்டங்களாக விளங்கிய (Prestigious goods) தேக்கு, அகில், சந்தனம், மிளகு, தந்தம் ஆகியவற்றுக்காக குறிஞ்சி நிலங்களும் கைப்பற்ற முயற்சிக்கப்பட்டன. எனவே உள்நாட்டு தேவைக்காகவும், வெளிநாட்டு வாணிபத்திற்காகவும், வணிகப் பெருவழிகள் தமிழ் நிலம் எங்கும்

இணைக்கப்பட்டிருந்தன.[24] இங்கு வெவ்வேறு நில அமைப்புகளுக்கு ஏற்ப நிலவிய தொழில் உற்பத்தி முறை, வாழ்க்கை நிலைமை களையும் ஆராயும்போது முதுகுடியான தனித்தன்மையுள்ள தொல்குடி குடியரசுத் தலைவர்கள் வேந்தரால் மருத நிலத்துக்காக அழிக்கப்பட்டனர். வாணிப நலன்களுக்காக நெய்தல் நிலங்களும் தமது கட்டுபாட்டிற்குள் கொண்டுவரப்பட்டன. இந்நிலையில் முல்லை நிலத்து சீறூர் மன்னர்களின் நிலை என்ன? அவர்கள் தனித்தன்மையுள்ள பூசல் தலைவர்களாக விளங்கினர். முல்லை நிலத்தின் சமூக - பொருளாதார உற்பத்தி முறை எந்நிலையிலும் ஆயுதம் தரித்தவர்களாகவே போர்முறை வாழ்வுடையவராகவே அவர்களை நிலைப் பெறச் செய்திருந்தது. ஆகோள் பூசல் எனப்படும் நிரை கவர்தல், நிரை மீட்டல் நடவடிக்கை அவர்களது கால்நடை மேய்ப்பு சமூகத்தின் பொருளாதார நடவடிக்கையாக அமைந் திருந்தது. இதனால் அவர்கள் Militant force எனும் வகையில் 'உரவோன்' என்ற சொல்லால் வழங்கப்பட்டதை சங்க இலக்கியப் பாடல்கள் வழி அறிய முடிகின்றது.[25] கால்நடைச் செல்வங்களை கவர்ந்து செல்லல், பாதுகாப்பு என்று வரும்போது எந்த நேரத்திலும் பூசல் உருவாகும் சூழலே என்பதால் சீறூர் தலைவர்கள் பூசல் தலைவர்களாக இருந்தனர். அங்கு வாரிசுரிமையின் அடிப்படையில் தலைவர்கள் தெரிவு செய்யப்படாமல், தலைவன் ஒருவன் பூசலின் மேற்சென்று பலியானபோது, அத்தருணத்திலும் தலைமையேற்று பகை மாய்த்து மீளும் வீரன் அடுத்து தலைமையடைவதையும் இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இத்தகைய பூசல் தலைவர்கள் வேந்தர்களுக்காக போரில் ஈடுபட்டு நிலம் கவர்தலில் ஈடுபட்டபோது சீறூர் தலைவர்கள் சீறூர் மன்னர் என்று குறிப்பிடப்படுகின்றனர். இவர்களது வேந்து விடுதொழிலுக்கு பரிசாக நிலக்கொடை பெற்று அப்பகுதியினை வேந்தனின் கீழ் ஆட்சி செய்யும் ஆட்சியாளர்களாகவும் மாறினர். அவ்வாறு போர் மேற்சென்றபோது வேந்தர்கள் தமது சார்பாக போரிடும் சீறூர் மன்னர்களுக்கு சோறு அளித்தனர். இதனை *தொல்காப்பியம்* புறத்திணையியல் 'பெருஞ்சோற்று நிலை' எனும் துறையாக குறிப்பிடுகின்றது. பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்னும் சேரமன்னன் போர் நடைபெறும் இடத்தில் தமது படையின் வெற்றிக்காக மிகுதியான சோறளித்ததால் இப்பெயர் பெற்றிருக் கலாம். இதனால் சீறூர் மன்னர்கள் வேந்தர்களை எதிர்த்தவர்களாக இல்லாமல், வேந்தர்களுக்காக வேந்துவிடுதொழில் மேற்கொண்டவர்கள் நாளடைவில் வேந்தின் ஒரு பகுதியாக மாறி இணைந்து கொண்டவர்கள் ஆவர். வேந்தர்கள் சீறூர் மன்னர்களைக் கொண்டே அடிமைச் சமூகத்தை கட்டமைத்தனர்.

### 1.7.3. மகட்கொடை மூலம் நாடு பிடித்தல்

வட நாட்டில் கி.மு. ஆறாம் நூற்றாண்டில் காசி, கோசலம், மகதம், வஜ்ஜிய ஜனபதங்களின் கூட்டமைப்புகள் முக்கியம் வாய்ந்தவையாகும். இத்தகு ஜனபதக்

குடி அரசுகளின் தலைவர்களாக விதேகர், லிச்சவிகள், சாக்கியர், மல்லர், கோலியர், நந்தர் மோரியர் ஆகியோர் விளங்கினர். புத்தர் சாக்கிய குடியமைப்பினைச் சார்ந்தவர். இத்தகைய குடியரசுகளிடையே அரசியல் மேலாதிக்கத்திற்காக நூறு ஆண்டுகளுக்கும் மேலாக மகதத்தில் நந்தர்களுடன் போரிட்டு மௌரியர் வெற்றி பெற்றனர். மகதம் பிரதேச அடிப்படையிலான முதல் அரசமைப்பாக உருக் கொண்டது. கி.மு. ஆறாம் நூற்றாண்டின் பிற்பாதியில் பிம்பிசாரர் முடிசூடிக் கொண்டார். அவரே முதன் முதலில் நிரந்தர, ராணுவம் வைத்திருந்தவர். எனவே சேனியா என்று அழைக்கப்பட்டார்.

மகத வேந்தன் பிம்பிசாரர் கோசல வேந்தன் பிரசேனஜித்தின் சகோதரியை மணந்துக் கொண்டார். லிச்சவிகளின் தலைவனுடைய மகளான செல்லானா என்ற பெண்ணையும் மணந்து கொண்டார். மதுரா மன்னனுடைய மகள் ஹேமாவும் இவரது மனைவி ஆவார். இத்தகைய அரச குடும்பங்களுக்கிடையிலான திருமணங்கள் போரைத் தவிர்த்து நல்லெண்ணம் ஏற்படுத்தி ஆட்சியை வலுப்படுத்தின.

ஆனால் மகத வேந்தனின் திருமண வெற்றிகள் போல் கோசல வேந்தன் திருமணம் வெற்றி பெறவில்லை. பிரசேனஜித் தம்மை வேதத்தில் அறியலாகும் 'இச்வாகு' வழி வந்தவன் என்று அறிவித்துக் கொண்டாலும் பிறர் அதனை ஏற்கவில்லை. அவன் சாக்கிய குடியில் பெண்ணெடுக்க விரும்பினான். சாக்கியர்கள் அவனது ஆட்சிக்கு உட்பட்டிருந்த இனக்குழு குடிஅரசே ஆனாலும், அவர்களும் இச்வாகு வழிவந்தவர்களாக தம்மைக் கருதிக் கொண்டதால் பெண் கொடை மறுத்தனர். முடிவில் மகாநாமா சாக்கியனுக்கும் நாகமுண்டா என்ற அடிமைப் பெண்ணுக்கும் பிறந்த வாசபாகத்தியா என்ற அழகிய பெண்ணை அனுப்பி வைத்து பிரசேனஜித்தை ஏமாற்றினார்கள். பண்டைய தமிழ்ச் சூழல் வட இந்திய வரலாற்றுடன் மிகவும் பொருந்துகின்றது.[26]

*புறநானூற்*றின் மகட்பாற் காஞ்சி பாடல்கள் மகட் கொடை மறுத்தல் பற்றியனவாகும். *புறம்* 337 சோழ மன்னனுக்கு வேளாகிய பாரிவள்ளல் மகட் கொடை மறுத்ததால் நேரப்போகும் அழிவைப் பற்றி முன்னறிவிக்கின்றது. ''அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில்'' பாரி மகளிரின் பாடல் பின் நிகழ்ந்தவற்றைக் கூறும்.

மூவேந்தரே ஆனாலும் தன்னை வணங்காதவர்க்கு மகட்கொடை தர முடியாது என்று இனக்குழு குடி அரசன் கூறுவதாக *புறம்* 338 பாடல் மூலம் அறிய முடிகின்றது. *புறம்* 340 பாடலானது பேரரசர்களே தமது மகளை விரும்பி வேண்டியும், அவர்க்கு மகட் கொடை மறுத்தது பற்றி எடுத்துரைக்கின்றது.

வேந்து குறையுறவும், இளையோள் தந்தை கொடான், சுற்றமொடு மாறான், சினத்தன், ஏஎய், புக்கனன், குரிசில் அடுதல் ஒன்றோ, வாரா உலகம் புகுதல் ஒன்று எனப் படை தொட்டனன். ஊர் கவின் இழப்பது கொல்லோ என்பது பரணரின் (*புறம்* 341) பாடலாகும்.

தண் பணைக்கிழவன் வேந்தர்க்கு மகட்கொடை மறுத்து பெரும் போர் மூண்டது பற்றி (*புறம்* 342) அரிசில் கிழார் பாடுகின்றார். சேரனின் செல்வவளம் மிகுந்த முசிறியையே முலைவிலையாக கொடுத்தாலும் தன் குடிக்கு ஒத்தவர் அல்லாதவருக்கு மகட்கொடை தரமுடியாது என்று ஒரு இனக்குழு குடிஅரசின் தலைவன் கூறுவதுபற்றி *புறம்* 343 குறிப்பிடுகின்றது.

மகட்கொடை வேண்டி வரும் வேந்தன், செந்நெல்லை உண்ட மயில் வளை செறிந்த கையினால் மகளிர் ஓட்டுதலால் பறந்து சென்று மருத மரத்தில் உறையும் வளம் நிறைந்த மருதநிலத்து ஊரைக் கொடுத்து மகட்கொடை பெறுவான். அன்றேல் பெண்ணின் தந்தை வெகுண்டெழுந்து போர்மூள அவன் நாடு எரியில் மூழ்கும். இரண்டில் ஒன்று நடக்கும் என்று *புறநானூறு* (344) முன்னறிவிக்கின்றது. இதனால் பெருவேந்தர் களின் வேந்து விரிவாக்கத்திற்கு ஏற்ப மகட் கொடை பெறல் இணக்கத்துடன் நடந்தேறிய நிகழ்வுகளும் உண்டு என அறியலாம்.

நாற்படையுடைய வேந்தர் தரும் செல்வங்களை விரும்பாமல் பெண்ணின் தமையன்மார் வேந்தருடன் மகட்கொடை மறுத்து போருக்கு எழுந்தனர் என (*புறம்* 345) அடைநெடுங்கல்வியார் பாடுகின்றார்.

தழும்பன் எனும் வேளின் வளப்பம் பொருந்திய ஊணூர் மகட்கொடை மறுத்தலால் அழிய நேரிட்டது என்று (*புறம்* 348) அரிசில் கிழார் பாடுகின்றார்.

மகட் கொடை வேண்டி வந்த வேந்தன் பெண் தர மறுத்தலால் வஞ்சினம் உரைத்தபோது, இனக்குழு குடி அரசின் தலைவனும் வஞ்சினம் உரைத்தான். எனவே, பிறந்த ஊரை செழிக்க செய்வதற்கு மாறாக அழிக்க காரணமான 'அணங்கு' என்று அப்பெண் பழிக்கப் பட்டாள் (*புறம்* 349).

மகட் கொடை வேண்டி வேந்தர்கள் பலமுறை போர் புரிந்து நீங்கியமையால் அம்மூதூரின் மதில், ஞாயில், அகழி ஆகியன சிதைந்து விட்டன. ஆயினும் அத்தலைவன் தனது மகளை வேந்தர்க்கு மணம் முடிக்க இசையவில்லை. அழிவுற்ற பாதுகாப்பு அரண்களை கண்ணுற்ற பிறகும் தனது வலிமையை மட்டுமே துணை கொண்டு போரை எதிர் கொள்கின்றான் என்று *புறநானூறு* 350 சுட்டுகின்றது.

மகட் கொடை கேட்டு வந்த வேந்தர்களை தோற்றோடச் செய்த பழைமை வாய்ந்த குடிகளின் தலைவன் இவன் என்று ஒரு இனக்குழு குடி அரசின் தலைவன் (*புறம்* 353) சுட்டப் படுகின்றான். மகட் கொடை வேண்டிய வேந்தர்க்கு மகட் கொடை நேராமல் போருக்கு எழுகின்றான் தந்தை. இவ்வூர் அழியப் இப் பெண் காரணமாயினாள் (*புறம்* 354) என்று ஒரு பாடல் சுட்டுகின்றது. 'வம்ப வேந்தர்' என்றழைக்கப்பட்ட எழுச்சி பெற்ற வேந்தர்கள் தமது நாட்டை போரின் மூலமாகவும், மகட் கொடைவேண்டல் மூலமாக விரிவு படுத்தினர் என்பதற்கு மேற்கண்ட பாடல்கள் சான்றாக அமைகின்றன. இப்போர்களுக்கு காரணமாக குடிகளின் அழிவுக்கு காரணமாக அக்குடி சார்ந்த பெண்களின் அழகே அமைந்துள்ளது என்ற பொருளிலேயே பாடப்பட்டுள்ளதால் வேந்தரின் நில விரிவாக்கக் கொள்கைக்கு ஏற்ப வேந்தரின் சார்பிருந்து இவை பாடப்பட்டுள்ளன.

### 1.7.4 இனக்குழு - குடியிலிருந்து தோன்றியவர்களே வேந்தர்கள்

மூவேந்தர்களாகிய சேர, சோழ, பாண்டியர்களும் இனக்குழு குடி அமைப்புக்களில் இருந்து வந்தவர்களே ஆவர்.

> ***குட்டுவர், குடவர், பூழியர், முதியர் ஆகிய குடிகளின் தலைவர்களாகச் சேர வேந்தர்கள் குறிக்கப் பெறுகின்றனர். சேரர்கள் தொடக்கத்தில் மாந்தை, நறவு, தொண்டி, வஞ்சி, முசிறி ஆகிய கடற்கரை பட்டினங்களைச் சுற்றி இருந்த நாடுகளை ஆண்டனர்.... சேர மரபில் பொறையர், குட்டுவர், உதியர், வில்லோர் என்ற பிரிவினர் இருந்துள்ளனர்***

என்று முனைவர் **ர. பூங்குன்றன்** குறிப்பிடுகின்றார்.[27]

இவற்றுள் பொறையர், குட்டுவர், உதியர், வில்லோர், இருந்துள்ளனர் என்ற கருத்தில் அதியர் குடி இடம் பெறத்தக்கதா? என்பது கருதவேண்டியுள்ளது. மேலும் சேரவேந்தன் நெடுஞ்சேரலாதனுக்கும் சோழன் மகளாகிய மணக்கிள்ளி என்பவளுக்கும் பிறந்தவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்னும் சேரமன்னனாவான். இவன் சோழன் கிள்ளி வளவன் அரியணை ஏறியபோது அவ்வுரிமைக்காக அவனை எதிர்த்த அவனது தாயாதிகள் ஒன்பதின் மரைவென்று அடக்கி கிள்ளி வளவனை அரியணை ஏற்றினான்.

> **ஆராச் செருவின் சோழர் குடிக்கு உரியோர்**
> **ஒன்பதின்மர் வீழ, வாயில் புறத்து இறுத்து**

(*பதிற்*: 5ம் பத்து பதி : 18-19) சோழநாட்டினை தனது மைத்துனன் வசம் ஒப்படைத்தான்.

பாண்டியருள்ளும் கவுரியர், பஞ்சவர், மாறர், வழுதி ஆகிய குடிகளின் கூட்டமைப்புகள் இருந்துள்ளதை அறிய முடிகின்றது. இதனால் இனக்குழு அரசு அமைப்பின் தலைவர்களான வேளிரி லிருந்து எழுச்சி பெற்று வேந்தர்கள் உருவானதை தெளிவுறக் காண்கிறோம். மூவேந்தரைத் தவிர்த்து விட்டு காணும் போது அவருக்கு அடுத்த நிலையில் வேளிர்களும், வேளிருக்கும் அடுத்த நிலையில் முதுகுடித்தலைவர்களும், சீறூர்தலைவர்களும் இருந் துள்ளனர். முதுகுடி மன்னர்கள் மருத நிலத்தலைவர்கள் என்றும் சீறூர் மன்னர்கள் முல்லை நிலத்தை சார்ந்தவர்களாதலால் வேந்தருக்குகீழ் இருந்து 'வேந்து விடுதொழில்' மேற்கொண்டு பரிசில் பெற்றனர் என்றும், தம்மைவிடச் செழிப்புற்று இருந்த முதுகுடி மன்னர்கள் வேந்தர்களால் மகட் கொடைக்கான போரில் அழிக்கப்பட்டனர் என்றும் முனைவர் **பெ. மாதையன்** தமது ஆய்வில் குறிப்பிடுகின்றார்.[28]

### 1.7.5. வேளிர் X வேந்தர்

ஆனால், பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் வேளிருக்கும் வேந்தருக்கும் இடையில் நிலவிய முரண்பாடே முதன்மையானதாகும்.

- வேந்தர்கள் தம்மை நாடி வருபவருக்கு வரிசையறிந்து பரிசில் வழங்குவர். மாறாக, வேளிர்கள் தம்மை நாடியோருக்கு வரிசையறியாது, வரையாது வழங்கும் வள்ளல்கள் ஆவர்.

- எல்லை விரித்து, நாடு பிடிக்கும் முயற்சியுடையவர்கள் வேந்தர்கள். இவர் வம்ப வேந்தர் (*புறம்:* 287) எனப்பட்டனர். அத்தகைய நோக்கம் எதுவும் அற்றவர்கள் வேளிர்கள், தம்மை வேண்டுவார்க்கு போரில் உதவி செய்வதுண்டு.

- நிலையான படையணிகள் கொண்டவர்கள் வேந்தர்கள். அதற்கென வரிவருவாய் ஆதாரங்களைக் கொண்டிருந்தனர். உபரி உற்பத்தி மிகுந்திருந்தது. வேளிர்கள் நிலையான படையணிகள் வைத்துக் கொள்ளாமல் போருக்கான தேவை எழும்போது தமது குடிகளையே படையாகக் கொள்பவர்கள். உற்பத்தி குடிகளிடையே சமமாகவே பகிர்ந்து கொள்ளப்பட்டது. அது உபரியாக திரட்டி ஒரு புறம் குவிக்கப்பட்டிருக்கவில்லை.

- வேத முறைப்படி தனது நில விரிவாக்கத்திற்காகவும், வெற்றிகளுக்காகவும் வேள்விகளை செய்து பார்ப்பனர்களின் அறிவுறுத்தலின்படி தனது விருப்பங்களை நிறை வேற்றிக்கொள்ள விளைந்தவர்கள் வேந்தர். ஆனால்,

தமது குடிகளின் நல்வாழ்விற்காகவும், மகிழ்ச்சிக்காகவும் கூட்டு வழிபாட்டு மந்திரங்களையும், சடங்குகளையும் நிகழ்த்தியவர்கள் வேளிர்.

* குடிகளிலிருந்து மேம்பட்டவர், நாளடைவில் இறைவனுடன் ஒப்பாக வைத்து போற்றி வணங்கும்படி தன்னையும், தனது அதிகாரத்தையும் வடிவமைத்துக் கொண்டவர் வேந்தர். குடிகளுடன் சமமாக இருந்து அவர்களது மகிழ்விலும், துன்பத்திலும் பங்கெடுத்துக் கொண்டவர், அன்றாட நிகழ்வில் கலந்து கொண்டவர் வேளிர்.

* வேந்தர்களுடைய அரசமைப்பு வர்க்கங்களை உள்ளடக்கியது. வேறுபாடுகளைக் கொண்டு இயங்குவது. ஏற்றத் தாழ்வுகளையே சரியானதென வகுத்துக் கொண்டு சுரண்டலைக் கைக்கொண்டு உபரியைத் திரட்டி குவிக்கும் தன்மையுடையது. குடும்பம், தனிச்சொத்து ஆகியவற்றைப் பாதுகாத்து வளர்ப்பது வேந்தரின், அரசமைப்பின் பணிகளாகும். ஆனால் வேளிரின் இனக்குழு குடி அரசமைப்பு சமத்துவமான பொருளாதார அமைப்புடையது; ஆதி பொதுவுடைமை சமூகத்தின் வடிவமாகவே நீடித்து தொடர்வது.

வேந்தருக்கும் / வேளிருக்கம் இடையிலான சமூக முரண் இவ்வாறு நிலவியது. அக்கம்பக்கமாக அமைந்திருந்த வேந்தர்களும் வேளிர்களும் அவ்வாறே நீடிக்க முடியாதவாறு மோதல் அதிகரித்து வேளிர்கள் எல்லாம் அழிக்கப்பட்டு அல்லது வென்று அடக்கப்பட்டு முழுமையான மூவேந்தர் அரசு ஏற்பட்டது. பண்டைத் தமிழகத்தில் வேளிர்களாக அறியப்பட்ட கடையெழு வள்ளல்களும், அவரல்லாத பிற வேளிரும் கூட வீழ்த்தப்பட்டனர். இவற்றுள் ஒளியர், ஆவியர், கோசர், அதியர், அருவர், மழவர், வழுதியர் முதலிய வேளிர்களில் அதியர் மரபினர் தனித்தெண்ணப்பட வேண்டியவராவர். ஏனெனில் வேந்தருக்கும் / வேளிருக்கும் இடையிலான முரண்பாட்டில் வேளிர்களை அழித்தொழித்தல் அல்லது வென்றடக்குதலுக்கானப் போராட்டம் அதியர் குடியை வென்றடக்கியதுடன் முடிவுக்கு வந்தது.

வேளிர்களிலேயே வலிமையானவராக, வேந்தர்களுக்கு இணையாக ஆட்சிப்பரப்பும், பிற வளங்களும் கொண்டோராக இருந்ததுடன், வெல்லப்பட முடியாதவராக அதியர்கள் இருந்தனர். இதனை அசோகர் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.

அசோகர் (கி.மு. 273-232) பவுத்தத்தை தழுவிய பின்பு புத்த சமயத்தைப் பரப்ப தீவிர முயற்சிகளை மேற்கொண்டார் சௌராஸ்டிராவில் உள்ள கிர்னார் என்னும் இடத்தில் உள்ள கல்வெட்டானது ''சோழ பாண்டிய சத்திய புத்திர கேரள புத்திர

தேசங்களிலும் தாமிரபரணியிலும் (இலங்கையிலும்) ..... அரசனால் இருவிதமான மருத்துவம் அளிக்க ஏற்பாடு (மனிதர் களுக்கும், கால் நடைகளுக்கும்) செய்ததாக'' குறிப்பிடுகின்றது.[29]

கலிங்கத்தின் மீது பெற்ற வெற்றிகளுக்குப் பிறகு அசோகர் தமது எல்லைகளை விரிவாக்க முயற்சிக்கவில்லை. மாறாக புத்த தருமத்தை எண் திசையிலும் எடுத்துச் சென்று நிலை நாட்டுவதே தனது ஆட்சியின் வெற்றி என்று கருதியதால், தெற்கே சோழ, பாண்டிய, சத்தியபுத்திர, கேரளபுத்திர தாமிர பரணி (இலங்கை) வரையிலும் புத்த தருமத்தை கொண்டு சென்று பரப்பியதற்கானப் பணியில் தாம் வெற்றி அடைந்ததாக'' பீகாரில் உள்ள அசோக கல்வெட்டு ஒன்று கூறுகின்றது.[30]

இவ்வாறு சேர, சோழ, பாண்டியர்களுடன் அதியமான்களுமே குறிப்பிடப் படுகின்றனர். அதியர்களின் தகடூர் நாட்டில் பௌத்த, சமணம் முதலான சமயங்களும் நிலவியிருந்ததற்கான சான்றுகள் மிகுதியாக உள்ளன. புத்தரின் சிற்பங்களும் சமணர் சிற்பங்களும் காணப்படுகின்றன. ஜெயினூர் என்ற ஊர் இருந்து வருகின்றது.

கி.பி. இரண்டாம் நூற்றாண்டுகளுக்கு முற்பட்ட தமிழக வேந்தர்கள் சமணத்துறவிகளுக்கு குகைத்தளங்களில் படுக்கை அமைத்து கொடுத்துள்ளனர். பாண்டிய நெடுஞ்செழியன் மாங் குளத்திலும், சேரன் பெருங்கடுங்கோ மகன் இளங்கடுங்கோ புகழூரிலும் அதியமான் நெடுமான் அஞ்சி ஜம்பையிலும் கற்படுக்கைகள் அமைத்துக் கொடுத்தது பற்றி கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. மேலும் அதியமான் உடன் இருந்த ஔவையாரின் பாடல் கருத்துக்களை ஆராய்ந்த தேவ. பேரின்பன் ''ஔவையார் ஒரு பௌத்தர்'' என்று குறிப் பிடுகின்றார். இதனால் வேந்தர்களைப் போல அவைதீக சமயங்களை அதியமான்கள் ஆதரித்தனர் என்பது தெளிவாகின்றது. ஆனால் வேந்தர்களைப் போல எல்லையை விரிவுபடுத்தற் பொருட்டு வைதீக பார்ப்பனர்களைக் கொண்டு வேள்வி நடத்த வில்லை. திருக்கோவிலூரை வென்றுள்ளதை ஜம்பை கல்வெட்டும் குறிப்பிடுகின்றது. ஔவையார் பாடலும் சான்றாகும்.

இவ்வாறு வேளிர் குண இயல்புகளுடனும், வேந்தர்களுக்கு ஒப்பானவராகவும் ஒருங்கே காணப்படும் அதியர்கள் வேந்தர்கள் உருவாவதற்கு முன்பு இனக்குழு குடி அரசுகள் மிகுந்திருந்த காலத்தில், அவற்றுக்கான சமூக, பொருளிய அடிப்படையில் சமத்துவ அடிப்படையில் அவை வளர்ந்த காலத்திலேயே அவற்றுக்கிடையில் மிக உயர்ந்த வளர்ச்சி பெற்றவர்களாக அதியர் குடியைக் கொள்ள முடியும். ''கரும்பை கொண்டு வந்து பயிரிட்டவர்கள் நின் முன்னோர்'' என்ற ஔவையார் கூற்றின் பின்புலத்தில் அவர்களின் முன்னேறிய சமூக-பொருளாதார அடிப்படைகளை விளங்கிக்கொள்ள முடியும்.

### 1.7.6. இனக்குழு குடி அரசுகளின் முன்னேறியகுடி அதியர் குடி

அதே வேளையில், மூவேந்தருள் முதன் முதலாக நன்கு ஒருங்கமைக்கப்பட்ட அரசு உருவாக்கம் சேர நாட்டிலேதான் ஏற்பட்டது. ஒரே குடியில் வேந்தராக எழுச்சி பெற்ற சேரருக்கும், அவர்களை விட மேலானவர்களாக திகழ்ந்த வேளிராகவே நீடித்த அதியருக்கும் முரண்பாடும் மோதலும் இருந்து வந்தது. வேளிருக்கும் வேந்தருக்கிடையிலான இறுதிப்போரில் பெருஞ்சேரல் இரும்பொறை அதியர்களை வீழ்த்தினான். சோழர்கள், பாண்டியர்களின் நட்பு அதியருக்கு இருந்தும் கூட வேளிருக்கும் / வேந்தருக்கும் இடையிலான இறுதிப் போரில் வேளிர் முற்றாக அழிக்கப்பட வேண்டும் என்ற காரணத்திற்காக சோழர் பாண்டியர் அதியருக்கு பெரிதும் உதவாமல் வாளா விருந்திருக்கலாம். இனக்குழு குடி அரசுகளிலேயே உயரிய முன்னேற்றங்களைப் பெற்ற குடியாக அதியர் குடி விளங்கினாலும், அது அடுத்த கட்டத்துக்கு வேந்து உருவாக்க முயற்சிக்கு முனைய அவர்களிடம் சிறந்திருந்த இனக்குழு குடியமைப்பின் இயல்புகளே தடையாயிருந்திருக்க வேண்டும். அதனால் வேந்தராக மாற்றம் அடையவில்லையாயினும் வேந்தருக்கிணையான வலிமை மிக்கோரானதால் இறுதியாகத்தான் சேர வேந்தனால் வெற்றிகொள்ள முடிந்தது. இனக்குழுக் குடியரசு முற்றாக அழிக்கப்பட்டு வேந்தர்கள் நிலைப்பெற்றதைச் சுட்டுவதே தகடூர் யாத்திரை. அரசுக்கும் ஜனபதங்களுக்கும் இடையிலான தொடர் மோதல்கள் இவ்வாறு முடிவுக்கு வந்தன.

### 1.8.0. வேந்தர்கள்

சங்க காலத் தமிழகம் மூவேந்தர்களால் ஆளப்பட்டது என்பதை **வண் புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு** (*தொல்.* செய்யுள் 78) என *தொல்காப்பியம்* சுட்டும். அது மேலும் **போந்தை வேம்பே ஆரென வரூம் மாபெரும் தானையர் மலைந்த பூவும்** எனச் சேரர் சோழர் போண்டியரைப் பற்றி குறிப்பிடுகின்றது. சங்க இலக்கியத்தினுள் தொன்மையதான *புறநானூறு*ம் **பொதுமை சுட்டிய மூவருலகம்** (*புறம்* 357) என்று சுட்டும். சங்க இலக்கியங்கள் வழியாக 332 மன்னர்களின் பெயர்கள் அறியப்பட்டாலும் அதில் வேந்தர் எனப்படுவோர் சேர, சோழ, பாண்டியர் மரபில் தொடர்ந்து வழிவழியாக ஆட்சி மேற்கொண்டவரை மட்டுமே சுட்டும். தாம் வீரம் மிகுந்தவர்கள், மறப்பண்பின் தோன்றலினர் என்பதை எடுத்துக் காட்டும் வகையில் தொல் குடித்தலைவர்களும், வேளிர்களும் தமது வரலாற்றைக் கூற முற்பட்டதைப் போன்று அல்லாமல் வம்ப வேந்தர்களான மூவேந்தர்கள் இயற்கை கடந்த வகையில் தமது பேராற்றலை விளங்கச் செய்யும்படி புராணங்களிலிருந்து தமது வரலாற்றைப் படைத்துக் கொண்டனர். இத்தகைய புராணக் கதைகள் பார்ப்பனர்களால் உருவாக்கப்பட்டன. சேரர்கள் அக்கினி குலத்தவர் என்றும், சோழர்கள் சூரிய

குலத்தவர் என்றும், பாண்டியர் சந்திரக் குலத்தவர் என்றும் புனைந்துரைத்தனர். நானிலந்தாங்கிய வேந்துருவாக்கத்தின்போது வேந்தனின் அதிகாரமும், இறைமைத் தன்மையும், தொன்மப்புனைவுகளிலிருந்தும், புராணத்திலிருந்தும், இயற்கை கடந்த ஆற்றல்களாக கட்டமைக்கப்பட்டு வேந்தன் கடவுள் தன்மையுள்ளவனாக காட்டப்படுவதன் மூலம் சமூக நலனைப் பாதுகாக்கும் ஆற்றல் உள்ளவன், ஆட்சிக்கு பொருத்தமானவன் என்ற நம்பிக்கை ஏற்படச் செய்தனர். சேர வேந்தன் செங்குட்டுவன் கடலை பின்னோக்கி ஓடவைத்தான் (*பதிற்று* 5:22) சோழவேந்தர்கள் வானத்தில் தொங்கிய கோட்டையை அழித்தார்கள் (*புறம்* 39:6) சிபிச் சக்கரவர்த்தியின் வழித் தோன்றலே சோழன் நலங்கிள்ளி தம்பி மாவளத்தான் (புறம் 43) இமய மலையில் மூவேந்தர்கள் சின்னம் பொறித்தனர். பாரதப் போரில் ஈடுபட்டோருக்கு அரசனான உதியன் சேரலாதன் உணவளித்தான் (*புறம்* 2) என்று சங்க இலக்கியங்களே குறிப்பிடுகின்றன. இத்தகைய வரம்பிலா ஆற்றலாளர்களாக குறிப்பிடப்படும் வேந்தர்கள் அடிமைச் சமூகப் பொருளாதாரத்தின் மீது தமது ஆட்சியதிகாரத்தை நிறுவியிருந்தனர். இவர்களது அரசுகள் நிலையான படையணிகளுடன் நிர்வாக அமைப்புகளும் கொண்டமைந்திருந்தன. இதனை,

**படையுங் கொடியுங் குடையுமுரசு**
**நடை நவில் புரவியுங் களிருந்தேருந்**
**தாரு முடியு நேர்வன பிறவுந்**
**தெரிவு கொள் செங்கோலரசர்க் குரிய**

(*தொல்.* பொருள்) என்று *தொல்காப்பியம்* குறிப்பிடுகின்றது.

மேலும் அரசமைப்பானது ‘அவையம்’ என்னும் அமைப்பினை கொண்டு இயங்கியது. அந்த அவையம் எட்டு வகைப்படும் என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

### 1.8.1. ஐம்பெருங்குழு எண்பேராயம்

**எட்டு வகை நுதலிய அவையத்தாலும்**

(*தொல்,* பொருள் 75) இவற்றை இலக்கியங்கள் ‘அறங்கூறவையம்’ என்று உரைக்கின்றன. பாண்டியரின் மதுரையில் இருந்த அவையத்தை மதுரை காஞ்சியானது.

**அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்**
**செற்றமும் உவகையுஞ் செய்யாது காத்து**
**ஞமன் கோலன்ன செம்மைத்தாகி**
**சிறந்த கொள்கை அறங்கூற வையமும்**

(*மதுரை* 489-492) என்று குறிப்பிடுகின்றது. அவ்வாறே சோழர்களின் தலைநகரான புகாரில் இடம் பெற்ற அவையத்தை,

**அரைசுகோல் கோடினும் அறங் கூறும் அவையத்து**
**உரைநூல் கோடி ஒருதிறம் பற்றினும்**

(*சில* **5:133-134)** என்று *சிலம்பு* குறிப்பிடுகின்றது. அரசனே இதன் தலைமை பொறுப்பில் இருந்து ஆட்சி மேற்கொண்டான். நீதி வழங்கினான். மேலும் *சிலப்பதிகாரம், மணிமேகலை* வழியே ஐம்பெருங்குழு, எண்பேராயம் ஆகிய இரு அமைப்புகள் அரசனுக்கு உதவிபுரிந்தன. இந்த ஐம்பெருங்குழுவில்

1. **அமைச்சர்**
2. **புரோகிதர்**
3. **படைத்தலைவர்**
4. **தூதுவர்**
5. **சாரணர் இடம் பெற்றிருந்தனர்.**[31]

### 1.8.2. அரசின் வருவாய் அடிப்படைகள்

அன்றைய அரசின் அங்கங்கள் ஆறாக வள்ளுவர் வகைப்படுத்துகின்றார். அவை

1. **தாக்குவதற்குரிய தற்காப்பு படை**
2. **தற்காப்பு அரண்கள்**
3. **நட்பு அரசுகள்**
4. **கூழ் எனும் பொருளாதாரம்**
5. **உயர்குடி மக்கள்**
6. **கீழ் வாழ்வார்**

ஆகிய குடிகள் என்று வரையறுத்துள்ளார். மேலும் அரசுக்குரிய வருவாய்கள் மூன்று என வகைப்படுத்துகின்றார்.[32]

1. **உறுபொருள் :** குடிகள் தம் விளைச்சலில் அரசுக்கு செலுத்த வேண்டிய ஆறில் ஒரு பங்கு பாகம் 2. **உல்கு பொருள் :** உள்நாட்டு வெளிநாட்டு வாணிகம், இறக்குமதி

ஏற்றுமதி, வணிகப் பொருள் அல்லது சுங்கவரி 3. **தெறுபொருள் :** பகையரசரை வென்று பெருகின்ற கொள்ளைப் பொருள், குடிகளில் குற்றவாளிகளைத் தண்டம் செய்து பெருகிற அபராத பொருள் தன்னால் தோற்கடிக்கப்பட்ட மன்னர்கள் தொடர்ந்து ஆட்சி செய்து கொள்ள ஒப்புக் கொண்டு பெரும் திறைப் பொருள் ஆகியனவாகும்.

இங்கு உல்கு பொருளும், உறுப்பொருளும் அரசனின் நாடு காவலுக்காக தரப்படுபவை. தெறுபொருள் என்பது அரசாட்சியை விரிவுபடுத்துவதற்கு அடிப்படையானது. அரசன் வீரமும், ஆற்றலும், கடுங்கோபமும் உடைமை வேட்கையும் கொண்டு ஈட்டக் கூடியதாகும். நாடு பிடிக்கும் எண்ணமும் பேராசையும் தோன்றச் செய்யும் இடம் இதுவாகும்.

### 1.8.3. அரசிற்கு முந்தைய சமூக வாழ்க்கை முறை

அரசமைப்பு ஏற்படுவதற்கு முந்தைய தொல்குடி அரசில் நாளவை (*அகம்* 331) எனும் வேத்தவை இருந்தது. அவை நாள் மகிழ் இருக்கை (*புறம்* 29, *பதி* 65) என்றும் குறிப்பிடப்பட்டது. இத்தொல்குடி குடிஅரசின் தலைவர்களான முதுகுடி மன்னரும் சீறூர் மன்னரும், வேளிரும் அவ்வந்நிலங்களில் தமது நிலப்பரப்பில் பின்பற்றியவை இந்த 'அவை'யாகும். இங்கு தலைவன் பாணருக்கும் கூத்தருக்கும் விறலியருக்கும் தானே சமைத்தும், பறிமாறியும் கள்ளினை அளித்தும் உண்டு களித்திருந்தான். தாமே வேட்டையாடிய பொருளை தம்மை நாடி வந்த பரிசிலர்க்கு தாமே சமைத்து அளித்ததை பாடல் குறிப்பிடுகின்றது. இத்தகைய வேத்தவை எனும் கூட்டமைப்பின் மூலம் தமது தொல்குடி குடி அரசை நிர்வாகம் செய்தனர். இங்கு அத்தலைவர்களால் மதிக்கப்பெற்றப் பாணரும், பொருநரும், கூத்தரும், விறலியும் தமது கலைத்திறத்தாலும், அறிவுத்திறத்தாலும் மகிழ்வித்தனர். தொல்குடி சமூக அமைப்பில் அவரவர் வாழ்க்கை தேவைக்கு அவரவர் உற்பத்தியில் ஈடுபட்டும் உழைத்தும் பகிர்ந்து கொண்டனர். உழைப்பிலிருந்து அவர்கள் அன்னியப் பட்டிருக்கவில்லை. இந்நிலையில் முழுமையான கலைஞர்களுக்காக அவர்கள் தமது உற்பத்தியிலிருந்து அளித்தனர். அவர்கள் தேடிய விளைச்சலில் இருந்து கலைஞர்களுக்கும் கொடுத்து ஆதரித்தனர். நாளடைவில் அத்தகைய தொல்குடி குடி அரசு சமூகங்கள் அழிக்கப்பட்டு அரசு (State) ஏற்பட்டபோது, இத்தகைய கலைஞர்களை ஆதரிக்க குடிஅரசின் தலைவர்களோ, அல்லது குடி அரசில் வாழும் தொல்குடி மக்களோ கூட உணவளிக்க இருக்கவில்லை.

### 1.8.4. அரசு ஏற்பட்ட நிலையில் பாணர் நிலை

இந்நிலையில்தான் இன்னும் அழிக்கப்படாமல் தாக்குபிடித்து நிற்கக்கூடிய

வலிமை மிக்க வேளிராக இருக்கும் நன்னன் சேய் நன்னனிடம் கூத்தர்களை ஆற்றுப்படுத்தியும், தொண்டைமான் இளந்திரையனிடம் பாணர்களையும் சென்று பரிசில் பெற ஆற்றுப்படுத்தியும் ஆற்றுப்படை நூல்கள் பாடப்பட்டன. வேந்தர்களை தலைவர்களாகக் கொண்டு பாடப்பட்ட *மதுரைக்காஞ்சி, பட்டினப்பாலை* ஆகியவற்றில் மதுரை, புகார் ஆகிய நகரச்சிறப்பு பாடப்பட்டிருக்க, *மலை படுகடா*மிலும் *பெரும்பாணாற்றுப்படை*யிலும் வேளிராகிய தலைவர்களை சந்திப்பதற்கு முன்பாக அவர்களது நிலப்பரப்பில் திணைச்சமூக வாழ்வியலுக்கு உரிய மக்கள் வாழ்விடங்கள் சித்திரிக்கப்படுகின்றன. *மலைபடுகடா*மின் வழியிடைக் காட்சியில் கானவர், குறவர், கோவலர், உழவரும், *பெரும்பாணாற்றுப்படை* வழியிடைக் காட்சியில் உமணர், குறவர், ஆயர், உழவர், வலைஞர், அந்தணர் ஆகியோரும் விவரிக்கப்படுகின்றனர்.

இத்துடன் இம்மக்களது வாழ்விடச்சூழல், தொழில், கொடை, உணவு அளித்து பேணும் தன்மை ஆகியன விவரிக்கப்படுகின்றன. இங்கு கவனிக்கப்பட வேண்டியது யாதெனில், தொல்குடி குடி அரசின் தலைவர்களின் ஆட்சியில் இவர்கள் சுதந்திரமான, தத்தம் தேவைகளை தாமே பூர்த்தி செய்து வாழ்கிற குடிகள். தலைவனைப் போன்றே இவர்களும் கலைஞர்களைப் பேணக்கூடியவர்கள். ஆனால் இத்தகைய சமூகம் போரில் தோற்கடிக்கப்பட்டு, அடிமை கொள்ளப்பட்டுவிட்ட பிறகு அரசு கட்டமைக்கப் பட்டபோது குடிகளின் ஆதரவும் இல்லை, வேந்தர்களின் ஆதரவும் இல்லை. ஏனெனில், அரசு என்பது அடிமையுடைமையின்மீது, கட்டமைக்கப்பட்டது. இங்கு அடிமையாக்கப்பட்டவர்கள் முதலில் ஆள்பவனுக்காகவும், பிறகு தமக்காகவும் உற்பத்தி செய்ய வேண்டிய கட்டாயத்தில் இருக்கின்றனர். இந்நிலையில் வேந்தமைப்பில் வேந்தனும், கீழ்வாழும் குடிகளும் கூட கலைஞர்களை ஆதரிக்கவில்லை. எனவே அவர்கள் தொல்குடி சமூகங்களை தேடி அலைந்து அத்தலைவர்களைப் பாடினர். இதுவே ஆற்றுப்படை இலக்கியம் ஆகும்.

### 1.8.5. பார்ப்பனர் வேள்வியும் நாடு பிடித்தலும்

வேந்தர்களின் அரசானது நாள் மகிழிருக்கை போன்றதல்ல. நாடு பிடிக்கும் நில விரிவாக்க முயற்சி உடையது. அவர்கள் நில விரிவாக்கத்திற்கு பார்ப்பனர்களின் வழிகாட்டுதலில் வேள்வியிலும் ஈடுபட்டனர். **கபிலை கண்ணிய வேள்வி நிலையும்** (*தொல்*.1036:6) என்ற *தொல்காப்பிய* வரிகள் வேந்தர்களிடம் பார்ப்பனர்கள் வேள்விக்குரிய பசுக்களை தானமாக வேண்டிப் பெறுவது பற்றியதாகும்.

பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி எனும் பாண்டிய மன்னன் நாடு பிடித்தலுக்காக பல வேள்விகளை நடத்தியுள்ளான். (*புறம்* 16:17-21) அவ்வாறே

ராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி எனும் சோழ வேந்தனும் 'ராச சூய யாகம்' நடத்தினான். இதனை கௌணியன் விண்ணந்தாயன் என்ற பார்ப்பான் நடத்தினான். இப்பாடல் பார்ப்பன வாகை துறையில் அமைந்தது. இதனை ஆவூர் மூலங்கிழார் (*புறம்* 166) பாடியுள்ளார். அவ்வாறே சேரர்களும் வெற்றிவேண்டி வேள்வி நடத்தியுள்ளனர் என்பதை *பதிற்றுப்பத்து* பாடல்கள் வழி அறியமுடிகின்றது.

**கொண்ட தீயின் சுடர் எழுதொறும்**
**விரும்பு மெய் பரந்த பெரும் பெயர் ஆவுதி** (*பதி:* 3ம்பத்து:6-7)

**நடுவண் எழுந்த அடுநெய் ஆவுதி** (*பதி:*3ம்பத்து:13)

**உரை சால் வேள்வி முடித்த கேள்வி** (*பதி* 64:4)

**புரையோள் கணவ! புண்கிளர் மார்ப!**
**தொலையாக் கொள்கைச் சுற்றம் சுற்ற,**
**வேள்வியில் கடவுள் அருத்தினை கேள்வி;**
**உயர் நிலை உலகத்து ஐயர் இன்புறுத்தினன்**

(*பதி.*70:16-19) மேலும், பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் செய்த மூவகையான வேள்வி பற்றியும் (*புறம்* 2:20-25) அறியமுடிகின்றது. தொல்குடி குடி அரசில் இல்லாத இப்பண்பு புதிய நிலவிரிவாக்க ஆசைகளைத் தூண்டுவதும், அடிமையுடைமையின் மீது விருப்பமும் புதிய அரசை கட்டமைப்பதற்கான ஒரு வேலை திட்டமாகவும் மேற்கொள்ளப்படும். இதில் சமுதாய நலன் எதுவுமின்றி அதிகார வர்க்க நலன் பேணும் திட்டமாக இருந்தது.

### 1.8.6. வேந்தர்கள் தோற்றவரை அடிமை கொள்ளல்

*தொல்காப்பியம்* புறத்திணையியல் குறிப்பிடும் வெட்சியும், கரந்தையும் மட்டுமே ஆகோள் பூசல் பற்றி பாடும் துறைகளாகும். தும்பைப் போர் என்பது வேந்தர்கள் அடிமைகளைக் கொள்வதற்காக நடத்தப்பட்டன. வேள்வியைத் தொடர்ந்து நாடு பிடித்தலுக்காக நிலவிரிவாக்க நோக்குடன் போர்கள் நடத்தப்பட்டன.

**தும்பை தானே நெய்தலது புறனே**
**மைந்து பொருளாக வந்த வேந்தனைச்**
**சென்று தலையழிக்கும் சிறப்பிற்றென்ப**

(*தொல்* 1016) அதாவது ''அடிமை கொள்ள வந்த வேந்தனை அழித்தல்' தும்பை என்று கூறுகிறது. மேலும் ''நிலம் கவர்தல் வஞ்சி'' என்றும், அரண்களையும், செல்வங்களையும் கவர்தல் 'உழிஞைப் போர் என்றும் *தொல்காப்பியம்*

குறிப்பிடுகின்றது. மேலும் வாகைத் திணையும் வேந்தர்களின் வெற்றி பற்றியது. காஞ்சித் திணையும் வேந்தர்களின் போருக்குப் பின் நிகழ்வுகளைப் பற்றியதாகும். வேந்தரின் சார்பில் போர் செய்து கொல்லப்பட்ட வீரர்களது தாயரும், மனைவியரும் எய்திய நிலைகளை, நடைபெற்ற நிகழ்வுகளைப் பற்றி காஞ்சித்திணை பேசுகின்றது. இது உயர்குடியினருக்கானது எனலாம். தொல்குடி அமைப்பில் தோற்றவர்கள், வீழ்த்தப்பட்டவர்கள் அடிமைகளாக கொள்ளப்பட்டது பற்றி *தொல்காப்பியம்* விரிவாக கூறவில்லை என்பதால் அவர்கள் தோற்கவே இல்லை என்பது பொருள் அல்ல. அவர்கள் தோற்றனர். அடிமைகளானவர் பற்றி குறிப்பிடாத தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் உயர்குடியினர் அடிமைகளை ஒடுக்கும் நிகழ்வை வெகுளிக்குரிய மெய்ப்பாடாக வரையறுக்கிறார்.

**உறுப்பறை குடிகோள் அலைகொலை என்றன**
**வெறுப்ப வந்த வெகுளி நான்கே**

(*தொல்.*மெய்.1023) உறுப்பறையாவது அங்கமாயினவற்றை அறுத்தல், குடிகோளாவது கீழ் வாழ்வாரை (அடிமைகளை) நலிதல், அலை என்பது வைதலும், புடைத்தலும், கொலை என்பது கொல்லுதல் ஆகும். இவை தலைவனுக்குரிய வெகுளித்தனத்தால் வருவது. நடைமுறை வாழ்வில் தலைமக்கள் எவ்வாறு இருந்தனர் என்பதை நாடக வழக்கில் மெய்ப்பாடுகளாக அவர் விவரிக்கிறார்.

இறைத்தன்மையுடன் வரம்பிலா ஆற்றலாளர்களாக கருதிப் பார்க்கப்பட்ட உயர்குடியாகிய தலைமக்களுக்கு கீழ்காணும் இயல்புகள் ஆகாதன என்று தொல்காப்பியம் கூறுகின்றது.

**சினனே பேதமை நிம்பிரி நல்குரவு**
**அனை நால்வகையும் சிறப்பொடு வருமே**

(*தொல்.* பொரு 1190) சினமாகிய கோபம் நீடித்தல், பேதைமையாகிய ஏழ்மை, நிம்பிரியாகிய பொறாமை தோன்றும் குறிப்பு, நல்குரவாகிய செல்வமின்மை ஆகியன கூடவே கூடாது என்று கூறியதால்தான், நடைமுறையில் அவ்வாறு அவர்களிடம் இருந்த வழக்கங்களை மெய்பாட்டியலில் நாடக வழக்கிற்குரியதாக கூறியது. எனவே ஆட்சியாளர்களால் ஒடுக்கப்பட்டு தண்டனைக்குள்ளானவர்கள், உழைத்துக் கொடுத்தவர்கள் அடிமைகளாக, கொள்ளப்பட்டிருந்த கடைசியரும், வினைவலருமேயாவர்

**அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடிவரையில புறத் தென்மனார் புலவர்**

என்று (*தொல்*) கூறும் காதல், திருமணம், சொத்துரிமை ஆகியன மறுக்கப்பட்டு

தமது ஆண்டைகளுக்காக உழைத்து மாள்வதே இவர்களது வாழ்க்கை முறையாகும்.

**காடு கொன்று நாடாக்கி**
**குளம் தொட்டு வளம் பெருக்கி**
**பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி**
**கோயிலொடு குடி நிறீஇ**
**வாயிலோடு புழை அமைத்து**

(*பட்டின.*283-287) காரிகாற்சோழன் ஆட்சிக்கு வந்தவுடன் பகை நிலங்களை அழித்து அடிமைகளை கைக்கொண்டதுடன், காடழித்து வேளாண் நிலங்களைப் பெருக்கியமையும், நீர் நிலைகளை உருவாக்கி பாசன வசதிகளை ஏற்படுத்தியதையும், தனது அரண்மனையோடு குடியேற்றங்களை நிறுவியதையும், தோற்றவரின் பெண்களை ஏவல் பெண்டீராக தமது மனையில் கொண்டிருந்தான் என்பதையும் *பட்டினப்பாலை* கூறுகின்றது. அவன் மாபெரும் வெற்றியாளனாகவும் சிறந்த அரசமைப்பாளனாகவும் இருந்தான் என்பதை உணர்த்த ''அவன் மலையை அகழ்ந்து எடுப்பான்; கடலினை தூர்த்து விடுவான்; வானத்தை கீழே வீழ்த்தி கிடத்துவான்; காற்றின் திசையைத் தடுத்து மாற்றுவான் (*பட்டின* 27-273) என்றெல்லாம் குறிக்கப்படுகின்றான். இதனால் அடிமையுடைமையைக் கொண்டு அவன் ஆக்கப் பணியில் ஈடுபட்டிருந்தது புலப்படும்.

**வருவிசைப் புனலைக் கற்சிலைப் போல** (*தொல்.* புறத்,8) விசைமிகுந்துவரும் ஆற்று நீரைத் தடுத்து நிறுத்தும் கற்சிலை போல' என்று கூறுவதும் கரிகாலன் கட்டிய கல்லணையையே ஆகும் என்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் வன்புலங்களையும் மென்புலமாக்குதல் நடைபெற்றது. இதற்கென ஏரி, குளம் வெட்டுதல், நதிப் படுகைகளிலிருந்து கால்வாய்கள் வெட்டுதலும் அடிமைகளைக் கொண்டே நடைபெற்றது. இத்தகைய வேளாண் பணிகளுக்காக இரும்பு முதலான கனிம வளங்களை வெட்டி எடுக்கவும், அடிமை மக்களாகிய கடைசியரும், வினைவலரும் பயன்படுத்தப்பட்டனர். (*பட்டின.* 185-90) புகாருக்கு வந்து சேர்ந்த மதிப்புமிக்க பொருட்களை குறிப்பிடும்போது ''வடமலை பிறந்த மணியும் பொன்னும்'' என்று குறிப்பிடப்படுவது கோலார் தங்கச் சுரங்கத்தில் வெட்டி எடுக்கப்பட்ட தங்கம்தான் என்று வரலாற்றாய்வாளர்கள் கூறுகின்றனர். எனவே இத்தகைய கடுமையான மனித உழைப்பினால் நடைபெற்றிருக்கும் யாவையுமே அடிமையுழைப்பினால் நிறைவேற்றப்பட்ட தாகவே இருக்கும். மேலும், நிலம், நிரைகளோடு, அடிமைகளும் தானமாக கொடுக்கப்பட்ட நிகழ்வுகளும் இங்கு குறிப்பிடப்படுவதை காணமுடிகின்றது.

**மன்று நிறைநிரை என்கோ**
**மனைக் களமரொடு களம் என்கோ**

(*புறம்* 387:24-25) தம்மை பாடிய புலவருக்கு வீட்டடிமைகளை நிலத்துடன் சேர்த்து வேந்தன் தானமாக வழங்கியதை குறிப்பிடுகின்றது.

ஆசைகளற்றவர்க்கும் ஆசைகளைத் தூண்டி வேள்வி செய்வித்து, நிலத்திற்காகவும், அடிமைகளைப் பெறவும் போர் மேற்செல்லவும், அவ்வாறு அடைந்தவழி மேற்படி அவற்றை தக்கவைத்துக் கொள்ளவும், அக்கம்பக்கமாக நிலவிவரும் தொல்குடி அரசுகள் தமக்கு அச்சுறுத்தலாக இருப்பதாலும், அதே நிலைக்கு தோற்றவர்கள் மீண்டுவிடாதபடியும் பாதுகாத்துக் கொள்ளவும் ஏற்றவகையில் மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கையாக தன்னிறைவுச் சமுதாயங்கள் கட்டமைக்கப்பட்டன. இதனை பின்வரும் *பட்டினப்பாலை* பாடலின் வரிகள் இத்தகைய தன்னிறைவுச் சமுதாயத்தை உருவாக்குவதை எடுத்து கூறுகின்றது.

### 1.8.7. *அர்த்தசாத்திரத்தின்*வழி சாதி உருவாக்கம்

இதற்கான வழிகாட்டுதல் கௌடில்யரின் *அர்த்தசாத்திரத்*தில் காணப்படுகின்றது. தொல்லினப் பழங்குடிகளை உள்ளுக்குள் ஊடுருவி அழித்தல் பற்றியும், அழித்த பிறகும் தப்பியவர்கள் மீண்டும் ஒற்றுமையுடன் சேர்ந்து வளர்ந்து போரிட்டு இழந்த விடுதலையினைப் பெற முற்படுவர். எனவே அவர்கள் மீண்டும் ஒன்றுபடாதவாறு சிதறடித்து பிரித்து வைக்கப்பட வேண்டும் என்பது பற்றியும் விரிவாகக் கூறுகின்றது. மேலும் அவர்களை தோல்வியிலிருந்து தமது ஒற்றுமையால் மீளாதபடி தடுத்தல் மட்டுமல்லாமல், அவர்களுக்கு மாற்று வாழ்க்கை அளிப்பதற்கான முறையாகவும் பின்வரும் முறையினை வலியுறுத்துகின்றார். அவர்கள் சின்னஞ்சிறு கிராமங்களில் ஐந்து அல்லது பத்து குடும்பங்களாக வசிப்பதற்கு வழி செய்து அவர்களை விவசாயத்தில் ஈடுபடுத்தவேண்டும். (பஞ்ச குலிம், தச குலிம், வா, கிருஷியாயம், நிவசயத்) இந்த கிராமங்கள் ஒன்றுடனொன்று தொடர்பின்றித் தனித்தனியானதாகவும் சுயதேவை பூர்த்தி உள்ளவையாகவும் இருக்க வேண்டும். தோல்வியடைந்து இடம் பெயர்ந்த இம்மக்கள் குழுக்கள் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொள்வது கவனமாகத் தடுக்கப்பட வேண்டும்'' என்று கூறுகிறது. எனவே தொல்பழங்குடி மக்கள் சமூகங்கள் சிதைக்கப்பட்டு (சுயதேவை பூர்த்தி கிராமங்களில்) தன்னிறைவு சமுதாயங்களில் குடியமர்த்தப்பட்டதைப் பற்றிய தொடக்க வழிகாட்டுதல் இதுவென்றாலும், பன்னெடுங்காலமாக நிலவி வரும், சமீப காலம் வரை நீடித்து வரும் நடைமுறை இதுவாகும்.[33]

### 1.8.8. சீறூர்களில் தொடக்க கால தன்னிறைவுச் சமுதாய வடிவம்

தன்னிறைவுச் சமுதாயங்கள் உருவாவதற்கு முன்பே இதன் தொல்வடிவம் முல்லை நிலத்து சீறூர்களில் காணப்பட்டது. 'உரவோன்' என்று குறிக்கப்படும் பூசல் தலைவன், சீறூர் தலைவனாக இருந்து தன்னைச் சார்ந்துள்ள சமுதாயத்தில் போர் தொழிலிலும், பாதுகாப்பு பணிகளிலும் ஈடுபடாத கால்நடை வளர்ப்பு மட்டுமே மேற்கொண்டிருந்த பிற குடிகளுக்கு பாதுகாப்பும், அவர்களது மேய்ச்சல் நிலங்களுக்கான பாதுகாப்பும் வழங்கினான். இதற்கு கைமாறாக கால்நடைகளின் இறைச்சி, பால், பால்படுபொருட்களை அவர்களிடம் இருந்து பெற்றுக்கொண்டான். வன்புல வேளாண்மையில் கிடைத்தவற்றிலிருந்தும் பங்கு கொடுத்தனர். ஆகவே, இப்படியொரு வேலைப்பிரிவினை முல்லை நிலத்து கால்நடை மேய்ப்புச் சமூகத்தில் இருந்தது. இது பிறகு விரிவான வேலைப் பிரிவினையாக வளர்ந்தது. இவ்வாறு வேலைப் பிரிவினையுடன் கூடிய புதிய சமுதாயம் கட்டமைக்கப்பட்டதானது, தோற்ற அடிமைகள் மீண்டும் தமக்கெதிராக கிளர்ந்தெழாமல், கலகம் விளைக்காமல் தடுக்கும் நோக்கத்திலும் மேற்கொள்ளப்பட்டது. தொல்குடி பண்பு நலன்கள் அழிக்கப்பட்டு, அவர்கள் மீண்டும் ஒன்றிணையாதபடியும், ஒற்றுமை தோன்றாதபடியும் பார்த்துக் கொள்ளப்பட்டதுடன் புதிய புதிய தொழில்களின் அடிப்படையில் உழைப்பாளர்கள் பிரிக்கப்பட்டு தொழிலின் பெயரால் குறிப்பிடப்பட்டனர் என்பதையும் அறியமுடிகின்றது.

மாடு மேய்ப்பவர் பால், பால் படு பொருட்களை அளித்திட வேண்டும். ஆடுகளை மேய்ப்பவர் ஆடுகளைத் தருவதும், கொல்லர், தச்சர் முதலானோர் தமக்குரிய பங்காக தேர், கட்டில், இருக்கை, வாள், வேல் வடித்து தரவேண்டியதும் முறையாகும். இதனை **வேல் வடித்து தருதல் கொல்லற்கு கடனே** என்ற *புறநானூறு* சுட்டும். மேலும் சீறூரில் வாழ்ந்த மக்களிடமிருந்து பெற்றுக்கொண்ட பொருட்களுக்கு ஈடாக தனது ஊரைப் பாதுகாக்கும் செயலில் தலைவன் ஈடுபட்டான். ஆநிரைகளைப் பாதுகாத்தான்.இதனை பின்வரும் பாடல் உணர்த்துகின்றது.

**யான் தன்னிரக்குங் காலை தானெம்**
**உண்ணா மருங்குல் காட்டி தன்னூர்க்**
**கருங்கைக் கொல்லனை இரக்கும்**
**திருந்திலை நெடுவேல் வடித்தி சின் எனவே**

(*புறம்* 180) இதன் விரிவான வடிவமே அரசு உருவானபிறகு பரந்த அளவில் கட்டிருக்கமான, நிலைத்த வடிவில் மேற்கொள்ளப்பட்டது. அடிமைச் சமூகத்தை பாதுகாக்கும் நோக்குடன் மேற்கொள்ளப்பட்ட இச்செயல் சாதிய படிநிலைகளைத்

தோற்றுவித்தது. சங்க இலக்கியத்தில் செய்யும் தொழிலாலும், பயன்படுத்திய கருவியாலுமே அடிமை மக்கள் சுட்டப்படுகின்றனர்.

### 1.9.0. வேந்தரின் வேளாண் விரிவாக்க முயற்சி

செவ்வியல் இலக்கியங்கள் வழியே பண்டைத் தமிழர்கள் வேளாண்மையிலும் அதனைச் சார்ந்த பாசனக் கட்டமைப்பிலும் சிறந்திருந்தனர் என்பதும், கடல் கடந்த வாணிபத்திலும், அதனைச் சார்ந்த கப்பல் கட்டுதல், துறைமுகம் சார்ந்த தொழில்களிலும் சிறந்திருந்தனர் என்பதும், கோயில் அரண்மனை கட்டுதலிலும் சிறந்திருந்தனர் என்பதும் அறியமுடிகின்றது. ஆனாலும் ஏரி, குளம் வெட்டுதல், கல்லணை முதலான அணைகளைக் கட்டி பாசன வசதிகளை பெருக்குதல் எனும் முயற்சியில் ஈடுபடுத்தப்பட்ட மனித உழைப்பும் பிற கட்டுமானப் பணிகளில் அடங்கியுள்ள மனித உழைப்பும் அடிமையுழைப்பே என்பதற்கு மேலும் தெளிவான சான்றுகள் அறியப்படவில்லை. அக்காலத்து இலக்கியங்கள் அனைத்தும் **உயர்ந்தோர் மாட்டே** பாடப்பட்டதால் இந்நிலை ஏற்பட்டு விட்டது.

**நிலன் நெளிமருங்கின் நீர் நிலை பெருகத்**
**தட்டோரம்ம, இவண் தட்டோரே**
**தள்ளாதோர் இவண் தள்ளாதோரே**

(*புறம்* 18:18-30) வானம் பார்த்த பூமி எல்லையற்று இருந்தும் பயன் என்ன? அறிவுரையை தள்ளிவிடாமல் மேடும் பள்ளமுமான நிலத்தில் பொழியும் மழைநீர், வீணாக ஓடிவிடாமல் நீர் நிலைகளை ஏற்படுத்தி தடுத்து தேக்கினால் உன் புகழும் அழியாது தடுத்து நிறுத்தப்படும் என்று குடபுலவியனார் தலையாலங்கானத்து செருவென்றப் பாண்டிய மன்னனுக்கு அறிவுரை கூறுகின்றார்.

**குளம் தொட்டு, கோடு பதித்து வழிசீத்து**
**உளம் தொட்டு உழுவயலாக்கி - வளம் தொட்டுப்**
**பாடுபடும் கிணற்றோடு என்று இவை பாற்படுத்தான்**
**ஏழும் சுவர்க்கம் இனிது**

(*சிறுபஞ்ச* 64) குளம் வெட்டி, மிகை நீர் வழிந்தோட கலிங்கும் அமைத்து, குளத்துக்கு வரும் நீர் வரத்துக் கால்வாய்களும், விவசாயத்துக்கு நீர் வழங்கும் தூம்பு மடை, வெள்ளம் வெளியேறும் பாதை ஆகியவற்றை அமைத்து, பாயும் பகுதிகளை உழுவயலாக்கி தண்ணீர் குறைந்த காலத்தில் பயன்படும் வகையில் கிணறும் அமைத்திடுபவன் சுவர்க்கம் போவான் என்று *சிறுபஞ்சமூலம்* குறிப்பிடுகின்றது.

**யாறில் வழியாறு தோற்றுவித்தலும், குளனில்**
**வழிக்குளம் தொடுவித்தலும், முயல்**
**வழிக்கயல் பாயச் செய்தலும்**
**செங்கோல் சிறப்பெனப்**

(*யா.வி.*93) ஆற்றிலிருந்து பிரிந்து வாய்க்கால் வழியாக நீர் கொண்டுவருவதும், குளத்திலிருந்து கீழ் குளங்கள் இணைக்கப்படும் கால்வாய்கள் ஏற்படுத்துதலும், முயல் ஓடிய பாதைகளை மீன் ஓடும் பாசனக் கால்வாய்களாக அமைத்தலுமே மன்னவனின் சிறப்பென *யாப்பருங்கல விருத்தி* குறிப்பிடுகின்றது. இவ்வாறு எல்லாக் காலத்தும் குடி ஓம்பும் மன்னவனாக விளங்கக்கூடியவன் மேற்கொள்ளும் செயலாக சுட்டப்படும் பணிகள் அம்மன்னனாலேயே செய்யப்பட்டவை அல்ல. அம்மன்னனால் செய்விக்கப்பட்டவை என்பதே உண்மை. செய்தவர்கள் உழைத்து உருவாக்கியவர்கள் ஆயிரக்கணக்கான அடிமைகள்தான் என்பது உய்த்துணரப்பட வேண்டியதாகும்.

### 1.9.1. கட்டுமானப் பணிகளில் அடிமையுழைப்பு

**காடு கொன்று நாடாக்கி**
**குளம் தொட்டு வளம் பெருக்கி**
**பிறங்கு நிலை மாடத்து உறந்தை போக்கி**
**கோயிலோடு குடிநிரீஇ**

(*பட்டின* 283 226) என்ற அடிகள் இங்கு மீண்டும் எண்ணத் தகுந்ததாகவே உள்ளது. நகரை ஏற்படுத்தி கோயிலோடு குடிநிறுவி தன்னிறைவுச் சமுதாயமாக அடிமைகளை தொழில்களில் பிரித்து வைத்து என்றென்றைக்கும் நிலைத்திருக்கும்படியாகச் செய்தனர். இன்று பெருமளவில் இயந்திரங்களைக் கொண்டும் கிரேன், புல்டோசர் போன்ற அதிக ஆற்றல் தேவைப்படும் பணிகளுக்கு பயன்படுத்தப் படும் இயந்திரங்களுக்கு பதிலாக அன்று யானை, குதிரை போன்ற விலங்குகளோடு அடிமைகளும் பயன்படுத்தப் பட்டனர். யானை குதிரைகளை எவ்வாறு எங்கும் குறிப்பிட வேண்டிய நிலை தோன்றவில்லையோ, அவ்வாறே அடிமைகளையும் குறிப்பிட வேண்டிய நிலை இல்லாமல் உயர்குடியாகிய தலைவர்கள் செய்ததாக குறிப்பிடப்பட்டனர். சுட்ட செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்ட உயர்ந்த திருச்சுற்றுகளைக் கொண்ட மதில்கள் சூழ்ந்த பெருங் கோயில்களில் அவர்கள் வசித்தனர். அரசோச்சினர். நகர் என்பது கோயில் என்ற பொருளுடையது **சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பு** என்ற (*பெரும்பாண்.*405) அடிகள் இதனை தெளிவு படுத்துகின்றது. பல்வேறு வகையான இயற்கை வண்ணங்களைக் கொண்டு தீட்டிய ஓவியங்களை உடையவையாக அக்கோயில்கள்

விளங்கின. **வேறுபட்ட வினை ஓவத்து வெண்கோயில்** (*பட்டின.*49) கரிகால் வளவனால் அமைக்கப்பட்ட உறந்தை நகரின் அரண்மனைச் சிறப்பு இவ்வாறு கூறப்படுகின்றது. அதேபோல **நளி மலைச் சிலம்பின் நன்னகர்** (*திருமுரு* 238) என்று மரங்கள் சூழ்ந்த மலையின் மீது அமைந்துள்ள செவ்வேளின் திருக்கோயில் என்று *திருமுருகாற்றுப்படை* சேயோனின் கோயிலை குறிப்பிடுகின்றது. **நெடியோய் நீ மேய கடிநகர்** (*பரிபாடல்* 19:29) இங்கு மாயோனின் கோயிலும் *பரிபாடலில்* குறிப்பிடப்படுவதையும் காணமுடிகின்றது.

**வெண்தலை புணரி அலைக்கும் செந்தில் நெடுவேள்** (*புறம்* 55)

**திருமணி விளக்கின் அலைவாய்ச் செருமிகு சேயொடு** (*புறம்* 55)

இங்கு கடலின் வெள்ளலைகள் மோதுகின்ற மதில்கள் சூழ்ந்த கோயிலும், விளக்குகள் பொருந்திய திருச்சீரலைவாய் கோயிலும் ஆகிய சேயோனின் கோயில் குறிப்பிடப்படுகின்றது.

**கருவொடு பெயரிய காண்பின் நல்இல்** (*நெடுநல்* 114) கருவறையுடன் பொலிந்து காணப்படும் பாண்டியனின் அரண்மனை இங்கு குறிப்பிடப்படுகின்றது. மேலும் தெருக்களின் கட்டமைப்பு அரண்மனையின் வனப்பு, அரசமாதேவி வீற்றிருக்கும் அறையின் சிறப்பு ஆகியன நக்கீரரால் எடுத்துக்காட்டப்படுவது இங்கு எண்ணற்பாலது. கொல்லரும், கருமமும் மண்ணீட்டாளரும் தொழில் நுட்பவியலாரும் மட்டுமே கட்டியதல்லாமல், அவர்களுக்கு கீழிருந்து உழைத்துக் கொடுத்தவர்கள் ஏராளம் இருந்திருக்க வேண்டும்.

**பூதம் காக்கும்புகல் அரும் கடிநகர்** (*பட்டின* 57) என்று கரிகாலனின் உறந்தை குறிப்பிடப்படுகின்றது. அதாவது துவாரபாலகர்கள் காக்கும் கோயில் என்றும் கூறலாம். இவ்வாறு தெய்வங்களுக்கும், நடமாடும் தெய்வங்களாகவே கருதப்பட்ட உயர்குடியாகிய ஆட்சியாளர்களுக்கும் கட்டப்பட்ட கோயில், அரண்மனை ஆகியனவே அவர்களது ஆட்சித்தலங்களும் ஆகும். அவற்றை பெரும் மனித உழைப்பைக் கொண்டே உருவாக்கியிருக்க முடியும்.

### 1.9.2. நகரங்களைக் கட்டமைத்திட அடிமையுழைப்பு

காவிரிபூம்பட்டினத்தில் நகர அமைப்பும், குளமும், துறைமுக கட்டடங்களும், கப்பல் தளங்களும் அகழாய்வு செய்யப்பட்டுள்ளன. கி.மு. 250இல் கட்டப்பட்டதாக கணிக்கப்பட்டுள்ளன. இவற்றின் தொழில்நுட்பம் மிகச்சிறந்த ஒன்றாகும். இரண்டாயிரம் ஆண்டுகளை கடந்த நிலையிலும் கடல்நீரின் உவர்ப்புக்கும் ஈடுகொடுத்து கரைந்து அழியாமல் நீடித்து வருகின்றன. இன்றைய செங்கற்களை

விடவும் அளவில் மிகப் பெரியதாக செய்யப்பட்ட சுட்ட செங்கற்களால் கட்டப்பட்டுள்ளன. இங்கு கிடைத்த சமதளமான கூரை ஓடுகள் இன்றுள்ளவற்றைப்போல உட்குழிவானதல்ல. இத்தகைய செங்கற்கள் சங்ககால நகரங்களான கொற்கை, அழகன் குளம், அரிக்கமேடு, உறையூர், கரூர், காஞ்சிபுரம் ஆகிய இடங்களிலும் அகழாய்வின்போது கிடைக்கப்பெற்றன. இவற்றிற்கான இலக்கியப் பதிவுகள் பத்துப்பாட்டு நூல்களான *பட்டினப்பாலை, மதுரை காஞ்சி, நெடுநல்வாடை* ஆகியவற்றிலும் *சிலப்பதிகாரம், மணிமேகலை* முதலான காப்பிய நூல்களிலும் மிகுதியாக காணப்படுகின்றன. நகர அமைப்புகள் சிறந்து விளங்கியதையும், பலவிதமான கோட்டங் களும், மன்றங்களும் நிறைந்து வானளாவிய கட்டடங்களால் சிறந்து விளங்கியதையும் அவை எடுத்தியம்புகின்றன. உயர்ந்த நாகரிகமும், பண்பாடும் நிலவிய தேர்ந்த அரசாட்சியும், உயர்குடியினர் ஆதிக்கமும் மேலோங்கிய சங்கச் சமூகத்தில் அவர்களின் வல்லாதிக்கத்தின் கீழ் அவர்களால் ஏவப்பட்டு, ஆட்டுவிக்கப்பட்டு செய்து முடித்தவர்கள் கடும் உடல் உழைப்பில் ஈடுபட்ட அடிமைகளே ஆவர். இதற்காக இலங்கையிலிருந்து பிடித்து வரப்பட்ட அடிமைகள் பயன்படுத்தப் பட்டனர் என்று கூறி இங்கு அடிமைகள் இல்லை என்று கூறுவது ஏமாற்றுச் சொல்லாகும்.

### 1.9.3. பிற தொழில்நுட்பவியலாரும் அடிமைகளும்

தேர்ந்த தொழில்நுட்பம் நிறைந்த பணிகளில் ஈடுபட்டவர்கள் தன்னிறைவுச் சமுதாயங்களில் அவரவருக்குரிய சிறப்புத் தொழிலில் ஈடுபட்டிருந்தாலும், பெரும்பான்மையானவர்கள் எவ்வித சிறப்பு தொழில்களிலும் ஈடுபடாமல் வேளாண்மையிலும், இத்தகைய கட்டுமானப் பணிகளிலும் ஈடுபடுத்தப்பட்டு கடும் உழைப்பிற் குரியோராக துன்பத்திற்கு ஆளாயினர். குயவன் (*நற்* 293-2) குயவ (*நற்* 200-4) கொல்லன் (*பெரும்*.207, 437, *நற்* 13-5, 125-3, 133-9, 394-4, *அகம்*202-5, 224-2, 49 *புறம்* 21-7, 36-6, 170-15, 180-12, 312-3) கம்மியன் (*நெடு* 57, 85; *நற்* 94-4; 313-2; *புறம்* 353-1, கம்மியர் (*மதுரை* 521; *நற்*153-2) அறுவையர் (*நெடு* 35, *பதி* 34-3) முதலிய தொழில் முறைக்குரியோர் குறிக்கப்பட்டிருந்தாலும் இவர்களை அடிமைகளாக கருத முடியாது. இவர்கள் தன்னிறைவு சமுதாயங்களில் குடியமர்த்தப் பட்டவர்கள் கைவினைச் சங்கங்களை சார்ந்தவர்கள்; மிகுந்த தொழில் திறமையுள்ளவர்கள்; அவ்வாறு தேர்ச்சி பெற்றவர்கள் குறைவாகவே இருந்தனர் என்பதும், அத்தொழில்களை அவர்கள் வழி வருவோரே பயிலும் நிலையை உருவாக்கியதாலும், உற்பத்தி முறைக்கு முதுகெலும்பாய் இருந்தவர்கள் மிகப் பெரும்பான்மையானவர்கள் அடிமைகளே ஆவர்.

**ஏழ் ஊர் பொது வினைக்கு ஓர் ஊர்யாத்த**
**உலை வாங்கு மிதிதோல் போல**

(*குறுந்* 172:5-6) என்ற அடிகள் கைவினைத் தொழில் புரிவோர் மிக குறைவானவர்களே என்பதை புலப்படுத்தும்.

### 1.9.4. தன்னிறைவுச் சமுதாயங்களை பார்ப்பனர்களுக்கு பரிசளித்தல்

இத்தகைய ஏற்பாடுகள் அரசால் மேற்கொள்ளப்பட்டவையே. இவற்றைப் பேணிப் பாதுகாத்திட தகுந்தவர்களாக பார்ப்பனர்கள் முதலியோரிடம் ஒப்படைத்தது. நிலத்தின் மீதும் நீரின் மீதும் அரசு உரிமையுடையதாக விளங்கிய நிலையில் விளைச்சலில் இருந்து வருவாயில் ஆறில் ஒரு பங்கு வரியாக பெற்றனர். இது புரவு, முற்றூட்டு உல்கு என்று இலக்கியங்களில் சுட்டப்படுகின்றன. இதற்கான நீர் நிலைகளை அரசே பராமரித்து பாதுகாத்ததையும் அறியமுடிகின்றது. ''மாரிக் குளத்து காப்பான் அன்ன'' என்ற *ஐங்குறுநூறு* பாடல் வரி இதனை சுட்டுகின்றது. மேலும்

**தூய் அவிழ்பனிமலர் உதிரவீசித்**
**தொழில் மழை பொழிந்தபானாட் கங்குல்**
**எறிநிறைத்திவலை தூஉம் சிறுகோட்டுப்**
**பெருங்குளம் காவலன் போல**
**அருங்கடி அன்னையும் துயில் மறந்தனளே**

(*அகம்* 252) இருள் சூழ்ந்த நள்ளிரவிலும், பனியிலும், மழையிலும், நனைந்த காவலன் ஏரியினை காப்பதுபோல அன்னைத் தன் தூக்கத்தை மறந்தாள் என்று கூறுவதன் மூலம் ஏரியின் காவலன் நிலை கூறப்படுகின்றது. இவற்றை அரசப் பிரதிநிதிகள் நிர்வகித்தனர். பார்ப்பனர்களுக்கு வரியிலியாகவும் நிலம் அளிக்கப்பட்டது. *பதிற்றுப்பத்*தின் இரண்டாம் பத்தின் பதிகம் ''குமட்டூர் கண்ணனார் எனும் புலவர் ஐநூறு ஊர்களை வரியிலியாகப் பெற்றார் என்றும், முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு தென்னாட்டின் ஒரு பகுதியின் வருவாயையும் பெற்றார் என்றும் குறிப்பிடுகிறது. ஐந்தாம் பத்தின் பதிகம் உம்பர் காட்டின் வருவாயை பரணர் பெற்றார் என்று தெரிவிக்கின்றது. அதே ஏழாம்பத்தின் பதிகம் அப்பத்தில் பாடப்பட்டுள்ள வேந்தனால் ஓகந்தூர் என்னும் ஊரின் விளைவை திருமாலின் வழிபாட்டிற்கு அளித்ததாக மேலும் கூறுகின்றது. பெருஞ்சேரல் இரும்பொறை தமது அரண்மனை செல்வம், ஆட்சியதிகாரம் அனைத்தையும் அரிசில் கிழாருக்கு வழங்கினார். அதனை மறுத்து அவருக்கே வழங்கிய புலவர் அமைச்சர் பதவியினை மட்டும் ஏற்றார். மேலும் (*புறம்* 110) புறப்பாடல் ஒன்று பரம்பு மலையைச் சுற்றியிருந்த 300 ஊர்களை தம்மை வேண்டியோருக்கு பாரிவேள் அளித்ததாக குறிப்பிடுகின்றது. இவ்வாறு கட்டி எழுப்பப்பட்ட நாடும் அரசும் அடிமையுழைப்பாலும், உற்பத்தி பெருக்கத்தாலும் நிலைத்த வருவாயைப் பெற்றது.

### 1.9.5. குடிநாட்டமில்லாத கொடிய அரசு

நாளடைவில் ஆட்சியாளர்கள் தமது மக்களிடமிருந்தும் விலகிப் போயினர். தொடர்ந்து நீராதாரங்களைப் பெருக்காமலும், பராமரிக்காமலும் உற்பத்தியில் தேக்கம் ஏற்பட்டது. ஆட்சியாளர்களும், அவர்களின் பிரதிநிதிகளும் குடி நாட்டமின்றி தமது வருவாயைப் பெறுவதில் மட்டுமே கவனமாய் இருந்தனர். இதனால் உற்பத்தியில் தேக்கம் ஏற்பட்டது. கடல் கடந்த வாணிபத்தின் மூலம் பெற்ற செல்வங்களும் இதேவேளையில் கிரேக்கம், எகிப்து, ரோம், பாலஸ்தீனம் போன்ற நாடுகளில் ஏற்பட்ட சமூக நெருக்கடிகளால் வருவது தடைபட்டது. வருவாய் இழந்தனர். இந்நிலையில் தமக்கு தேவையான செல்வத்தை உள்நாட்டிலிருந்தே வரியாகப் பெருவதில் கடுமையாகச் சுரண்டும் வேலையில் இறங்கினர். உற்பத்தி இன்மையும் பஞ்சமும் வாட்டும் வேளையில் வரியைப் பெறுவதிலே கொடுமைகள் செய்து பறிக்கும் பணியிலே ஆட்சியாளர்கள் ஈடுபட்டனர். இதனை

**வேலொடு நின்றான் இடு என்றது போலும்**
**கோலொடு நின்றான் இரவு**

(*குறள்* 552) வழிப்பறிக் கொள்ளையனைவிடவும் கொடியவனாக அரசு வரியினை துன்புறுத்தி பெறுவதாக வள்ளுவர் குறிப்பிடுகின்றார். மேலும்

**கொலை மேற்கொண்டோரிற் கொடிதே அலை மேற்கொண்டு**
**அல்லவை செய்தொழுகும் வேந்து**

(*குறள்* 551) குடிகளைத் துன்புறுத்தும் வேந்தன் கொலைகாரர்களை விடவும் கொடியவன் என்று கடிதுரைக்கின்றார்.

**இறைகடியன் என்றுரைக்கும் இன்னாச்சொல் வேந்தன்**
**உறைகடுகி ஒல்லைக் கெடும்**

(*குறள்* 564) அரசன் கொடியவன் என்று பெயரெடுத்துவிட்ட நாட்டில் மக்கள் அரசனுக்கு எதிராக கிளர்ந்தெழுவர். அது அரசனின் உயிருக்கு கேடாகவும் முடியும் என்று *குறள்* எச்சரிக்கின்றது. மேலும், அவன் அரசனே ஆனாலும், வரம்பற்ற அதிகாரம் கொண்டவனாக தன்னை கூறிக் கொண்டாலும் கூட நடைமுறையில் முறையற்ற செய்கைகளும், குடிகளின் மீது சுமத்தும் தண்டனைகளும் அவனது இரும்பினையொத்த அதிகாரத்தையும் தேய்த்துவிடும் அரமாக ஆகிவிடும் என்று வள்ளுவர் அறிவுரை கூறுகிறார். இதனை,

**கடுமொழியும் கையிகந்த தண்டமும் வேந்தன்**
**அடு முரண் தேய்க்கும் அரம்**

(குறள் 567) என்ற குறளின் கருத்து எடுத்துரைக்கின்றது.

**குடி தழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்**
**அடி தழீஇ நிற்கும் உலகு**

(குறள் 544) குடி நலனில் அக்கறை கொண்ட வேந்தனின் அடிபற்றி நிற்கும் உலகு என்று அறிவுரை கூறுகின்றார். ஆனாலும் நல்லது நடக்க வில்லை. எனவே

**அல்லல் பட்டு ஆற்றாது அழுத கண்ணீரன்றே**
**செல்வத்தை தேய்க்கும் படை**

(குறள் 555) என்று சமூக பிரளயத்தை, சமூக மாற்றத்தை எதிர்நோக்கி உரைக்கின்றார். வள்ளுவருக்கு முன்பே இவ்வாறு ஆட்சியாளர் களுக்கு எடுத்து கூறிய புலவர்கள் உண்டு. வரி வாங்குவதில் நெறிமுறைகளைப் பின்பற்றவேண்டும் என்று பிசிராந்தையார் 'அறிவுடைநம்பி' எனும் பாண்டிய மன்னனுக்கு அறிவுறுத்துகிறார்.

**காய்நெல் லறுத்துக் கவளம் கொளினே**
**மாநிறைவு இல்லதும் பல்நாட்டு ஆகும**
**நூறு செறுஆயினும் தமித்துப்புக்கு உணிணே**
**வாய்புகுவதினினும் கால்பெரிது கெடுக்கும்**
**அறிவுடை வேந்தன் நெறி அறிந்து கொளினே**
**கோடியாத்து நாடு பெரிது நந்தும்**
**மெல்லியன் கிழவனாகி வைகலும்**
**வரிசை அறியாக் கல்லென் சுற்றமொடு**
**பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின்**
**யானை புக்க புலம் போலத்**
**தானும் உண்ணான்; உலகமும் கெடுமே**

(புறம் 184:1-11) மேலும் வெள்ளைக்குடி நாகனார் சோழன் குளமுற்றத்து துஞ்சிய கிள்ளி வளவனிடம் உழவர்கள் அரசனுக்குச் செலுத்த வேண்டிய வரிகளை விளைச்சல் தவறிப் போனதால் வரி நீக்கம் செய்யுமாறு வேண்டுகோள் விடுக்கின்றார். வேளாண்மையே அரசின் வருவாய் ஆதாரமாக விளங்கிய நிலையில் வேளாண்மை சிறக்கும்போதே அரசும் வலிமையுடன் விளங்கும் என்று அரசனும், புலவர்களும் உணர்ந்திருந்தனர்.

**களிற்றுக் கணம் பொருத கண்ணகன் பறந்தலை**
**வருபடை தாங்கிப் பெயர்புறத்து ஆர்த்து**
**பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை**
**ஊன்றுகால் மருங்கின் ஈன்றதன் பயனே**

(*புறம்* 35:23-26) முறை தவறிய வகையில் அரசன் வரி வாங்குவதும், கொலைக்கு அஞ்சாத அரசு அலுவலர்களை ஏவி குடிகளைத் துன்புறுத்தி வரியினை பெறுதலும் அவனது ஆட்சிக்கே கேடு விளைவிக்கும்.

**அலவுற்றுக் குடி கூவ ஆறுஇன்று பொருள் வெஃகி**
**கொலையஞ்சா வினைவரால் கோல் கொடியன் நிழல்**
**உலகு போல் உலறிய உயர்மர வெஞ்சுரம்**

(*கலி* 10:5-7) அவனது கொடிய ஆட்சிக்கு ஒப்பான வெஞ்சுரம் என்று வெஞ்சுரத்தை ஒப்பிடும் உவமையாக கலித்தொகை அரசியலை பேசுகின்றது.

### 1.9.6. அரசு வன்முறையானது

அரசனுக்கு வரி வாங்குதற்கான உரிமையும் தகுதியும் வலிமையும் இருப்பதாலேயே அவன் வன்முறையாளனாக மாறிவிடக்கூடாது. அவன் அவ்வாறு நடந்து கொண்டானெனில் இயற்கை கேடுகளையும் அவனது கொடுங்கோன்மை ஆட்சியால் நேர்ந்தது என்று குடிகள் பழிப்பர் என்று புறப்பாடல் சுட்டுகின்றது.

**மாரி பொய்ப்பினும் வாரிகுன்றினும்**
**இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்**
**காவலர்ப் பழிக்கும் இக்கண்ணகல் ஞாலம்**

(*புறம்* 35) இப்பாடல் பலம் பொருந்திய அரசனை எச்சரிக்கும் விதத்தில் பாடப்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

அதாவது உற்பத்திக்கும், உழைப்புக்கும் எந்தவகையிலும் நேரடி தொடர்பில்லாத ஆட்சியாளர்களும், அவர்களது அதிகாரிகளும் கீழ்வாழ்வாரை துன்புறுத்துவன்மூலம் தனது இருப்புக்கு தானே தீங்கு தேடிக் கொள்கின்றனர். இதனால் அறிவுடைய வேந்தன் குடி நாட்டம் இல்லாதவனாக இருக்க கூடாது என்று போதித்திருக்கின்றனர். ஆட்சியாளர்களுக்கு அளித்த சேவைக்காக இறையிலியாக நிலம் பெற்ற அவர்களது அதிகாரிகள், பார்ப்பனர்கள் முதலானோரின் ஆளுமையின் கீழும் அடிமை கொள்ளப்பட்ட மக்கள் மீண்டும் உரிய நேரத்தில் கிளர்ந்து எழுதலும், அடக்கு முறைக்கு எதிராக வீறு கொண்டு போராடுதலும் ஆங்காங்கே காணப்படுகின்றன. இதற்கு *கலித்தொகை* பாடல்கள் சான்றாக அமைகின்றன.

**பீடிலா அரசன் நாட்டு**
**ஏதிலான் படைபோல இறுத்தந்தது இளவேனில்** (*கலி* 27:7-8)

**பண்புடை நன்னாட்டுப் பகைதலை வந்தென**
**அது கைவிட் டகன்றொரீஇக் காக்கிற்பான் குடைநீழற்**
**பதி படர்ந்து இறை கொள்ளும் குடி போல** (*கலி.*78:4-6)

**நல்லற நெறிநிறீஇ உலகாண்ட அரசன் பின்**
**அல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கல்லா**
**மெல்லியான் பருவம்போல் மயங்கிருள் தலைவர** (*கலி.*129:4-6)

இவ்வாறு *புறநானூறும்*, *கலித்தொகையும்* ஆங்காங்கே நிகழ்ந்த சமுதாய எழுச்சிகளை, ஆட்சியாளர்களுக்கும், உயர்குடியினருக்கும் எதிரான போராட்டங்களை உவமையாகவேனும் பதிவு செய்திருக்கின்றன.

### 1.9.7. அரசு வீழ்ச்சியடைதலும் பல்லவர் வருகையும்

கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு பிறகு மூவேந்தர் அரசுகள் முற்றாக வீழ்ந்தன. இதன் பின்னணியில் நடைபெற்ற வர்க்கப் போராட்டமும் மக்கள் எழுச்சியும் நடைபெற்ற பகுதியை இருண்ட காலம் என்று குறிப்பதும் மூவேந்தராட்சியை பொற்காலம் என்றும் குறிப்பதும் ஒப்புநோக்கத்தக்க ஒன்று. இதனை கலியரசர் காலம், கலியுகம் என்றும் கூறுகின்றனர். இதனை கலிகாலம் என்று பார்ப்பனியம் கூறுகின்றது. மீண்டும் கலியரசர்களால் கைகொள்ளப்பட்ட ஊர்களை கைப்பற்றி பிற்காலப் பாண்டியர்கள் பிராமணர்களுக்கே வழங்கியதை வேள்விக்குடி செப்பேடு உரைக்கின்றது. இதனால் 'கலி' அடக்கப்பட்டுவிட்டதென அவர்கள் மகிழ்ந்திருக்க வேண்டும். எனவே அடிமைகள் இனியும் பொறுக்க முடியாதென தம் மீது நிகழ்த்தப்பட்ட ஒடுக்குமுறைக்கும், சுரண்டல்களுக்கும் எதிராக கிளர்ந்து, உயர்குடியினரின் எல்லா அறநெறிகளையும், சட்ட திட்டங்களையும் தூக்கி எறிந்ததே 'கலி காலம்' என்றும் 'இருண்ட காலம்' என்றும் பொருள் கொள்ளலாம். அப்படியென்றால், வரலாறு திருத்தப்பட வேண்டியுள்ளதல்லவா? மீண்டும் ''கலி'' அடக்கப்பட்டதும், முன்பைக் காட்டிலும் கட்டிறுக்கமானதாக நிலவுடைமைச் சமூகம் பார்ப்பனியக் கொள்கையின் துணையுடன் கட்டமைக்கப்பட்டதும், அடிமை மக்களின் எழுச்சியிலிருந்து பெற்ற அனுபவங்களிலிருந்தே ஆகும். மீண்டும் அவ்வாறு நிகழாவண்ணம் பல்லவர்களால் கட்டிருக்கமான படிநிலைச் சமூகமாக கட்டியமைக்கப் பட்டது.

இவ்வாறு கூறும்போது, ஏற்காதவரே மிகுதி. 'கலியரசர்' என்று கூறுவது வடநாட்டிற்குதான் பொருந்தும் என்பதும், இங்கு வர்க்கமே தோன்றவில்லை என்பதும் சாதிய கட்டமைப்புதான் உள்ளது. அது என்றென்றைக்கும் நிலையானதாக கட்டமைக்கப்பட்டுள்ளது என்பதும், மார்க்சே கூறியபடி இது தனித்தன்மையுள்ளது.

இங்கு ஐரோப்பிய உற்பத்தி முறையிலிருந்து மாறுபட்ட ஆசிய வகை உற்பத்தி முறை நிலவுவதால் இங்கு வர்க்க போராட்டம் கிடையாது. சாதியப் போராட்டம்தான் உண்மையானது; சாதியை ஒழிக்க முடியாது என்பது போன்ற வாதங்கள் முன்வைக்கப்படுகின்றன. விலங்கு பூட்டிய அடிமை (அ) சூட்டுகோல் பொறித்த அடிமைகள் சோழர் காலத்தில் இருந்தனர். அல்லது விஜயநகரப் பேரரசு காலத்தில் இருந்தனர் என்றும் கூறுகின்றனர். ஆனால் சங்க காலத்திலேயே அடிமை உற்பத்தி முறை தோன்றிவிட்டது. புரவு, முற்றூட்டு, உல்கு என்ற வரிகள் பெறப்பட்டு அடிமை சமுதாயத்தின் மீது கட்டமைக்கப்பட்ட அரசு இயங்கியது. அரசின் சேவைக்காக இறையிலியாக நிலங்களைப் பெற்ற (புரவு என்ற இறையிலி; *புறம்* 297-5; 330-6) அமைச்சர்கள் அதிகாரிகள் இருந்தனர். அடிமைகளைத் துன்புறுத்தி உற்பத்தி மேற்கொள்ளப்பட்டது. வரி வாங்கப்பட்டது என்பதை இலக்கிய சான்றுகள் மூலம் அறிய முடிகின்றது. அடியோரும் வினைவலரும், ஆளும், தொழும்பரும் என பலவகையாக குறிப்பிடப்படும் கடைசியராகிய அடிமைகள் நிறைந்த சமூகம் அது. அந்த அடிமைச்சமூகம் வளர்ந்து உச்சநிலையடைந்து களப்பிரர் காலத்தில் இனியும் நீடிக்க முடியாது என்ற நிலையில் வீழ்ந்தது என்பதையும் வரலாறு காட்டுகின்றது. இதுதான் பண்டைத் தமிழ்ச் சமூகம் என்றால், பல்லவர் காலம் தொடங்கி, சோழர் காலத்தில் நில மான்யம் (அ) நிலவுடைமைச் சமூகம் கட்டமைந்தது.

தொடக்கத்தில் வர்க்கம் என்ற சொல் குருதி தொடர்பு உறவுமுறையினை, ஒத்த பண்பு குணஇயல்பு கொண்டவர்களை குறித்த சொல்லாகவே பயன்படுத்தப்பட்டுள்ளது. மானுடவியல் ஆய்வின்படி வர்க்கம், வகையறா, கொடிவழி உறவு, கூம்பு வழி வந்தவர் என்றெல்லாம் குறிப்பிடுவது குருதி கலப்பற்ற வம்சா வழியை குறித்த சொல்லாகும். இலக்கண நூலும் வருக்க எதுகை, வருக்க மோனை என்று குறிப்பிடுவதிலிருந்தும், கணிதத்தில் வர்க்க மூலம் கணக்கும் இவ்வடிப்படையில் அமைந்ததே. அதாவது சமுதாயத்தில் குருதி கலப்பற்ற இனக்குழு வழி வந்தவரை இன்ன வர்க்கத்தைச் சார்ந்தவர் என்று குறிப்பிடுவது முறையாகும். அதன்பிறகு இனக்குழுகுடி சமூகங்கள் அழிக்கப்பட்ட பிறகு, அடிமைகளாக கொள்ளப்பட்டுவிட்டதன் பின்னணியில் வர்க்கம் என்ற சொல் விரிந்த பொருளை தருவதாகிவிட்டது. நாமெல்லாம் அடக்கி ஒடுக்கப்பட்டவர்கள், சுரண்டப்பட்டவர்கள், உழைத்துக் கொடுப்பவர்கள், வஞ்சிக்கப்பட்டவர்கள், துன்பப்படுகின்ற உழைக்கிற ஏழை எளியவர்களாகிய ஒரே வர்க்கம், அடிமை வர்க்கம் என்ற பரந்த பொருளை பெற்றுவிட்டது. தொடக்கத்தில் எப்படி ஒத்த இயல்பும் பண்பு நலனும் கொண்ட இனக்குழு 'வர்க்கம்' என்று குறிப்பிடப்பட்டதோ, அதே மாதிரியான சுரண்டலுக்கு ஆளான, ஏமாற்றி வஞ்சிக்கப்பட்ட, வீழ்த்தப்பட்ட வகையில் ஒத்த உணர்வுடைய பாதிப்புக்களை, கொடுமைகளை அனுபவிக்கும் தன்மையால் உழைக்கும் வர்க்கம்,

அடிமை வர்க்கம் என்று ஒன்று சேர்க்கின்ற தன்மையுடையதாக 'வர்க்கம்' அமைந்துள்ளது.

இவ்வாறு தோற்கடிக்கப்பட்டவர்கள், அடிமைபடுத்தப் பட்டவர்கள் வஞ்சிக்கப்பட்டவர்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து மீண்டும் வலிமை பெற்று எதிர்க்கவோ, புரட்சி செய்யவோ கூடாது என்று முன் எச்சரிக்கை திட்டமாக உயர்குடியினர் சார்பிருந்து பார்ப்பனிய வாதிகளால் கட்டமைக்கப்பட்டது தான் தன்னிறைவுச் சமுதாயம். இது ஏற்கனவே நிலவிய தொல் வடிவங்களிலிருந்து மேலும் திட்டவட்டமாக உருவாக்கப்பட்டது. புதிய சமூகத்தின் உற்பத்தி உறவுகளை கட்டமைக்கும் தொழிற்பிரிவுகளின் இணைப்பாக கிராம அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டன. வேலைப்பிரிவினைகளின் அடிப்படையில் அமைந்திருந்த இக்கிராம அலகுகள் ஒன்றிலிருந்து மற்றொன்று பிரித்து வைக்கப்பட்டு, ஒவ்வொன்றும் தனித்தியங்கக் கூடியதாக தற்சார்பு அமைப்பு களாகவும் அமைந்திருந்தன. இவ்வாறு அடிமையுடைமை பொருளாதாரம் கட்டமைக்கப்பட்டதன் பின்னணியில் அதனை நிலையானதாக மாற்றும் முயற்சியில் பார்ப்பனர்கள் வர்ணம், சாதி ஏற்றத்தாழ்வு கொண்ட படிநிலைச் சமுதாயத்தை தமது வேத வைதீக புராண ஸ்மிருதிகளில் துணை கொண்டு கட்டமைத்தனர். தொழிற் பிரிவுகளின் அடிப்படையில் அமைந்திருந்த சுயதேவை பூர்த்தி கிராமங்களை என்றென்றைக்கும் நிலையானதாக பிறப்பின் அடிப்படையில் தொடரக்கூடியதாக மாறாத்தன்மை கொண்டதாக கற்பித்து கோயிலோடு குடி நிறுவிட அரசர்களுக்கு துணை நின்றனர். இச்சமூக அமைப்பினுள் உபரி உற்பத்தி பண்டமாக பரிவர்த்தனை ஆகவில்லை. ஆளுவோர் குரியதாக அவை களஞ்சியத்தில் குவிந்து கிடந்தது. ஆறிலொரு பங்கு வரியாக திரட்டப்பட்டிருந்தது. மறுபுறம் பசியும் வறுமையும் நோயும் தீராத பஞ்சமும் உழைக்கும் மக்களை வாட்டி வதைத்தன. இவை எல்லாவற்றையும் நியாயப்படுத்தும் வகையில் பார்ப்பனியக் கொள்கை செயல்பட்டது. பௌத்த சமணத் தத்துவங்களும் காலப்போக்கில் வைதீக மயமாக்கத்துக்கு ஆட்பட்டன. அவை வீழ்த்தப்பட்டன.

ஏற்றத்தாழ்வான பார்ப்பனிய, சாதிய சமூகமானது கடவுளின் படைப்பு; அது என்றும் மாறாதது; அழியாதது; பிறப்படிப்படையிலான சாதி பிறப்பினால் தொடரும் என்று கூறப்பட்டது. இந்நிலையில் இடைக்காலத்தில் பார்ப்பனராக பிறந்தவரான இராமானுஜர் கோயிலுடன் தொடர்புடைய அனைத்து சாதிப்பிரிவினைச் சார்ந்தவருக்கும் பூணூல் சார்த்தினார். திருவரங்கம் கோபுரத்தில் ஏறி அனைவருக்கும் 'நற்கதி' அடைய நமோ நாராயணாய' எனும் மந்திரத்தை போதித்தார். அவரது வாழ்க்கை முழுதுமே வர்ணாசிரம, சாதியக் கொடுமைகளுக்கு எதிரான போராட்டங்களை நடத்தினார். இது மனிதனால் உருவானது சாதி. மனிதனால்

மாற்றமுடியும் என்ற புரிதலின் அடிப்படையில் அவர் நடத்திய போராட்டமாகும். மேலும் இந்தியாவில் சாதியானது மாறாத தன்மை கொண்டதாக என்றும் இருந்ததில்லை. புதிய புதிய சாதிகளாக வகை நூறு சாதிகளாக மேலும் மேலும் பிளவுபடுத்துவதும் பொருளாதார அடிப்படையிலும் ஆதிக்கத்தின் அடிப்படை யிலும் கீழிருந்த ஒரு பிரிவினர் ஆட்சியை கைப்பற்றி அதிகார வர்க்கமாக மாறும்போது மேல் நிலை அடைவதும் தொடர்ந்து நடைபெற்று வருகின்றது. மார்க்ஸ் கூறியபடி ''ஆசிய வகை உற்பத்தி முறையில் சாதியானது கீழிருந்து மேலாகவும், மேலிருந்து கீழாகவும் மாறும் தன்மை கொண்டதாகவும், இதன் மூலம் அது இல்லாதொழியும் வகையில் கரைந்தழியாமல் காக்கப்படுவதாகவும் இடைக்காலத்தில் அமைந்திருந்தது. அன்றைய நிலமான்ய சமூகத்தில் நிலவிய உற்பத்தி உறவுகளில் மதிப்புமிக்க இடத்தை சாதிகள் பெற்றிருந்தன. சமூக இயக்கத்திற்கு அவை உயிரோட்டமாக அமைந்திருந்ததும் உண்மையாகும். எனவே அன்று அவை கரைந்தழியாமல் மேல் கீழாக மாறியும் செயல்புரிவதற்கான தேவைகள் இருந்தன. வேலைப்பிரிவினைக்காக ஏற்பட்டத் தொழில் குழுக்களே சாதிகளாக கட்டமைக்கப்பட்டதன் பின்னணியில் அதிகார வர்க்கம் பல ஆயிரமாண்டுகளாக சமூகத்தை அடக்கி ஆளவும், சுரண்டி கொழுக்கவும், சாதியின் பேரால் தனது திட்டங்களை திறம்பட செயல்படுத்திக்கொண்டும் வந்துள்ள நிலையில் இன்று அதற்கான அவசியங்களும் தேவைகளும் மறைந்து இல்லாது ஒழிய வேண்டிய ஒரு சமூகமாக நவீன முதலாளியச் சமூகத்தின் உற்பத்தி உறவுகள் அமைந்துள்ளன. இன்று எளிதில் ஒழிந்துவிடக்கூடிய சாதியை, நவீன சமூகத்தின் ஒட்டுண்ணியாக காணப்படும் சாதியை ஆளும் தரப்பினர் தமது அதிகார, வர்க்க நலன்களால் கட்டிக் காத்துவருவது கண்கூடாகவே தெரிகின்றது.

இங்கு வர்க்கம்தான் முதலில் தோன்றியது. வேலைப் பிரிவினையின் அடிப்படையில் அமைந்த தன்னிறைவுச் சமுதாயம் கட்டிறுக்கமான சாதியச் சமூகமாக கட்டமைக்கப்பட்டபோது இரண்டாவதாக சாதி உருவானது. இவை இரண்டுமே தொடக்கத்தில் இருந்தவை அல்ல. இடையிலே வந்தவைதான். இடையிலே வந்த வர்க்கமும் சாதியும் இடையிலே ஒழிந்துவிடும்.

### 1.9.8. இயல் தொகுப்புரை

தொல்லியல் சான்றுகளின் படியும், மானுடவியலின்படியும் தொன்மங்கள் கற்கால வரலாற்றுடன் பொருந்துகின்றன என்றும், துவக்ககால வளர்ச்சி குறைந்த சமூகத்தை பெரிதென சிறப்பித்துக் காட்டுவதே தொன்மங்களின் இயல்பு என்பதும் விளக்கப்படுகின்றது.

நானிலந்தாங்கிய வேந்தில் வேறுபட்ட உற்பத்தி முறைகள் நிலவினாலும்

அவற்றை ஒருங்கிணைத்து இணக்கமான முறையில் பரந்த அளவிலான வேளாண் உற்பத்தியில் ஈடுபடுத்தியதே 'அரசு' என்பதும், மேற்கத்திய உற்பத்தி உறவுகளைப் போன்று அல்லாமல் மாறுபட்ட உற்பத்தி முறைகளை, திணைச் சமூகத்தின் உற்பத்தி உறவுகளை ஆசிய வகை உற்பத்தி என்றும் விளக்குவதுடன். ஐரோப்பிய அடிமையுடைமை சமூகத்திலிருந்து மாறுபட்ட வர்க்கச் சமூகமாய் விளங்கினாலும் ஏற்றத்தாழ்வு மிக்க படிநிலைச் சமுதாயமாக, தமக்குள் தனித்த இயல்புகளை கொண்ட சமூகமாக விளங்குகின்றது.

பண்டைய தமிழ்ச் சமூகமும் தன்னளவில் மாற்றமுற்று வளர்ச்சியடைந்து அடுத்தக்கட்ட மாற்றத்தை நோக்கி செல்கின்ற இயல்பு கொண்டே விளங்கியது என்பதை இவ்வியல் ஆராய்கின்றது. மேலும் வட இந்தியாவிலும், தென்னகத்திலும் நிலவிய சமூகங்கள் தன்னிறைவுச் சமூகங்களே குறிப்பாக, தமிழகத்திலும் தன்னிறைவுச் சமுதாயங்களுக்கு திணை வாழ்க்கை முறைமை அடிப்படையாக அமைந்திருந்தன. பல்வேறுபட்ட குழு- குடி வாழ்க்கை முறைமைகளை ஒருங்கிணைத்து அரசு உருவானதும் அயல் நாட்டு வணிகம் மற்றும் வட இந்தியத் தொடர்பாலும் அரசு மேலெழுந்து நிலைப்பட்டதும் இவ்வாய்வு நிலை நாட்டுகிறது.

முல்லை நிலத்து சீறூர் தலைவர்களே நாளடைவில் சீறூர் மன்னர்களாக மாறுவதும், நீர் நிலை அருகே, நதிப்படுகைகளில் தண்பணை என்னும் மருத நிலத்தூர்கள் அமைந்திருத்தலையும், இதன் தலைவர்களாக முதுகுடி மன்னர்கள் விளங்கியதையும், மலை சார்ந்த இடங்களில் வேளிர் ஆட்சி நடைபெற்றன என்பதும், விளக்கப்படுவதுடன் வேந்து விடுதொழில் மூலம் நிலக்கொடை பெற்ற வேளாண் குடிகளாக சீறூர் மன்னர் விளங்கினர் என்பதும், இயல்பான வேளாண்குடிகளாக முதுகுடி மன்னர் விளங்கினர் என்பதும் ஆராயப்பட்டுள்ளது.

இதிலிருந்து மாறுபட்டு நன்செய் நில உருவாக்கம், நன் செய் நிலம் கவர்தல் ஆகிய இரு வழிகளில் அரசுருவாக்கம் நிகழ்ந்தது. வேந்தர் தொழில் இதுவென இலக்கண, இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன.

அரசுருவாக்கம் என்பது குடும்பம், மற்றும் தனிச் சொத்துருவாக்கத்தின் அடிப்படையில் நிகழ்வதுதான் என்பதை இங்கு அடிப்படையாகக் கொண்டு ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது.

இனக்குழு - குடி அரசுகளிலிருந்து உருவாவதே அரசு; வேந்தர்கள் இனக்குழு குடி அரசுகளில் இருந்து உதித்தவர்களே, பிற சகோதர குடிகளை அழித்து தமது வேந்தமைப்பை விரிவாக்கியோரே வேந்தர். மூவேந்தர்களாகிய சேர, சோழ பாண்டியர்களும் இனக்குழு - குடி அரசுகளில் இருந்து வந்தவர்களே ஆவர். இதனை,

நில அடிப்படையில் சீறூர் மன்னர், முதுகுடி மன்னர், வேளிர் என்ற வகைப்பாடு இருந்தாலும், மருதம், நெய்தல் ஆகிய இருபகுதிகளையும் தமது கட்டுக்குள் கொண்டு வந்தவர் வேந்தராக உயர்ந்தனர். அதாவது நிலமெங்கும் நன்செய் உற்பத்தி மூலம் செழிக்கவும், நெய்தல் நிலத்தை கைப்பற்றுவதன் மூலம் அயலகத் தொடர்பால் கடல் வாணிபத்தால் செல்வத்தை குப்பையென குவித்திடவும் இயன்றவர்கள் நானிலந்தாங்கிய வேந்தராகினர். இந்நிலையில் வேந்தருக்கு அடுத்த நிலையில் இருந்த வேளிர்களுடன் அவர்களுக்கு மோதல் இருந்து வந்துள்ளதையும். வேந்தருக்கும் வேளிருக்குமிடையிலானப் போரில் இறுதியில் வீழ்த்தப்பட்டு அழிக்கப்பட்டவர்களே அதியர்கள் என்றும் இவ்வாய்வு வெளிப்படுத்துகின்றது.

பார்ப்பனர்களின் தலைமையில் வேந்தர்கள் எழுச்சி பெறுகின்றனர். இதற்காக வேள்வி முதலான செயல்களில் ஈடுபடுகின்றனர். நாடு பிடித்தலும், எல்லை விரிவாக்கமும் நீதியென வேந்தர்களுக்கு உரைத்ததன் வழி புதிய விருப்பங்களின் அடிப்படையில் இவை நடந்தேறுகின்றன. இதனால் பிறச் சமூக அமைப்புகள் சிதைவுற்று அதன் சாம்பலின் மீது கட்டமைக்கப்பட்டதாக மூவேந்தர் ஆட்சி நிகழ்கின்றது. இறுதியில் அயலக வாணிபம் வீழ்ச்சியைச் சந்தித்ததாலும், உள்நாட்டு உற்பத்தியில் ஏற்பட்ட நெருக்கடியாலும், பூசலாலும் வீழ்ச்சியுற்று கலகங்கள் தோன்றிய சமூகமாகக் கி.பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு பிறகு தமிழ்ச்சமூகம் மாறியதும், அதன் பிறகு பல்லவர் அரசு பார்ப்பனியச் சார்புடன் மேலெழுந்தது வரை இவ்வியல் ஆராய்ந்து வெளிப்படுத்துகின்றது.

- - - - -

# சான்றெண் விளக்கம்


1. முனைவர் எஃப். பாக்யமேரி, *வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,* பக்கம் 47, 48, முதற்பதிப்பு 2014, பூவேந்தன் பதிப்பகம், மயிலாப்பூர், சென்னை -4.

2. பார்த்தசாரதி, ஆர்., *சிந்தனைக்களஞ்சியம்,* பக்கம், 41-42, மார்ச் 2010, NCBH, சென்னை-98.

3. சிவத்தம்பி, கா., *தமிழில் இலக்கிய வரலாறு,* பக்கம் 65, 1988, NCBH, சென்னை - 98.

4. சிவசுப்பிரமணியன், ஆ., அகத்தியர் : தமிழ்ச் சமூகத்துக்கான புராண மூதாதை எனும் கட்டுரை, *சமூக விஞ்ஞானம்* காலாண்டு ஆய்விதழ், மலர் 9, இதழ் 33, அக்-நவ-டிச 2001, பக்கம் 8-11 வரை.

5. அருணாசலம், மு., ஜெயக்குமார், பா., *தமிழும் உலகச் செம்மொழிகளும்,* பக்கம் 69-70, முதல் பதிப்பு, 2011, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

6. சிவத்தம்பி, கா., *இலக்கணமும் சமூக உறவுகளும்,* பக்கம் 33, முதல் பதிப்பு 1982, NCBH, சென்னை - 98.

7. நம்பூதிரிபாட், இ.எம்.எஸ்., *இந்திய வரலாறு ஓர் மார்க்சியக் கண்ணோட்டம்,* பக்கம் 103, முதல் பதிப்பு, 1978, சென்னை புக்ஸ்.

8. Champakalakshmi, R., *Trade, Ideology and Urbanisation in South India, 300 B.C. to AD 1300,* Page 16, 1999, Oxford.

9. சிவத்தம்பி, கா., *பண்டைத்தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி,* முதல்பதிப்பு 2010, பக்கம் 25, NCBH, சென்னை - 98.

10. பிரபாத் பட்நாயக், *உலக மயமாக்கலின் சகாப்தத்தில் தேசிய அரசுகள்,* பக்கம் 85-86, 2002. சவுத்விஷன், சென்னை - 5.

11. கார்ல்மார்க்ஸ், *அரசியல் பொருளாதார விமர்சனத்துக்கு ஒரு கருத்துரை,* பக்கம் 10-11, முன்னேற்ற பதிப்பகம், மாஸ்கோ.

12. கணபதி இளங்கோ, பண்டைத் தமிழர் வாழ்வியல், பக்கம், பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

13. பிரபாத் பட்நாயக், *உலக மயமாக்கலின் சகாப்தத்தில் தேசிய அரசுகள்,* பக்கம் 86, 2002, சவுத்விஷன், சென்னை - 5.

14. ஜா, D.N., *பண்டைக்கால இந்தியா,* பக்கம் 23, முதல் பதிப்பு, 2011, பாரதி புத்தகாலயம், சென்னை - 18.

15. குருமூர்த்தி, எஸ்., துக்ளக் இதழில் வெளியான பொருளாதாரத் தொடர், 2004.

16. பிளஹானவ், மார்க்சியத்தின் அடிப்படைப் பிரச்சினைகள், பக்கம் 27, 1985, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ.

17. Irfan Habib, Introduction: Marx's Perception of India, in F. Iqbal Hussian (ed), *Karl Marx on India,* Tulika, Pages 15-16.

18. மாதையன், பெ., *சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,* பக்கம் 7, முதல் பதிப்பு, 2004, NCBH, சென்னை - 98.

19. பூங்குன்றன், ர., தமிழ் பிராமிக் கல்வெட்டுகளும் பண்டையத் தமிழக அரசியலும் எனும் கட்டுரை, *சமூக விஞ்ஞானம்* காலாண்டு ஆய்விதழ், மலர் 6, இதழ் 23.

20. ராஜன், கா., *தொல்லியல் நோக்கில் சங்ககாலம்,* பக்கம் 34, இரண்டாம்பதிப்பு, 2004, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.

21. பூங்குன்றன், ர., சங்க கால வேளிர் அரசியல் என்னும் கட்டுரை, சமூக விஞ்ஞானம், மலர் 12, இதழ் 45, பக்கம் 10, டிசம்பர் 2014.

22. சுப்பிரமணியன், கா., *சங்க காலச் சமுதாயம்,* பக்கம் 49, நான்காம் பதிப்பு, 2011, NCBH, சென்னை - 98.

23. பூங்குன்றன், ர., பண்டைய நகரங்களும் அகழாய்வுகளும், கட்டுரை, சமூக விஞ்ஞானம், மலர் 9, இதழ் 34.

24. சசிகலா, கோ., *தொல்லியல் நோக்கில் பண்டைத் தமிழ் சமூகம்,* பக்கம் 33, 2013, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

25. நெல்லை நெடுமாறன், எஸ்.டி., 'தலை மக்களை குறிக்கும் உரவோன்' கட்டுரை, *சமூக விஞ்ஞானம்* ஆய்விதழ், பக்கம் 57-61, மலர் 12, இதழ் 47, சூன் 2015.

26. திவிஜேந்திர நாராயணன்ஜா, *பண்டைக்கால இந்தியா,* பக்கம் 98, முதல் பதிப்பு, டிசம்பர் 2011, பாரதி புத்தகாலயம், சென்னை - 18.

27. பூங்குன்றன், ர., கருவூர் வேளிர் தலைநகரம், கட்டுரை, *நாவாவின் ஆராய்ச்சி,* இதழ் 1, மலர் 1.

28. மாதையன், பெ., *சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,* பக்கம் 75, இரண்டாம் பதிப்பு 2010, NCBH, சென்னை - 98.

29. திவிஜேந்திர நாராயண்ஜா., பண்டைக்கால இந்தியா, (தமிழில் அசோகன் முத்துசாமி) பக்கம் 116, 2011, பாரதி புத்தகாலயம், சென்னை - 18.

30. மேலது.

31. முத்துவேலு, மு., *இலக்கியங்களில் சட்ட நெறிகள்,* பக்கம் 48, 2008, அருள் பதிப்பகம், முதல் பதிப்பு, சென்னை - 78.

32. ராஜ் கௌதமன், *தமிழ்ச்சமூகத்தில் அறமும் ஆற்றலும்,* 162, முதல் பதிப்பு, 2008, விடியல் பதிப்பகம், கோவை - 15.

33. தேவி பிரசாத் சட்டோபாத்யாயா, *உலகாயதம்,* தமிழில் எஸ். தோதாத்ரி, பக்கம் 216-226, 2010, NCBH, சென்னை - 98.

- - - - -

## 2.1.0 இயல் முன்னுரை

உற்பத்தி சக்திகள் உற்பத்தி உறவுகள் ஆகியவற்றை அறிந்து விளக்குவதன் மூலம் ஒரு சமூகத்தில் நிலவும் உற்பத்தி முறையினை தெரிந்துகொள்ள முடியும். உற்பத்தி சக்திகள், சங்ககால உற்பத்தி உறவுகள் ஆகியவற்றை அறிந்து விளக்குவதன் மூலம் சங்ககால சமுதாயத்தில் நிலவிய உற்பத்தி முறைமை யாது? அது உருவான விதம் வளர்ச்சி, வீழ்ச்சி ஆகியவற்றையும் இதற்கான உற்பத்தி கருவிகள் உற்பத்தியான பொருட்கள் ஆகியவற்றைக் கொண்டு உற்பத்தியில் ஈடுபட்டோர். ஈடுபடுத்தியோரையும், அவை பரிவர்த்தனை ஆகிய விதம் ஆகியவை பற்றியும் ஆராய முடியும்.

## 2.1.1. உற்பத்திச் சக்திகள்

சமூக வாழ்வின் அடிப்படை பொருளுற்பத்தி முறையில் அடங்கியிருக்கிறது. இந்த பொருள் உற்பத்தி முறை என்பது உற்பத்தி சக்திகள் உற்பத்தி உறவுகள் ஆகிய இவ்விரண்டையும் உட்கொண்டுள்ளது.

உற்பத்தி அனுபவமும் திறமையும் கொண்ட மக்களின் உழைப்பு சக்தியும் உற்பத்தி கருவிகளும் சேர்ந்து உற்பத்தி சக்திகள் (Productive forces) என அழைக்கப்படுகின்றன. மக்கள் தான் சமூகத்தின் முதன்மையான உற்பத்தி சக்தியாகும் உற்பத்தி சக்திகள் எப்போதும் சமூகத் தன்மை கொண்டவையாக இருக்கின்றது.

## 2.1.2. உற்பத்தி உறவுகள்

உற்பத்தி நடைபெறும் போது மனிதர்கள் இயற்கையின் மீது செயல்பட்டு அதனை மாற்றியமைப்பதுடன் தமக்குள்ளும் ஒருவரோடொருவர் இணைந்து செயல்படுகின்றனர். சமூகமாக இருந்து கூட்டாக உற்பத்தியில் ஈடுபடுகின்றனர். ஒரு குறிப்பிட்ட நிலைமையில் உற்பத்தி நிகழும் பொருட்டு மனிதர்கள் இணைந்து உற்பத்தியில் ஈடுபடும்போது ஏற்படும் உறவே உற்பத்தி உறவு எனப்படுகிறது.

இதனை வேறு வகையில் குறிப்பிடுவதெனில் தனக்கு தேவையான பொருட்களை ஒவ்வொருமனிதனும் தானே தோற்றுவித்துக் கொள்ள முடியாது. தான்

உற்பத்தி செய்ததை பிறருக்கு கொடுத்தும், ஆனால் தன்னால் உருவாக்கப்படாத தனக்குத் தேவைப்படுகிற பிற பொருள்களை மற்றவரிடம் இருந்தும் பெறவேண்டியிருக்கின்றது. இந்தச் செயற்பாடுகள் மனிதர்களிடையே குறிப்பிட்ட சமூக பிணைப்புகளை உருவாக்குகிறது. இந்த பிணைப்புகள் புற நிலையானவை; அதாவது மனிதனின் உணர்வு நிலை சாராமல் இருப்பவையாகும்.

உற்பத்தி நிகழும் போது ஏற்படும் அனைத்து உறவுகளும் உற்பத்தி உறவுகள் ஆகாது. இதில் அடங்கியுள்ள பொருளாதார அடிப்படையில் அமைந்துள்ள உறவுகளே உற்பத்தி உறவுகள் எனப்படுகின்றது. குறிப்பாகச் சொன்னால் உற்பத்தி, வினியோகம், பரிவர்த்தனை மற்றும் நுகர்வு ஆகியவற்றின் போது ஏற்படும் நிகழ்வுப் போக்கின் தொடர்பே உற்பத்தி உறவுகள் எனப்படும்.

### 2.1.3.சமூக அமைப்பு பற்றிய வரையறை

உற்பத்தி கருவிகள் யாருக்கு உடைமையாக இருக்கின்றன என்பதே உற்பத்தி உறவுகளை முடிவு செய்கின்றன. இது உற்பத்தி கருவிகள் தனியாருக்கு சொந்தமாக இருந்தால் உற்பத்தி பொருட்கள் தனி நபருக்கே சொந்தமாகிவிடுகின்றன. எனவே உற்பத்தி பொருட்களின் விநியோகமும் நுகர்வும் கூட தனிச் சொத்தின் அடிப்படையில் சுரண்டல் கூட்டத்தின் நலன்களுக்கு ஏற்பவே நடைபெறுகின்றன. அத்தகைய சமூகம் தனியுடைமை அடிப்படையிலான சுரண்டல் சமூகமாவே விளங்குகின்றது. அங்கு ஆதிக்கம் மேலோங்கி கீழ்படிதலும் ஒடுக்குமுறையும் நிலவும் சமூகமாகவே அது அமைந்துள்ளது.

### 2.1.4.சமூக அடித்தளமும் மேற்கட்டமைப்பும்

***“உற்பத்தி முறைமை என்பது மூன்று அங்கங்களைக் கொண்ட ஓர் அமைப்பு ஆகும்.***

***(அ) பொருளாதார அடித்தளம்***

***(ஆ) சட்டவியல் - அரசியலமைப்பு***

***(இ) கருத்துநிலை மேற்கட்டுமானம்***

***வரலாற்று முறைப்படி நோக்கும்போது இரண்டாவது முதலாவதினடியாகவும், மூன்றாவது இரண்டாவதினடியாகவும் தோன்றும். வளர்ச்சியுற்ற நிலையில் அல்லது ஸ்திரமான நிலைப்பாடு காணப்படும் பொழுது இவை ஒன்றுடன் ஒன்று இணைந்தே நிற்கும். மானிடவியலாராய்ச்சிகள்***

***இவ்வுண்மைகளை நிலைநிறுத்தியுள்ளன. (ஆ) (இ) ஆகிய இரண்டிற்கும் (அ) வே அடிப்படையானதாகும். அதில் மாற்றம் ஏற்படும் பொழுது. மற்றையவற்றிலும் மற்றங்கள் தென்படத் தொடங்குகின்றன. பொருளாதார அடித்தளம் இரண்டு அமிசங்களை இணைத்து நிற்கும்.***

***(அ) உற்பத்தி சக்திகள்( மூலப் பொருள்கள், கருவிகள் இயந்திரங்கள் முதலியன)***

***(ஆ) உற்பத்தி நிலை நின்ற உறவுகள் (உற்பத்தியாளர்கள் தத்தம் தொழிலினைச் (கடமையினை) செய்யும் போது ஏற்படும், ஏற்படுத்திக் கொள்ளும் உறவுகள்)***

***முதலாவது மனிதன் இயற்கை வளத்தைத் தனதாக்கிக் கொள்ளும் முயற்சிக்கான தொழில், தொழில் நுட்ப ஆற்றல்கள் பற்றியனவாகும். இரண்டாவது அவற்றின் அடியாகத் தோன்றும் சமூக உறவுகள் பற்றியதாகும். இவை இரண்டும் தனித்தனியே நிற்பனவல்ல ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள் போன்றவை ஒன்றில்லாது மற்றது வழங்காது; தொழிற்படாது. உற்பத்தி முறைமை என்பது இவற்றின் கூட்டு மொத்தமான பரிணமிப்பேயாகும்.[1]***

உற்பத்தி முறைமையில் பேசப்பட்டுள்ள உற்பத்தி உறவுகள், குறித்த சமுதாயத்தின் அல்லது குழுவின் சமூக அமைப்பைத் தீர்மானிக்கும். இதே உண்மையை இன்னொரு வகையிலும் கூறலாம். குழுவின் அல்லது சமூகத்தின் அமைப்பு மூலம் இவ்வுற்பத்தி முறைகள் பரிணமிக்கும். அக்குழுவினரிடையே நிலவும் சட்டங்கள் (அவை எழுதப்பட்டவையாகவோ, எழுதாக்கிளவியாகவோ இருக்கலாம்) இவ்வுறவுகளை நெறிபடுத்தும். அங்கு தோன்றும் ஆட்சியமைப்பும் அதிகார அமைப்பும் அந்த அடிப்படை உறவுகள் பேணப்படுவதை நிலை நிறுத்தும். அன்றேல் அவற்றை நிலை நிறுத்துவதற்கான வகையில் ஆட்சியமைப்புக்கும் அச்சாணியாக அமையும் இவ்வுற்பத்திவுறவுகள் இறுதியில் சமூக கொள்கைகளாக, நடைமுறைகளாக பண்புகளாகக் கருத்து நிலை உருவம் பெறும். அதாவது அவை பேணப்படவேண்டிய அல்லது ஒதுக்கப்பட்ட வேண்டிய அற அல்லது மறக் கோட்பாடுகளாக, அழகான அல்லது அழகற்ற விடயங்களாக நல்லவை அல்லது கெட்டவையாக எடுத்தோதப்பெறும். இக்கருத்து நிலை மேற்கட்டுமானம், கடமைகள், உரிமைகள் பற்றிய ஒழுக்கம் பற்றிய, தத்துவம் பற்றிய சிந்தனை பற்றிய பரிணமிப்பாக விளங்கும்.

ஆகவே அடித்தளத்திற்கும் மேற்கட்டமைப்பிற்கும் இடையில் ஒன்றுடனொன்றான தொடர்பு நிலவுகிறது. இந்தத் தொடர்பில் அடித்தளம் முதன்மையாகவும் மேற் கட்டமைப்பை தோற்றுவிக்கும் காரணியாகவும் இருக்கிறது. எனவே சமூகத்தின் அடித்தளத்திற்கு ஒத்த மேல்கட்டமைப்பு உருவாகிறது. ''உருவாகும்'' என்பதை அடித்தளத்திற்கு ஏற்ப மேற்கட்டமைப்பு தானாகவே ஏற்பட்டு விடும், என்று விளக்கப்படுத்திக் கொள்ளக்கூடாது. அடித்தளம் மேற்கட்டமைப்பை தீர்மானிக்கிறது. நிர்ணயிக்கிறது என்று தான் மார்க்சியம் கூறுகிறது.

### 2.2.0 உற்பத்தி அடிப்படையில் காலப்பகுப்பு முறை

ஆதி பொதுவுடைமைச் சமூகத்தில் அல்லது தொல்பழங்கால கூட்டு வாழ் சமூகத்தின் வீழ்ச்சியிலிருந்து அடிமை சமூக உற்பத்தி முறை தோன்றியது. மனித சமூக வரலாற்றில் அடிமைச் சமூகம் சுரண்டலின் தொடக்கமாகவும், அதனுடைய வெளிப்படையான தன்மையிலும் தோன்றியது.

தொல் பழங்கால கூட்டு வாழ் சமூகத்தில் உற்பத்திக் கருவிகள் கற்களால் உருவாக்கப்பட்டிருந்தன. மேலும் மரத்தாலான. மூங்கில் கழிகளால் ஆன வில், அம்பு, ஈட்டி முதலானவையும் பயன்படுத்தப்பட்டன. ஆனால், அடிமைச் சமூகத்தில் இரும்பு கண்டு பிடிக்கப்பட்டுவிட்டது. இதை உருக்கும் முறையும் ஓரளவிற்கு அறிந்திருந்தனர். இரும்பாலான கருவிகள் பயன்படுத்தப்பட்டன. மனித உழைப்பின் ஆற்றல் பெருகியது. மேம்பட்டது. இரும்பு கோடரியும் கலப்பையின் கொழுவும் உளியும் இரும்பால் அமைந்த போது நிலம் முழுமையாக உழுது பண்படுத்தப்பட்டு பயன்பாட்டிற்கு வந்தது. பயிரிடப்பட்டது. உபரி உற்பத்தி மிகுந்து அது நாகரிக சமுதாயத்தை உருவாக்கியது. உலகம் முழுதும் உலோக காலம் (இரும்புக் காலம்) என அறியப்படும் காலம் அடிமையுழைப்பைக் கொண்ட காலமாகவே அறியப்படுகின்றது. பண்டைத் தமிழகத்தில் சங்க கால சமுதாயமும் இரும்புக் காலம் என்றும் நாகரிக சமூகம் என்றும், பெருங்கற்காலம் என்றும் குறிப்பிடப் படுகின்றது. சங்ககால உற்பத்தி முறையை ஆராயுமுன்பு அதற்கு முந்தைய தொல்பழங்கால உற்பத்தி முறை (அ) வாழ்க்கை முறையை அறிய வேண்டியுள்ளது.

### 2.2.1 வரலாற்றுக்கு முந்தைய காலம்

எழுத்துச் சான்றுகள் தோன்றுவதற்கு முந்தைய காலத்தை வரலாற்றுக்கு முந்தைய காலம் எனவும் எழுத்து வடிவம் தோன்றிய பிறகு அதனை அடிப்படைச் சான்றாகக் கொண்டு விளக்கும் காலத்தை வரலாற்றுக் காலம் எனவும் பொதுவாக வரலாற்றாசிரியர்கள் பிரிக்கின்றனர். தெளிவான இந்த வரையறுப்பின் படி நோக்கும் போது எழுத்துச் சான்றுகள் நிலவும் காலம் நாகரிகமடைந்த உற்பத்தி

முறைமைகளிலும் நுட்பங்களிலும் மேம்பாடடைந்த சமூகத்தைப் பற்றியது என்பது உய்த்துணர முடிகின்றது. இவற்றை அறிய இலக்கிய இலக்கண நூல்களிலிருந்தும் சான்றுகளைக் காணமுடிகின்றது.

ஆனால், வரலாற்றுக்கு முந்தைய காலத்தைப் பற்றி அறிய அக்காலத்தில் நிலவிய உற்பத்தி முறைகள் உற்பத்திக் கருவிகள் ஆகியனவற்றை அடிப்படையாகக் கொண்டு கணிக்க முடிகின்றது. இதற்கு தொல்லியல் சான்றுகளின் மூலம் அகழ்வாய்வின் மூலம் பெறப்பட்ட கருவிகளின் அடிப்படையிலும் வரலாற்று ஆசிரியர்கள் நிறுவியுள்ளனர்.

### 2.2.2 வரலாற்றுக்கு முந்தைய காலப்பகுப்பு முறை

வரலாற்றுக்கு முந்தைய காலத்தைப் பற்றி அறிய அக்காலத்தைச் சார்ந்த மக்கள் பயன்படுத்திய தொழிற்கருவிகள் அல்லது உற்பத்திக் கருவிகளைக் கொண்டு வகைப்படுத்தியுள்ளனர். தொடக்கத்தில் மனிதன் நாடோடியாகவும் கரடு முரடான கற்கருவிகளை கைகொண்டு வாழ்ந்தான். இக்கற்கருவிகளைப் பயன்படுத்தி வேட்டையாடவும், உணவுப் பொருட்களை திரட்டியும் கொடிய விலங்குகளிடமிருந்து தற்காத்துக் கொள்ளவும் பயன் படுத்தினான். நிலத்துக்கடியில் கிழங்கு வேர்கள் முதலானவற்றைத் தோண்டவும் நிலத்தடியில் வாழும் உயிரினங்களைப் பிடிப்பதற்காக மண்ணை அகழவும் அவற்றைப் பயன்படுத்தினான். அவன் நெருப்பினை உண்டாக்கி இறைச்சியை சுடுவதற்கும் தனது இருப்பிடங்களின் அருகே தீ மூட்டி கொடிய விலங்குகளை அண்டவிடாமல் பாதுகாத்துக் கொள்ளவும் கூட கற்களைப் பயன்படுத்தினான். தொடக்கத்தில் வாழ்ந்த தொல்பழங்கால மனிதர்கள் பயன் படுத்திய கற்கருவிகளைக் கொண்டு அதன் வடிவத்திலும் உருவாக்கிய நுட்பங்களிலும் உள்ள வேறுபாடுகளை ஆராய்ந்நது தொல் பொருள் ஆய்வாளர்கள் இதனை கற்காலம் என்று கூறுவதுடன் அதனை பலவாறு காலப் பகுப்பு செய்துள்ளனர். கருவிகளில் தொழில் நுட்ப அடிப்படையில் அவர்கள் செய்துள்ள காலப் பகுப்பு பின் வருமாறு செய்துள்ளனர்.

**1. பழைய கற்காலம்**

**2. நுண் கற்காலம்**

**3.புதிய கற்காலம்**

**4. பெருங் கற்காலம்**

தமிழ்நாட்டில் பழைய கற்காலம் என்ற காலப்பகுப்பு தொடங்கி அனைத்து காலப் பகுதிகளுக்குமான சான்றுகள் கிடைத்துள்ளன. இத்தகைய நான்கு காலப்

பகுப்புகளில் நிலவிய சமூக அமைப்புகள் படிப்படியாக தன்மையிலும் குணத்திலும் முன்னேறி வளர்ந்தன. அநாகரிக நிலையிலிருந்த காட்டுமிராண்டி சமூகம் பெண்ணால் தலைமை தாங்கப்பட்டு வழி நடத்தப்பட்ட தாய்வழிச் சமூகம் ஆகும். பெண்கள் தமது குழுவைப் பாதுகாத்து வளர்ப்பதில் முதன்மை பங்காற்றினர். நெருப்பின் பயன் அறியாதவராகவும் மரவுறி தரித்தும் வாழ்ந்தனர். நுண்கற்காலத்தில் நெருப்பின் பயனை அறிந்திருந்ததுடன் ஆண்கள் வேட்டையாடுதல் உணவு திரட்டுதல் மீன் பிடித்தல் ஆகியவற்றை மேற்கொண்டனர். நாளடைவில் காட்டு விலங்குகளைப் பழக்கி தம்முடன் வளர்க்கவும் தனக்கு உறுதுணையாக வேட்டைக்கு பயன்படுத்தவும் செய்தனர். நாய் இத்தகைய விலங்கு ஆகும். புதியகற்காலத்தில் கால்நடைகளை வளர்த்தல் ஏற்பட்டுவிட்டது. தாயின் தலைமைப் பாத்திரம் மறைந்து ஆண் தலைமையேற்றக் கால கட்டமாகும். அப்போது அவன் வேட்டையாடுவதிலிருந்து முன்னேறி தன்னுடனே ஆடு, மாடு, எருமை, நாய், பூனை, கோழி, பன்றி, புள்ளி மான் ஆகியவற்றை யெல்லாம் வளர்க்கத் தொடங்கினான். பெண்ணிடமிருந்து ஆதி வேளாண்மையினையும் கற்றுக் கொண்டு அவன் முன்னேறினான். குடும்பத்தைப் பாதுகாத்து வளர்க்கும் பொறுப்பு பெண்ணைச் சார்ந்ததாக அமைந்தது. முதலில் தனது கூட்டத்தைப் பாதுகாத்திட தலைமை தாங்கியவள் பெண் தான். அதன் பிறகு தந்தைவழிச் சமூகத்தில் குடும்பத்தை பாதுகாத்து வளர்த்தெடுத்ததும் பெண்தான் என்ற நிலை ஏற்பட்டது.

**2.2.3 பழைய கற்காலம்**

இம்மாற்றங்கள் மிக நீண்ட நெடிய காலப்பகுப்பிற்குள் நடந்தேறியது. பொதுவாக வேட்டைச் சமூகத்திலிருந்து ஆதி வேளாண்மையும், கால் நடை வளர்ப்பும் கொண்ட, இவற்றை உற்பத்தி முறையாகவும் தொழிலாகவும் கொண்டிருந்த சமூக அமைப்பு உருவாதல் 2,50,000 ஆண்டுகள் இடைவெளியில் நடந்தேறின.

முதலில் உருவான பழைய கற்காலக் கருவிகளை அவற்றின் தொழில் நுட்பங்களைக் கொண்டு மூன்று வகையாகப் பகுப்பர்.

**1. முதற் கற்காலம்**

**2.இடைக் கற்காலம்**

**3.கடைக்கற்காலம்.**

இந்திய தொல்லியல் வரலாற்றின் தந்தை என்று போற்றப்படும் **ராபர்ட் புரூஸ்புட்** அவர்கள் 1863ம் ஆண்டு மே மாதத்தில் சென்னைக்கு அருகில்

பல்லாவரத்தில் பழையக் கற்காலக் கருவிகளைக் கண்டு பிடித்தார். இதனைத் தொடர்ந்து **வில்லியம் கிங்** என்பவரும் உடன் இணைய கொற்றலையாற்றுப் பள்ளத்தாக்கு பகுதியில் பழைய கற்கருவிகள் கிடைக்கும் பல இடங்களை ஆய்வு செய்தனர். மீண்டும் 1936 ஆம் ஆண்டில் புதிய விழிப்புணர்வு ஏற்பட்டு **காமிவே, பர்கிட், வி.டி. கிருஷ்ணசாமி டி.டி பேட்டர்சன்** மற்றும் **கே.வி. சௌந்திரராசன்** போன்ற அறிஞர்கள் இப்பகுதியை மீண்டும் ஆய்வு செய்து புதிய செய்திகளை வெளியிட்டனர். இங்கு நான்கு படிவு படுகைகள் உள்ளன என்றும், வட மதுரையில் கூழாங்கல் திரளை அடுக்கின் பகுதி ஒன்று காணப்படுகின்றது என்றும் கண்டறிந்தனர். இவர்கள் இப்பகுதியின் பழைய கற்காலப் பண்பாட்டைச் சென்னை கைக் கோடரி மரபு என்று சிறப்பாக அழைத்தனர். இது வடமேற்கு இந்தியாவில் உள்ள சோவான் மரபிலிருந்து வேறுபட்டதாக கண்டறியப்பட்டது.

### 2.2.4.கொற்றலையாற்றுப் படுகைகளில் பழைய கற்காலக் கருவிகள்

கொற்றலையாற்றுப் பள்ளத்தாக்கில் அல்லிக்குழி மழைக்குன்றுகளிலிருந்து காரனோடைக்கு அருகில் உள்ள எருமைவெட்டி பாளையம் வரை ஆங்காங்கே சில ஆற்றுப் படுகைகள் காணப்படுகின்றன. இப்படுகைகள் 'பிளைஸ்டோசீன் காலத்தில் தோன்றியவை. இவற்றின் படிவடுக்குகளில் பழைய கற்காலக் கருவிகள் பல காணக்கிடைக்கின்றன.

**வி.டி. கிருஷ்ணசாமி டி.டி. பேட்டர்சன்** ஆகியோர் கொற்றலையாற்றுப் பள்ளத்தாக்கில் 100 அடி, 60 அடி, 20 அடி, 8 அடி, உயரங்களில் நான்கு படுகைகள் காணப்படுவதாக ஆய்வு செய்து கூறியுள்ளனர். ஆனால் எச்.டி. சங்காலியா 60 அடி, 20அடி, 8 அடி உயரங்களில் மூன்று படுகைகள்தான் உள்ளதாக குறிப்பிடுகின்றார். ஆனால் இவை எதுவும் ஏற்கத்தக்கதாக இல்லை எனவும் நில ஆக்க இயல் வழி முறைகளைப் பின்பற்றி இப்பகுதியினை ஏழு வட்டாரங்களாக பிரித்து அதில் காணப்படும் படுகைகளின் படிவடுக்குகளை ஆராய்ந்து அங்கு கிடைத்த கற்கருவிகளை ஒப்பிட்டு அவையாவும் பிளைஸ்டோசீன் காலம் முதல் ஹாலோசீன் காலம் வரையில் சிறிது சிறிதாக ஏற்பட்டவை எனவும் கருதுகின்றார்.

இப்பகுதியில் பல்வேறு இடங்களில் அகழ்வாய்வு மேற் கொள்ளப்பட்டன. 1.பூண்டி, 2. நெய்வேலி 3.வட மதுரை, 4. குடியம் 5. அத்திரப்பாக்கம் முதலிய இடங்கள் அவையாகும்.

1. பூண்டி: இங்கு பழைய கற்காலத்தின் இடைக்கால கருவிகளும் கிடைத்தன. (1965-66)

2. நெய்வேலி: (1962-63)(1963-64) இங்கு அசூலியன் காலக்கட்டத்தைச் சார்ந்த நீண்ட கத்திகளும், கைக் கோடரிகளும், வெட்டுக் கத்திகளும் கூர்முனைக் கருவிகளும் கிடைத்தன.

3. வடமதுரை: (1966-67) ஆரணியாற்றின் கிழக்கு கரையில் 100 அடி உயரம் உள்ள படுகையில் கைக் கோடரி வகைகள் கிடைத்தன. இவை பிரஞ்சு நாட்டின் 'அபவில்லி' இடத்தில் கிடைத்த கைக் கோடரிகளுடன் ஒத்துள்ளதால் இவற்றை அபவில்லியன் மரபினைச் சார்ந்தது' என கருதுகின்றனர். இங்கு கைக்கோடரிகளுடன் கிழிப்பான்களும், சில்லுக் கருவிகளும் கிடைத்தன.

4. குடியம்: 1962, 63, 64,) பூண்டிக்கு அருகே உள்ள இவ்விடத்தில் கிடைத்த கற்கருவிகள் தொழில் நுட்பத்தில் நேர்த்தியானதாகவும், உயர்ந்ததாகவும் வளந்த நிலையிலும் காணப்படுகின்றது. கோடரிகள் கிழிப்பான்கள், வெட்டிகள் சுரண்டிகள் காணப்படுகின்றன.

5. அத்திரப்பாக்கம்: இங்கு பிளைஸ்டீன் அசூலியன் ஆகிய இரண்டு காலத்து கருவிகளும் கிடைத்தன. அசூலியன் மரபினைச் சார்ந்த கருவிகள் சிறந்த முறையில் உருவாக்கப்பட்டுள்ளன.

***அத்திரப் பாக்கம் அகழாய்வின் மூலம் பழைய கற்காலத்தின் காலம் கீழ்கண்டவாறு கணிக்கப்படுகிறது.***

***1. முதல் கற்காலம் - 5,00,000-2,50,000 ஆண்டுகளுக்கு முன்***

***2. இடைக்காலம் - 2,50,000-30,000 ஆண்டுகளுக்கு முன்***

***3. கடைக்கற்காலம்- 30,000-10,000 ஆண்டுகளுக்கு முன் என்று காலக் கணிப்பு செய்யப்பட்டுள்ளது.***[2]

**கற்கருவிகளின் வகைகள்:-**

**1. கைக் கோடரிகள்**

**2. இதிய வடிவிலான கைக் கோரிகள்**

**3. முன்கோண வடிவ கைக்கோடரி**

**4. வெட்டுகத்திகள்**

**5. சுரண்டிகள்**

**6. சிறிய வெட்டுகத்திகள்**

**7. கூர்முனைக் கருவிகள்**

**8. வட்டுகள்**

**9. மரம் இழைக்கும் உளி**

மேற்கண்ட கருவிகளைப் பயன்படுத்திக் கொண்டு வேட்டையாடுபவர்களாகவும் நாடோடிகளாகவும் வாழ்ந்தனர். இவர்கள் கற்களையும் உறுதியான மரக்கிளைகளையும் ஆயுதமாகப் பயன்படுத்தினர். நெருப்பின் பயனை பழைய கற்கால மக்கள் அறிந்திருக்க வில்லை. மரப்பட்டைகளையும் விலங்குகளின் தோலையும் ஆடைகளாகப் பயன்படுத்தினர். இறந்த உடல்களை தானே அழியும் வண்ணம் அப்படியே விட்டு விட்டுவிட்டனர்.

### 2.2.5 நுண் கற்காலக் கருவிகள் (கி.மு 10,000 முதல் கி.மு. 4000 வரை)

இக்காலக் கருவிகள் யாவும் உருவத்தில் சிறியவையாகவும், நுட்பமானதாகவும் அமைந்துள்ளன. வட்டுகள், சிறு கத்திகள், சுரண்டிகள், பிறைகள், அம்பு முனைகள் மற்றும் அரை வட்ட வடிவிலான தூண்டில்கள் ஆகியனவும் இவற்றுள் அடங்கும் இக்கருவிகளை மரப்பிடிகளில் பொருத்தி நீண்ட கத்திகளாகவும் அரிவாள்களாகவும் ரம்பங்களாகவும் பயன்படுத்த தெரிந்தவர்களாக இக்கால மக்கள் இருந்தனர். நுண்கற்கால கருவிகள் மணல் தேரிகளிலேயே காணப்படுகின்றன. மேலும் நெருப்பின் பயனையும் இம்மக்கள் அறிந்திருந்ததுடன், மீன் பிடிக்கவும் தெரிந்திருந்தனர். பெருமளவில் உணவு திரட்டியதும் இவர்களது சிறப்பம்சங்களாகும். கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள முட்டம் கடற்கரைப் பகுதியிலும் நெல்லை, தூத்துகுடி மாவட்டங்களில் உள்ள செம்மண் தேரிகளிலும், மதுரை, தேனி, விருது நகர் மாவட்டங்களில் பாயும் காட்டாறுகளின் ஆற்றுப் படுகைகளிலும் இத்தகைய நுண்கற்காலக் கருவிகள் கிடைக்கின்றன. தருமபுரி தகடூர் பகுதியில் வத்தல் மலை, தைல மலை, தொகரப்பள்ளி, முள்ளிக்காடு, மயிலாடும் பாறை முதலிய இடங்களில் நடைபெற்ற அகழாய்வில் நுண்கற்கால கருவிகள் கிடைத்துள்ளன.

### 2.2.6 புதிய கற்கால கருவிகள் கி.மு. 4000 முதல் கி.மு.1000 வரை

நன்கு தேய்த்து வழ வழப்பாக்கி மெருகேற்றிய கற்கருவிகளைப் பயன்படுத்தியக் காலம் புதிய கற்காலம் எனப்படுகின்றது. மேலும் மண்பாண்டங்களையும் உருவாக்கினர். முதலில் கைகளாலே வனையப்பட்ட காலம் முதல் கட்டமாகும். இரண்டாவது கட்டத்தில் சக்கரத்தின் துணை கொண்டு மட்கலங்களையும் வனையக் கற்றிருந்தனர்.

முதற்கால கட்டத்தில் வெளிர்சாம்பல் நிற மட்கலன்களும், எலும்புகளால் ஆன கருவிகளும், கற் கோடரிகளும், சிறு கற்கருவிகளும், அம்மிக் கற்களும், குழவிகளும், திரிகைக் கற்களும் கிடைத்தன.

இரண்டாவது கட்டத்தில் சாம்பல் நிற மட்கலன்களுடன் சிவப்பு நிற மட்கலன்களையும் பயன்படுத்தினா். இவை கைகளால் செய்யப்பட்டும் சக்கரங்களால் வனையப்பட்டும் காணப்படுகின்றன. குறுகிய மூக்குடைய கிண்ணங்களைப் பயன்படுத்தியுள்ளனா். இருபக்க கற்கோடரிகள் பயன்படுத்தியுள்ளனா். மல்லப்பாடி அகழ் வாய்வில் புதிய கற்கால கருவிகளும் கையால் வனையப்பட்ட சாம்பல் நிற மட்கலன்களும் கண்டு பிடிக்கப்பட்டது.

இதனால் தமக்கென குடியிருப்பு பகுதிகளை ஏற்படுத்தி நிலையாக வாழ ஆரம்பித்தனா் இவா்கள் குழி வீடுகளிலும் வட்டம், நீள் வட்டமான புல் வேய்ந்த கூரை வீடுகளிலும் வசித்தனா். முதன் முதலில் விவசாயத்தில் ஈடுபட்டவா்களும் இவா்களே ஆவா். பையம் பள்ளி அகழ்வாய்வில் ஈடுபட்டவா்களும் இவா்களே ஆவா். பையம் பள்ளி அகழ்வாய்வில் கொள்ளு, கேழ்வரகு,பச்சைப்பயிறு ஆகிய தானியங்களை கண்டெடுத்தனா். வீட்டில் நாய், கோழி, பூனைகளையும், கால் நடைகளையும் வளா்க்கப் பழகியிருந்தனா்.

விவசாயத்தில் நல்ல விளைச்சலைப் பெறுவதற்காக வளமை வழிபாட்டையும் மேற்கொண்டனா். தாய் தெய்வ வழிபாடு புதிய கற்காலத்தை சாா்ந்ததே ஆகும். வேட்டையில் நிறைய விலங்குகள் கிடைக்க வேண்டும் என்பதற்காக புதிய கற்காலக் கருவிகளை நிலத்தில் நட்டு வழிபட்டாா்கள். இவ்வழக்கம் இன்றளவும் கிருஷ்ணகிரி, தருமபுரி, சேலம், வேலூா் ஆகிய மாவட்டங்களில் காணப்படுகின்றது. வேலூா் மாவட்டத்தில் பையம் பள்ளியிலும், தருமபுரி மாவட்டத்தில் மோதூரிலும் கிருஷ்ணகிரி மாவட்டத்தில் முள்ளிக்காடு, தைலமலை, தொகரப்பள்ளி, மல்லப்பாடி, மயிலாடும் பாறை ஆகிய இடங்களிலும் நடைபெற்ற அகழ்வாய்வுகள் புதிய கற்கால வாழ்க்கை முறைகளையும் உற்பத்தி முறைகளையும் அறிய சான்றுகளாகும்.[3]

### 2.2.7 பெருங்கற்காலக் கருவிகள் (சங்க காலம்) (கி.மு 1000 முதல் கி.பி. 100-200 வரை)

பெருங்கற்கால மக்கள் தம் குடியிருப்புக்களுக்கு வெளியே சற்றுத் தூரத்தில் தனியிடத்தில் இறந்தவா்களை அடக்கம் செய்யும் முறையைக் கொண்டிருந்தனா். இறந்தவா்களைப் புதைப்பதற்கு பெருங் கற்களையும், பலகை கற்களையும், நெடும் கற்களையும் பயன்படுத்தியதால் இதனை பெருங்கற்காலம் என்று அழைக்கின்றனா். அவா்கள் காலத்திய ஈமச்சின்னங்களால் இக்காலம் பெயா் பெருகின்றது. இவை

கல்திட்டை, கல்பதுக்கை, குத்துக்கல், நெடுங்கல், நடுகல் என்றெல்லாம் சங்க இலக்கியங்களில் சுட்டப்படுகின்றன.

ஈமத்தாழி, ஈமப்பேழை கால்களுடைய சிறிய ஈமத்தாழி ஆகிய மட்பாண்டங்களும் கண்டறியப்பட்டுள்ளன. இவை வழிபாடு காரணமாக உருவானதாகும். இறப்பிற்கு பிறகும் உயிர் அழியாமல் வாழ்வதாக அம்மக்கள் நம்பினர். ஏரி, குளம் ஏற்படுத்தி விவசாயம் மேற்கொண்டனர்.

இவர்கள் இரும்பை உருக்கவும், ஆயுதங்கள் செய்யவும் தெரிந்திருந்தனர். நெசவுத் தொழில் கல் மணிகளைச் செய்யும் தொழில், உழவுத் தொழில் ஆகியனவும் மேற் கொண்டனர். அகழ்வாய்வுகளில் கிடைக்கப்பெற்ற கருப்பு சிவப்பு மட்கலங்கள் வெள்ளை வண்ணம் பூசப்பட்ட செம்பழுப்பு மட்கலங்கள் இக்காலத்தைச் சார்ந்தவை.[5]

### 2.2.8. வரலாற்றுக்கு முந்தைய சமுதாய நிலை

மேற்கண்ட ஆய்வுகளின் அடிப்படையில் மனித குல வரலாற்றில் எழுத்துப்பதிவுகள் அற்ற வரலாற்றுக்கு முந்தைய காலத்தில் அவர்கள் பயன்படுத்திய கருவிகளைக் கொண்டும், வாழ்க்கை முறைகளைக் கொண்டும் பகுத்தும் தொகுத்தும் பார்க்கும் போது கீழ்காணும் படி நிலைகளைக் கடந்து இயற்கையின் பரிணாம வளர்ச்சியில் முன்னேறி வளர்ந்து வந்துள்ளதை அறிகிறோம்.

முதலாவது உணவு சேகரித்தல், கிடைத்தவற்றை உண்டு வாழ்தல். இரண்டாவதாக, வேட்டையாடுதல் மீன் பிடித்தல் முதலானவற்றில் தேர்ச்சி பெற்ற உணவு சேகரிப்பாளர்கள் உருவாதல்.

மூன்றாவதாக, கால் நடை வளர்ப்பு, மேய்ச்சல் தொழில் சார்ந்த நாடோடித்தன்மையுடன் கூடிய இடம் பெயரும் வாழ்க்கை, ஆதிவேளாண்மை காடழிந்து பயிரிடல் ஆகியன மேற்கொண்ட காலம்.

நான்காவதாக, நிலையாக தங்கி வேளாண்மை மேற்கொள்ளல் உயர்குடியினர் ஆட்சியின் கீழ் சமூகம் நாகரிக சமூகமாக வளர்ந்து முன்னேறுதல் ஆகிய கட்டங்களை உள்ளடக்கியுள்ளன.

இதை ஒரே வாக்கியத்தில் குறிப்பிட வேண்டுமானால் காட்டு மிரண்டி நிலையில் இருந்த மனிதன் புதிய கற்கால வேடுவனாகவும் அதன் பிறகு இடைப்பட்ட காலங்களில் கால் நடைச் செல்வங்களைப் உருவாக்கி வளர்த்து பாதுகாப்பவனாகவும் நிலைத்த குடியிருப்புக்களில் தங்கி விவசாயம் மேற் கொண்ட விவசாயியாகவும் செம்படவனாகவும் வளர்ந்து விட்டதைச் சுட்டுகின்றது. அதன் இறுதியில்

நாகரிகமடைந்த உயர்குடி சமூகம் முகிழ்க்கின்றது. அது பெருங்கற்காலத்தில் ஏற்பட்ட முன்னேற்றமாகும்.

பெருங்கற்காலத்தின் உச்ச கட்டத்தில் உயர்குடியினர் ஆட்சியும் வர்க்க சமூக அமைப்பும் உருவானதை கல்திட்டை ஏற்படுத்தி முன்னோரை வணங்கியதில் இருந்து கோயில் உருவாக்கி தெய்வ வழிபாடு ஏற்பட்டது வரையிலான கால கட்டம் என்று இங்கு வரையறுக்க முடியும். கல் திட்டை, கல் பதுக்கைகளை அகழ்வாய்வு மேற்கொண்டபோது கண்டறியப்பட்ட அதன் அமைப்பு கட்டுமானங்களை, அடிப்படையாகக் கொண்டெழுந்ததே பிற்காலத்து கோயில் அமைப்புகள் என க.கைலாசபதி,[6] தொல்லியலறிஞர், தி.சுப்பிரமணியன்[7] குறிப்பிடுகின்றனர்.

## 2.3.0.பெருங்கற்காலமும், இரும்புக் காலமும்

உண்மையில் பெருங்கற்காலம் என்று அழைக்கப்படுவது இரும்புக்காலம் ஆகும். கற்களை விட எளிதில் கையாளத் தக்கதாகவும், கூர்மையானதாகவும் உலோக கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டு பயன் படுத்தப்பட்டன. அவ்வாறு முதலில் கண்டுபிடிக்கப்பட்ட செம்பு எளிதில் வளையவும், குறைந்த வெப்பத்தில் உருகவும் செய்கின்ற உலோகம். ஆகையால், அதனை விடவும் உறுதியான உலோகமாக இரும்பு அறியப்பட்டு பயன் படுத்தப்பட்டது.

எகிப்தில் இரும்பு கி.மு 3500ல் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. மெசபடோமியாவில் 'ஊர் என்னுமிடத்தில் கி.மு 300ல் இரும்பு கிடைத்துள்ளது. இந்தியாவில் முதன் முதலில் ஆகர் பண்பாட்டுக் காலத்தில் கி. மு. 1300ல் இரும்பு கிடைத்துள்ளது. கர்நாடக மாநிலத்தில் உள்ள அல்லூர் அகழாய்வில் பெருங்கற் காலத்துடன் இணைந்து இரும்பு கிடைத்துள்ளது. இதனை (14 காலக்கணிப்பு முறையில் படி காலக்கணிப்பு செய்ததில் கி.மு 1105+/-105 என்று கணக்கிடப்பட்டுள்ளது. எனவே. அகழ்வாய்வுகளின் அடிப்படையில் இரும்பு இந்தியாவில் கி.மு.1200 முதல் காணக்கிடைக்கின்றது. மேலும் வட இந்தியாவில் அஸ்தினாபுரம், கௌசாம்பி, உஜ்ஜையினி ஆகிய இடங்களில் கி.மு.800ல் வண்ணம் தீட்டப்பட்ட சாம்பல் நிற பானை ஓடுகளுடன் இரும்பு கிடைத்துள்ளது.

ரிக் வேதத்தில் முதன் முதலில் அயஸ் என்ற சொல் இடம்பெறுகின்றது. இது 'இரும்பு ' என்று கருதப்படுகின்றது. ஆனால் பானர்ஜி என்பவர் இதனை ஆராய்ந்து உருக்கக் கூடிய உலோகம் தகுந்தவாறு சூடாக்கி வளையும் தன்மையுடைய உலோகம் என்று பொருள் கூறுகின்றார். ரிக் வேதம் இரும்பை உருக்குகின்றவர்களை ''கர்மாரா'' என்றும் குறிப்பிடுகின்றது. இத்தொழிலை மேற் கொண்டவர்கள் தங்களுக்குள் குழுவை அமைத்தனர். சில வேறுபாடுகளுடன் 'கர்மார்' என்றே அழைக்கப்படுகின்றனர்.

பல கருத்து முரண்பாடுகளுக்கிடையே தற்போது வேத கால இலக்கியங்கள் கி.மு.1200 காலத்தை சார்ந்தவை என்று காலக்கணிப்பு செய்துள்ளனர். இதனால் கி.மு.1000க்கு முன்பே இரும்பின் பயனை அறிந்திருந்தனர் என்பது தெளிவாகின்றது,

இரும்பு இந்தியாவிற்கு வெளியில் இருந்து வந்தது என்றும், உள்நாட்டிலேயே இரும்பின் பயனை அறிந்திருந்தனர் என்றும் கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன. இந்தியாவிலேயே இரும்பு கண்டுபிடிக்கப் பட்ட தெனில் முதலில் திராவிடர் தான் இரும்பை பயன்படுத்தியிருக்க வேண்டும் என்றும், இந்தியாவிற்கு வரும் முன்னர் இரும்பின் பயனை அறியாதிருந்த ஆரியர்கள் இங்கு வந்த பின்பு இரும்பின் பயன் அறிந்து அதன் தொழில் நுட்பத்தை கற்றிருக்க வேண்டும். இங்கிருந்தவர்களிடம் இருந்தே அவர்கள் இரும்பின் பயன்பாட்டை தெரிந்திருக்க வேண்டும் என்றும் இவர்கள் கி.மு.1900-1500க்கும் இடைப்பட்ட காலத்தில் இரும்பின் பயனை அறிந்திருக்க வேண்டும் என்றும் கே.சி.வர்மா கருதுகின்றார். திலிப் சக்ரவர்த்தி அவர்கள் இரும்பின் பயனை இங்குள்ள மக்களே அறிந்திருந்தனர் என்றும், மத்திய இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் இரும்பினாலான பொருட்கள் அகழ்வாய்வுகளில் அதிகமாக கண்டறியப் பட்டதிலிருந்தும் முடிவுக்கு வருகின்றார்.[8]

### 2.3.1. பண்டைத் தமிழகத்தில் இரும்பின் பயன்பாடு

பெருங்கற்கால மக்களுடன் இரும்பு பெரிதும் இணைந்து காணப்படுகின்றது. பெருங்கற்கால ஈமச்சின்னங்களில் இரும்பு, பொன், முதலான உலோகப் பொருட்களும், படையல் பொருட்களும் காணப்படுகின்றன, தென்னிந்தியாவில் கி.மு.1200க்கு முன்பிருந்து இரும்பைப் பயன்படுத்திய மக்கள் தமிழகம் ஆந்திரம், கர்நாடகம் ஆகிய மாநிலங்களில் வாழ்ந்தனர், தமிழகத்தில் கோவை, தருமபுரி, சேலம், வட ஆர்க்காடு, புதுக்கோட்டை, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் இரும்பை உருக்கியதற்கான எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. சென்னைக்கு அருகிலும் இரும்பு உருக்கிய உலைகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன

புதிய கற்காலத்தில் செம்புதான் பயன் பாட்டில் இருந்தது. ஆனால் அதன் பயன்பாடு மிகக் குறைவாகவும், கல்லாயுதங்களே தொடர்ந்து பயன்படுத்தப்பட்டும் வந்தது. இந்நிலையில் முதன் முதலில் இரும்பு ஆயுதங்களே பெரும் மாற்றங்களை ஏற்படுத்தின. அவை சமூக மாற்றங்களையும், நாகரிக வளர்ச்சியையும் ஏற்படுத்தின தென்னிந்தியாவில் கி.மு.500 வாக்கில் இரும்பு பெரிதும் புழக்கத்தில் இருந்துள்ளதை அகழ்வாய்வுகள் தெரிவிக்கின்றன.

ஆதிச்ச நல்லூர் (திருநெல்வேலி மாவட்டம்) பெரும்பேர், சானூர், குன்றத்தூர் அமிர்த மங்கலம் (செங்கல்பட்டு மாவட்டம்) போன்ற இடங்களில் பெருங்கற்

காலத்தைச் சார்ந்த இரும்புக் கருவிகள் அகழ்வாய்வில் கண்டுபிடிக்கப்பட்டன. அம்பு முனை, ஈட்டி முனை, குதிரை லாடம், குத்துவாள், உளி முதலிய இரும்புக் கருவிகள் அவையாகும். சுத்தமான இரும்பை உருக்கி எடுத்து உருவாக்கிய இரும்பு பாலங்களை மதுரை மாவட்ட பெருங்கற்கால சின்னங்களில் கண்டறியப்பட்டவற்றிலும், மேலும் பல இடங்களில் அறிய முடிகின்றது.

### 2.3.2. பண்டைத் தமிழகத்தில் தங்கத்தின் பயன்பாடு

பெருங்கற்காலத்தின் பிற்பகுதியில் தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழ் நாட்டில் தங்கம் பயன்பாட்டில் இருந்துள்ளது. ஆதிச்ச நல்லூர் அகழ்வாய்வில் கிடைக்கப் பெற்ற தாழிகளில் தங்க அணிகலன்கள் கண்டுபிடிக்கப்பட்டன. புதுவைக்கு அருகே சுத்துக் கேணி எனும் இடத்தில் பெருங்கற்கால ஈமச்சின்னத்தில் தங்கத்தாலான கழுத்தணி கிடைக்கப் பெற்றது. இன்றைய கோலார் பகுதி பண்டைக் காலத்திலும் தங்கம் எடுக்கப்பட்ட பகுதியாகும் என்பதை அங்கு நிகழ்ந்தபட்ட அகழ்வாய்வுகள் தெரிவிக்கின்றன. பட்டினப்பாலை காவிரி பூம்பட்டினத்திற்கு வடமலையில் இருந்து தங்கம் கொண்டுவரப்பட்டதாக குறிப்பிடுகின்றது. வடமலை என்பது கோலார் தங்கச் சுரங்கப் பகுதியே என்பது ஆய்வாளர்கள் கருத்து.

கி.மு. முதல் நூற்றாண்டிலேயே துளையிட்ட செப்புக் காசுகள் தென்னிந்தியாவில் கிடைத்துள்ளன. பூம்புகாருக்கு அருகில் உள்ள மணி கிராமத்தில் கிடைத்துள்ளன. காவிரி பூம்பட்டினத்தில் பண்டைய சோழர் காசுகள் நான்கு, (புலி உருவம் பொரிக்கப்பட்டவை) கிடைத்துள்ளன. இவ்வாறே சதுர வடிவிலான பாண்டியர் காசுகள் முன் பக்கம் யானையும், பின் பக்கம் மீன் சின்னமும் பொறிக்கப்பட்டவை கிடைத்துள்ளன. கி.மு இரண்டாம் நூற்றாண்டைச் சார்ந்த சேரர் நாணயத்தில் முன் பக்கம் கம்பீரமான யானையும், பின் பக்கம் வில் அம்பு பொறிக்கப்பட்டவை கிடைத்தவை. சேரர்கள் தங்கள் காசுகளில் அரசர்களின் மொட்டைத்தலை உருவம் பொறித்ததோடு அதன் மேல் பாகத்தில் தமிழ்ப்பிராமி என்று கூறப்படும் பண்டைய தமிழ் எழுத்தில் மாக்கோதை என்றும், குட்டுவன் கோதை என்றும் பெயர் பொறித்த காசுகளை வெளியிட்டுள்ளனர். இதின் வரிசையில் 'கொல் இரும்பொறை' என்று பொறிக்கப்பட்ட காசும் கிடைத்துள்ளது. கொல்லிமலையை வெற்றி கொண்டதன் நினைவாக சேரமன்னர் மாந்தரஞ்சேரல் இரும்பொறை வெளியிட்டதாக ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[9] இவை கரூர்-அமராவதி ஆற்றுப்படுகை தஞ்காவூர், மதுரை, திருக்கோயிலூர், ஆகிய பகுதிகளில் கிடைத்துள்ளன. தங்க ஆபரணங்களையும், அணிகலன்களையும் பற்றி *கலித்தொகையும், ஆற்றுப்படை* நூல்களும் குறிப்பிடுகின்றன. ஆற்றுப்படை நூல்களில் மகரகுண்டலம் வாகுவளையம் முதலானவை குறிப்பிடப்படுகின்றன.

மதுரை, புகார் போன்ற பெரு நகரங்களில் பொற் கொல்லர்களும், பொன் வாணிகர்களும் இருந்ததைச் *சிலப்பதிகாரம்* உறுதி செய்கின்றது.

கி.பி.முதல் நூற்றாண்டில் ரோமிலிருந்து தமிழகத்துக்கு பெருமளவில் தங்கம் இறக்குமதி செய்யப்பட்டதுடன், மாற்றாக மிளகு, வெண்துகில், யானை தந்தம் போன்றவை ஏற்றுமதி செய்யப்பட்டன. யவனர்கள் அழகிய கப்பல்களில் தங்கத்தைக் கொண்டு வந்து இறக்கிவிட்டு இங்கிருந்து மிளகைக் கப்பல் நிறைய ஏற்றிச் சென்றதாக சங்கப்பாடல் ஒன்று தெரிவிக்கின்றது. இத்தகைய காசுகள் திரமம்' எனப்படும். இவை பெருங்கற்படை சின்னங்களில் கிடைக்கப் பெற்ற பானைகளில் பகுதியும் கிடைத்துள்ளன.

### 2.3.3.பண்டைத் தமிழகத்தில் வெள்ளியின் பயன்பாடு

தங்கத்திற்கு அடுத்த மதிப்புறு பொருளாக வெள்ளி பயன் படுத்தப்பட்டது. பெண்கள் கைகளில் வளையலாகவும், காலில் தண்டை, சதங்கை, சிலம்புகளாகவும் அணிந்தனர்.

**நீர்த்திரள் கடுக்கு மாசில் வெள்ளிச்**
**சூர்ப்புறு கோல்வளை செறிந்த முன்கை**

(*அகம்;* 142;16-17) என்று அகப்பாடல் சுட்டுகின்றது. மேலும் உயர்குடியினர் உண்கலமாகவும் பயன் படுத்தினர் வெள்ளி உண்கலத்தில் உணவு உண்டதை,

**அமிழ்து அன மரபின் ஊன் துவை அடிசில்**
**வெள்ளி வெண் கலத்து ஊட்டல் அன்றி**

( *புறம்* 390;18-19 ) என்று *புறநானூறு* கூறும்.

### 2.3.4. பெருங்கற்காலமும், இரும்புக்காலமும், சங்ககாலமும் ஒன்றே

பெருங்கற்காலம் அல்லது இரும்புக் காலம் என்று தொல்லியல் வரலாற்றியல் ஆய்வாளர்களால் குறிப்பிடப்படும் காலம் சங்க காலமாகும். தென்னிந்தியாவில் கிடைக்கப் பெற்ற இரும்புக் கருவிகளைக் கொண்டு இங்கு இரும்புக் காலப் பண்பாடு நிகழ்ந்தது கி.மு.500க்கும் கி.பி. 100க்கும் இடைப்பட்ட காலமாகும் என்று முனைவர் கே.வி. ராமன் குறிப்பிடுகின்றார். தமிழ் நாட்டில் கண்டறியப்பட்ட தமிழ்ப் பிராமிக் கல்வெட்டுக்களை ஆராய்ந்தறிந்த மூதறிஞர் ஐராவரம் மகாதேவன் அவர்கள் தமிழ்ப்பிராமி எழுத்துக்களின் காலம் கி.மு.300 என்று கணித்துள்ளார். அண்மையில் புதுவைப் பல்கலைக்கழக வரலாற்றியில் பேராசிரியர் கா. ராஜன் அவர்கள் பொருந்தல் எனுமிடத்தில் மேற் கொண்ட அகழாய்வின் மூலம் கிடைக்கப் பெற்ற தமிழ்ப்பிராமி

எழுத்துப் பொறிப்பு கொண்ட பானையில் கிடைக்கப் பெற்ற நெல்லை கரிமம் 14 காலக்கணிப்புக்கு உட்படுத்தி தமிழ்ப் பிராமி எழுத்துக்களின் காலம் கி.மு. 500 என்று காலக்கணிப்பு செய்துள்ளார்.[10] இதனால் சங்க காலம் என்பது மேலும் இரண்டு நூற்றாண்டுகள் தொன்மையானதாக முன்நகர்ந்துள்ளதைக் காண்கின்றோம்.

சங்க காலம் என்று இலக்கிய இலக்கண அறிஞர்கள் வரையறுத்துக் கொண்ட இரும்புக் காலம் எனக் கொண்டால் கி.மு.500 முதல் சங்ககாலத் தொடக்கம் என்பது சரியாகும். கி.மு.500 முதலாய் அறியப் படுகின்ற சங்கச் சமூகத்தின் உற்பத்தி முறையும் பொருளாதார வளர்ச்சியும் ஒருமுகத்தன்மையுடன் இல்லையென்பதும் உண்மையாகும். எழுத்துப் பொறிப்பும், இலக்கியச் சான்றும் கொண்டு வரலாற்றை அறிய முற்படும்போது, சங்க இலக்கியங்களின் துணை கொண்டு உற்பத்தி முறையினை ஆராய முனைகையில் இத்தகைய சிக்கல்களை எதிர் கொள்ள வேண்டியுள்ளது.

### 2.4.0. சங்க காலத்  திணை நிலை உற்பத்தி முறைகள்

சங்கச் சமூகம் பல்வேறு உற்பத்தி முறைகளைக் கொண்ட திணை நிலைச் சமூககங்களை அக்கம் பக்கமாக கொண்டிருந்தது. ஆனால் இத்தகைய திணை நிலைச் சமூகங்களையும் ஒருங்கிணைத்து உள்ளடக்கிக் கொண்டு அரசு  மேலெழுந்தது. இதனை திணை மயக்கத்தில் காண முடியும். சங்க இலக்கியங்களுள் பிற்பட்டவையான ஆற்றுப்படை நூல்கள் இதனை உறுதிபடுத்துகின்றன. எனவே ஐ வகை நிலங்களில் மேற்கொண்ட வேறுபட்ட உற்பத்தி முறைமைகளையும், பொருளியல் வளர்ச்சியையும் ஆராய்வதுடன், இவற்றை ஒருங்கிணைத்த அரசு இயந்திரத்தின் உற்பத்தி முறைமை, அடித்தளம் மேற்கட்டமைப்பு பற்றியும் ஆராய வேண்டியுள்ளது.

### 2.4.1. குறிஞ்சிநில வேளாண் உற்பத்தி

குறிஞ்சி முல்லை நிலத்து வயல்களை 'புனம்' 'துடவை ' 'முதை ' 'இதை ' என்றெல்லாம் குறிப்பிடுகின்றனர். புனம் என்ற சொல்லிலிருந்து தான் புன் நிலம் புன் செய் என்ற  சொல் ஊருவாகி கையாளப்பட்டு வந்திருக்கின்றது. ''தினைப்புனம் காத்தல் சங்க இலக்கியத்தில் குறிக்கப் படுகின்றது. தலைவி புனம் காத்தலின் பொருட்டு அங்கு சென்ற தலைவன் அவளைக் கூடுதல் இலக்கியத்தால் அறிகின்றோம். இது ஆதி வேளாண்மை ஆகும். இது மிகவும் எளிமையானது. முதலில் பெண்கள் தான் விவசாயத்தை மேற்கொண்டனர். அது தோட்டப்பயிராகவே துவக்கத்தில் இருந்தது. பன்றி கிழங்கிற்காக கிளரிய நிலத்தில் விதைத்தும் காட்டை எரித்து அதன் சாம்பலில் விதைத்தும் இயற்கையாக விளையச் செய்து பெற்றனர்.

**மரங் கொல் கானவன் புனந்துளர்ந்து வித்திய**
**பிறங்குரல் இறடி காக்கும் புறந்தாழ்**

(*குறு* 214) இதில் குறிஞ்சி நிலத்தை உழும் காட்சி பதிவாகியுள்ளது. ஆனால் கலப்பை கொண்டு உழாமல் 'களைக் கொட்டு' கொண்டு கிளரி விட்டு விதைத்த காட்சியைக் குறித்து தமது பதவுரையில் உ.வே.சா அவர்கள் 'உழுது விதைத்த என்று குறிப்பிட்டு விளக்க உரையில் 'களைக்கொட்டு கொண்டு கொத்தி விதைத்தல் என்று கூறுகின்றார். ஆதி விவசாயத்தை பெண்ணே மேற்கொண்டாள். அது தோட்டமிடுதல் காய் கறி, கனிவகைகள் பயிரிடுதல் போன்றவையாக இருந்தன.

அடர்ந்த காட்டின் ஒரு பகுதியைத் தேர்வு செய்து அதனைத் தீயிட்டு கொளுத்திவிட்டு அந்த இடத்தில் விதைகளைத் தூவி விடுவர். காட்டு பன்றி கிளரிய இடத்திலும் விதைப்பர். பொழியும் மழையில் முளைத்த விதைகள் அதற்குண்டான பருவகாலம் ஆதலால் தானாக விளைந்து பயன்தரும். ஏர் கொண்டு உழாமல் மேற்கொண்ட இந்த விவசாயத்தை **தொய்யாது வித்திய துளர்படு துடவை** என்று *மலைபடுகடாம்* குறிப்பிடுகின்றது. உழாது விதைத்து கொத்தி விடப்பட்ட நிலம் என்பது அதன் பொருளாகும். வளம் நிறைந்த கன்னி நிலமான அக்காட்டு நிலத்தில் சாம்பல் சத்து மட்டுமே பற்றாக்குறையானதாகும். அதனையும் எரித்துவிட்டு விதைப்பதன் மூலம் ஈடுசெய்துள்ளதை நாம் அறியமுடிகின்றது.

'துளர்தல்'என்றால் கொத்துதல் என்று கழக அகராதி குறிப்பிடுகின்றது. 'துளர்' என்றால் களைக் கொட்டு ஆகும். மேலும் குறிஞ்சி நிலத்தின் முதன்மை விளைப் பொருட்களாக அறியப்படுபவை ஐவன நெல், வெண்ணெல், தினை போன்றவையே ஆகும். மருத நிலத்தில் விளையும் நெல் வகைகள் இங்கு பயிரிடப்படவில்லை.

பொதுவாக மூங்கிலில் இருந்து கிடைக்கும் நெல் குறிஞ்சி மக்களுக்கு உணவளித்தது. இது பயிர் செய்யாமல் இயற்கையில் விளைவது வெள்ளை நிறமுடைய இதன் சோறு சமைக்க கடினமானது.

**பை அறு நெடுங்கழை பாய்தலில் ஒய்யென**
**வெதிர் படு வெண்ணெல்**

(*அகம்* 267) பசுமை அழிந்த நீண்ட மூங்கிலில் காற்று பாய்ந்து அசைக்கிறது. அதனால் நடுங்கிய மூங்கில் கழிகளில் இருந்து வெண்ணெல் உதிர்கின்றது என்று இப்பாடல் தெரிவிக்கின்றது. இது தவிர ஐவன நெல் என்று ஒரு வகை உண்டு இதுவும் வெள்ளை நிறமானது.

**துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி**
**ஐவனம் கவரும் குன்ற நாடன்**

(*ஐங்;*267) மலைத் தொடரின் பக்கத்தில் விளைந்த ஐவனநெல்லை குன்ற நாட்டுத் தலைவன் கொண்டு சென்றதாக *ஐங்குறுநூறு* குறிப்பிடுகின்றது. இதே போல *குறுந்தொகை* அருவியின் நீரைப் பயன்படுத்தி ஐவனம் விளைத்ததைக் கூறுகின்றது.

**அருவிப் பரப்பின் ஐவனம் வித்தி** (*குறு;*100) அதாவது நீர்பாய்ச்சும் தேவை இல்லாமல் அருவி நீர் பாயும் பகுதியில் இந்நெல் விளைகிறது. உழாத வேளாண்மைக்கு இதுவும் சான்றாகும்.

கபிலரின் *புறநானூற்*றுப் பாடல் ஒன்று ஆதிவிவசாயம் பற்றி குறிப்பிடுகின்றது.

**உழவர் உழாதன நான்கு பயன் உடைத்தே**
**ஒன்றே சிறியிலை நெல் விளையும்மே**
**இரண்டே தீஞ்சுளைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே**
**மூன்றே கொழுங்கொடி வள்ளிக்கிழங்கு வீழ்க்கும்மே**
**நான்கே அணிநிற ஓரி பாய்தலின் மீது அழிந்து**
**திணி நெடுங்குன்றம் தேன் சொறியும்மே**
**வான்கண் அற்று அவன் மலையே வானத்து**
**மீன் கண் அற்று அதன் சுனையே**

பாரியின் பறம்பு மலையில் பெரும் உழைப்பும் முயற்சியும் இன்றியே விளையும் பொருட்கள் இவையாகும். முதலாவதாக மிகச் சிறிய இலையைக் கொண்ட மூங்கிலின் கணுக்களில் தோன்றும் மூங்கில் நெல், இரண்டாவதாக இனிய சுளைகளைக் கொண்ட பலாவின் பழம், மூன்றாவதாக அகன்ற, தொடர்ச்சியான கொடிகளைக் கொண்ட வள்ளிக்கிழங்கு, நான்காவதாக குரங்குகள் பாய்ந்தோடும் போது தேனடைகள் சிதையக் கூடிய அளவிற்கு பெரும் பகுதியாக விளங்கும் தேன், விண்மீண்களுக்கு இணையான எண்ணிக்கையிலான நீர்ச்சுனைகள் இவ்வாறு எவ்விதமான கடின உழைப்பும் செலுத்த வேண்டிய அவசியமின்றி விளையும் வளங்களைக் கொண்டது பாரியின் பரம்பு மலை என்று கபிலர் பாடியுள்ளார். இத்தகு விவசாயம் ஆதி விவசாயம் ஆகும். வேட்டையாடுதலுக்கும் உணவு திரட்டுதலுக்கும் அடுத்த நிலையில் மேற்கொள்ளப்பட்ட உற்பத்தி முறை தொன்மையானதும், பரந்து விரிந்து அளவில் உழுது பயிரிடலுக்கு முந்திய விவசாயமும் ஆகும்.

இத்தகைய ஆதி விவசாயமே மலைப்பகுதியில் குறுகிய நிலப்பரப்பிலும் சரிவுகளிலும் தொடர்ந்து நடைபெற்றது. நிலத்தில் இருந்து உயர்வான பகுதி

என்பதாலும் அதனை மேலும் விரிவு படுத்த முடியாது என்பதாலும் குறிஞ்சி நில மக்கள் கீழ் நிலத்து மக்களுடன் இணையாமல் பல்வேறு இயற்கைச் சூழல்களாலும் தனித்து வாழும் காரணத்தாலும் இத்தகைய பின்தங்கிய விவசாயம் சங்கச் சமூகத்திலும் அக்கம் பக்கமாக நிலவியது.

**பன்மர உயர்சினை மின்மினி விளக்கத்துச்**
**செல்மழை யியக்கங் காணும்**

(*நற்* 44;10-11) என்ற அடிகள் உயர்ந்த மரக்கிளைகளுள் அமர்ந்த ஒளிர் விடும் மின்மினிப் பூச்சிகளைக் கொண்டு மழைப் பொழிவின் இயக்கத்தினை குறிஞ்சி நில உழவர்கள் கண்டறிந்ததாக பெருங்கௌசிகனார் பாடுகின்றார்.

**ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த**

*(நற் 13:3)* என்ற அடியில் தினை புனத்தை காக்கின்றவர்கள் தினையைக் கவர வந்த விலங்கினை அம்பால் அடித்து கொன்றதனை கபிலர் குறிக்கின்றார்.

**தினையுண் கேழல் இரியப் புனவன்**
**சிறுபொறி மாட்டியே பெருங்கல் அடார்**

*(நற்* 119:1-2*)* தினையைக் கவர வரும் விலங்கினைத் தடுக்க கல், பலகையால் ஆன விலங்கு பொறி அமைத்து காத்ததைப்பற்றி பெருங்குன்றூர் கிழார் பாடுகின்றார்.

பிறிதொரு பாடலில் மதுரைக் கண்ணத்தனார்.

**களிற்றுத்துப்ப அஞ்சாப் புலியதன் இதணத்துச்**
**சிறுதினை வியன்புனங் காப்பின**

(*நற்* 351;7-8) என்ற அடிகளில் தினைப்புனம் முழுமையும் காணும் படியாக உயர்ந்ததாகவும் ஆண்யானைகளும் கண்டு அஞ்சும் படியாகவும் புலித் தோலால் வேயப்பட்ட பரண் அமைத்துத் தினைப்புனம் காத்ததாக குறிப்பிடுகின்றார்.

### 2.4.2 முல்லைநில வேளாண் உற்பத்தி

குறிஞ்சி நிலத்து ஆதி வேளாண்மையிலிருந்து வளர்ந்த நிலையில் முல்லை நில வேளாண்மை மேற்கொள்ளப்பட்டது. அங்கு வேட்டையாடுதலும் உணவு திரட்டலும் வன்புல வேளாண்மையும் வாழ்வியல் தொழிலாகக் கொள்ளப்பட்டது. முல்லை நிலத்தில் கால் நடை வளர்ப்பும் பருவகாலம் அறிந்து மழைப் பொழிவினை அறிந்து உழுது பயிரிடலும், பால் தயிர், மோர், வெண்ணெய், நெய், இறைச்சி ஆகிய உணவு உற்பத்தியினை மிகுதியாகப் பெறலும் ஆகிய வளர்ச்சியை நோக்கிய பொருளாதார

முன்னேற்றம் கொண்ட  வாழ்க்கை முறையாக அமைந்திருந்தது. பலவித உணவு தானியங்கள் விளைவிக்கப்பட்டன.

குன்றும், மலையுமாகிய குறிஞ்சி நிலத்திலிருந்து இறங்கி வந்தால் காடுகளாகிய முல்லை நிலம் குறிஞ்சிக்கு இல்லாத வாய்ப்புக்களையும் வளங்களையும் கொண்டு விளங்கியது. உயர்ந்த மலைகளின் சூழமைவிற்கு தகவமைந்ததாக வேட்டையாடலும் உணவு திரட்டலும் இருப்பதுப் போல அங்கு வேடுவர் உருவானது போல முல்லை நிலத்தின் சூழமைவிற்கு தகவமைந்தவர்களாக ஆயர்கள் உருவாயினர். அவர்கள் காட்டு விலங்குகளைப் பழக்கி வளர்த்ததன் விளைவாக கால்நடைச் செல்வங்களுக்கு உரியோராயினர். தாய் வழிச் சமூகத்திலிருந்து தந்தை வழிச் சமூகத்துக்கு மாறிச் செல்லும் காலகட்டத்தில் ஆண் உடைமையாளனாக மாறிவிட்டான். முந்தைய முரட்டுத்தனமான வேடுவனிலிருந்து முற்றிலும் வேறுபட்டவனான மென்மையான ஆட்டிடையன் தனது செல்வங்களைக் காட்டி முண்டியடித்துக் கொண்டு முன்னுக்கு வந்துவிட்டான். அவன் தலைமை பாத்திரத்தைக் கைப்பற்றினான். உயிர் வாழ்வதற்கான வழியை மேற்கொள்பவரே தலைமை பாத்திரத்தை அடைவர் என்று எங்கெல்ஸ் குறிப்பிட்டவாறு உணவு சேகரிக்கும் பெண் தலைமை பாத்திரத்தை ஏற்றிருந்த நிலை மாறி உற்பத்திச் சமூகமாக மாறிய சூழலில் ஆணே வாழ்க்கைக்கான வழியை பெற்றிருந்ததுடன் தலைமை பாத்திரத்தையும் அடைந்தான். ''என்னுடையது உன்னுடையது'' என்பதும், தனியுடைமையும் இங்கு பெருமளவில் உருவாகி வளர்ந்தது. தனியுடைமையும் உபரி உற்பத்தியும் அதிகரித்த நிலையில் ஆண்வழியிலான வாரிசுரிமையும் சொத்துரிமையும் குடும்ப அமைப்பு முறையும் ஏற்பட்டது.

முல்லை நிலத்திற்குரிய உரிப்பொருள் ''இருத்தல் ஆகும் ''இருத்தல்'' தலைவன் வரும் வரை பொறுமையோடு காத்திருத்தல் ஆகும். *சிறுபாணாற்றுப்படை* **முல்லை சான்ற கற்பு** என்று பேசுகின்றது. *நெடுநல் வாடையில்* காதலில் பொறுமையோடு காத்திருத்தல் வேண்டும் என்ற மரபினை உணர்த்தும் வகையில் அந்த சூழலுக்கு ஏற்ப ஆயர்கள் சித்திரிக்கப் படுகின்றனர். ஆண்கள் அதாவது கணவன்மார் தம்மால் பழக்கப்பட்டு வளர்க்கப்பட்டு வரும் விலங்குகள் கால் நடைகளை மேய்ப்பதற்காகவும் அவற்றுக்கான உணவு மற்றும் நீரினைத் தேடி தொலைதூரம் செல்லும்போது காத்திருத்தல், அவனுக்காக எதிர் பார்த்திருத்தல் அவளது சமூக கடமையாகின்றது. அவ்வாறே **கற்பெனப்படுவது சொற்றிரம் பாமை** என உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். **கற்பெனும் திண்மை** என்றும் சுட்டப்படுகின்றது. தலைவன் தான் கூறிச் சென்ற வழி தவறாது மீளுதலும் தலைவியின் பால் அன்பும் ஈடுபாடும் கொண்ட உள்ள உறுதியும் இங்கு கற்பு என்றே சுட்டப் படுகின்றது.

இல்வாழ்க்கையில் மெய்யான பற்றுறுதி ஏற்படவும், தனிச் சொத்துரிமையின் வளர்ச்சிக்கும் வாரிசுரிமைக்கும்'கற்பு' அடிப்படையான ஒன்றாக அமைந்திருந்தது என்று கலாநிதி கா. சிவத்தம்பி குறிப்பிடுகின்றார்.[11] மேலும் முல்லை நிலத்தில் தான் தனிநபர் சொத்துடைமை ஒரு நிறுவனமாகப் பேணிப் பாதுகாக்கப்படுவதும் அதிலிருந்து வாரிசுரிமைகளும் சிக்கல்களும் எழுந்தன வென்று அவர் குறிப்பிடுகின்றார்.

முல்லை நிலத்தில் குழந்தைச் செல்வம் மிகவும் போற்றத்தக்கதாகவும் பிரியமானதாகவும் அமைந்திருந்ததை சங்கப்பாடல்கள் (*நற்றிணை* 166,221,) வெளிப்படுத்துகின்றன. ஆண் மகவினை குடிவிளக்கு என்று (*அகநானூறு* 184) ஒரு பாடல் குறிப்பிடுகின்றது.

முல்லை நில உற்பத்தி முறையும் பொருளாதாரமும் முந்தைய நிலையிலிருந்து மேம்பட்ட வளர்ந்த நிலையில் இருந்ததையே காட்டுகின்றது. விலங்குகளைக் கொண்டு கலப்பையில் உழுது விவசாயம் மேற்கொண்டது முல்லை நிலத்தில் தான். ஆதி விவசாயம் பெண்களுடையது என்ற நிலை இப்போது மாறிவிட்டது. முதல் வேலைப் பிரிவினை ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையில் தான் நிகழ்ந்தது. பெண்கள் தான் முதலில் தோட்டப் பயிர் செய்தனர். மண்பாண்டங்கள் வனைதல் கூடை முடைதல் ஆகியவற்றை மேற் கொண்டனர். கால் நடைகளைக் கொண்டு இழுக்கப்படும் கலப்பைகள் பயன்படுத்திய நிலையில் விவசாயம் ஆண்களுடையதாகிவிட்டது. இதனை மேட்டு நில விவசாயம் புன் செய் பயிர்கள் என்றும் குறிப்பிடலாம். பிற்காலத்தில் ஐநில பாகுபாடு மறைந்து வன்புலம் மென்புலம் என்று பரந்த அளவிலான பாகுபாட்டிற்குள் வந்தபோது இத்தகைய மேட்டுநில விவசாயம் வன்புலம் ஆனது. பண்டையக் காலத்தில் பெருமளவு விவசாயம் முல்லை நில விவசாயமே ஆகும்.

**கருங்கால் வரகே இருங்கதிர்த் தினையே**
**சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையோ**
**டிந்நான் கல்லது உணாவு மில்லை**

(*புறம்* 335;4-6) இதன் மூலம் புன் செய் வேளாண்மையை மேற் கொண்டதுடன் கால் நடைவளர்ப்பு மூலமாக பால், மோர், தயிர், வெண்ணெய், நெய், இறைச்சி, தோல், ஆடை நெய்வதற்கான ஆட்டு ரோமங்கள் ஆகியவற்றையும் கொண்ட பொருளாதார செல்வ வளங்களைக் கொண்டதாக முல்லை நிலம் விளங்கியது (*மது* 27-285 *பெரும்* 148, -184 *மலைபடு* 404-420) என்பதை ஆற்றுப்படை நூல்கள் விளக்குகின்றன.

முல்லை நிலத்தில் முற்றிய வரகை அறுவடை செய்த பின்பு மீண்டும் உழுது பண்படுத்தி வரகு பயிரிடப்பட்டது. உளுந்தும் அவரையும் பயறு வகைகளும் விதைத்து பயிரிடப்பட்டன. பண்டைக்காலத்தில் பெருந்தெய்வமாக விளங்கியது மாயோனாகிய திருமாலே ஆகும். இடைக்காலத்தில் தான் சைவம் தழைத்தோங்கியது. திருமாலுக்கு படைக்கப்படும் உணவு வகைகள் முல்லை நில தானியங்களும் பயறு வகைகளுமே ஆகும். உளுந்து பயறு அவரை முதலானவையே நிவேதனமாக இன்றும் வைணவத்தலங்களில் படைக்கப்படுகின்றன. முல்லை நிலப் பண்பாட்டுடனும் கலாச்சாரத்துடனும் வைணவமே செழிந்திருந்தது என்பதற்கு இவையே அடையாளங்களாகும்.

எட்டுத் தொகை நூல்களுள் பிற்பட்டதான *பரிபாடல்* வைணவம் செழித்திருந்ததை பல்லாற்றானும் எடுத்தியம்புகின்றது. அவ்வாறே பத்துப்பாட்டுள் அடங்கிய ஆற்றுப்படை நூல்களும் வைணவத்தை பற்றி பெரிதும் எடுத்துரைக்கின்றன. மாயோனின் தோற்றப்பொலிவு, ஆற்றல்கள், ஆடை, அணிகலன்கள், நகர் சிறப்பு ஆகியவும் இவற்றில் எடுத்துரைக்கப்படுகின்றன.

பீதாம்பரமும் மணி முடியும் கொண்ட திருமால் பற்றி *பரிபாடல்* பின் வருமாறு குறிப்பிடுகின்றது.

**அணிவனப்பு அமைந்த பூந்துகில் புனைமுடி**
**நேமியும் வளையும் ஏந்திய கை**

(*பரி* பா 13;1-2) திருமகளையும், அணிகலன்களையும் ஒருங்கே அணிந்திருக்கும் மார்பினன் என்று திருமால் பாடப்படுகின்றார்.

**திருஞெமர்ந்து அமர்ந்த மார்பினை மார்பில்**
**தெரி மணி பிறங்கும் பூணினை** (*பரி* பா:1.9-10)

**புள்ளின் நிவந்தோய் உயர் கொடிச் சேவலாய்**

(*பரி* - 3 :8) என்று திருமாலின் கருடக் கொடி பாடப்படுகின்றது.

**ஒடிபடா ஒடிதூண் தடியொடு**
**தடிதடி பலபட வகிர்வாய்த்த உகிரினை**

(*பரி* 4;20-21) ஒடித்த தூணிலிருந்து வெளிப்பட்டு இரணியனின் மார்பை பிளந்த கூரிய நகத்தை உடைய மாயோனே என்று மாயோனுடன் இணைந்த புராண கதை இங்கு கூறப்படுகின்றது. ஆகவே பரவலான முல்லை நில உற்பத்தியாலும் பொருளாதார உபரி உற்பத்தி ஏற்பட்டதாலும், அங்கு பண்பட்ட காலச்சாரமும், வாழ்க்கை முறையும், ஏற்பட்டிருந்தது.

முல்லை நில மக்கள் குடிசை வீடுகளில் வாழ்ந்தார்கள். மண் சுவர் எழுப்பி வரகு தினை விளைந்த புற்களால் கூரையை வேய்ந்திருந்தனர். சில வேளை பனையோலைகளாலும் கூரை வேய்ந்திருந்தனர். (*பெரும்பாண்* 191) அந்த மண்சுவருக்கு செம்மண் சாந்து பூசி மெழுகியிருந்தனர். (*அகம்* 374)

ஆனால், இறைவனுக்கு சுட்ட செங்கற்களைக் கொண்டு கட்டப்பட்ட உயர்ந்த மதில்களையுடைய பெருங்கோயில் கட்டப்பட்டிருந்தாக *பெரும்பாணாற்றுப்படை* கூறும்.

**சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பு**

(*பெரும்பாண்* 405) இங்கு நகர் என்பது கோயில் என்ற பொருளில் ஆளப்பட்டுள்ளது.

**நெடியோய் நீ மேய கடிநகர்**

(*பரிபாடல்* 19;29) நெடியவனாகிய திருமாலே எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் என்று குறிப்பிடுகின்றது.

**மாயோன் மேய மன் பெருஞ் சிறப்பின்**
**தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்**

(*தொல்.* பொருள்; 1010) காயாம்பூ மலர்ந்தது கண்டு நிரைமீட்கச் செல்லும் வீரர்கள் அது மாயோன் நிறத்துள்ளதைக் கண்டு நன்னிமித்தம் எனக் கொண்டு மகிழ்தல் பூவைநிலை என வெட்சித்துறைகளுள் ஒன்றாக *தொல்காப்பியம்* குறிப்பிடுகின்றது. ஆநிரை கவர்ந்து சென்றவிடத்து முல்லை நில மக்களின் வீரர்கள் அவற்றை மீட்கச் செல்லும் போது நன்னிமித்தம் கண்டு செல்லுதல் ஒரு துறையாக குறிப்பிடப்படுகின்றது.

### 2.4.2.1. ஏறு தழுவுதல்

முல்லை நில மக்களின் வீரத்தையும் அஞ்சாமையையும் *கலித்தொகையைத்* தவிர பிற சங்க நூல்கள் கூறவில்லை. முல்லைக் கலியில் ஏறுதழுவும் வீரவிளையாட்டுக் காட்சியை மகாபாரதத்தோடும் கடவுளரோடும் ஒப்புமைப்படுத்துவதைக் காணலாம். அவர்கள் ஏறுதழுவியவருக்கே இளம் பெண்களை மணம் முடித்து தருவது மரபு. இளைஞர்கள் நீர்த்துறைகளிலும் ஆலமரத்தடிகளிலும் மாமரத்தின் கீழும் உறையும் சிறு தெய்வங்களுக்கு முறையாக வழிபாடு செய்த பின்னர் ஏறு தழுவ தொழுவினுள்ளே பாய்கின்றனர்.

**துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்**
**முறையுளி பராஅய் பாய்ந்தனர் தொழூஉ**

(*கலி.* முல்லைகலி 13;14) இவ் வீரவிளையாட்டை இளம் பெண்கள் தம் தோழியர் சூழ வந்து கண்டு கழிக்கின்றனர். கருஞ்சிவப்பு நிறத்தை கொண்ட ஏற்றின் பார்வைக்கு அஞ்சாது அதன் மீது பாய்ந்த இளைஞனைக் குத்திக் கொம்பினிடையிலேயே அவனது உடலைக் குலைக்கின்ற காட்சியானது அழகும் மென்மையும் வாய்ந்த பாஞ்சாலியின் கூந்தலைத் தீண்டிய துச்சாதனனைப் போரிலே நெஞ்சத்தைப் பிளந்து அழித்து பகைவர் நடுவே தன் வஞ்சினத்தை நிறைவேற்றிய வீமனைப் போல் காட்சி அளிக்கிறது என முல்லைக்கலி குறிப்பிடுகிறது.

**அம்சீர் அசைவியர் கூந்தல் கைநீட்டியான்**
**நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவண்**
**வஞ்சினம் வாய்த்தானும் போன்ம**

(*கலி.* முல்கலி 18;20) செம்புள்ளிகளையுடைய வெள்ளை ஏற்றின் கோபத்துக்கு அஞ்சாது அதன் மேல் பாய்ந்த இளைஞனைக் கூரிய அம்பு முனையால் குத்திக் குலைக்கின்ற காட்சி, நடு இரவிலே வந்து தன் தந்தையைக் கொன்றவனைத் தன் ஆற்றலின் வலிமையால் தலையைத் திருகிய அசுவத்தாமனைப் போன்றிருந்தது என்கிறது இன்னொரு பாடல்.

**ஆரிருள் என்னான் அருங்கங்குல் வந்து தன்**
**தாளின் கடந்து அட்டுத் தந்தையைக் கொன்றானைத்**
**தோளில் திருகுவான் போன்ம**

(*கலி.* முல்லை கலி 30-32) முல்லைக் கலியின் முதல் ஏழுப்பாடல்கள் ஏறுதழுவுதலை குறிப்பிடுவதுடன் பாரதக் கதைகளுடன் இணைத்து பாடப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**2.4.2.2.கடவுளரை வென்ற வீரர்கள்**

சந்திரனைப் போன்ற நெற்றிச் சுட்டியுடைய காரி, மலைப்பூக் கண்ணி சூடிய பொதுவனைச் சாடி குடர் சரியக் குத்தி குலைக்கின்ற காட்சி ஊழி முடிவிலே ஒரு பாகத்தில் பசுமையான உடையையுடைய எருமைவாகனனான கூற்றுவன் நெஞ்சைப் பிளந்து குடலை கூளிக்கு ஊட்டுவது போன்றிருந்தது.

**பசுங்கட் கடவுள் இடரிய ஏற்றெருமை**
**நெஞ்சு இடந்தட்டுக்**
**குடர் கூளிக்கு ஆர்த்துவான் போன்ம்**

(கலி. முல்,கலி.24-26) இப்படிக் கொடிய கூற்றுவனைப் போல் உள்ள காளைகளிடம் போட்டியிட்டு வெற்றி பெற்ற வீரனுக்கு தலைவியை மணம் முடித்து தர ஏற்பாடாகிறது. முல்லை நில மக்கள் எல்லாரும் ஒன்றாகக் கூடியிருக்கின்றனர். தொழுவிலே பல்வேறுபட்ட காளைகள் காட்சி தருகின்றன. அவை ஒவ்வொன்றும் கடவுளோடு ஒப்பிடப்படுகின்றன. நீண்ட நெடிய பானைக் கொடியோனான பலராமனைப் போல் வெள்ளை எருதும், திருமாலைப் போன்ற கரிய போர்குணம் கொண்ட எருதும் முக்கண்ணனான சிவனின் மேனியைப் போலச் செவலை நிற எருதும், கடல் கலங்கும் படி சென்று சூரனை வென்று வேலேந்திய முருகனின் இளம் சிவப்பு நிற எருதும் தொழுவில் இருந்தன.

**வானுற ஓங்கிய வயங்கு ஒளிர் பனைக் கொடிப்**
**பால் நிற வண்ணன் போல் பழிதீர் வெள்ளையும்.**

**..........................................................**

**பொருவரும் பண்பினவ்வையும் பிறவும்**

(கலி. முல் கலி 7-15) இத்தகைய ஏறுகளை இளைஞர்கள் தழுவ முற்படுகின்றனர். மாட்டின் கொம்புகள் வேல்நுனிபோல இருந்தும் அஞ்சாதவனாக அந்த வெள்ளையின் கழுத்திலே பாய்ந்து அனைத்து தழுவினான். அவனை அருகில் இருந்த இளங்காரி இடைவிடாது குத்தும் காட்சியை கண்ட தோழி, நிலவினை விழுங்க முயன்ற பாம்பினை விடுவிக்கும் நீல நிறவண்ணனைப் போல கற்பனையில் காணுகின்றாள்.

**பால் நிற வெள்ளை எருத்தத்துப் பாய்ந்தானை**
**நீல நிற வண்ணனும் போன்ம்**

(கலி. முல்.கலி 35-38) இடி முழக்கம் போல ஏறுகள் முழங்கின. இசைக்கருவிகள் முழங்கின. இத்தன்மையால் அத்தொழு துரியோதனாதிகளுக்கும் பாண்டவர்க்கும் இடையே நடந்த போர்களம் போல ஏறுதழுவிய காட்சி இருந்தது.

**புரிப மேற் சென்ற நூற்றுவர் மடங்க**
**வரிபுனை வல்வில் ஐவர் அட்ட**
**பொருகளம் போலும் தொழு**

(கலி. முல்.கலி 57-59) தொழுவினுள் ஏறுகள் இடம் பெறும் காட்சியை இப்படிக் காட்சிப் படுத்துகின்றனர். திருமாலின் சங்குபோன்ற நெற்றியிலே சங்கு வெள்ளைச் சுட்டியுடன் விளங்கிய காரி ஏறும், பலராமன் மார்பிலே சிவந்த மாலை விளங்குவது போலச் சிவப்பு மறுவிளங்கும் வெள்ளை ஏறும் சிவனின் நீல மணிக்கழுத்து போல் கபிலை நிற ஏறும் ஆயிரம் கண் உடைய இந்திரன் போலப் புள்ளிகளுடன் விளங்கிய

ஏறும், முருகன் அணிந்த வெள்ளைத்துகில் போல வெள்ளைக் கால்களையுடைய சிவந்த ஏறும் இவை போன்ற வனப்புடைய பலவும் ஒரு சேர தொழுவுக்குள் ஏறுகளை போக விட்டனர். அக்காட்சியை.

**தெள்ளிதின் விளங்கும் சுரி நெற்றிக் காரியும்**

**.............................................................**

**வாலிது கிளர்ந்த வெண்காற் சேயும்**

(*கலி.* முல். கலி 10-18) என்றவரிகளால் அறிய முடிகின்றது. ஏறுதழுவலில் பல கடவுள் தன்மையுடன் காளைகள் ஒப்பிடப்பட்டாலும் இறுதியில் முழுமுதற் கடவுளானத் திருமாலுக்கு நன்றி செய்யும் விதமாக குரவை பாடுகின்றனர்.

**பாடிமிழ் பரப்பகத்து அரவணை அசைஇ**
**ஆடுகோள் நேமியோன் பரவுதும்**

(*கலி.* முல்.கலி 71-72) அத்துடன் நாட்டையும், மன்னனையும் வாழ்த்தி திருமாலையும் வழிபடுகின்றனர்.

**தொல் கதிர் திகிரியோன் பரவுதும்....ஒல்கா**
**உரும் உறழ் முரசின் தென்னவற்கு**
**ஒரு மொழிக் கொள்க இவ்வுலகுடன்**

என்று முல்லைக் கலிப் பாடல் குறிப்பிடுகின்றது.

முல்லை நிலத்தில் திருமாலே வணக்கத்திற் குரிய கடவுளாக இருந்தாலும் பிற தெய்வங்களும் கற்பனையில் ஒப்பிடவும் அறிந்தேற்கவும் தக்கவகையில் முல்லை நில மக்கள் இருந்தனர். அவர்களின் வாழ்க்கை இருந்தது. தனிக்குடும்பம் ஏற்பட்ட காலத்தில் தனது ஆண்மையை வீரத்தை நிலை நாட்டி பெண்ணை இரண்டாம் நிலைக்கு தள்ளினான் என்பதை இதன் மூலம் அறியமுடிகின்றது.

உறையூர் முதுவத்தனார் பாடலில்,

**..........................பனிமிகப்**
**புல்லென் மாலைச் சிறு தீ ஞெலியும்**
**கல்லா விடையன் போல**

(*புறம்* 331:4-5) குளிர் மிகுதலால் புல்லென்ற மாலைப் பொழுதிலே சிறிய தீக்கடை கோலைக் கடைந்து தீவுண்டாக்குகின்ற கல்லா இடையன் என கூறப்படுகின்றான்.

### 2.4.2.3. முல்லைநில மக்களின் நடுகல் வழிபாடு

கோவலரின் ஆநிரைகளை மீட்பதற்காக போரிட்டு அத்தலைவன் இறந்து விடுகின்றான். அவனுக்கு நடுகல் நடப்படுகின்றது. அதனை வழிபடும் நன்றி மறவாக் கோவலர் வேங்கையின் நறிய பூவைப் பனையோலைகளால் அலங்கரித்து தொடுத்து இலைமாலைகளைச் சூட்டி அக்கல்லை வழிபடுகின்றார்கள்.

**ஓங்கி நிலை வேங்கை ஒள்ளினீர் நறுவீப்**
**போந்தைந் தோட்டில் புனைந்தனர் தொடுத்துப்**
**பல்லான் கோவலர் படலைச் சூட்டக்**
**கல் லாயினையே**

(*புறம்* 265) பல்லான் கோவலர் படலை சூட்டிய செய்தியைச் சிறுகருந்தும்பியார் *புறநானூற்றி*ல் எடுத்துரைக்கின்றார்.

### 2.4.2.4.முல்லைநிலத் தொழில்

ஒளியுடை மணி பெற்ற கோவலரைப் *பதிற்றுப் பத்து* கூறுகிறது. ஆநிரைகளை மேய்ப்பதற்குப் புலத்திலே விட்டபின்னர் முல்லை மலர் பறிப்பது மட்டும் கோவலர் செயல் இல்லை. மாறாக குறுங்கற்கள் உடைய உயர்ந்த காட்டினிடையே ஒளி மிக்க மணியைப் பெறுபவராகக் கோவலர் உள்ளனர். கல்லுயர் கடத்திடைக் கதிர் மணி பெறுஉம் (*பதி* 21-22) என்ற வரி இதனை குறிப்பிடுகின்றது. கொங்கு நாட்டில் காங்கேயம் காட்டில் ஒளி வீசும் மணிக் கற்கள் கிடைக்கப் பெறுவதை ஒப்புமைப்படுத்தி கூறப்படுகின்றது.

ஆநிரை மேய்த்தலே ஆயரின் தலையாயத் தொழில் இதனை

**சிறுதலை ஆயமொடு குறுகல் செல்லாப்**
**புலி துஞ்சு வியன் புலத்தற்றே**

(*புறம்* 54;12-13) சிறிய தலையை உடைய ஆட்டினத்தோடு அருகில் செல்லாத புலி தங்கும் அகன்ற நிலப்பகுதியில் இடையர் ஆடு மேய்த்ததையும் அவற்றைப் பாதுகாப்பாக ஓட்டிச் சென்ற நிலையும் குறிப்பிடப்படுகின்றது.

**வியம் புலம் படர்ந்த பல்லா நெடுவேறு**
**மடலை மாணிழல செவிடக் கோவலர்** (*புறம்* 339)

**முல்லைக் கண்ணி பல்லான் கோவலர்**
**புல்லுடை வியன் புலம் பல்லா பரப்பி** (*பதி* ப 21; 20-21)

மேற் சுட்டிய இரண்டு பாடல்களும் கொடிய விலங்கினங்களிடமிருந்து கடிய காவல் செலுத்தி மேய்த்து வந்ததை உணர்த்துகின்றன. முல்லைக் கண்ணியணிந்த கோவலர் புல் நிறைந்த அகன்ற இடத்திலே பல பசுக்களை பரக்கச் செலுத்தினமை பற்றி ''

**புல்லுடை வியன் புலம் பல்லா பரப்பிய கோவலர்**

என்ற (*பதிற்றுப்பத்து* 62;13) வரிகளால் புலனாகிறது.

### 2.4.2.5. முல்லை நில மக்களின் அரசியல் தொடர்பு

இம்மக்களின் இருப்பிடத்தில் மன்னனுக்கு உற்றுழி உதவும் சீறூர்த்தலைவனின் ஆலோசனை நடைபெறுவதால் அரசியல் வாழ்வில் இம்மக்கள் இடம் பெற்றமை தெரிய வருகின்றது. குமிழம் பழத்தை உண்ணும் வெள்ளாடுகளின் புழுக்கைகள் வெள்ளை கொட்டைகளைப் போல பரந்து கிடந்தன. அத்தகைய பந்தலில் இடையனின் சிறிய விளக்கொளியில் பாணருடன் இருந்த வேந்தன் ஆலோசனை நடத்துகின்றான்.

**குமிழும் வெள்ளை மறுவாய் பெயர்த்த**
**வெண் காழ் காய வண்காற் பந்தர்**
**இடையன் பொத்திய சிறு தீ விளக்கத்துப்**
**பாணரோடிருந்த நாணுடை நெடுந்தகை**
**வலம்படு தானை வேந்தற்கு**
**உலந்துழி உலக்கு நெஞ்சறி துணையே**

(*புறம்* 324.9-14) அரசியல் ஆலோசனை இடையரின் பந்தரின் கீழ் நடைபெற்றதை *புறநானூறு* சுட்டுகின்றது.

### 2.4.2.6. புறப்பாடல்களில் முல்லை நில மக்களின் வாழ்வியல்

*புற நானூற்*றில் உள்ள ஏழு பாடல்கள் முல்லைநில மக்களின் சிறப்பினைக் கூறுகின்றன. ஆயர் அறவை நெஞ்சத்தவராக ஒரு பாடலும் (*புறம்* 362) இடையர், மடிவாயிடையனாகவும், கல்லா இடையனாகவும் (*புறம்* 54, 324,331) மூன்றுபாடல்களும், கோவலர், பூவான் கோவலர், பல்லான் கோவலர், முல்லை மலர் பறிக்கும் கோவலர் என (*புறம்* 224, 265,339) மூன்று இடங்களிலும் இடம் பெற்றுள்ளனர்.

*பதிற்றுப்பத்து* பல்லான் கோவலர் வியன் புலம் பல்லா பரப்பியவர் (பதிமூன்றாம் பத்து 21-20, ஏழாம் பத்து 62;13) என்று கோவலரையும், சால்வலி பரவி

அண்டர்(*கலித்தொகை* முல்லைக் கலி 104-18;25 *பதிற்* 889) என அண்டரையும் கழுவுள் என்ற சீறூர் தலைவனைப் பற்றியும் (*பதிற்* 71;16-18) *பதிற்றுப்பத்து* கூறுகிறது.

*புற நானூற்*றுப் பாடலில் ஆயர்கள் உயர்ந்த நிலையில் காணப்படுகின்றார்கள். மன்றத்திலே விழா எடுக்கின்ற வேளையில் இவர்களுக்கும் சிறப்பிடம் தரப்படுகின்றது. சிறுகுடியில் வாழ்கின்ற மறம் மிக்க நெஞ்சத்தினை உடைய ஆயர்களோடு இருக்கின்றார்கள். செருந்தி முதலிய மரங்கள் செறிந்த காட்டில் மலரும் பூக்களின் மணம் கமழும் விழாவாகப் பொலிகின்ற அகன்ற மன்றத்தைக் கொண்டது அவ்வூர்.

**அறவை நெஞ்சத்தாயர் வளரும்**
**மறவை நெஞ்சத்து ஆய் இலாளர்**
**அரும்பலர் செருத்தி மலர்கமழ்**
**விழவணி வியன்கள மன்ன**

(*புற*, 390:1-3) என்ற ஔவையாரின் பாடலில் ஆயர் உயர் நிலை பெற்றவராக அறவை நெஞ்சத்தவராக காட்சியளிக்கின்றனர்.

பசிய இலையால் தொடுக்கப்பட்ட தழைக்கண்ணி அணிந்தவனாக, அழுக்கு படிந்த உடை கொண்டவனாக மடித்த வாயை உடையவனாக (கிடை மடக்கிட ஒலி எழுப்பி) கல்லா இடையன் குறிப்பிடப்படுகின்றான் (புறம் 54)

அவ்வாறே பசுக்கள் தங்கும் இடமாகிய மன்றம், அதன் ஆரவாரத்தையும் பொலிவையும் சேரனின் படையெடுப்பால் இழந்துவிட்டதையும்*பதிற்றுபத்து* குறிப்பிடுகின்றது. கோவலரின் பசுக்கள் மன்றத்தில் இருக்கும் சிறப்பும் மன்றச் சிறப்பும் பதிவு செய்யப்பட்டுள்ளது.(பதி 17-17)

### 2.4.2.7.ஆயர் தலைவன் கழுவுள்

இடையரின் தலைவனாகக் கழுவுள் என்பவன் கூறப்படுகின்றான். போரிலே புறம் காணும் நிலை அவனுக்கு ஏற்படுகிறது. குடக்கோ பெருந் சேரலிரும் பொறையின் வெற்றிச் சிறப்பினைப் பெருங் குன்றூர்க்கிழார் இடையரின் தலைவன் கழுவுளை வெற்றி பெற்றதையும்.

**பொரு முரண் எய்திய கழுவுள் புறம் பெற்று**
**கால் வலி புரவி அண்டரோட்டி**

(*புறம்* 88;7-9) புறங்கொடுத்து ஒரு தலைப் பெற்றுக் காலால் விரைந்து

செல்லுதலில் வல்ல குதிரைகளை உடையவன் என குறிப்பிடுகின்றது.

### 2.4.2.8.பரிபாடலில் கண்ணன்

ஆயர்களின் தெய்வமான திருமால் பரிபாடலின் மூலம் கண்ணனாக அறிமுகமாகின்றார். இடவல குடவல கோவல காவல என்ற கண்ணனைப் பற்றிய செய்தியைப் பரிபாடலின் மூன்றாம் பாடல் கூறுகின்றது (*பரி* 3;82) ஆய்ச்சியரோடு குரவைக் கூத்து ஆடுவதில் கூத்தாட எழுந்த குடத்தினை உடையவனே, பசு நிறை மேய்க்கும் கோவலனே என்று கூறப்படுவதால் கண்ணனை கோவலரில் ஒருவராகவே கருதி பாடப்பட்டுள்ளது. ஆயரோடு ஆயர் பாடியில் வளர்ந்ததால் அவர்களில் ஒருவனாகவே கண்ணன் கருதப்படுகின்றான்.

சங்க கால ஆயர்களின் வாழ்க்கைச் சிறப்பையும் பண்பாட்டு வாழ்வியல் ஒழுக்க முறைகளையும் அக/புறப் பாடல்களின் வழியே இவ்வாறு எளிதாக அறிய முடிகின்றது.

### 2.4.3.மருத நில வேளாண்மை உற்பத்தி

திணைப் பாகுபாட்டினுள் மருத நிலம் ஓர் நிலமாக குறிப்பிடப்பட்டாலும், மிக வளர்ந்த சமூக, பொருளியல் பண்பாட்டு வளர்ச்சிகளைக் கொண்டுள்ள ஓர் சமூக அமைப்பே மருத நிலமாக விளங்குகின்றது. சரியாக குறிப்பிட வேண்டுமானால் ஆங்காங்கே இருக்கின்ற மருத நிலங்களைப் போன்ற சமூக பொருளாதார வளர்ச்சியைப் பெறவே மற்ற நிலங்களுக்குரிய சமூகங்களாகிய திணை மக்களும் முயற்சித்தனர் போராடினர்; என்பதே உண்மையாகும்.

நெல், கரும்பு, வாழை, முதலிய பயிர்கள் விளைந்தது மருத நிலம். இங்கு முதன்மையான தொழில் உழவு ஆகும் (*நற்* 400;1-2, *பதிற்* 50;3) ஒரு வேலி நிலத்தில் ஆயிரம் கலம் செந்நெல் விளைந்ததாக (*புறநானூறு* 391;21)புறப் பாடல் கூறுகின்றது. பத்துபாட்டு நூல்கள் குறிப்பிடுகின்றன. நெல் வகைகளாக செந்நெல், தோப்பி நெல், மூங்கில் நெல் என பல வகையான நெல்கள் பற்றி (*புறம்* 142,230 *மலைபடு* 121) அறிய முடிகின்றது. கருட சம்பா, ஓத்திர நெல் ஆகியன உயர் ரகமாகும். இவை பார்ப்பனர்களுக்காக விளைவிக்கப்பட்ட நெல் வகைகளாகும்.

**தொல் பசி அறியாத் துளங்கா இருக்கை**
**மல்லர் பேரூர்**

(*பெரும்* 253-254) என மருத நிலத்தூர் சுட்டப்படுகின்றது. நாற்று நடுதல், நெல் அறுவடை, கடாவிடுதல், கரும்பாலை ஆகியவற்றைப் *பெரும்பாணாற்றுப்படை* (207-310) குறிப்பிடுகின்றது.

**கோடை நீடினுங் குறைபட லறியாத்**
**தோடாழ் குளத்த கோடு காத்திருக்குங்**
**கொடுமுடி வலைஞர் குடி வயிற்சேப்பின்**

(*பெரும்* 272-274) என குளத்தின் வளம் பாடப்பட்டுள்ளது. கோடையின் வறட்சி நீண்ட போதும் குறையாத நீர் வளமுடைய குளத்தையுடைய ஊராக மருத நிலத்தூர் குறிப்பிடப்படுகின்றது.மருதநிலத்தூரின் நீர்வளத்தால் மீனவராகிய வலைஞர் குடியும் வாழ்ந்ததை அறியமுடிகின்றது.

**சிதரற் பெரும் பெயல் திறத்தலிற் றாங்காது**
**குணகடற் கிவர்தருங் குரூப்புனலுந்தி**
**நிவந்துசெ னீத்தங் குளங்கொளச் சாற்றிக்**
**களிறு மாய்க்குங் கதிர்க் கழனி**

(*மது* 244-247) என்று *மதுரைக் காஞ்சி* மழை நீரால் குளம் பெருகி வயல் வளம் சிறந்ததைக் குறிப்பிடுகிறது. மருத நிலத்து உற்பத்தித் தொழில் உழவேயாகும். கலப்பையின் கொழு நிலத்தில் மறையும்படி அழுத்தி உழுதனர் (*பெரும்* 198-200) வயல் 'செய்' என்றும் 'செறு' என்றும் (*பெரும்* 210, *புறம்* 184;3,318;7) கூறப்பட்டது. மேலும் தண்ணடை என்றும், பணை என்றும், பழனம் என்றும், மென்பால் என்றும், மென்புலம் என்றும், வயல் என்றும் மருத நில உற்பத்தி நிலங்கள் சுட்டப்படுகின்றன. இவற்றில் தண்ணடை என்பது மருத நிலத்து ஊரைக் குறிக்கும். 'வயல்' என்ற சொல் இன்றும் குறிப்பிடப் படுகின்றது. இச் சொல் சங்க இலக்கியத்துள் 52 இடங்களில் பயின்று வருகின்றது.

அக்காலத்தே நெல் வயல் சூழ்ந்த மருத நிலத்து ஊரினை 'பரிசில்' வழங்கியதாக சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. மதில்களால் சூழப்பட்ட மருத நிலத்து ஊர்களை ஆண்டவர்கள் முதுகுடி மன்னர் ஆவர்.[12] வானம் பார்ந்த பூமியாகிய, முல்லை நிலத்து வன்புல வேளாண் உற்பத்தியானது நீரியல் தொழில் நுட்பத்தினையும், நீர் வளத்தினையும் பெருக்க அன்றைய ஆட்சியாளர்கள் மேற் கொண்ட முயற்சியால் மென்புலம் எனப்படும் நன்செய் நில உற்பத்தி முறைமை பரந்தளவில் பெருகியதையும் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. உழுதுண்போர், உழுவித்துண்போர் என இருவேறு முரண்பட்ட வர்க்கங்கள் நிலவிய வளர்ந்த உற்பத்தி முறை நிலவிய சமூகமாக மருத நில சமூகம் அறியப்படுகின்றது.

ஆறுகள் பாயும் சமவெளிப் பகுதியான மருத நிலத்தில் உழவுத் தொழில் சிறப்பிடம் பெற்றது.இரும்புக் கொழுக்கள் பூட்டப்பட்ட கலப்பைகளில் காளைகளையும் எருமைகளையும் பயன்படுத்தி உழவு செய்யப்பட்டதால்,

உழவுத்தொழில் இப்போது ஆண்களின் தொழிலாகப் படிமலர்ச்சி பெற்றது.ஒரு யானை படுக்கும் இடத்தில் நூறு யானைகளுக்கு உணவளிக்கும் வளமான நிலமாக மருதநிலம் இருந்ததால், மருதநிலத்தில் செல்வம் உபரியாகப் பெருகத் தொடங்கியது.வேளாண்மைக்குத் துணை செய்யும் வகையில் கொல்லர், தச்சர் போன்ற தொழில் சார்ந்த குழுக்கள் (skilled labourers) தோன்றின. நிலத்திற்கு உரிமையுடையார் 'கிழார்' எனப் பெற்றனர்.மூவேந்தர்கள் பாணர்களுக்கு நிலங்களைத் தானமாக வழங்கினர். அவ்வாறு வழங்கப்பட்ட நிலக்கொடைகளில் நிலத்தில் உழுது வாழ்ந்தோரும் தானமாக வழங்கப்பட்டனரோ என்று கருதும்படி குண்டுகட்பாலியாதனார் என்னும் புலவர் பாடியுள்ள புறப்பாடலில் ஒரு குறிப்பு இடம் பெற்றுள்ளது:

**...வென்றிரங்கும் விறன் முரசினோன்**
**என்சிறுமையின் இழிந்து நோக்கான்;**
**தன்பெருமையின் தகவுநோக்கி**
**குன்றுறழ்ந்த களிறென்கோ**
**கொய்யுளைய மாவென்கோ**
**மன்றுநிறையும் மாவென்கோ**
**மனைக்களமரொடு களமென்கோ**
**ஆங்கவை.கனவென மருள வல்லே நனவின்**
**நல்கி யோனே நகைசால் தோன்றல்...**

(*புறம்*. 387 :19-27). செல்வக் கடுங்கோவாழியாதன் தனக்கு நல்கிய பரிசில்களைப் புலவர் பட்டியலிடும்போது, **மனைக்களமரொடு களம்என்கோ** என்று பதிவு செய்துள்ளார். அதாவது, நிலவுடைமையாளரிடமிருந்து உணவும் உடையும் பெற்றுக்கொண்டு அந்நிலங்களிலே குடிசை கட்டித் தங்கியிருந்து நிலவுடைமையாளர்க்கு உழைத்த பண்ணைக் கூலிகள் தான் இப்பாடலில் குறிக்கப்பெறுகின்றனர். சங்க காலத்திலேயே மருத நிலத்தில் நிலவுடைமைச் சமுதாயம் தோன்றிவிடுகிறது.அதன் காரணமாக உழுவோர், உழுவித்து உண்போர் என்று இரண்டு வர்க்கங்கள் தோன்றி விடுகின்றன.

### 2.4.4. நெய்தல் நில உற்பத்தி

வயல் சூழ்ந்த மருத நிலத்தை அடுத்து நீர் சூழ்ந்த கடற்கரையும், பெரும் மணற்பரப்பும் உள்ள நெய்தல் நிலம் அமைந்துள்ளது. எனவே இதனை 'பெருமணல் உலகம்' (*தொல்*. பொருள் அகத் 5;4) என *தொல்காப்பியம்* சுட்டுகின்றது. தென்னிந்திய தீபகற்பமான பண்டையத் தமிழகம் மூன்று புறங்களிலும் கடலால் சூழப் பட்டிருந்ததால் மிகப் பெரிய நீண்ட கடற்கரையினைப் பெற்றிருந்தது.

இக்கடற்கரைப் பகுதியினை 'நெய்தல்' என்று பண்டைய இலக்கண, இலக்கிய நூல்களும் குறிப்பிடுகின்றன.

நெய்தல் நில மக்கள் 'பரதவர்' 'நுளையர்' எனப்பட்டனர். இந்நிலத்தின் தலைவர்கள் துறைவன், சேர்ப்பன், புலம்பன், கொண்கன், என்று குறிப்பிடப் படுகின்றனர். நெய்தல் நிலம் மணற்பாங்கான பகுதியென்பதால் இங்கு உணவு தானியங்கள் விளையவில்லை. மாறாக, தென்னை, பனை, மா, பலா, முந்திரி, புன்னை முதலான மர வகைகள் நன்கு செழித்து வளர்ந்தன. எனவே ஆதி விவசாயமான தோட்ட வேளாண்மையில் ஈடுபட்டனர் என்பது புலனாகும். மேலும் கடற்கரையினை ஒட்டி உப்பளங்களும், உப்பங்கழிகளுக்கும் அமைந்திருந்தன. பரதவர்கள் கடலுக்குள் சென்று மீன் பிடித்து வந்து உள் நாட்டில் விற்று, மாற்றாக உணவு தானியங்களை பெற்றனர். உப்பளத்தில் விளைந்த உப்பினை விற்றும் தானியங்களைப் பெற்றனர். உப்பு வணிகம் மேற்கொண்டோரை சங்க இலக்கியம் 'உமணர்' என்று குறிப்பிடுகின்றது (*மதுரை* 117, *அகம்* 340;14; 390;7-8)

பரதவர்கள் கடலுக்குள் சென்று மீன் பிடிக்க கட்டு மரங்களையும் படகுகளையும் பயன்படுத்தினர் (*அகம்* 280;9, 330;15-16) மீன் பிடிக்கச் செல்லும் படகுக்கு **'திமில்'** என்றும் (*மது*116, *பட்டி* 112; *நற்* 111-6, 175-1,199-6, 331-6, 331-8, 372-12, 388-4; *குறு* 123-5, 304-4; *பரி*;10-71, 10-102; *கலி* 136-1, 149-1; *அக* 10-10, 60-3, 65-11, 70-1, 190-3, 210-6,240-5, 260-4, 330-16, 340-18, 350-11; *புறம்* 24-4, 60-1, 303-7) சுட்டப்படுகின்றது. **அம்பி** (*நற்*.74-3, 315-3, 354-7, *ஐங்* 98-2, 168-2; *பரி* 6-75, 11-71, *கலி* 103-38, 106-25, *அக* 29-18, 187-23, *புற* 261-4, 343-2, 381-24) இடங்களில் இடம் பெற்றுள்ளது. இதன் அடியாகவே ஓடக்காரர் **திமிலர்** எனப்பட்டனர். (திமிலர்-மது-319) **தோணி** (*அக* 50-1, 344-5; *புற* 299-3, 343-6) என்ற சொல்லும் அதனடியாக **தோணியர்** என்ற சொல்லும் பரதவரைக் குறித்து வந்தன. **மிதவை** ஐந்து இடங்களிலும், **மிதவையர்** (*பரி* -35) ஓரிடத்திலும் இடம் பெற்றுள்ளன. **கடல் மரம்,** வங்கம் என்ற பெயர்களிலும் மீன் பிடிப்படகு சுட்டப் பட்டுள்ளது. இதனைக் கொண்டு தொழில் புரிந்தோர் கடலன், கடலர் எனப்பட்டனர். கடல் மரம் (*நற்* 30-8) வங்கம் (*மது* 536; *நற்* 189-5, 258-9, *பதி* 52-4; *பரி* 20-16, *கலி* 92-47, *அக* 255-1)

**........ ........ ...... ...... ....... பாற்கேழ்**
**வாலுளைப் புரவியோடு வடவளந் தரூஉ**
**நாவாய் சூழ்ந்த நளிநீர்ப் படப்பை**
**மாட மோங்கிய மணன்மலி மறுகிற்**
**பரதர் மலிந்த பல்வேறு தெருவிற்**
**சிலதர் காக்குஞ் சேணுயர் வரைப்பி**

**னெல்லுமு பகட்டொடு கறவை துன்னா**
**மேழகத் தகரோ டெகினுங் கொட்குங்**
**கூழுடை நல்லில் கொடும் பூண் மகளிர்**

(*பெரும்* 320-327) குதிரையும், வடநாட்டுப் பொருட்களும் கொண்ட நாவாய்களையும், தொழில் செய்வோரால் காக்கப்படும் பண்டக சாலைகளையும், பரதவர் மிக்க மாடங்கள் உயர்ந்த தெருக்களையும், நெல் விளைதற்கு காரணமான எருதுகளுடன் ஆடுகளும், நாய்களும் உள்ள, சோற்று வளம் மிக்க நல்ல இல்லங்களையும் உடையதாக நெய்தல் நிலம் காட்டப்பட்டுள்ளது.

நெய்தல் நில மக்களாகிய பரதவர்கள் வெண்ணிறமான உப்பை விளைவித்தனர். உப்பு பாத்திகளில் பாய்ச்சப்பட்ட நீர் ஆவியாகப் போனப் பின்பு பாத்திகளில் உப்பு விளைந்து படிந்திருக்கும் என்பதை (*அகம்* 140; 1-3) அகப்பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது. அதனைப் பரதவர்கள் குவியலாக குவித்து வைத்து உப்பு வாணிகரின் வருகைக்காக காத்திருப்பதை (*நற்* 331;1-3) *நற்றிணை* குறிப்பிடுகின்றது. உப்பை பெற்றுக் கொண்டு நெல்லை தந்து செல்லும் உப்பு வாணிகர் உமணர் எனப்பட்டனர். பரதவர்கள் மீன்களுக்கும், உப்புக்கும் மாற்றாக நெல்லைப் பெற்றனர். உமணர்கள் பெற்ற உப்புக்கு மாற்றாக நெல்லைப் பெற்றுக் கொண்டு உப்பை கொடுத்து வாணிபத்தில் ஈடுபட்டனர். ஆகவே பரதவர், உமணர் ஆகிய இருவேறு பிரிவினர் நெய்தல் நிலத்தில் இருந்தனர் என்பதை அறிய முடிகின்றது.

உப்பங்கழியாகிய வயலில் பரதவர் விளை வித்த உப்பினை குன்றுகளை எல்லாம் கடந்து சென்று உமணர் விற்பர். (*அகம்* ;140; 1-4, *அகம்* 30;5) கி.மு. முதல் நூற்றாண்டைச் சார்ந்த தமிழ் பிராமி கல்வெட்டொன்று அழகர் மலையில் கிடைத்துள்ளது. உப்பு வணிகன் ஒருவனை பற்றியது அது. **உப்பு வணிகன் வியக்கன் கணதிகன்** என குறிப்பிடுவதன் மூலம் கி.மு. முதல் நூற்றாண்டிலேயே உப்பு ஓர் வாணிபப் பொருளாக இருந்துள்ளது என்பதற்கு கல்வெட்டுச் சான்று கிடைத்துள்ளது. கிழக்குப் பகுதியில் விளைந்த உப்பை உள் நாட்டின் மேற்குப் பகுதிக்கு கழுதைகளின் மேல் ஏற்றிச் சென்று விற்றதை பற்றி (*அகம்* 207; 1-7) குறிப்பிடுகின்றது.

(*புறம்* 368-9; 400-2) நீரினைத்துழாவிச் செல்கின்ற துடுப்பு (*மதுரை* 34; *பட்* 153; *மலை* 336 *கலி* 59-4; 101-3; *அக* 78-9, 108-15; *புற* 26-10; 328-1; 372-7) குறிப்பிடப்படுகின்றது. சுறவு (11) இடங்களிலும், சுறா (19) இடங்களிலும் சுறவம் (1) இடத்திலும், சுறவுக் கொடியோன் (1) இடங்களிலும் இடம் பெற்றுள்ளன. சுறாவினைப் பிடித்ததைப் பற்றிய பாடல்களும் இடம் பெறுகின்றன. சுறவினை எறிந்த அக்கருவி 'எறியுளி' (*நற்* 388-3; *குறு* 304-1: *அக* 210-2) எனப்பட்டது.

**இலங்கு இரும்பரப்பின் எறி சுறா நீக்கி**
**வலம்புரி மூழ்கிய வான்திமிற் பரதவர்**

(*அகம்* 350;10-11) பாடலால் முத்து குளிப்பவரும், சங்கு மூழ்குனரும் 'கடல் மந்திரம்' செய்து சுறா போன்றவற்றைக் கட்டுபடுத்தி செயலாற்றியதாகவும், கடல் தெய்வம் துணையிருந்ததாகவும் அம்மக்கள் நம்பியுள்ளனர். வலம்புரி (*திரு* 13;27, *பெரு* 35; *முல்* 2; *நெடு* 142; *நற* 172-8; *ஐங்* 193-1; *பதி* 67-6; *பதி*-2-10; *பரி* 3-88, 13-44;15-59; *கலி* 135-1; *அக* 201-5, 350-11; *புற* 225-12, 397-5) ''சங்கும்', ''கடல் கெழு செல்வி'' என கடல் தெய்வமும் (*அக* 370-12) சுட்டப்பட்டுள்ளது.

கடல் ''புணரி'' என்றும் (33) தெப்பம் ''புணை '' என்றும், கப்பல் ''நாவாய்'' என்றும், மீன் பிடிக்கும் கருவி (நீர் நிலைகளுக்கானது) பறி என்றும் வழங்கப்பட்டுள்ளது. சங்கானது பணிலம் என்றும், வளை என்ற பெயரிலும் இடம் பெற்றுள்ளது. பிற தேசங்களுக்கு மரக்கலங்கள் மூலம் ஏற்றுமதி, இறக்குமதி நடந்ததையும், கடல் வழி வாணிபம் மேற் கொண்டதையும் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம். அம்மரக்கலங்கள் நாவாய் எனப்பட்டன (*பெரு* 321, *மது* 83, 321, 379, *பட்* 174, *நற்* 295-6, *பரி* 10-39; *அக* 110-18, *புற* 13-5, 66-1, 126-5) அத்துடன் கி.மு. 3200-2000 கால கட்டங்களிலேயே கல் நங்கூரங்கள் பயன் படுத்தப்பட்டுள்ளதையும், பிறகு காலப் போக்கில் மர நங்கூரமாக, இரும்பு நங்கூரமாக மாற்றமடைந்து வந்துள்ளதையும், முனைவர் ந, அதியமான், முனைவர். பா.ஜெயக்குமார் ஆகிய தொல்லியில் அறிஞர்கள் கருதுகின்றனர்.[13] பிற நாட்டு நங்கூரங்களை விட தமிழகத்தில் கிடைத்த இராமநாதபுரம் மாவட்டக் கடற்கரைப் பகுதி, மண்டபம் கடற்கரைப் பகுதியில் கிடைத்த நற்கூரக் கற்கள் அளவில் பெரிதாகவும், தொழில் நுட்பத்தில் மேம் பட்டதாகவும் இருப்பதாகத் தெரிவித்துள்ளனர். *மதுரைக் காஞ்சி* நங்கூரக் கல்லைச் (கல்) சுட்டுகின்றது.

**கருங்காற்று எடுப்ப கல் பொருது உரைஇ**
**நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல**

என்ற பாடல் வரிகள் நற்கூரக் கற்களையே புலப்படுத்துகின்றன. மேலும் நங்கூரத்தின் அவசியம் பற்றி *சீவக சிந்தாமணி* (பா.231) குறிப்பிடுவதையும் இவ்வாய் வாளர்கள் எடுத்துக்காட்டியுள்ளனர்.

நெய்தல் நிலத்தில் உப்பு வாணிகத்தோடு கடலோரங்களில் படகுகள் மூலம் உணவுப் பொருள்களையும் பிற பண்டங்களையும் ஏற்றிச் சென்று விற்கின்ற வாணிகமும் இடம்பெறத் தொடங்கியது.

தமிழ்நாட்டில் விளைவித்தஉப்பை விற்பதற்கென்றே உப்பு வணிகர்கள் உருவாயினர்; அவர்களைப் புறநானூறும் ஏனைய தொகைநூல்களும் 'உமணர்' என்னும் பெயரால் குறிப்பிடுகின்றன. பழைமையான தமிழ் - பிராமிக் கல்வெட்டுகளில் உப்பு வணிகரும் கொழுவணிகரும் குறிக்கப் பெறுகின்றனர். இவ்வணிகக் குழுக்களைப் புறநானூறும் ஏனைய தொகைநூல்களும் சாத்துகள் (merchant guilds) என்று குறிப்பிடுகின்றன.தமிழ்- பிராமிக் கல்வெட்டுகள் இவர்களை 'நிகமத்தோர்' (நிகமம் - வணிகக் குழு) என்று பதிவு செய்துள்ளன.

### 2.4.4.1. உப்பு வணிகம்

**கணஞ்சால் உமணர்** என்று (*அகம்* 169; 3-6) சங்கப் பாடல் குறிப்பிடுவதால் அவர்கள் குழுவாகவே இயங்கியதை அறிய முடிகின்றது. 'உமணர் சேர்ந்து கழிந்த **மருங்கின்** என்ற *குறுந்தொகை* (124;1) பாடல் வரி இதை மேலும் தெளிவு படுத்தும், **உமண் எருது ஒழுகை** (*குறுந்.* 388;4) **உப்பொய் உமணர் ஒழுகையோடு** (*அகம்* 310;10) என்ற வரிகளால் எருது பூட்டிய வண்டிகளில் உமணர் வரிசையாக சென்றதை அறிகின்றோம். பாதுகாப்பு கருதியே இவர்கள் தம் பயணத்தை கூட்டமாக மேற் கொண்டனர்.

உமட்டியராகிய உமணர்களின் பெண்கள் '' நெல்லுக்கு இணையான அளவு உப்பு'' என்று கூவியவாறு தம் கைவளையல்கள் ஒலிக்க கையினை வீசியபடி விற்றுச் சென்றதை *சிறுபாணாற்றுப்படை* குறிப்பிடுகின்றது. மேலும் உப்பு உற்பத்தியாளர்களாக பரதவர்களும், அதனைப் பெற்று விற்பவர்களாக உமணர்களும் அறியப்பட்டாலும் சில நேரங்களில் தமது உணவுத் தேவைக்காக பரதவப் பெண்களும் உப்பை நெல்லுக்கு பண்டமாற்று செய்துள்ளனர்.

பெண் ஒருத்தியின் தந்தை சுறாமீனால் தாக்கப்பட்டு காயத்துடன் ஓய்வெடுத்தவன், காயம் ஆறியவுடன் மீண்டும் கடலுக்குள் மீன் பிடிக்கச் சென்று விட்டான். அவளது தாயோ உப்பை விற்று வெண்ணெல் வாங்கி வர சென்று விட்டாள். எனவே தலைவி தனித்திருக்கின்றாள் என (*குறுந்* 269;5-6) சங்கப் பாடல் குறிப்பிடுகின்றது.

மீன் பிடிக்கும் தொழிலை மேற்கொண்ட தந்தைக்கு அவரது இளைய மகள் உப்பு விற்றதால் பெற்ற நெல்லினால் ஆகிய சோற்றை அயிரை மீனுடன் கூடிய புளிக் கறியையும் கருவாட்டையும் உணவாகப் படைப்பாள் என (*அகம்* 60; 3-6) குறிப்பிடுகின்றது. மேலும் உப்பு மட்டுமல்லாமல் பரதவர் பிடித்து வந்த மீன்களை சமையலுக்கு போக மிகுதியானவற்றை பக்கத்து ஊர்களில் விற்றனர். (*நற்* 311;6-7, 239;2-3,) திருவிழாக் காலங்களில் மீன்கள் மிக எளிதாக விற்றுத் தீர்ந்தன வென்று

(*அகம்* 320;1-5) குறிப்பிடுகின்றது. மீனுக்கு மாற்றாகப் பெற்ற நெல் சோறு தயிருடன் கலந்து உண்டனர் (*அகம்* 340;14-15) பரதவர்கள் மீன்களைப் பிடித்துக் கொண்டு சென்று விற்று, கிடைத்த நெல்லை அம்பிகளில் ஏற்றி வந்தார்கள் என (*புறம்* 343;1-2) புறப் பாடல் ஒன்று குறிப்பிடுகின்றது.விட்டில் சமைத்தது போகவும், விற்பனை செய்தது போகவும் மிஞ்சியவற்றை உப்பிட்டு உலர்ந்தி காயவைத்து பதப்படுத்தினர். இறால்களையும், மீன்களையும் இவ்வாறு காயவைத்த போது அவற்றின் நாற்றம் நீண்ட தூரம் காற்றில் கலந்து வீசும் என (*குறு* 320;1-4) *குறுந்தொகைப்*பாடலால் அறிய முடிகின்றது. இவ்வாறு உலர்த்தப்படும் மீன்களை நாய் போன்ற விலங்குகளும், பறவைகளும் கவர்ந்து செல்லாதவாறு பெண்கள் காவல் இருந்து ஓட்டுவதைப் பற்றி (*அகம்* 80;4-6, *நற்* 45;7,101;1-3) சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன. இத்தகைய கருவாடாகிய உப்புக் கண்டங்கள் மற்றப் பண்டங்களுடன் படகுகளில் ஏற்றி வெளியூருக்கு அனுப்பப்பட்டன என்று *மதுரை காஞ்சி* (319-322) குறிப்பிடுகின்றது.

### 2.4.4.2. மீன் எண்ணெயில் விளக்கு எரித்தல்

இவர்கள் மீன்களில் இருந்து கிடைக்கும் எண்ணெயினால் விளக்கு எரித்தனர். விளக்கு எரிக்கும் தகழியாக கிளிஞ்சல்களையே பயன்படுத்தினர் (*நற்* 215;5-7, 175;3-4) இரவில் மீன் பிடிக்க கடலுக்குள் செல்லும் போது திமிலில் விளக்கேற்றிச் செல்வர். இவ்வாறு இரவில் கடலுக்குள் ஆங்காங்கே தெரியும் விளக்கொளி கொண்டு எத்தனை படகுகள் கடலுக்குள் சென்றன என்பதை எண்ணி தெரிந்து கொண்டனர். (*நற்* 388;2-6; *அகம்* 240;4-5, 372; 10-14) அடிவானத்தில் இரவிலே கடலுக்குமேலே தோன்றும் 'செவ்வாய்' நட்சத்திரம் திமிலில் ஏற்றிய விளக்கு போலவே தோன்றுவதாக (*அகம்* 372;10-4) *அகநானூறு* கூறுகின்றது.

கடலில் இருந்து மீன் பிடித்து திரும்பிய ஆண்மக்கள் தங்களின் வீடுகளின் முன்பு மணலில் பரப்பி காய வைத்தார்கள். (*நற்* 4;1-4) அறுந்து போன வலை செப்பனிடப்பட்டு உலர்ந்தப்பட்டது (*அகம்* 340;18-24) வெள்ளை மணலில் கரிய வலை விரிக்கப்பட்டிருப்பது நிலவை மறைத்த இருள் போல இருந்தது என *பட்டினப்பாலை* (82-83) குறிப்பிடுகின்றது.

### 2.4.4.3. கடற்கரைப் பட்டினங்கள் வணிகப் பெருநகரங்களாதல்

''முல்லை நிலப்பகுதிகளை சீறூர் மன்னரும் (*புறம்* 288-335) குறிஞ்சி நிலப் பகுதிகளைக் குறு நில மன்னரும், மருத நிலப் பகுதிகளை முதுகுடி மன்னர்களும் (*புறம்* 336-335) ஆண்டுள்ளனர். நெய்தல் நிலப்பகுதிகளிலும் மருத நிலப் பகுதிகளிலும் தம் செல்வாக்கை நிலைநாட்டிப் பின்னர் வேந்தர் உருவாயினர்'' என முனைவர், பெ. மாதையின் குறிப்பிடுகின்றார்.[14] மருத நிலத்தையும், நெய்தல்

நிலத்தையும் அடிப்படையாகக் கொண்டே, வேளாண் பொருளாதாரத்தாலும், வணிகப் பொருளாதாரத்தாலும், கடல் கடந்த வாணிபத்தின் மூலமாகவும் வேந்தர்கள் வலிமை பெற்றனர் என்பதற்கு பத்துப்பாட்டு நூல்கள் சான்றாக அமைகின்றன.

சங்க காலத்தில் முக்கியத் தொழில் நகரமாகவும், வணிகப் பெருநகரமாகவும், சோழர்களின் தலை நகராகவும் புகார் நகரம் விளங்கியது.

**கலம் தரு திருவின் புலம் பெயர் மாக்கள்**
**கலந்து இருந்து உறையும் இலக்கு நீர் வரைப்பும்**

என்று புகார் நகரில் வெளிநாட்டாரின் இருப்பிடங்களைப் பற்றி *சிலப்பதிகாரம்* குறிப்பிடுகின்றது.

புகார் நகரின் கடற்கரையோரப் பகுதியில் மேற் கொள்ளப்பட்ட அகழாய்வில் வாணகிரி- வெள்ளையன் இருப்பு எனும் இடங்களில் ரோமானிய நாணயங்களும், ரோமானிய மட்பாண்டங்களும் அவர்கள் தங்கியிருந்ததை உறுதி செய்கின்றன. மேலையூர் என்றும் பகுதியில் பல்லவனீச்சுரம் என்னும் கோயிலுக்கு அருகாமையில் பௌத்த விகாரை அகழ்வாய்வின் மூலம் வெளிக் கொணரப்பட்டது. இங்கு புத்தரின் செப்புத்திருமேனியும், மற்றொரு தனியறையில் புத்த பிரானின் பாதங்களை ஏந்தி நிற்கும் அழகிய சலவைக்கல்லும் கண்டெடுக்கப்பட்டது. கடற்கரையிலிருந்து மேற்கில் உள்ள கீழையூரில் சிறிய படகுகளை நிறுத்தி சரக்குகளை ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்கான முன் துறை ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. இந்த சுவரில் பயன்படுத்தப்பட்டுள்ள செங்கற்கள் அளவில் மிகவும் பெரியளவாக உள்ளன. சுவரில் பொருத்தப் பட்டுள்ள கம்பங்கள் சிறு படகுகளைக் கட்டி நிறுத்துவதற்கும் பயன்பட்டிருக்க வேண்டுமென்று தெரிகின்றது அல்லது அவற்றைக் கால்களாகக் கொண்டு அவற்றின் மீது பலகைகளைப் பொருத்தி பொருள்களை ஏற்றுவதற்கு வசதி செய்திருக்கக்கூடும். இங்கு புலி சின்னம் பொறித்த காசு ஒன்றும் கிடைத்தது.

அந்நாளைய காவிரி பூம்பட்டினத்தில் இம்மாதிரியான முன் துறைகள் இருந்ததற்கான குறிப்புக்களைப் பட்டினப் பாலை,

**........... வெள்ளை யுப்பின் கொள்ளை சாற்றி**
**நெல்லொடு வந்த வல்வாய்ப் பஃறி**
**பணை நிலைப் புரவியின் அணை முதற்பிணிக்கும்**
**கழி சூழ் படப்பை ............**

என்று கூறுகின்றது, உப்புக்கு மாற்றாகப் பெறப்பட்ட நெல்லை ஏற்றி வைத்திருந்த படகுகள், லாயத்தில் கட்டி வைக்கப்பட்டிருந்த குதிரைகளைப் போல

முன் துறைகளில் உள்ள மரக்கம்பங்களில் கட்டி வைக்கப்பட்டிருந்தன என *பட்டினப் பாலை* குறிப்பிடுகின்றது. இங்கு கிடைத்த மரக்கம்பங்கள் கார்பன்[14] காலக் கணிப்பு முறைப்படி பரிசோதித்ததில் அவை கி. மு. மூன்றாம் நூற்றாண்டைச் சார்ந்தவை எனக் கணிக்கப்பட்டுள்ளதாக தொல்லியில் அறிஞர் முனைவர் கே.வி. ராமன் குறிப்பிடுகின்றார்.[15]

### 2.4.5.பாலை நில உற்பத்தி

தமிழ் நாட்டில் எக்காலத்திலும் 'பாலை ' என்னும் நிலப்பிரிவு தோன்றியிருக்கவில்லை. பருவ கால மாற்றங்களால் குறிஞ்சியும், முல்லையும் தம் நிலையில் இருந்து திரிந்து, நீர் வளம் இன்றி வறட்சி ஏற்படும் போது அந்நிலம் கொடிய வெப்ப பூமியாக, வறண்ட பாலை நிலம் போல காட்சி தரும் என்று *தொல்காப்பியமும்*, உரையாசிரியர்களும் குறிப்பிடுகிறனர். ஆனால் ஆண்டில் மிகக் குறைந்த அளவே மழைப் பெரும் மழை மறைவு நிலப்பகுதிகள் தமிழ் நாட்டில் காணப்படுகின்றன. உலகில் பாலைவனமாக அறியப்படும் இடங்களில் பெறப்படும் மழையளவுக்கு ஒப்பானை மழையளவே கிடைக்கும் போது அந்நிலம் பாலை நிலமாக கொள்ளத்தக்கதே. கள்ளிச் செடிகளும், கரட்டுக் குன்றுகளும் நிறைந்த வெப்பம் தாக்கும் பூமியும் 'பாலை ' வனம் ஆகும். அங்கு வாழும் மக்கள் அதனுடனேயே பழகிவிட்ட மக்கள் அந்நிலத்தை விட்டு வெளியேறுவதில்லை.

அவர்களுக்குத் தேவையான அடிப்படை பொருட்களை அந்நிலத்திலிருந்தே பெற்று வாழப் பழகியவர்களாகவே அவர்கள் காணப்படுகின்றனர். மழைப் பொய்க்கும் போது, சொற்ப அளவே மழைப் பெறும் போது குறிஞ்சி நிலமாகிய குன்றுகள் பாலை வனமாக மாறும். இதனை *சிலப்பதிகாரம்* (11;64-66) சுட்டுகின்றது. அவ்வாறே காடுகள் மாறுவதைக் காணமுடியும். பெரும்பாலான காலங்களில் ஒகேனக்கல் காடுகள் இவ்வாறே தெரியும். மிக அடி ஆழத்தில் காவேரி ஆறு பாயும் போதும் இரு மருங்கிலும் உயரமான மேட்டு நிலமாகிய தகடூர் நாட்டு ஒகேனக்கல் காடுகள் கடுங் கோடையில் சூரிய கதிர்களால் தானாகவே பற்றி எரிந்து போகுமோ என்ற அளவில் வெம்மை மிக்கதாய் காட்சி தரும். இத்தகைய முல்லை நிலமாகிய காடுகள் அழிவுற்று விளங்கும் காட்சியை (*அகம்* 113; *பதிற்* 43;13-14) சங்க இலக்கியங்கள் காட்சி படுத்துகின்றன.

இந்நிலங்களில் எவ்விதமான உற்பத்தியும் நடைபெறவில்லை. இயற்கை அதற்குண்டான வாய்ப்பை அளிக்காத போது, அவர்களின் அடிப்படை தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள போராட வேண்டியிருந்தது. இம்மக்களுக்கு வழிப்பறியும், சூறையாடலும் முக்கியத் தொழில் என *தொல்காப்பியம்* குறிப்பிடுகின்றது. விடலை, காளை ஆகிய ஆண் மக்கள் அவற்றில் ஈடுபட்டனர். பெண்கள் எயிற்றியர், மறத்தியர்

ஆவர். இந்த மக்கள் வாழ்ந்த இருப்பிடம் குறும்பு, பறந்தலை என சுட்டப்படுகின்றன. இவர்கள் கொற்றவை ஆகிய தாய் தெய்வத்தை வணங்கினர். இவர்கள் ஆதி பழங்குடிகளாகவே எவ்வித வளர்ச்சியும் பெறாமல் நின்றுவிட்டதையே இது காட்டுகின்றது. இந்நிலப் பகுதிகளில் உழிஞை, பாலை, ஓமை, இருப்பை, நெமை, யா ஆகிய மரங்கள் வளர்ந்தன. இவை வறட்சியில் வாழும் மரங்களாகும்.

**''பாலைத்'' தன்மையாவது காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமை கூறச் சோலை தேம்பிக் கூவல் மாறி, நீரும் நிழலும் இன்றி நிலம் பயன் துறந்து, புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம் பெறுவது''** என்பது நச்சினார்க்கினியர் (*தொல்*, பொருள், அகத்திணை 9) உரையாகும்.

பொழுது புலரும் நேரமான காலையும், பொழுது அமரும் நேரமான மாலையும் உச்சி பொழுதில் தகிக்கும் வெப்பத்தை கொடுக்கும் பாலை நிலம் என்றால் உச்சி பொழுதில் நிலைமை எப்படி இருக்கும்? எனவே தான் சோலைகள் அழிந்து, கிணறுகள் வறண்டு, நிலம் வெறிச் சோடி விலங்கினங்களும் பறவையினங்களும் துன்பமுற்றுத் திரிவது பாலை நிலக் காட்சியாக அமைகின்றது. வலியற்றுப் போன யானைகளும், செந்நாயும், புலியும் அங்குகாணப்படுகின்றன. பருந்தும், கழுகும் வட்டமிடுகின்றன.

இத்தகைய 'பாலை ' நிலத்து பெண்கள் நிலத்திற்கடியில் எறும்பு சேகரித்து வைத்துள்ள புல்லரிசியை பூணிட்ட உளியால் கிளரி எடுத்து சேகரித்துக் கொண்டு வந்து உணவு சமைத்தனர் என்று ஆற்றுப்படை நூல்கள் விவரிக்கின்றன. எயினர்களைப் *பட்டினப்பாலை* (266) **கொடுவில் எயினர்** என குறிப்பிடுகின்றது. இவர்கள் தமது அம்புகளை வெப்பமேறிய பாறைகளில் தீட்டிக் கொண்டதை (*குறுந்* 12;2-3) ஒரு பாடல் தெரிவிக்கின்றது. இம் மறவர்கள் ஒழுங்கற்ற நீண்ட தாடியையும் முரட்டுத்தனமும், வலிமையும் கொண்டு விளங்கினார்கள் (*அகம்* 297;5-6) மூங்கில் புதர்கள் மண்டிய வறண்ட, வெம்மையான பாதைகளில் செல்லும் வழிப் போக்கர்களை கொள்ளையடித்தனர். சில போதில் அவர்களை கொன்று விடுவதும் உண்டு. (*குறுந்* 331:1-3, 283:5) அவர்கள் அம்பு எய்துதலில் மிக்க வல்லமை பெற்றவராய் விளங்கினர்.

மறக்குடியைச் சேர்ந்த மகளிர் எதற்கும் அஞ்சாதவர்கள், இக்குடியைச் சேர்ந்த சூலுற்றப் பெண், யானை எதிரே வந்தாலும், பாம்பு தன் மீது ஊர்ந்து சென்றாலும், வானத்தில் பெரும் இடி இடித்தாலும் கூட சிறிதும் துணுக்குறவோ, அஞ்சவோமாட்டாள் என *பெரும்பாணாற்றுப்படை* (116) குறிப்பிடுகின்றது. இத்தகைய அஞ்சாமையுடைய தாயர் பெற்ற எயினர்கள் பிற நிலங்களுக்குச் சென்று கவர்ந்து வந்த ஆநிரைகளை கள்ளுக்கும் நெல்லுக்கும் விற்று கள்ளுண்டு

மகிழ்ந்தனர் என்று *பெரும்பாணாற்றுபடை* மேலும் தெரிவிக்கின்றது.

வீரம் மிக்க இம்மக்கள் மறவர், மறத்தியர் எனப்படுவது போலவே வேட்டையாடுதலால், 'வேடர்' என்றும், கானவர் என்றும் சுட்டப்படுகின்றனர், 'கருங்கட் கானவர்' என்று *பெரும்பாண்* (116) கூறுகின்றது. இதன் மூலம் உய்த்துணரப்படுவது யாதெனில், இம்மக்கள் மிக முந்தைய ஆதி தொல்குடியைச் சேர்ந்தவர்கள்; அவர்களது உயிர் வாழ்வதற்கான முயற்சியிலிருந்தும், துணிவிலிருந்தும், அவர்களது மறக்குணம் வெளிப்படுகின்றது. இத்தொல் குடிகள் உற்பத்தி முறைகளுக்குள் வராமல், எறும்பு சேகரித்த புல்லரிசையைத் தேடி கொண்டுவருவதும் வேட்டையாடுவதும், மிகப் பழைமை வாய்ந்த தொல்குடி என்பதை எடுத்துக்காட்டுகின்றன. நாளடைவில் ஏற்பட்ட தோட்ட வேளாண்மைக்கும், கால்நடை வளர்ப்பு முறைமைக்கும், பரந்த அளவிலான கால்நடைகளைக் கொண்டு உழுத முல்லை நில வேளாண்மைக்கும், அதைவிட மேம்பட்ட மருத நில வேளாண்மைக்கும், மாறி இணைந்து செல்ல முடியாமல் போனவர்கள் தொடக்க நிலை பழக்க வழக்கங்களுடனும், தமது சொந்த மரபுகளுடனும் தொடர்ந்து நீடிப்பவர்களாகவே காணப்படுகின்றனர். அவர்கள் சங்க கால சமூக அமைப்பிற்குள் இணைய முடியாத வகையில் தேக்கமுற்ற ஒரு சமூகப் பிரிவாகவே உள்ளனர். காட்டுமிராண்டி சமூகத்தின் தன்மையான வேட்டையாடுதலும் உணவு திரட்டலும் ஆகிய தொழில் முறையினையே கொண்டுள்ளனர். ஐவகை நிலத்தில் வாழும் சமூகங்களுள்ளும் இதுவே மிகத் தொன்மையான வாழ்க்கைத் தொழிலும் பண்பாடும் கொண்ட சமூகமாக அமைந்திருக்கக் காண்கின்றோம். மேலும் முதலில் தோன்றிய தாய் தெய்வ வழிபாடு கொண்டவர்கள் பாலை நில மக்களே ஆவர். பழந்தமிழரின் வாழ்க்கைக்கும் இலக்கியத்திற்கும் இலக்கணம் வகுத்த *தொல்காப்பிய*மானது ''கொற்றவை நிலை '' பற்றி குறிப்பிடுகின்றது. கொற்றவை, ஐயை வணக்கமும், அதற்கு பலியிடலும் பற்றி விரிவாக பேசுகின்றது. சூறையாடலும் கொள்ளையிடலும், வழிபறியும் இவர்களுக்கு அறமெனத்தகும். முல்லைச் சமூகத்துக்கு ஆநிறை கவர்தலும், மீட்டலும் அறமென்பது உற்பத்தி நிலவும் சமூகங்களுக்கு உள்ளே நிலவும் அறமாகும்,

ஆனால் அன்றையான உற்பத்தி முறைமைகளில் பங்கு பெறாமலும் முதன்மையான உற்பத்தி முறைக்குள் ஈடுபடாமலும் ஒதுங்கிய நிலையில் பாலை நில மக்களின் மிக அவசியமான தொழிலாகவே இவை மாறி விட்டதை உணர்த்துகின்றன.

நிலையான அரசு அமைந்த போது இவர்களையும் அரசமைப்புக்குள் கொண்டு வருவதற்கான முயற்சிகளை மன்னர்கள் மேற் கொண்டனர். அதன் வெளிப்பாடாகத்

தான் ஆற்றுப் படை நூல்களில் பாலை நில மக்களின் வாழ்க்கை முறைச் சித்தரிப்புகள் முதன்மையானதாக இடம் பிடித்தன.

### 2.4.6. பாலை என்பது பிரிவு

பழந்தமிழரின் வாழ்க்கைக்கும் இலக்கியத்திற்கும் இலக்கணம் கூற வந்த *தொல்காப்பியம்* 'பாலை' திணைக்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுத்துள்ளது. பாலை என்ற சொல்லே பிரிதல் என்ற பொருளில் அமைந்ததாகும். ஐவகை நிலத்திற்கும் அகனைந்திணைக்கும் 'பிரிவு' பொதுவானது. பிரிவு என்பது துயரம் சார்ந்தது. பிரிவினால் உண்டான துயரத்திற்கு ஆட்பட்டவர்கள் தலை மக்கள். அவர்கள் சார்ந்த சமூகத்திற்கு பொறுப்பும், அக்கறையும் கொண்டும் மாற்றங்களுக்கு முன் கை எடுத்தும் முனைபவர்கள், நெருக்கடிகளைத் தீர்க்கவும் அதற்காக கற்கவும், போரிடவும் உயிரைக் கொடுக்கவும், பொருளீட்டவும் முனைந்து நிற்பவர்கள் அவர்களின் தலைமைப் பண்பும் இதில் இருந்தே உருவானதாகும். சொத்துடைமையுடனான தலைமைப் பண்பு அடுத்த கட்டத்தில் உருவானது.

வெவ்வேறு நிலம் சார்ந்த, குலம் சார்ந்த ஆணும், பெண்ணும் இணைந்து வாழ உடன் போக்கு மேற்கொள்ளல் பாலை, அடுத்து தோன்றப் போகும் புதிய சமூகத்துக்கான வேர்களாக இருந்து அதனை காப்பவர்கள் இத்தலைமக்கள். கொடிய துன்பமும், அதனைப் போக்குவதற்கான போராட்டம், முயற்சிகளைப் பற்றியது பாலைத்திணை.

தமிழ் நாட்டில் நிலத்தால் பாலை இலதேனும் காலத்தால் 'பாலை ' உண்டு என *சிலப்பதிகாரம்* (11; 64-66) கூறுகின்றது. அதாவது வளம் திரிந்த வறண்ட நிலங்களில் தன்மையே பாலையாம். நில மழிதல், உற்பத்தி இன்மையைச் சுட்டுவது இது. உறுப்பு நலங்கெடுதல் பிரிவாற்றாமை பற்றியதும் பாலையாகும். பிரிவின் பாற்பட்டு துன்பத்திற்காளாகி அடுத்த கட்ட நகர்வை நோக்கி தள்ளுவதும், நானில மக்களும் பொதுமை பட்டு ஒன்று கலப்பது பற்றியதும் பாலையாகும் என *தொல்காப்பியம்* வகுத்துள்ளது.

முல்லை முதலான நானில மக்களும் முறைமையில் தவறிய வழி தவறாது அறத்தை நிலை நிறுத்தல் காரணமாகவும், பொருள் ஈட்டுதல் காரணமாகவும், பிரியும் பிரிவு (அகத்திணை 30) அதாவது நானில மக்களும் தமது நிலம் கடந்து எல்லை மீறி, வரம்பு தாண்டி, மரபுடைத்து சென்ற போதும் ஒண்பொருள் இழைத்து செவ்விதின் வாழும் முயற்சியாக மேற்கொண்ட பிரிவு பாலை. நானிலந் தாங்கிய வேந்து உருவாக்கத்திற்கு பாலைத்திணை வழங்கும் பங்களிப்பு இதுவாகும்.

**யாயும் ஞாயும் யாராகியரோ**
**எந்தையும் நுந்தையும்**
**எம்முறைக் கேளீர்**

(*குறுந் ;* 40;1-2) என்ற பாடலின் தலைமக்கள் இத்தன்மையுடையவர்களே.

பொருளீட்டல், வாணிபம், நகர் மயமாக்கம், உற்பத்தி பெருக்கம், பொருள் தேடிய இடப் பெயற்சி முயற்சிக்கு 'பிரிவு' எனப்படும் பாலைத் திணையே அடிப்படையாகும். ஓதற் பிரிவு, தூதிற் பிரிவு, பொருள் வயிற் பிரிவு, பகை வயிற் பிரிவு எனப்பட்ட எவ்வகைப் பிரிவாயினும் கட்டமைக்கப்படும் புதிய அரசின் பகுதிச் செயல் பாட்டாளர்கள் இவர்களே.

நீண்ட நெடிய வரலாறுடைய தமிழ்க் கவிதை காலந்தோறும் உற்பத்தி முறை தேக்கங்களையும், உற்பத்தி உறவுகளில் ஏற்படும் மாற்றங்களையும், அதற்குண்டான அவசியத்தையும் எடுத்துக் கூறி அதனை தீர்ப்பதற்கான வேலைகளைச் செய்து வந்திருக்கிறது. எதிர் கொண்ட துயரங்களையும் நெருக்கடிகளையும் பாடியதுடன் எதிர் கொண்டு போராடி தீர்த்திடவும் முயன்று வந்திருக்கின்றது. அதனை ஒட்டி அதன் பாடுபொருளும் தன்மைகளும் கூட மாற்றமுற்றும் வளர்ந்தும் வந்துள்ளன. அவ்வகையில் தொல் பழங்கால தாய் வழிச் சமூகத்தில் இருந்து மாறி ஆண் வழியிலான வர்க்க சமுதாயம் உருவான போது ஆணுக்கு தலைமைப் பாத்திரம் ஏற்பட்டதுடன், பெண்ணுடனான காதல் வாழ்வை அக வாழ்க்கை என்றும், அன்றைய சமூக உற்பத்தி உறவில் தமக்குரிய பங்கை சிறப்பாகச் செய்து கடமையாற்றியப் பகுதி புற வாழ்க்கை என்றும் பிரிவினை கண்ணோட்டத்துடன் பாடியது சங்க இலக்கியம் திணை வாழ்க்கை நெருக்கடியினைப் பாலை உணர்த்துகின்றது.

### 2.4.7. திணை மயக்கமும் நானிலம் தாங்கிய வேந்தும்

பாலைத்திணையும் அதன் உரிப்பொருளான பிரிவும் சுட்டுகின்றபடி திணை வாழ்க்கை அழிந்து நால்வகை நிலமும் வேறுபட்ட திணை உற்பத்தி முறைக்கு மாறாக மென்புலம் / வன்புலம் உற்பத்தி முறைக்குள் கொண்டு வரப்பட்டு அரசு கட்டமைக்கப்படுவதே திணை மயக்கம் ஆகும்.

திணை மயக்குறுதலின் படி ஒவ்வொரு நிலமும் தனக்குரியதாக கருதப்பட்டு வரும் ஒவ்வொரு ஒழுக்கத்தை மட்டுமே கொண்டுள்ளதாக அமையாமல் பிற நிலங்களுக்குரிய ஒழுக்கங்களையும் ஏற்பதையே திணை மயக்கம் குறிக்கின்றது. குறிஞ்சியில் புணர்தல் ஒழுக்கத்துடன் பிற ஒழுக்கங்களும் வரும். அவ்வாறே மற்ற நிலங்களில் ஒழுக்கங்களும் அவ்வவற்று ஒழுக்கங்களுடன் கலந்தும், தனித்தும், பெருந்திணை, கைக்கிளை ஆகியவற்றை உள்ளடக்கியும் வரும்.

ஒவ்வொரு நிலமும் பிற நிலத் தொடர்பு ஏற்படாத வரையில் தனக்குரிய முதல், கரு, உரிப்பொருள்களுடன் இயற்கையாய் அமைந்து வாழ்ந்த வரையில் அந்நிலத்து மக்களுக்கு உரிய உணர்வு நிலை மாறுபடாதிருந்தது. அந்நிலம் பிற நிலங்களுடன் வணிகத் தொடர்பும், திருமணத் தொடர்பும் ஏற்படுத்திக் கொண்ட போதும் நிலம் சார்ந்த உணர்வு முறைகளிலும், பழக்க வழக்கங்களிலும், உணவு முறைகளிலும், தெய்வ வழிபாட்டு முறைகளிலும் கூட மாற்றம் ஏற்பட்டன. நானிலந்தாங்கிய வேந்து உருவான போது குறிஞ்சி முல்லை நிலங்களுடன், மருதம் நெய்தல் நில உறவுகளும் வணிகப் பண்பாட்டு அடிப்படையில் ஒன்று கலக்கும்படி அவைதீக சமயங்களும், வைதீக சமயங்களும் முறையே மக்களுக்காகவும் ஆட்சியாளர்களுக்காகவும் செயலாற்றின.

### 2.4.8 திணைக் கடவுள்கள் வேந்தமைப்பில் பெருந்தெய்வத்துடன் இணைக்கப்படுதல்

தாய் தெய்வ வழிபாடு ஆதி பொதுவுடைமை சமுதாயத்திலே காணப்பட்ட சமய நம்பிக்கையாகும். அது கிறித்துவிற்கு முன்பு ஐயாயிரம் ஆண்டளவில் தொடங்கி ஏறத்தாழ மூவாயிரம் ஆண்டுகள் வரை நிலவிய உலகெங்கிலும் காணப்பட்ட ஒரு வழிபாட்டு முறையாகும் என்று கலாநிதி .க. கைலாசபதி குறிப்பிடுகின்றார்.[16] மேலும் அவர் சங்க காலம் பற்றி குறிப்பிடும் போது'' சங்க இலக்கியங்களோ கிறித்துவிற்கு முன் இரண்டாம், மூன்றாம் நூற்றாண்டு அளவிலும் கிறித்து அப்தத்திற்குப் பின்னர் சில நூற்றாண்டுகள் அளவிலும் தோன்றிய இலக்கியங்கள். சங்க காலத்து சமுதாயம் முற்று முழுதான புராதனச் சமுதாயம் என நாம் கொள்ள முடியுமா? இல்லை. ஏனெனில் தாய் வழிச் சமூகம் சங்க காலத்தில் மாறத் தொடங்கிவிட்டது. சங்க காலத் தமிழகம் ''நாகரிகப்'' பாதையிலே நடைபோடத் தொடங்கியிருந்தது. அப்படியாயின் புராதனச் சமுதாயத்திற்குரிய மந்திரச் சடங்குகள் தமிழர் சமுதாயத்திலே செல்வாக்குப் பெற்றிருந்தன என நாம் கொள்வது பொருத்தமாகுமா? சங்க காலச் சமுதாயம் நகர நாகரிகத்தையும் அறிந்திருந்தது. அங்கு குலங்களும் குடிகளும் மறைந்து அரசுகள் தோன்றியிருந்தன '' அந்த நிலையிலே கூட்டு வாழ்க்கையிற் காணப்பட்ட மந்திரச் சடங்குகள் காணப்பட்டன என நாம் துணிந்த கூறலாமா? இத்தகைய முக்கியமான பார தூரமான கேள்விகள் நம்மை எதிர் நோக்குகின்றன'' என்று நுட்பமான கேள்விகளுடன் தொடங்கும் அவர், தொல் பழங்கால தாய் வழிச் சமூகத்தில் மந்திரவாதியும், தாய் தெய்வமும் பெண்ணே, பிறகு உருவான வர்க்க சமூகத்தில் அரசு ஏற்பட்ட காலத்தில் அத்தகைய வழிபாடுகள் உருமாற்றம் பெற்று சிறு தெய்வ வழிபாடுகளாக வளர்ந்தன. முருகன் வெறியாட்டு முதலியன தோன்றின என்று குறிப்பிடுகின்றார். தனியொரு அரசனோ தனியுடைமையோ, தனியொரு ஆண் தெய்வமோ தோன்றாத போதிருந்த தாய்த் தெய்வம் மேற் கண்ட வளர்ச்சிகளும்,

மாற்றங்களும் ஏற்பட்டபிறகு முருகனுக்கு தாயாக, மாயோனுக்கு உடன் பிறந்தாளாக, கொள்ளப்பட்டு, பாலை நிலத் தெய்வமாக சுட்டப்படுகின்றாள். பல்லவர் ஆட்சி காலத்தில் சைவம் தழைத்தோங்கிய போது சிவனுக்கு மனைவியாகவும் கொள்ளப்படுகின்றாள்.

**பவள வாய்ச்சி தவளவாள் நகைச்சி**
**நஞ்சு உண்டு கறுத்த கண்டி வெஞ்சினத்து**
**அரவு நாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்....**
**வளையுடைக் கையில் சூலம் ஏந்தி**
**கரியின் உரிவை போர்த்து அணங்கு ஆகிய**
**அரியின் உரிவை மேகலையாட்டி**
**பலர் தொழும் அமரி, குமரி, கவுரி, சமரி**
**சூலி, நீலி, மாலவர்கு இலங்கிளை**
**ஐயை, செய்யவள், வெய்யவாள் தடக்கை**
**பாய்கலைப் பாவை, பைந்தொடிப் பாவை**
**ஆய்கலைப் பாவை, அருங்கலப் பாவை ''**

என *சிலப்பதிகாரம்* குறிப்பிடுகின்றது. கொற்றவை நஞ்சுண்டும் சாகாதவள், எல்லாம் உணர்ந்தவள். பெருங்காட்டில் வாழ்பவள், பேய்க் கணங்கள் உடையவள் அதாவது சிவனின் அனைத்து குணங்களும் உடையவளாக தொடக்கத்தில் கொற்றவை இருந்துள்ளாள். முதலில் எல்லாமாக இருந்தவள் வர்க்க சமூகத்தில் சிறு தெய்வமாக, பிறவற்றுடன் இணைந்தவளாக கொள்ளப்பட்டாள். இந்நிலையில் வைணவமும் பிற சமயங்களும் செழித் திருந்தன. சைவம் இவற்றுக் கெல்லாம் மாற்றாக வளர்ந்து கொண்டிருந்தது.

### 2.5.0 சங்க காலத்தமிழரின் உற்பத்தி முறையும் உறவுகளும்

இவ்வியலில் நாம் உற்பத்தி முறைபற்றி ஆராய்வதால் அவற்றிற்கான ஆதாரங்களை நேரிடையாக எடுத்தாளவும், அறிந்து கொள்ளவும் இயலாத நிலையே உள்ளது. திணையடிப்படையில் ஐ நிலப் பாகுபாட்டினடிப்படையில் உற்பத்தி முறைகளை அறிய போதிய சான்றுகள் இருந்தன. *தொல்காப்பியம்* வகுத்துள்ள முதற் பொருள் கருப்பொருள், உரிப் பொருள் அடிப்படையில் தொகுப்பாசிரியர்கள் பகுத்து தந்ததன் அடிப்படையில் அவை மேற் கொள்ளப்பட்டன. ஆனால் சங்க கால சமுதாயத்தின் மொத்தத்தை அறிய இவை போதியனவல்ல. மிகச் சொற்பமான குறிப்புக்களையே அவை வழங்கியுள்ளன. மரபு வழியிலான தொன்மையான ஆதி வடிவங்களைக் கூட அவை தெரிவித்தன. ஆனால் முதன்மையான உற்பத்தி உறவுகளை நேரடியாக விளக்கவில்லை.

சங்க காலச் சமூகம் பல விதமான தொழில் திறமையாலும்,உற்பத்தி முறைமையாலும் மேம்பாடடைந்த நாகரிகமடைந்த சமூகமாகவே விளங்கியது. அது நகர நாகரிகத்தை அடிப்படையாகக் கொண்டது. நானிலந்தாங்கிய வேந்தர் நாடாக விளங்கியது. மூவேந்தர் ஆண்டது அத்தகைய நகர நாகரிகமும், பண்பட்ட வாழ்க்கை முறைகளும், நிலையான அரசு அமைப்பும் கொண்டு இயங்கிய சங்க கால சமூகத்தில் தோன்றிய இலக்கியங்கள் எல்லாம் ''உயர்ந்தோர் மாட்டே '' பாடப்பட்டனவாதலால் பிற வகையில் வாழ்ந்து வந்த கடுமையான உடல் உழைப்பும் தொழில் திறமும் உடைய மக்கள் பற்றி அறியவும், அங்கு நிலவிய உற்பத்தி முறைகளையும், உறவுகளையும் விளங்கிக் கொள்ளவும் தேவையான போதிய சான்றுகள் இல்லை. அவ்விலக்கியங்கள் உற்பத்தி உறவில் இணைந்துள்ள இரு பகுதியினரில் ஒரு தரப்பாரை மட்டுமே அதாவது ஆட்சியாளர்களை மட்டுமே, பாடியுள்ளன. உழைக்கும் பிரிவின ராகிய அடிமை மக்களைப் பற்றி அறிய முடியவில்லை.

ஆனால், அவ்விலக்கியங்கள் உயர்குடியினராகிய, ஆட்சியாளர்களாகிய, தலை மக்களை மட்டுமே பாடியிருந்தாலும் கூட அவ்விலக்கியங்களின் வழியே காணலாகும் மரம், செடி, கொடி, புள்ளினங்கள் போல பிற மக்களும் காணக்கிடைப்பர்.

சைவ சித்தாந்தம் ''மண், சக்கரம், நீர் முதலான துணைமைப் பொருள் களைக் கொண்டு, முதன்மை காரணனாகிய குயவன் உருவாக்கியது பானை ஆவது போல, இவ்வுலகாகிய இயற்கைப் பொருங்களை துணைமையாகக் கொண்டு இறைவன் படைத்ததே உலகம்'' என்று கூறும். அதாவது காரியப் பொருளான பானை உள்ளவிடத்து அதை படைக்க தேவையான மண் சக்கரம், நீர் முதலான துணைமை காரணங்களையும், அதனை உருவாக்கிய குயவனாகிய முதன்மை காரணியையும் உய்த்துணர்வதைப் போல, பருஉலகாகிய இயற்கையையும் உயிர்களையும் அறியும் போது இவற்றை படைத்தவன் ஒருவன் உண்டு என்பதை அறிய முடியும் என்று கூறுவர். காரியப் பொருளைக் கொண்டு காரணப் பொருளை அறிதல் ஆகும்.[17]

**வினையே செய்வது செயப்படுபொருளே**
**நிலனே காலம் கருவி யென்றா**

(*தொல்.* வேற்றுமைமயங்கியல் 29) என்ற நூற்பாவானது வினையின் மூலம் செய்வோனையும், அங்கு நிலவிய தொழில், அத் தொழிலால் பெறப்படும் பொருள் தொழில் நிலவிய இடம், காலம், கருவி, ஆகியன அறியப்படும் என வினையின் இலக்கணம் கூறவந்த விடத்து தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். எனவே அக்காலத்தனவாக அறியப்படும் கருவிகளைக் கொண்டு அதன் மூலம் உற்பத்தி தொழிலில் ஈடுபட்டோரையும் அவர்களை ஈடுபடுத்தியோரையும். அறிய போதிய சான்றாதாரமாக உற்பத்தி கருவிகளும், உற்பத்தியிலீடுபடுத்தியோரையும், அவர்களது

வலிமையையும் உணர போர்க்கருவிகளைப் பற்றியும் ஆராய்வதன் மூலம் தெரிந்து கொள்ளமுடியும். அவ்வாறு நாம் உற்பத்தி கருவிகள், உற்பத்திப் பொருட்களைக் கொண்டு உற்பத்தியில் ஈடுபட்டவரை உய்த்துணர முடியும்.

### 2.5.1 சங்க காலத் தொழிற் கருவிகள்

பானை என்பது குயம், குழிசி, கோய், சாடி என்று பலவாறாக சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. **குயம்** (*பொருந;*242; *அகம்;*48-11; *புறம்* 348-3) ஆகிய மூன்று இடங்களிலும் **குழிசி,** (*பெரு* 99,159, 366; *நற்* 12-1; *அக* 77-7,393-14; *புற* 65-2, 168-7- 7,257-12,371-6,,393-4) ஆகிய 12 இடங்களிலும், கோய் (*புற;* 300-6) ஓரிடத்திலும் பயின்று வந்துள்ளன. **சாடி** (*பெரு* 280; *நற்* 295-7 *பதி* 77-9; *பரி;* 20-54; *கலி* 52-4,101-28, 105-33, 105-37, 106-20, *அக* 166-1; *புற* 258-9,297-6, 319-3) ஆகிய இடங்களில் வருகின்றது. குயம் என்ற சொல்லின் அடியாகவே குயவன் என்ற தொழிலைச் செய்வோனை குறித்து வந்தது எனலாம். **குயவன்** (*நற்* 293-2) **குயவ** (*நற்* 2004) பாடல்களில் இடம் பெற்றுள்ளன.

புதிய கற்காலத்தின் (கி.மு. 4000 முதல் கி.மு. 1000 வரை) இரண்டாவது கட்டத்திலேயே நன்குவனையப்பட்ட பானைகள் தயாராயின. இரும்புக்காலமான சங்ககாலத்தில் மிகவும் செழிப்புற்று வளர்ந்த ஒரு தொழிலாகவே மண்பாண்டத் தொழில் விளங்கியது. குயவன் எனும் தொழில் பிரிவே நிலவியது அவர்கள் சமுதாயத்தில் உயர்ந்த இடத்தில் இருந்தனர் என்பதையும் அறிகின்றோம்.

வனையக் காரணமான சக்கரம் திகிரி, சகடம், சாகாடு என பல பெயர்களில் குறிப்பிடப்படுகின்றன. **சகடம்** (*பெரு* 50; *நற்* 4-9; *குறு* 165-3; *பரி* 10-17; *அக* 136-5,301-7, *புற* 102 -2) **சாகாடு** (*அக* 116-3, 140-12; *புற* 60-8, 185-2, 256-2, 313-5) **சாகாட்டாளர்** (*பதி* 27-14) என வண்டிக்காரர் குறிக்கப்படுகின்றார் **திகிரி** (*மலை* 474, *ஐங்* 449-1; *பதி* 14-18, 24-4, 31-8, 35-4, 69-17 *கலி* 7-14,104-78, 146-23; *அக* 53-2, 69-11,224-14 35-4, 69-17, *கலி* 7-14, 104-78, 146-23, *அக* 53-2, 69-11, 224-14, 281-11; *புற* 99-14, 175-7, 228-14, 233-4, 365-5) திகிரி சக்கரப்படை என்ற பொருளிலும் இடம் பெறுகின்றது. இது திருமாலின் ஆயுதம் ஆகும். வண்டி சக்கரத்தின் குடம் குறட்டு எனப்படுகின்றது. **ஆர் சூழ் குறட்டின்** (*புற* 283-8) **அடுத் தெறி குறட்டின்** (*புற* 290-5) **வயிரக் குரட்டின்** (*புறம்* 365-4) ஆகிய அடிகள் இதனை புலப்படுத்துகின்றன.

வண்டிச் சக்கரத்தின் ஆரக்கால் 'ஆர்' எனப்பட்டது. **ஆர் சூழ் குறட்டின் வேல் நிறுத்து இங்க** (*புற* 283-8) வண்டி சக்கரத்தின் குடத்தில் புதைந்து நிற்கும் ஆரக்கால் போன்று வேல் வீரனின் மார்பில் புதைந்து நிற்பதாக அப்பாடல் கூறுகின்றது. ஆழி

என்ற சொல்லும் சக்கரம் என்ற பொருளில் வரும் (*அக* 54-5,80-9) ஒழுகை என்பதும் வண்டியாகும், **ஒழுகை** (*சிறு* 55, *பெரு* 63; *நற்* 183-3, 331-2, 354-9; *குறு* 388-4; *பதி* 44-7; *அக* 30-6; 159-2, 173-9, 310-14, 329-6; *புற* 116-8) இடம் பெருகின்றது.

தமிழ்நாட்டுக் குயவர்கள் புதிய நுணுக்கங்கள் பலவற்றைக் கற்றவர்களாக விளங்கினார்கள். கி.பி. முதல் நூற்றாண்டில் ரோமாபுரிக்கும் இடையில் பெருமளவு வாணிபம் நடைபெற்று வந்தது. இந்நிலையில் ரோமாபுரியில் உருவான எழில் மிகுந்த மட்பாண்டங்கள் தமிழகத்திற்கு கொண்டுவரப்பட்டன.

ரௌலிட்டட் என்றழைக்கப்படுகின்ற மட்பாண்டமானது நேர்த்தியான களிமண்ணைக் கொண்டு ரோமாபுரியில் செய்யப்பட்டதாகும். இவை அனைவராலும் விரும்பப்பட்டதால் அதைப் போன்றே தமிழ் நாட்டுக் குலாளர்கள் வனைவதில் தேர்ந்தவராயினர். அதே போல் ஆம் போரா எனப்படம் கூர் முனை ஜாடிகள் ரோமாபுரியிலிருந்து இறக்குமதியானவற்றைக் கண்ணுற்று தமிழகத்திலேயே உருவாக்கினர், இவை காஞ்சிபுரம் அருகே காரைக்காடு முதலிய இடங்களில் நடைபெற்ற அகழ் வாய்வுகளில் ஏராளமாக கிடைத்தன.

சுட்ட செங்கற்களால் கட்டப்பட்ட கட்டடங்கள் கி.மு. 250 ஆண்டை சார்ந்தவை பூம்புகாரில் மேற் கொண்ட அகழாய்வில் அறியப்பட்டன. இங்கு கண்டு பிடிக்கப்பட்ட நீர்த்தேக்கத்தின் முகப்பு அப்போதே மிகச்சிறந்த கட்டுமான பொறியியல் அறிவைப் பெற்றிருந்ததை வெளிப்படுத்துகின்றது. இதில் கட்டப்பட்டுள்ள செங்கற்கள் தென்னிந்தியாவில் கிடைத்துள்ள பழைய செங்கற்கள் எல்லாவற்றையும் விட அளவில் மிகப் பெரியனவாகும். அதன் அளவு 24''+12+3+ ஆகும். இங்கு கிடைத்துள்ள மிகச் சிறய செங்கற்களின் அளவு 17'' + 17''+3''ஆகும். இந்த செங்கற்கள் நன்கு பதப்படுத்தப்பட்ட களிமண்ணைக் கொண்டு தயாரிக்கப்பட்டவை. ஈராயிரம் ஆண்டுகளை கடந்த நிலையிலும் கடல் நீரின் உவர்ப்புக்கு ஈடுகொடுத்து நிலைத்திருக்கின்றன.[18]

பூம்புகாரில் கண்டு பிடிக்கப்பட்ட ஓடுகள் வீட்டுக் கூரைக்குப் பயன்படுத்தப்பட்டவையாகும். இன்று பயன்படுத்தப்படுகின்ற உட் குழிவான ஓடுகளைப் பழந்தமிழர் பயன்படுத்தவில்லை. அவர்கள் ஆறு அங்குல நீளமும் இரண்டு அங்குல அகலமும் கொண்ட நீண்ட சதுர தட்டை ஓடுகளைப் பயன்படுத்தியுள்ளார்கள். இவ்வோடுகள் கட்டடக் கூரையில் உள்ள மரத்தின் மீது ஒன்றன் மேல் ஒன்றாக இடைவெளி விடாது அடுக்கப்பட்டிக்கலாம். இவை ஒரே சீரான அளவில் அச்சுக்களில் தயாரிக்கப்பட்டவை. புகாரில் மட்டுமின்றி காஞ்சிபுரத்திலும் கிடைத்துள்ளன.

2009 ஆண்டு ஜூன் மாதத்தில் பொருந்தல் எனுமிடத்தில் மேற் கொள்ளப்பட்ட அகழாய்வில் செங்கல் கட்டிடம் கண்டுபிடிக்கப்பட்டது. செங்கல்லின் அளவு 7+21+42 மற்றும் 8+24+48 செ மீ ஆகும். இது 1;3;6 என்ற அளவில் இருப்பதை குறிப்பிட வேண்டும். இத்தகைய செங்கற்கள் சங்ககால நகரங்களான கொற்கை அழகன் குளம், அரிக்கமேடு, உறையூர் , கரூர் ஆகிய இடங்களிலும் கிடைத்துள்ளது.

மேலும், சுடுமண் பொம்மைகளும் பதுமைகளும் வனைந்து சூளையில் இட்டு விக்கிரகங்களாகவும் வழிபட்டனர். இவற்றைத் தயாரித்தவர்கள் மண்ணீட்டாளர்கள் எனப்பட்டனர். எனவே மேற்குறிப்பிட்ட தயாரிப்பில் ஈடுபட்ட ஒரு சமூகப் பிரிவினர் சங்கச் சமூகத்தில் இருந்துள்ளனர் என்பதை மேற்கண்ட பொருள்களின் உபயோகித்தலிருந்து அறிய முடிகின்றது.

### 2.5.2. சங்க கால உலோகத் தொழில்

இரும்பு, வெண்கலம், செம்பு போன்ற உலோகங்களை வடித்து தங்களுக்கு தேவையான பொருட்களை உருவாக்கிப் பயன்படுத்தியதனை தனிமனார் எனும் புலவர்.

**.....................................................கம்மியர்**
**செம்புசொரி பானையின் மின்னி எவ்வாயும்**

(*நற்* 153;2-3) என்று பாடியுள்ளார். இதனால் செம்பினால் பானை வடித்ததை அறிய முடிகின்றது. வெண்கலம் போன்ற உலோக பாத்திரங்களுக்கு 'கலம்' பூசுதல் **'ஆலம்'** எனப்பட்டது. **''பெருந்தோள் ஆலம் பூசல் மேவர்''** (*புறம்* 120;15) என்று *புற நானூறு* சுட்டும்.

சங்க காலத்தில் இரும்பாலான புழங்கு பொருட்கள் மிகுதியாக அறியப்படுகின்றன. அவற்றை உற்பத்தி கருவிகளாகவும் போர்க் கருவிகளாகவும் வகைப்பிரித்து இங்கு உற்பத்தி கருவிகளை அறிய முற்படலாம். அரிவாள், உளி, கோடரி, ஆரக்கால், கத்தி, கத்திரிக்கோல், கணிச்சி, கம்பி, ஆணி, அரம், தூண்டில். ஊசி முதலியவற்றை பயன்படுத்தியுள்ளனர். அம்மக்கள் சம்மட்டியைப் பயன்படுத்தியதைப்பற்றி.

**''கருங்கைக் கொல்லன் இரும்பு விசைத்து எறிந்த** (*பொரு* 437) என்ற பாடலடி உணர்த்துகின்றது. இரும்புக் கலன்களை வடிக்கும் கொல்லன் என்ற சொல் அதிக இடங்களில் இடம்பெற்றுள்ளது. **கொல்லன்** (*பெரும்பான்* 207,437 *நற்* 13-5, 125-3, 133-9,394-4; *அகம்* 202-5,224-2;49 *புறம்* 21-7, 36-6, 170-15, 180-12, 312-3) அவ்வாறே **உலைக்கல்** என்ற சொல் (*குறு* 12-2, *புற* 170-17) கொல்லனது

உலைக்களத்தில் உள்ள **பட்டடைக் கல்லை** குறிப்பிடுப்படுகின்றன.

**கொல்லன் உலையில் உள்ள துருத்தி மிதிதோல்** (*குறு*172-6) எனப்படுகின்றது. அத்தோல் துருத்தியில் காற்றை பிடித்து அடைத்துக்கொண்டு காலால் மிதித்து எரியச் செய்வதால் **மிதியுலை** (*பெரு;*207; *அக* 202-6) எனப்பட்டது. **துருத்தி** (*திரு* 223; *பதி* 20=2 *பரி* 10-30; 16-17; *கலி* 30-15 35-13. *அக* 224-3) என்ற சொல்லும் இடம் பெறுகின்றது.

இரும்பினை உருக்கி, அடித்து தகடாக வடித்தும் பயன்படுத்தினர். இதனை **நுண் உருக்கு உற்ற விளங்கு அயர் பாண்டில்** (மலை 4) என்று *மலைபடுகடாம்* குறிப்பிடுகின்றது.

மேலும் சிறிய ஊசி முதல் பெரிய கம்பிகள் வரை செய்யும் தொழில் நுட்பத்தையும் அறிந்திருந்தனர். **ஊசி** (*பதிற்* 42-3, 70-7;100-4, 229-9; *அகம்* 48-9,199-8) ஆகிய பாடல்கள் சுட்டும். தூண்டில் முள் பற்றியும் அறிய முடிகின்றது.

**கொடுவாய் இரும்பின் கோளிரை துற்றி** (*அகம்* 36-2) என்ற அடிகள் தூண்டிலில் கோர்த்த இரையை இலையின் கீழிலிருந்த வரால் மீன் விழுங்குவது போலும் என்ற உவமையின் மூலம் அறிய முடிகின்றது.

ஆணி தயாரிக்கப்பட்டுள்ளதை **நண்டின் கண்போன்ற ஆணி** (*பொரு* 9-10) என்ற அடிகள் உணர்த்துகின்றது.

மேலும் செய்து முடித்த இரும்பு பொருட்களைச் செம்மைப் படுத்தவும் சங்கு அறுக்கவும் வளையல்களைச் செம்மைபடுத்தவும், அரத்தினைப் பயன்படுத்தியுள்ளனர். **அரந்தின் ஊசித் திரள்நுதி அன்ன** (*அகம்* 199-8) என்ற அடி உணர்த்துகின்றது. அரம் என்ற சொல் அரிவாள் என்ற பொருளிலும் வழங்கியுள்ளது. இதனை **அரம் போழ்கல்லா மரம்படுதீம் கனி** (*பதிற்* 60-5) என்ற அடி உணர்த்துகின்றது.

பழந்தமிழர் இரும்பை அடித்து நீட்டி அதனை தற்போதைய முறுக்கு கம்பி போன்று வடிக்கவும் தெரிந்திருந்தனர். அவை எருமைக் கொம்பு போன்றும், மான் கொம்பு போன்றும் முருக்கியதாக வடித்தெடுத்தனர். இதனை

**இரும்பு இயன்றனை கருங்கோட்டு எருமை** (*அகம்* 56-3)

**இரும்பு திரித்தன்ன மா இரு மருப்பின்** (*அகம்* 4-3)

ஆகியபாடல்களின் அடிகள் உணர்த்துகின்றன.

மேலும் உற்பத்திக் கருவிகளில் துளையிட்டு இணைத்து வடிவமைந்துள்ளனர். இத்தகைய துளையிடல் 'துரப்பு' என்று (*பெரும்* 10) குறிப்பிடுகின்றது. மரக்கட்டையிலும் உலோகத்திலும் கண்ணாடி சங்கு முதலானவற்றிலும் பல விதமான நோக்கங்களுக்காக துளையிடல் நடைபெற்றது.

கணிச்சி எனும் கூரிய ஆயுதத்தையுடைய கூற்றுவன் மரண காலத்தில் உயிர்களைப் பிணிப்பதாக *புறநானூற்*றுப் பாடல் குறிப்பிடுகின்றது. (*புறம்* 195) எனவே, இது மாட்டி இழுக்கின்ற அங்குசம் போன்றதெனக் கருத இடமுள்ளது. கணிச்சியை கூற்றுவன் சுழற்றி எறிவதாக (*புறம்* 42) குறிப்பிடுவதிலிருந்து இது அங்குசமாக அல்லது சூலமாக இருக்கக் கூடுமோ என்று எண்ணத் தோன்றுகின்றது. 'கணித்ர ' என்ற ஆயுதத்தை நிலத்தை தோண்ட பயன்படுத்தியதாக வேதங்கள் மூலம் அறிய முடிகின்றது. ஊர்க் காவலர்கள் நிலத்தை அகலப் பயன்படுத்தும் 'உளி'யுடன் நடமாடினர் என்று *மதுரை காஞ்சி* குறிப்பிடுகின்றது. (*மதுரை* -641) தமிழ்ப் பெயரகராதியானது (தொகுதி 2 ,பக்கம் 441) கணிச்சி என்பது உளி, இடங்கன் என்று குறிப்பிடுகின்றது. ஆகவே, கணிச்சி என்பது (Pick axe) குந்தாலி என தற்போதும் பயன்பாட்டில் உள்ள நிலத்தை அகல பயன்படுத்தும் கருவியாகவும் இருக்கலாம். கோடரியானது நவி(*புற* 270-12) நவியம் (*புற* 23-8,36-7) எனப்பட்டது.

**.............................................. நுணவத்து**
**அறைவாய்க் குறுந்துணி அயில் உளி பொருதூ**

என்று *சிறுபாணாற்றுபடை* வரிகள் 'நுணாமரத்து குறுங்கட்டையில் இரும்பு உளியால் கடைந்த என்று குறிப்பிடுகின்றது.

**இரும்பு தலையாத்த திருந்து கணை விழுக்கோல்**
**உளிவாய்ச் சுரையின் மிளர மிண்டி**

என்று *பெரும்பாண்* (92) எயிற்றியர் பூண், கட்டிய சீரிய கோலின் செருகப்பட்ட உளிபோலும் வாயையுடைய பாறைகளால் நிலத்தைக் கிளரியதாக குறிப்பிடுகின்றது. இங்கு உலோகக் கருவிகள் பெரிதும் பயன்பாட்டில் இருந்த காலத்தில் முதன்மையானஉற்பத்தி உறவுகளுக்குள் வராத எயிற்றியர் உளியைப்போன்ற கற்கருவிகளை மரக் கொம்பில் இணைத்து நிலத்தை அகழ்ந்ததாக குறிப்பிடுவது அம்மக்கள் நாகரிக மடையாத தொல் பழங்கால வழக்கங்களையே கொண்டிருந்தனர் என்பதை உணர்த்துகின்றது.

**கூர் உளிக் குயின்ற ஈர் இலை இடை இடுபு** என (*நெடு* 119) குறிப்பிடும் வரிகள் ' தச்சன் தன்னுடைய கூர்மை வாய்ந்த சிற்றுளியால் நுட்பமாக செதுக்கிய வட்டக் கட்டில் என்று கூறுகின்றது. அவ்வாறே **தச்ச** (*பெரும்* 248) **தச்சன்** (*குறுத்* 61-1 *புறம்*

87-3, 206-11, 290-4 ) என்றும் சொற்களும் சங்க இலக்கியத்துள் இடம் பெற்றுள்ளன. மர வேலைகள் செய்த தச்சர்களும் தச்சுத் தொழிலும் விரிந்த அளவில் நடைபெற்றதை இது காட்டுகின்றது.

ஆகவே **உளி** என்ற கருவியானது பல விதமான வடிவங்களில் வேறுபட்ட அளவுகளில் பல்வேறு தொழில்களில் மரவேலை, கற்சிற்ப வேலை, பொன், இரும்பு முதலான உலோக வேலைகளை செய்வதற்கு மட்டும் அல்லாமல் நிலத்தை தோண்டவும் கூட பயன்படுத்தியிருக்கின்றனர்.

மனித குல நாகரிகத்தின் வளர்ச்சியில் **சக்கரமும், உலைக்களமும், உளியும்** மிகுந்த முக்கியத்துவமும் பயன்பாடும் கொண்டுள்ளன. அவற்றில் உளி வடிவங்களாகவே **மழு, இடம்பம், கோடரி, குந்தாலி, கணிச்சி, பாசம்** ஆகியன விளங்குகின்றன. அவற்றில் இரும்புக் கருவிகளை முனைப்பும் கூர்மையும் வேண்டி தேய்த்து செம்மைபடுத்தும் **அரம்** அக்காலத்தில் **ஈர்வாள்** என்றும் **வேதினம்** என்றும் குறிப்பிடப்படுகின்றது.

**கணிச்சி** ( *நற்* 40-7; *பதி* 22-12; *பரி* 5-66; 10-33; *கலி* 101-8;105-20;

*அகம்* 0-5;21-22,399-6; *புறம்* 42-22, 105-13)

**கணிச்சியோன்** (*கலி* 2-6,103-25,105,-13)

**உளி** (*சிறு* 52,252, பெரு 92; *நெடு* 119; *ஐங்* 321-1, *கலி* 103-75; *அக* 33-10 55-3, 340-20,343-7)

**உளியர்** (*மது* 641))

**குயின்று** (*மது* 474; *நெடு* 88; *அக* 93-12, 315-10; *புறம்* 196-12)

**குயின்ற** (*நெடு* 84,199, *ஐங்* 215-2, *அக* 82-1, 225-5,269-8,343-7 *புறம்* 58-30)

**குயினர்** (மது 511) குயினர் என்பவர் துளையிடுபவர், கடைசலாளர், கண்ணாடி மணிகளால் ஆன அணிகலன்களை செய்பவர் ஆவர்.

**வாளரற் துமித்த வளை** (*அகம்* 24)

**அரம் போழ்ந்த தறுந்த இலங்குவளை** (*மதுரை* 316)

**ஊதுலைப் பெய்தபகுவாய் தென்பனி** (*குறு*,155)

சங்குகளை சிறு வாளினால் அறுத்து அரத்தினால் அராவி அழகான வளையல்களைச் செய்தனர் (*நற்* 77) வளையல் அறுக்கும் தொழில் பற்றி 'அரம் போழ் அவ்வளை '(*ஐங்குறு* வளைபத்து 48) ''கோடீர் இலக்குவளை ' (*குறுந்* 31) என்று குறிப்பிடுகின்றது.

## 2.5.3. சங்க காலப் பொன் தொழில்

பொற்கொல்லன் **ஆசில் கம்மியன்** என்றழைக்கப்படுகின்றான் **கம்மியன்** (*நெடு*-57,85; *நற்* 94-4;313-2; *புற* 353-1 **கம்மியர்** (*மதுரை* 521; *நற்* 153-2) ஆகிய இடங்களில் குறிப்பிடப்படுகின்றனர்.

*கலித் தொகையில்* **கிண்கிணி** எனும் அணியைச் செய்யும் தொழில் முறை கூறப்படுகின்றது. **கிண்கிணி** எனும் அணி தனித்தனிப்பகுதிகளின் சேர்க்கையாகும். இவ்வாறு சேர்க்கப்பட்டவை, பற்ற வைக்கப்பட்டவை தெரியாமலிருக்கும் படி செய்யப்பட்டன வென்பதை.

**காலவை சுட பொன் வளை இய வீரமை சுற்றொடு**
**பொடியழற் புறந்தந்த செய்வுறு கிண்கிணி**

(*கலி* 85) *கலித் தொகை* சுட்டுகின்றது.

பழைய அணிகலன்களை அழித்து உருக்கி வார்த்து புதிய அணிகலன்கள் செய்தனர் என்பதை

**''.......................................................கடந்திட்டவர்**
**முடி புனைந்த பசும் பொன்னின்**
**ஆடி பொலியக் கழறை இயவயவேந்தே**

(*புறம்* 40) சுட்டும். அவ்வாறு உருக்கி வார்த்து வடித்தெடுக்கப்பட்ட அணிகலனில் விலையுயர்ந்த வண்ணக்கற்களையும் பதித்தனர் என்பதை,

**பொன்னுந் துகிரு முத்து மன்னிய**
**மாமலை பயந்த காமரு மணியும்**
**இடைபடச் சேய வாயினுந் தொடை புணர்ந்து**
**அருவிலை நன்கலம் அமைக்கும்**

(*புறம்* 28 ) சுட்டும். இவ்வாறு அழகிய பொன் அணிகலன்களைச் செய்பவர்கள் பொன்னின் மாற்று காண்பவர்கள் இருந்துள்ளனர். மதுரை மாநகரில் அக்காலத்தில் அணிகலன் செய்வோருக்காக ''நகைக் கடைத் தெரு' தனியாக அமைந்து இருந்ததையும் *மதுரைக் காஞ்சி* குறிப்பிடுகின்றது. பின் வருமாறு:-

**கோடு போழ் கடை நருந் திருமணி' குயினருஞ்**
**சூடுறு நன்பொன் சுடரிழை புனைநரும்**
**பொன்னுரை காண்மரும் கலிங்கம் பகர்நரும்**
**செம்பு நிறை கொண்மரும் வம்பு நிறை முடி நரும்** (*மதுரை* 511-514)

### 2.5.4. சங்க காலத்தில் புடமிடும் தொழில்

இயற்கையில் வெட்டி எடுக்கப்பட்ட பொன் உருக்கி வார்த்தல் புடமிடுதல் எனப்படுகின்றது. அவ்வாறு புடமிடப்பட்ட பொன் ஒளிரும் தன்மையுடையது.

**சுடச்சுடரும் பொன் போல் ஒளிவிடும் துன்பம்**
**சுடச் சுட நோக்கிற் பவர்க்கு** (*குறள்* 267)

**ஆடுபொன் ஞெகிழ்ந்து முத்தரி சென்றார்ப்ப** (*பரி* . 21)

**சுடு நீர் வினைக் குழையின் ஞாலம் சிவந்த (*பரி*. 12)**

மேற் கண்ட பாடல் வரிகள் புடமிடுதலை குறிப்பிடுகின்றன. பொன்னும் விலையுயர்ந்த மணிகளும் குழைத்து செய்யப்பட்ட அணிகலன்களைப் பாதுகாத்து வைத்திட நகைப் பேழைகள் பயன்படுத்தப்பட்டன.

**பொன் பெய் பேழை மூய்திறந்தன்ன** (*குறுந்* 233) சுட்டும்.

சங்க காலத்தில் தலை மக்களாகிய தலைவனும் தலைவியும் அணிகலன்களை அணிந்திருந்தனர். கழுத்தில் ஆரம், தொடி, கழல், என்னும் அணிகலன்களை தலைவன் அணிந்திருந்தான். இதனை

**ஆர மார்பினை அண்ணலை அறியை** (*கலி*-52)

**கழல் தொடி சேய் குன்றம் " (***குறுந்* -1)

**பாசி சூழ்ந்த பெருங்கழல் (***ஐங்* -206)

**கண்ணியன் கழலன் தாரன் (***நற்*-128)

மேற்கண்ட பாடல்கள் சுட்டுகின்றன.

பெண்களுக்குரிய இழை, விரல் இழை, திருந்த இழை, தொடி வளை, சிலம்பு பூண், குழை, பொலன் கோதை, கிண் கிணி தோட்டி, காதணி, காழ் ஆரம். சிறுதாழ் (மோதிரம்) என்று பல்வகை அணிகலன்களையும் தலைவி அணிந்திருந்தாள்.

**நுண்பூண் ஆகம் விலங்கு வோளே** (*ஐங்*.127)

**இன் மணிச் சிலம்பின் சில்மொழி ஐம்பால்** (*கலி*,147)

**கண்டாம் கணங்குழை பண்பு** (*கலி* 142)

**அரம் போழ் அவ்வளைக் குறுமகள்** (*ஐங்* 185)

**சிறு தாழ் செறித்த மெல் விரல் சேப்ப** (*அகம்* 286)

ஆகிய அடிகள் மேற்கண்ட அணிகலன்களைக் குறிப்பிடுகின்றன.

*சிலப்பதிகாரத்*தில் பெண்கள் அணிந்திருந்த அணிகலன்களாக பின் வருவன குறிப்பிடப்படுகின்றன.

| | |
|---|---|
| **காலில் அணியப் பெறுபவை;** | பரியகம், படகம், சதங்கை, கையணிகள்; பொன், பவளம், சங்கு, மணிவகைகள் |
| **கழுத்தணிகள்;** | வீரச் சங்கிலி, நேர்ச்சங்கிலி, சவடி, முத்து மாலை, |
| **தலையணிகள்:** | பூரப்பாலை, தென்பல்லி, வடபல்லி. |
| **இடையணிகள்:** | ஏழு, எட்டு, பதினொன்று, பதினெட்டு, முப்பத்திரண்டு கோவையையுடைய மேகலா பரணம், இது தவிர இறைவனுக்கும் வேந்தனுக்கும் தனியான சூடாமணிகள் உண்டு. அன்றைய சமுதாயத்தில் அணியப் பெற்ற அணிகலன்கள் சமூகத்தில் அவரவர் நிலையை அறிவதற்கும் மதிப்பிடுவதற்கும் உரிய ஓர் அளவுகோலாக அமைந்திருந்தது. |

அவ்வாறே தமிழ் நாட்டுக் கடலில் முத்துக் குளித்தல் சங்க காலந்தொட்டே நடைபெற்று வருகின்றது. **"கொற்கைக் குடாக் கடலில் விளைந்த முத்து''** என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது.

**முத்துப்படு பரப்பிற் கொற்கை முன்னுரை** (*நற்* 23)

**கொற்கையம் பெருந்துறை முத்து** (*அகம்* 27)

என்று சுட்டும்.

அரசர்கள் ஏகவடம் என்னும் முத்துமாலைகளை அணிந்தார்கள். அரசர்களுக்கு உரிய அடையாள அணிகளில் முத்து மாலையும் ஒன்று,

**இலங்கு கதிர்த் திருமணி பெறூஉம்**
**அகன்கண் வைப்பின் நாடு**

(*பதிற்* 6;12-20) கொங்கு நாட்டிலே புன்னாடு பகுதியில் நீலக்கல் சுரங்கம் அமைந்திருந்தது. அந் நீலக்கற்கள் (கோமேதகம்) அன்றைய நாட்களில் உலகத்தில் வேறெங்கும் கிடைக்காத அழகான கற்கள். புன்னாட்டு நீலக் கற்களை யவன வாணிகர் வாங்கிச் சென்று ரோமாபுரியில் விற்பனை செய்தார்கள்.

### 2.5.5. சங்க காலத்தில் மது வடித்தல் தொழில்

சங்க இலக்கியத்துள் கள் மதுவாகிய **தேறல்** 39 இடங்களில் பயின்று வருகின்றது. கள் உற்பத்தியில் ஈடுபட்டவர் **தேறலர்** (*குறு* 34-1;*புறம்* 360-4) எனப்பட்டனர். கள்ளும், மதுவும் தென்னை, பனை நெல், தினை, தேன் பலா ஆகியவற்றிலிருந்து உற்பத்தி செய்யப்பட்டன. ஆனால் அவை உள் நாட்டிலேயே நுகரப்பட்டது. வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி ஆகவில்லை.

**கள் தேறல், தோப்பி, பிழி, நறவு, மகிழ், மட்டு** முதலான பெயர்கள் மதுபானங்களுக்கு கூறப்பட்டுள்ளன. **கள்** (137) இடங்களில் இடம் பெறுகின்றது. **தேறல்** (39) இடங்களிலும் இடம் பெறுகின்றது. **தோப்பி** (*பெரு* 142; *அக* 265-16,348-7) மூன்று இடங்களிலும் **பிழி** (17) இடங்களிலும் **நறவு** (59) இடங்களிலும் **மகிழ்** (86) இடங்களிலும் **மட்டு** (11) இடங்களிலும் சங்க இலக்கியத்துள் இடம்பெறுகின்றன.

**தெண் கட்டேறல்** (*அகம்* 336) **பாப்புக் கடுப்பன்ன தோப்பி** (*அகம்* 348) **பாம்பு வெகுண்டன்ன தேறல்** (*சிறுபாண்*-237) **தண்கமழ் தேறல்** (*புறம்* 24) **மணம் கமழ் தேறல்** (*மதுரை* 780) **பூக்கமழ் தேறல்** (*பொருநர்* 157) என்று மதுவை சங்க இலக்கியங்கள் விதந்தோதுகின்றன. தென்னை, பனை மரங்களிலிருந்து கள் இறக்கப்பட்டதை **இரும்பனம் தீம்பிழி** (*நற்* 38) **பிணர்ப் பெண்ணைப் பிழி** (*பாட்டினப்* 89) என்றும் கூறப்படுகின்றது.

நெல், தினை முதலான தானியங்களில் இருந்து உண்டாக்கப்பட்ட மது தோப்பிக்கள் எனப்பட்டது. இவற்றை வீடுகளில் காய்ச்சி வடித்தார்கள். **இல்லடு கல்லின் தோப்பி** (*பெரும்* 142) **துகளற விளைந்த தோப்பி** (*அகம்* 205) என்றும் சுட்டப்படுகின்றது. **தினைக்கள் உண்ட தெளிகோல் மறவர்** (*அகம்* 284) என தினைக்கள் கூறப்படுகின்றது. பலாச் சுளைகளிலிருந்து தயாரிக்கப்பட்ட மது **தீம்**

**பலவின் சுளைவிளை தேறல்** (*அகம்* 128,182) எனப்பட்டது. மூங்கிற் குழாயில் தேனைப் பதப்படுத்தி மதுவாக்கி உண்டனர். இதனை **நிலம் புதைப் பழுநிய மட்டின் தேறல்** (*புற*120) என்றும் குறிப்பிடுகின்றனர். மதுவை விற்றவர்களும், பரிமாறியவர்களும் பெண்களே ஆவர்.

### 2.5.6. சங்க காலத்தில் நெசவுத் தொழில்

மனித வாழ்வில் உணவிற்கு அடுத்ததாக இன்றியமையாததாக அடிப்படைத் தேவையாக இருந்து வருவது உடையாகும். தொல் பழங்காலத்தில் இலை , தழை, மரப்பட்டைகளை ஆடைகளாகப் பயன்படுத்தியுள்ளனர். நாளடைவில் பஞ்சினை நூலாக்கி ஆடை நெய்து உடுத்தியுள்ளனர்.

தொல்காப்பியர் பொருளதிகார மெய்ப்பாட்டியலில் உடை பற்றிய செய்தியினை

**ஊழிணி தைவரல் உடை பெயர்ந்த துடுத்தலொடு**

(*தொல்* மெய்ப் 14.2) எனும் நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார்.

பின்தங்கிய திணைச் சமூகங்களில் முதன்மையான உற்பத்தி உறவுகளுக்குள் வராத, பங்கு பெற்றிராத சமூக அமைப்புக்களில் பழைமையான இலை, தழைகளால் ஆன ஆடைகளையே உடுத்தினர் என்பதை.

**மரனா ருடக்கை மலையுறை குறவர்** (*நற்* 64-40 என்ற உலோச்சனார் பாடல் குறிப்பிடுகின்றது. மரப்பட்டையின் நாராலே தயாரித்த உடையினை குறவர்கள் உடுத்தினர் என்றும் பொருள் கொள்ளலாம்.

**எஃகுறு பஞ்சிற்றாகி வைகறை** (*நற்* 247:4) என்ற பாடலடி மூலம் பஞ்சை வில் கொண்டு நூலாக்கியதை பரணர் குறிப்பிடுகின்றார். கணவனை இழந்த கைம் பெண்கள் நெசவு மேற் கொண்டனர் என்பதை

**ஆளில் பெண்டிர் தாளில் செய்த** (*நற்* 353:1) என்ற அடியில் கபிலர் பதிவு செய்துள்ளார். ஆடையானது **சிதாஅர், அறுவை, காழகம், கலிங்கம்** என்றெல்லாம் குறிப்பிடப்படுகின்றது.

அக்காலத்தில் பட்டு நெசவு நடைபெற்றதையும் அறியமுடிகின்றது. பகலில் பட்டாடை உடுத்தி இரவில் பருத்தி ஆடை அணிந்திருந்ததை அறிய முடிகின்றது

**பட்டு நீக்கி துகில் உடுத்தும்** (*பரி* 107)

**'கொட்டை கரையைப் பட்டுடை நல்கி'**

(*பொருந* 155) இவ்வாறு கண்ணைக் கவரும் வனப்பு மிக்க, கரை போட்ட ஆடைகளை நெய்து உபயோகித்தனர்.

**சிதா அர்** (*பொரு* 81,154;*பதி* 12-20; *அகம்* 337-12, *புறம்* 69-3, 138-5, 376-4,381-12,385-6, 392-14,393-16,398-19,400-10)

**அறுவை** (*பொரு* 83; *சிறு* 236; *நற்* 40-5,70-2, *அகம்* 195-12, *புறம்* 154-10,286-5, 291-2, 311-2)

இதனடியாகவே **அறுவையர்** (*நெடு* 35; *பதி* 34-3) குறிப்பிடப்படுகின்றனர்.

**காழகம்** (*திரு* 184; *மது* 598; *பட்*191; *கலி* 7-9, 73-17,92-37 *புறம்* 41-7) ஆகிய இடங்களில் இடம் பெறுகின்றது. இதன் அடியாகவே **காழியர்** (துணி வெளுப்போர்) குறிப்பிடப்படுகின்றனர்.

(*அகம்* 89:7) சங்க காலத்து சமூக அமைப்பில் உயர்குடியினராகிய தலைமக்களின் அல்லது உயர் குடயினரின் ஆடைகளை வெளுத்து தூய்மைபடுத்தி உலர்த்தி தருபவர்கள் இருந்தனர். இவர்கள் காழியர், புலையர், புலைத்தியர் எனப்பட்டனர். இதனை அஞ்சிலஞ்சியார் எனும் புலவர்,

**வறனில் புலத்தி எல்லித் தோய்ந்த**
**புகார் புகர் கொண்ட புன்பூங் கலிங்கமொடு**

(*நற்* 90;3-4) என்ற அடிகள் உணர்த்துகின்றன. இவர்கள் நாளடைவில் தனி சமூகப் பிரிவாக தாழ்ந்த நிலை எய்தினர் என்பது கண் கூடு.

புலை என்றால் *'ஊன்'இழி'* என்று கழக அகராதி பொருளுரைக்கிறது. எனவே ஊன் உண்ணுபவன் இழிவானவன், என்ற பொருள் புலையன் என்பதற்கு கொள்ளப்படுவதை அறிகின்றோம். பின் வரும் சங்கப்பாடல்

**நலத்தகைப் புலைத்தி பசை தோய்த்து எடுத்துத்**
**தலைப்புடைப்போக்கித் தன் கயத்த இட்ட**
**நீரின் பிரியாப் பரூ உத்திரி கடுக்கும்** (*குறுந்*;33)

புலை மகள் கஞ்சிப்பசையிலே தோய்த்து எடுத்து முதல் தப்பலை தப்பிவிட்டு ஆடையினைத் தண்ணிய நீர் நிலையிலே இட்டு அலசுவாள். அப்போது அந்நீரிடத்தே காணப்படும் தம்முள் பிளவுற்ற பருத்த ஆடையின் முறுக்கைப் போன்று பெரிய பகன்றையின் மொட்டு குவிதல் நீங்கி மலந்து வெண் மலராக தோன்றும் என்று மேற்கண்ட பாடல் கூறும். 'புலையனது அகன்ற வாயைப் போன்ற

தண்ணுமை (நற் 34) என்று சுட்டுகின்றது. துணி வெளுக்கும் புலையர் பரத்தையரிடம் தூது போவர் என்றும், சுடு காட்டில் இருப்பவர் என்றும் இசைக் கருவிகளை மீட்டுபவர், துணி வெளுப்பவர் என்றும் பதிவு செய்துள்ளது.

**புலைத்தி** (*நற்* 90-3; *குறு* 330-1; *கலி* 72-14,117-7; *அக* 34-11,387-6,

**புலைய** (*புற* 287-1)

**புலையர்** (*கலி* 55-18)

**புலையன்** (*நற்* 77-1,347-5; *கலி* 68-19;85-22;95-10; *புற* 360-19 மேற்காண்ட விபரங்களிலிருந்து புலையர் என்போர் கடை நிலையில் இருந்து உழைத்தவர்கள் என்று அறிய முடிகின்றது.

**2.5.7. சங்க கால வாணிகம்**

**அறுவை வாணிகர், கூல வாணிகர், பொன் வாணிகர்** சங்காலத்தில் விளங்கினர்; **கூலம்** (*மது* 317; *நற்* 93-3; *பதி* 13-23-,19-5, 29-11,89-7; *புறம்* 381-17)

**அறுவை** (*பொருந* 83, *சிறு* 236 *நற்*. 40-5,70-2; *அக* 195-12; *புற* 154-10. 286-5,291-2,311-2)

**பொன்** (262) இடங்களில் இடம் பெறுகின்றது. கூலம் என்பது உணவு தானியங்கள் ஆகும். அறுவை வாணிகம் என்பது துணி வாணிகம். பொன் வாணிகம் என்பது பொன், வெள்ளி, இரும்பு, முதலாகிய அணிகலன்களையும் கருவிகளையும் விற்பனை செய்தலாகும். அங்காடி **நாள் அங்காடி, அல்லங்காடி** என பகலில் மட்டும் வாணிபம் நடைபெறும் இடம் பகல் இரவு எந்நேரமும் வாணிபம் நடைபெறும் இடங்கள் இருந்ததை அறிய முடிகின்றது. அங்காடி **ஆவணம்** என்றும் சுட்டப்படுகின்றது. **அங்காடி** (*நற்* 258-7; பரிதி 2-9) **அல்லங் காடி** (*மது* 544) **நாளங்காடி** (*மது* 430; *அக* 93-10) சுட்டப்படுகின்றது. மதுரை மாநகரம் இரவு பகல் பாராமல் வாணிபம் நடைபெற்ற நகரமாதலால் **தூங்கா நகரம்** என்ற சிறப்பு பெயரையும் பெற்றது.

பொருட்களை எடையிடும் கருவி **நிறை** என்றும் எடைக் கல் **நிறைக்கல்** என்றும் கூறப்படுகின்றது. துலாக்கோலின் முள் **ஞமன்** எனப்பட்டது. நிறை (106) இடங்களிலும், நிறைக்கல்( *கலி* 43 -26)ஓரிடத்திலும் இடம் பெறுகின்றன. **தெரிகோல் ஞமன் போல** (*புற* 6-9) என்று *புற நானூறு* சுட்டும் தலை நகரங்களில் துறைமுகப் பட்டனங்களில் இவ்வாறு உள்நாட்டு வெளிநாட்டு வாணிபம் சிறப்புற நடைபெற்றிருந்தாலும் மலை சார்ந்த பகுதியான குறிஞ்சிக்கும் காட்டிடையே

அமைந்த முல்லைநில ஊர்களுக்கும் பண்டமாற்று முறையில் பொருட்கள் கொண்டு செல்லப்பட்டு வாணிபம் நடைபெற்றன. இது பெரும்பாலும் உப்புக்கு மாற்றாக மேற் கொள்ளப்பட்டது. உப்பு விளைந்த இடம் **அளம்** (*நற்* 354-10) எனப்பட்டது.

**உமண்** (*நற்* 374-2; *குறு* 388-4; *அக* 119-8,159-4,173-10, 343-4, *புற* 386-17)

**உமணர்** (*சிறு* 55, *பெரு* 65, *நற்* 4-7,138-3,183-5,254-6,331-2; *குறு* 124-1, *அகம்* 17-13,30-5,140-5,169-6,191-4,257-17,295-9,303-17,310-14. 329-6, 337-5, 390-3, *புற* 84-6, 102-4,116-7,307-7, 313-5) மேலும் உப்பு **கடல் விளை அமுதம்** (*நற்* 88-4) என புகழப்பட்டது. **கழி** என்றும் **உப்பங்கழி** (*நற்* 4-12,27-4) என்று சுட்டப்படுகின்றது. உப்புக் குவியல் **வெண்குவடு** (*நற்* 64-7) எனப்படுகின்றது.

**தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து**
**பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி**

(*நற்* 183-1-2) பாடலில் தம் நிலத்தில் விளைந்த நெல்லுக்கு வேற்று நிலத்து உப்பை மாற்றாகப் பெற்றதைச் சுட்டுகின்றது.

**உப்பை மாறி வெண்ணெல் தரீஇய**
**உப்பு விளை கழனிச் சென்றனள்**

(*குறு* 269.5-6) வெண்மையான உப்பை கொடுத்து நெல்லைப் பெற்றதை கல்லாடனார் பதிவு செய்கின்றார். மேலும் நெல்லும் உப்பும் சம மதிப்புடையதாக ஏற்கப்பட்டு பண்டமாற்று நடந்துள்ளது. உப்பளத்தில் உழாமல் விளைவித்த உப்பை உழுது பெற்ற நெல்லுக்கு ஈடாக பெற்றனர் என்று *அகநானூறு* குறிப்பிடுகின்றது.

**பெருங்கடல் வேட்டத்துச் சிறுகுடி பரதவர்**
**இருங்கழிச் செறுவின் உழாஅது செய்த**
**வெண் கல் உப்பின் கொள்ளை சாற்றி**
**என்றூழ் விடர குன்றம் போகும்**
**கதழ்கோல் உமணர் காதல் மடமகள்**
**சில்கோல் எல்வளை தெளிப்ப வீசி**
**நெல்லின் நேரே வெண்கல் உப்பு எனச்**
**சேரி விலை மாறு கூறலின்**

(*அகம்* 140;1-8) என்று அம்மூவனார் விளக்குகிறார். அம்மூவனாரின் இன்னொரு பாடல்'

**நெல்லும் உப்பும் நேரே ஊரீர் கொள்ளீரோ**

என்றும்

**சேரிதோறும் நுவலும் அவ்வாங்கு**
**உந்தி அமைத் தோளாய்**

(*அகம்* 390;8-10) நெல்லும் உப்பும் விலை ஒப்பாகும் வாங்கிக் கொள்வீராக! எனச் சேரிதோறும் விற்கும் அழகிய கொப்பூழையும், மூங்கில் போன்ற தோளையும் உடை ய பரதவப் பெண் பற்றி அம்மூவனார் சுட்டிக் காட்டுகின்றார்.

### 2.5.7.1. சங்க காலத்தில் பிற வகையிலான பண்ட மாற்று

**காந்தள் அம் கண்ணி கொலையவில் வேட்டுவர்**
**செங்கோட்டு ஆமான் ஊனோடு காட்ட**
**மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு**
**பொன்னுடை நியமத்துப் பிழிநொடை கொடுக்கும்**
**குன்றுதலை மணந்த புன்புல வைப்பும்**

(*பதிற்* 30;9-13) காந்தள் கண்ணி சூடிய வேட்டுவர் தம் வில்லினால் வீழ்த்திய காட்டுப் பசு இறைச்சியையும் வலிய யானையின் வெண் கோட்டினையும் கொண்டுவந்து செல்வம் நிறைந்த கடைத்தெருவில் கள்ளுக்கு மாற்றாக விற்றனர். இது குறிஞ்சி நிலத்துக்குள்ளாகவே நிகழ்ந்த பண்டமாற்று எனலாம்.

**யவனர் தந்த வினைமான் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளம் கெழு முசிறி ஆர்ப்பு எழ வளைகு**

(*அகம்* 149:9-11) என்று எருக்காட்டூர் தாயங் கண்ணனார் குறிப்பிடுகின்றார். சேர மன்னனின் 'சுள்ளி' என்ற பேராற்றின் நுரையானது சிதற யவனர் கொண்டு வந்த நல்ல மரக்கலமானது பொன்னுடன் வந்து மிளகுடனே மீண்டு சென்றதைச் சுட்டுகின்றது. ஐவகை நிலங்களுக்குள் மட்டுமல்லாது அயல் தேசத்தவரிடமும் பண்டமாற்று நிகழ்ந்துள்ளதை குறிப்பிடுகின்றது.

உள் நாட்டில் சம மதிப்பீட்டுப் பொருளாக உப்பு விளங்கியது. உப்புக்கு மாற்றாக நெல்லும் பிற தானியங்களும் இறைச்சியும் கூட பரிவர்த்தனை ஆயின. கள்ளுக்கு மாற்றாகவும் பரிவர்த்தனை நடைபெற்றது. ஆனால் உயர்குடி சமூகத்தாரிடையே செல்வ வளமிக்க குடியினரிடையே பொன் வெள்ளி முதலான உயர்ந்த உலோகங்களாலான காசுகள் குவிந்திருந்தன. அவற்றுக்கு விலையாக யானை தந்தம்,

மிளகு, அகில், சந்தனம் முதலானவை இங்கிருந்து ஏற்றுமதி ஆனதென்று சங்க இலக்கியங்கள் சுட்டுகின்றன.

### 2.5.8. சங்க காலத்தில் போக்குவரத்து முறைகள்

சங்கத் தமிழரின் வாழ்வானது ''திரைகடல் ஓடியும் திரவியம் தேடு'' என்னும் கூற்றினை அடிப்படையாகக் கொண்டது மூவேந்தர் அரசு செழித்து நிலைப்பட்ட போது சங்கச் சமூகத்தின் நில உற்பத்தியும் வாணிபமும் வளர்ந்தோங்கியிருந்ததன் விளைவாகவே அது செழித்திருந்தது. அக்காலத்தில் போர் முயற்சிகளுக்காகவும் வாணிபத்திற்காகவும், நில உற்பத்தி முறைகளுக்காகவும் கால் நடைகளே பயன்படுத்தப்பட்டன. போக்குவரத்துக்கும் கால் நடைகளே பெரிதும் பயன்படுத்தப்பட்டன.

சங்க கால மக்கள் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு பொருட்களை இடம் பெயர்க்க கோவேறு கழுதைகளையும், கழுதைகளையும், குதிரைகளையும் யானைகளையும் பயன்படுத்தினர். கோவேறு கழுதைகள் அக்காலத்தில் 'அத்திரி' எனப்பட்டது. கோவேறு கழுதைகள் (அத்திரிகள்) செல்வச் செழிப்பு மிக்கவர்களாகிய உயர்குடிகள் பயணிக்கும் சாதனமாக விளங்கியது. பொதி சுமக்கவும் சரக்கு வண்டிகளை இழுக்கவும் கழுதைகள் பயன்படுத்தப்பட்டன. குதிரைகளை அரசர்களும் படைத்தளபதிகளுமே பயன்படுத்தினார்கள்.

**கொடு நுகம் நுழைந்த கணைக்கால் அத்திரி**
**வடிமணி நெடுந்தேர் பூண**

(*அகம்* 350;6-7) பாண்டிய நாட்டு கொற்கை கடலுக்கு அருகில் அமைந்துள்ள பரதவர் ஊருக்கு ஒருவன் அத்திரி பூட்டிய வண்டியில் சென்றான் என்கிறது.

**கழிச் சுறா வெறிந்த புட்டாள் அத்திரி**
**நெடுநீர் இருங்கழி பரிமெலிந்தசைகு**

(*அகம்* 120;10-11) என்று நக்கீரர் கூறுகிறார்.

**கழிச்சேறு ஆடிய கணைக்கால் அத்திரி**
**குளம்பிலும் சேயிறா ஒருங்கின**
**கோதையும் எல்லாம் ஊதை வெண் மணலே**

(*நற்* 278;7:9) என உலோச்சனார் குறிப்பிடுகின்றார்.

மதுரையில் வைகையாற்றில் நடந்த நீராட்டு விழாவில் சிலர் அத்திரி யூர்ந்து வந்தார்கள் என்பதை

**அகவரும் பாண்டியு மத்திரியுமாய்**

(*பரி* 10-7) என பரிபாடல் குறிப்பிடுகின்றது. காவிரிபூம்பட்டினத்தில் வாழ்ந்த மாசாத்துவன் மகனாகிய கோவலன் கடற்கரையில் நீராட அத்திரியில் சென்றதாக *சிலம்பு* சுட்டுகின்றது.

**வான வண்கையன் அத்திரி ஏற** (*சிலம்பு* கடலாடுகாதை 119) **அத்திரி** (*நற்* 278-7; *பரி* 10-16 *அகம்* 10-10, 350-6) நான்கு இடங்களில் இடம் பெறுகின்றது.

### 2.5.8.1. சங்க காலத்தில் கழுதைப் பயன்பாடு

விளைப் பொருட்களை நிலங்கடந்தும், நாடு கடந்தும் கொண்டு சென்று வாணிபம் மேற்கொள்ள மாட்டு வண்டி பயன்படுத்தப்பட்டது. ஆனாலும் மாட்டு வண்டி செல்லவியலாத இடத்துக்கு குன்றுகளுக்கு மலைகளுக்கு கொண்டு செல்லவும் குறிஞ்சி நிலத்து ஊர்களில் சந்தைபடுத்தவும் போக்குரத்து சாதனமாக கழுதைகள் முக்கியமாகப் பயன்பட்டன. பலாப்பழம் அளவுக்கு அமைந்த சிறு சிறு பொதிகளாக கட்டப்பட்ட மிளகு மூட்டைகளை கழுதைகளின் மேல் ஏற்றிக் கொண்டு வணிகர்கள் சென்றனர் என்பதை *பெரும்பாணாற்றுப் படை* விளக்குகின்றது.

**தடவு நிலைப் பலவின் முழுமுதற் கொண்ட**
**சிறுசுகளைப் பெரும் பழங் கடுப்பமிரியல்**
**புணர்ப் பொறை தாங்கிய வடுவாழ் நோன் புறத்து**
**அணர்ச் செவிக் கழுதைச் சாத்தொடு வழங்கும்**
**வில்லுடை வைப்பின் வியன்காட்டியவு**

(*பெரும்* 77-820) என கடியலூர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுகின்றார்.

**அணங்குடை முந்நீர் பரந்த செருவின்**
**வணங்கு திறம் பெயர்ந்த வெண்கல் அமிழ்தம்**
**குடபுல மருங்கின் உய்ம்மார் புள்ளோர்த்துப்**
**படையமைத் தெழுந்த பெருஞ் செயாடவர்**
**நிரைபரப் பொறைய நரைபுறக் கழுதைக்**
**குறைக்குளம் புதைத்த கற்பிறழ் இயவு**

(*அகம்* 207:1-6) கிழக்கு கடற்கரைப் பகுதியில் அமைந்துள்ள உப்பளங்களில் நெய்தல் நிலங்களில் விளைந்த உப்பை மூட்டைகளாக்கி கழுதைகளின் மீது ஏற்றிக் கொண்டு மேற்கேயுள்ள ஊர்களுக்கு உமண் சாத்து சென்றதாக சேந்தம் பூதனார் குறிப்பிடுகின்றார்.

**கழுதை** (*பெரு* 80; பதி 25-4; *அக* 89-12,207-5,343-12. *புற* 15-2,392-9) ஏழு இடங்களில் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. மேலும் வேளாண் உற்பத்திக்கு உழுதிடவும் பரம்படிக்கவும், பிணையில் பூட்டவும் வண்டியிழுக்கவும் **எருது, எருமை,** ஆகியவை பயன் படுத்தப்பட்டன. **எருது** (*மலை* 469; *நற்* 125-9,315; *பதி* 27-13; *பரி* 20-62; *அக* 37-16; *புற* 102-1 269-2,327-1, 342-13, 370-16சு) பதினோறு இடங்களிலும் **எருமை** (39) இடங்களிலும் இடம் பெற்றுள்ளன.

### 2.5.8.2. சங்க காலத்தில் குதிரைப் பயன்பாடு

வேந்தமைப்பில் நால் வகைப்படைகளில் குதிரைப்படையும் ஒன்று. வேந்தன் தேரில் ஏறி வருவதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. குதிரைகளால் இழுக்கப் பெற்றது தேர் ஆகும். நெடுநல் வாடையில் பாண்டிய மன்னன் கூதிர் பாசறையில் மழைநீர் சொட்ட சொட்ட பாதுகாவலன் குடை பிடிக்க வந்து போர்களத்தில் புண் பட்டவர்களுக்கு ஆறுதலாக இன் முகத்துடன் உபசரிப்பதும் லாயத்தில் குதிரைகளை தடவிக் கொடுப்பதும் மிக்க கவித்துவம் வாய்ந்த காட்சியாகும். குதிரைகள் படையணியாகவும் தேர் ஓட்டவும் பயன்படுத்தப்பட்டன.

**புல்லார் புரவி வல்விரைந்து பூட்டி**
**நெடுந்தேர் ஊர்மதி வலவ**

(*அகம்* 244;12-13) செழித்து வளர்ந்துள்ள நம் குதிரைகளை கொண்டு வந்து தேரில் பூட்டி தேரினை விரைந்து செலுத்துவாய் என தலைவன் தேர்ப்பாகனுக்கு கூறுகின்றான்.

**வண்பரி நெடுந்தேர் பூண்க நின் மாவே**

(*புறம்* 146;11) மனைவியின் துன்பத்தைப் போக்க தேரில் விரைந்து செல்ல வேண்டும். எனவே உன் தேரில் குதிரையை பூட்டு என்று பேகனுக்கு அரிசில் கிழார் கூறுவதாக மேற்கண்ட வரிகள் அமைந்துள்ளன. குதிரையானது புரவி, பரி என்று குறிப்பிடப்படுகின்றது. **புரவி** (72) இடங்களிலும், **பரி** (82) இடங்களிலும் இடம் பெறுகின்றன.

### 2.5.9. சங்க காலத்தில் வேளாண் உற்பத்தி

சங்க இலக்கியத்தில் உழவு மேற் கொண்ட கால் நடைகளை **அதரி, கடா, பகடு** என்றும் குறிப்பிடுகின்றனர். **அதரி** (*மது* 94, *பறம்* 370-17,37-16, 373-26)

**கடா** (*புறம்* 370-17,371-16)

**கடா வழித்த** (*புறம்* 353-9)

**கடா வுறுப்ப** (*சிறு* 10)

**கடா அவுறுக்கும்** (*மலை* 339)

**பகடு** (*புறம்* 60-9, 90-9, 125-7, 307-9, 366-14) எனும் சொற்கள் இடம் பெறுகின்றன.

**புன் புலம் வித்தும் வன்கை வினைஞர்**
**சீருடைப் பல் பகடு ஒலிப்பப் பூட்டி**
**நாஞ்சில் ஆடிய கொழுவழி மருங்கின்**

(*பதிற்* 58;15-17) வன்புல வேளாண்மையில் மழைபெய்த காலத்து உழவர்கள் விதை விதைத்து பகடு பூட்டி உழுதனர் என்பதை அறிய முடிகின்றது.

மேலும் உழவுக் கருவியான கலப்பை ஏர், நாஞ்சில், உழுபடை என்று பலவாறாக சுட்டப்படுகின்றது. **கலப்பை** (*பெரும்* 188) யும், அதனடியாக கலப்பையரும் (*பதி* 15-26,23-4,41-5; அக 301-22) **கலப்பையிர்** (மலை 13) இடம் பெறுகின்றனர்.

**ஏர்** (*அகம்* 41-4, 194,2 *புறம்* 33-4, 338-1, *பதி* 14-7; *குறு* 131-5; *மது* 173 *மலை*-25)

இதனை அடியொற்றி ஏரோர் (*சிறு* 233) ஏராளர் (*பதி* 76-11) ஏரின் வாழ்நர் (*புறம்* 375-6)இடம் பெறுகின்றனர்

**கொழு** என்ற சொல் (*பொரு* 117, *பதி* 58-17) அடியாகவே **கொழுநன்** இடம் பெறுகின்றான். நன்றாக உழுது பண்படுத்துபவன் என்ற பொருளும் உண்டு. கொழு (65) இடங்களிலும் கொழுநர் (4) இடங்களிலும் வருகின்றது. நெற் கதிர்களை அரியும் சிறந்த உழவர் **நெல்லரி தொழுவர்** (*மது* 89,122, *நெடு* 49, *நற்* 195,-6; *புற* 24-1,209-2,379-3) எனப்பட்டனர்.

உழுபடைக் கருவியால் உழுதல் மேற் கொண்டவர் **உழவர்** என்றும் சுட்டப்படுகின்றனர். (*சிறு* 190; *பெரு* 197,355; *பட்* 205) நெற்களத்தில் பாடுபடுபவர் **களமர்** எனப்பட்டனர் (*பொரு* 194; *மது* 260,393; *மலை* 469, *நற்* 125-9 *பரி* -127; *அக* 366-3, *புற* 212-2 ,387-25) **புனவன்** (119-*குறு* 105-1133-1 *அகம்* -11) புனம் காப்பவன் ஆவான். அவன் இடத்தால் பெயர் பெற்றான்.

பாடுபட்டு உழைப்போர் **படுநர்** (*புற* 399-10) அரிஞர் அறுவடை மேற் கொள்பவர் ஆவர் (*அகம்* 84-12 புறம் 348-1) **அரிஞர்** (நெல் அரிபவர்கள்) புற 42-12; *பதி* 19-22 *ஐங்* 190-2 அரிவணர் (*நற்* 400-3) **அரிவார்** (*குறு* 375-4) ஆகியோர் தனது உழைப்பால் செயலால் உற்பத்தி தொழிலால் பெயர் பெற்றனர்.

குளமாகிய **ஏரி**யானது (*பரி* 7-3, தி 2-88,11-76; *மது* 246; பட் 284, *குறுத்* 325-6 *அக* 11-13,42-9, 252-13; *புற* 118-3, 142-1,229-4) சங்க இலக்கியத்துள் பன்னிரண்டு இடங்களில் இடம் பெறுகின்றது. குளங்களின் **மதகு** (*பரி-தி* 2-66) குறிப்பிடப்படுகின்றது. இது **புதவு, வாய்த்தலை, தூம்பு** என்றும் வழங்கப்பட்டுள்ளது. **புதவு** (*பெரு* 52,127, 198; *மது* 65, 165; *பட்* 179 *மலை* 449 490; *பதி* 16-5. 27-9, 53-16; *அக* 83-16; *அக* 83-8, 237-14, 326-11; *புற* 24-19;176-5,376-20) இடம் பெற்றுள்ளது. **வாய்த்தலை** என்பது (Sluice) வாயில் என்றே குறிக்கப்படுகிறது. தூம்பு (29) இடங்களில் இடம் பெறுகின்றது.

**தண் புனல் வாயில் துறையூர்** (*புறம்* 136-25) குளிர்ந்த நீர் புகும் வாய்த்தலைகளையுடைய துறையூர் என்பதாகும். மேலும் கூவல் என்பது **கிணறு, நீர் நிறைந்த பள்ளம்** என்ற வேறு பெயர்களை உடையது. **கூவல்** (*மலை* 366; *நற்* 41-4, 240-7; *குறு* 224-3; *ஐங்* 203-3; *பதி* 51-4; *அக* 21-23,155-8,207-10, 295-11 , 321-8; *புற* 306 2,311-1,319-1,331-1) குளத்தின் நீரை திறந்து விடும் வாய்த்தலை **மடை** என்று குறிக்கப்பட்டுள்ளது. மடை **கீழ் மடை** (*புற* 42-13) **பெருங்குள மடைநீர்** (*நற்* 340-3) நெல் அறுவடை முடிந்து மீண்டும் பயிரிடலை **மறுகால் தண்ணடை** (*அகம்* 84-4, *புற* 285-15) எனப்பட்டன.

**அரிகால் மாறிய அம் கண் அகல் வயல்**
**மறுகால் உழுத ஈரச் செறுவின்**

(*நற்* 210-2) பயிருக்கு நீர் நிலைகளிலிருந்து நீர் இறைக்கும் கருவி பத்தர் (*மலை* 381; *நற்* 92-6, *பற* 136-1) எனப்பட்டது. விதை விதைக்கும் கடகப்பெட்டி 'வட்டி' ஆகும். **வட்டி** (*நற்* 210-3; *அறு* 155-2; *ஐங்* 47-248-2 *கலி* 109-14; *புற* 33-2) இவ்வட்டியில் விதைக்கொண்டு (விதை) *மலை* 102; *குறு* 155-2, *பதி* 76-11; *அக* 194-5; *புற* 333-12) விதைப்பவர் **விதையர்** (*நற்* 121-1) ஆவர். பயிரில் களை (*முல்லை கலி* 61-3,62-9; *அக* 194-9; *புற* 120-5 260-20) வளர்ந்தள்ளது. களை பறிப்பவர் **களைஞர்** (*பெரு* 213; *நற்* 335-11 ; *குறு* 392-5, 397-8; *ஐங்* 183-6; *கலி* 29-25, 98-36) ஆவர். நெல் முதலிய தானியங்களை இட்டு வைக்கும் குதிர் மூடை ஆகியவை அறியப்படுகின்றன. **குதிர்** (*பொரு* 245, *பட்* 137,186; *புற* 285-5,343-3, 393-13) உலக்கை சங்க இலக்கியத்தில் (16) இடங்களிலும் **உரல்** (13) இடங்களிலும் இடம் பிடித்துள்ளன. முறமாகிய **சுளகு** (*கலி* 41-2; *அக* 393-10; *புற* 249-12; 321-3) இடம் பிடித்துள்ளது. மரக்கால் என்னும் அளவைக் கருவி **தூணி** (*சிறு* 238; *முல்* 39; *நற்* 16-7; *பதி* 45-1; *அக* 9-2,225-10)யும் **உழக்கு** (*கலி* 96-27) முதலியனவும் கூறப்படுகின்றன.

மேலும் கரும்பும், நெல்லும், பஞ்சியும் (பருத்தி) மஞ்சளும், மிளகும்

விளைந்துள்ளன. நெல்லின் வகைகள் பலவாகும். நெல் **வத்தம்** என்ற பெயராலும் வழங்கப்பட்டுள்ளது. மிளகானது **மிரியல், கறி** என்றும் குறிக்கப்படுகின்றது. நெல் (103) இடங்களிலும் வத்தம் (*பெரு* 305) ஓரிடத்திலும் வந்துள்ளது. **கரும்பு** (66) இடங்களிலும்,**மஞ்சள்** (*சிறு* 44; *பெரு* 354; *மதுரை* 289; *பட்* 17; *மலை* 343; *நற்* 101-1) *அக* 269-9) ஏழு இடங்களிலும் வந்துள்ளன. **மிளகு** (*குறி* 187; *மலை* 521; *நற்* 66-1; *பதி* 41-21) நான்கு இடங்களிலும் **மிரியல்** (*பெரு* -78) ஓரிடத்திலும், **கறி** *திரு* 309; *சிறு* 43; *பெரு* 307; *மது* 289 *பட்* 186 *மலை* 521; *நற்* 151-7, 297-8, 2881*ஐங்* 243-1 *பரி* 16-2; *கலி* 52-17 *அக* 26;14. 149-10, 182-14, 272-10 *புற* 168-2, 343-3) இருபது இடங்களில் இடம் பெறுகின்றன.

கரும்பினை ஆலையில் இட்டு பிழிந்து கொப்பறைகளில் காய்ச்சி வெல்லமாக்கியதைப் பற்றிய பதிவுகளும் மிகுதியாக உள்ளன. ஆலை என்று **எந்திரம்** என்றும் இவை குறிக்கப்படுகின்றன. **எந்திரம்** (*பெரு* 260 *மது* 258; *ஐங்* 55-1; *பதி* 19-23; *புற* 322-7) ஐந்து இடங்களிலும் **ஆலை** (*பெரு* 261; *பட்* 9; *மலை* 199, 340; *புற* 220-3) ஐந்து இடங்களிலும் இடம் பெறுகின்றன. அவ்வாறே தானியங்களை மாவாக அறைக்கவும் பருப்பு உடைக்கவும் ஆன திரிகையானது **திரிமரம்** என்று (*பெரு* 187) குறிப்பிடப்படுகின்றது. உறியானது **சிமிலி** (*மது* 483) என்று வழங்கப்பட்டுள்ளது.

நவீன காலத்தில் இயந்திரங்களை குதிரைத்திறன் அடிப்படையில் தான் தயாரித்தனர். எட்டு குதிரைத் திறன், பனிரெண்டு குதிரைத் திறன் என்றும் கூறுவதன் பொருள் மணிக்கு இத்தனை குதிரைகளால் செலுத்தப்படும் உழைப்பை இதிலிருந்து பெறலாம் என்பதாகும். காலங்காலமாக பெறப்பட்டு வந்துள்ள விலங்கினங்களின் உழைப்புச்சக்தியின் அடிப்படையிலேயே நவீன இயந்திர ஆற்றலும் கணக்கிடப்பட்டது. அத்தகைய உழைப்பினைக் கால் நடைகளைக் கொண்டும் யானைகளைக் கொண்டும் பெற்றுள்ளனர். **குதிரை இவுளி** என்றும் குறிப்பிடப்படுகின்றது. **இவுளி** (*பெரு* 492; *நற்* 63-9; *பதி தி* 2-4; *அக* 224-5, 363-1; *புற* 4-13, 197-1,382-4) **குதிரை** (28) இடங்களிலும் இடம் பெறுகின்றன. குதிரை சேனம் **கறுழ்** (*புற* 4-8) எனப்படுகின்றது.

**விளம்பழம் கமழும் கமழ்கூற் குழிசிப்**
**பாசம் தின்ற தேய் கால் மத்தம் நெய் தெரி**
**இயக்கம் வெளில் முதல் முழங்கும்**

(*நற்* 12;1-3) உள்ள தயிரினைக் கடையும் போது கயிறு ஆடிப் பானையில் தேய்த்ததால் மத்தின் தண்டு தேய்ந்து போனது. இதில் **மத்து** (மத்தம்) **குழிசி** (பானை) **பாசம்** (கயிறு)தயிர் கடைய நடப்பட்ட **தூண்** (வெளில்) ஆகியன இடம்

**அமரர்ப் பேணியு மாவுதி யருத்தியும்**
**அரும்பெறன் மரபிற் கரும்பிவட் டந்தும்**
(*புறம்* 99; 1-20) இதனை உணர்த்தும்

**வெண்பூக் கரும்பொடு செந்நெல் நீடி** (*பட்* 240)

**கரும்பின் பாத்தி பூத்த நெய்தல்** (*பதி* 13;3)

**விரிபூங் கரும்பின் கழனி** (*பதி* 13;13)

**காலம் அன்றியும் கரும்பு அறுத்து ஒழியாது** (*பதி* 30:14)

**கரும்பு அமல் கழனிய நாடு** (*பதி* 50;3)

**கரும்பல்லது காடறியாப்**
**பெருந்தண் பணை** (*புறம்* 16:15-16)

**ஆடுகட் கரும்பின் வெண்பூ நுடங்கும்**
**நாடெனப் படுவது நினதே** (*புறம்* 35;10-11)

மேற்கண்ட சங்க இலக்கியப் பாடல் வரிகள் கரும்பும் நெல்லும் அன்றைய வேளாண் உற்பத்தியில் பெற்றிருந்த முக்கியத்துவத்தை விளக்குகின்றன. கரும்பு ஆட்டும் ஆலைகள் களிற்றைப் போல் பிளிறும் பல ஊர்களைப் பற்றி (*ஐங்;*55) பாடல் குறிப்பிடுகின்றது.

**கரும்பின் எந்திரம் களிற்று எதிர் பிளிற்றும்**

(*ஐங்* 55) இவ்வாறு வேளாண் உற்பத்தியிலீடுபட்டு உழவுத் தொழில் மேற்கொண்டவர் கருவியினாலும் தொழிலாலும், இடத்தாலும், செயலாலும், பெயர் பெற்றுள்ளதை அறிய முடிகின்றது. அது மட்டுமல்லாமல் அன்றைய சமூக நிலைமையில் அம்மக்கள் தொழிலாலும் வாழும் தகுதிப்பாட்டாலும் கூட பெயர் பெற்றமை காண முடிகின்றது. அவர்கள் கடைசியர், வினைஞர், வினைவலர் என்று சுட்டுப்படுகின்றனர்.

கடுமையாக உழைப்பைச் செழுத்தி வாழ்ந்து வந்த அவர்கள் சமூக நிலைமையில் கடையராகவும் உழைப்பின் பேராலேயே **வினைவலர்** என்றும் பொதுவாக கூறப்பட்டாலும் செய்யும் வேலையின் பொருட்டே **களமர்** என்றும் **அரிஞர்** என்றும் பலவாறாக அவ்வப்போது நிலைமைகளுக்கு ஏற்ப சுட்டப்படுகின்றனர். உண்மையில் அவர்கள் அனைவரும் **அடியோரும், வினைவலருமே** ஆவர். மேலும் கட்டில் பின்னுபவன் **இழிசினன்** என்று புறப்பாடல் குறிப்பிடுகின்றது.

**கட்டில் நிணக்கும் இழிசினன் கையது**
**போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ**

(*புறம்.* 82:3-4) கட்டில் பின்னுபவன் இழிசினன் எனப்பட்டான். கட்டில் என்பது அரச கட்டில், படுக்கும் கட்டில், *நெடுநெல்வாடையில்* இடம் பெறுகின்றது. கால் கழி கட்டிலின் இடப்பி (*புறம்.* 286) என்று புறநானூறு பிணம் சுமக்கும் பாடையை கால்களற்ற கட்டிலாக குறிப்பிடுகின்றது. ஆகவே இத்தகைய தொழிலை மேற்கொண்டவர் **இழிசினர்** எனப்பட்டனர்.

**வினைஞர்** (*சிறு* 257; *பெரு* 211. 223. 231, 255; *மதுரை* 262, 539 *மலை* 462, *ஐங்* 81-2; *பதி* 58-, 75-9, *அக* 84-13, 1162- 184-13, 186-2,194-7; *புறம்* 61-8)

**வினைஞர்** (*பதி* 62-16)

**வினையர்** (*நற்* 48-7)

**வினைவர்** (*கலி* 10-6, 46-8, 68-2)

**கடைசியர்** (*புறம்* 61-1)

சமூகத்தின் இயக்கமாக இருந்து உற்பத்தியின் அடிப்படையாக இருந்து பொருட்களை விளைவித்தவர்கள், உருவாக்கியவர்கள் இவர்களே ஆவர்.

**அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடி வரையிலப் புறத் தென்பனார் புலவர்**

(*தொல்;* அகத்திணையியல் 23) இந்நூற்பாவால் உயர் குடியினரும், ஆட்சியாளரும் மேற் கொள்ளும் மண வாழ்க்கையும் பிற உரிமைகளும் மறுக்கப்பட்டவர்களே கடைசியரும் வினைவலரும் ஆவர் என்பதை அறிகிறோம். சங்ககால சமுதாயத்தில் சொத்துடைமையும், வாரிசுரிமையும் உயர்குடியினரின் பாற்பட்டதாகும். இந்நிலைமையில் அந்த தனிச் சொத்துடைமையைப் பேணும் வகையில் இல்லற வாழ்க்கை உயர்குடியினருக்கே உரியதாக விளங்கியது. இங்கு வாரிசை பெற்று வளர்ப்பவளாக பெண் விளங்கினாள். **'ஆண் மகவு', 'குல விளக்கு'** என்று விதந்தோதப்பட்டது. ஆனால் உயர்குடியினர் அல்லாத மேற்கண்ட கடைசியரும், வினைவலருமான உழைக்கும் மக்களுக்கு திருமணம் என்பது மறுக்கப்பட்ட ஒன்று; அவசியமற்ற ஒன்று என்பதை *தொல்காப்பிய* நூற்பா விளக்குகின்றது.

மேலும் உயர்குடியினனாகிய ஆட்சியதிகாரம் உள்ள ''தலைவன்'' பரத்தமையின்

பால் பிரிந்து செல்லுதல் மிகுந்து காணப்படுகின்றது. இது மருத நிலத்தில் பெரும்பான்மையாக காணப்படுகின்றது. இங்கு பரத்தை என சுட்டப்படுபவர்கள். இற் பரத்தை, சேரிப் பரத்தை '' எனப்படுபவர்கள் அந்நிலத்தினுள் அத்தலைவனுக்கு கட்டுபட்ட தலைவனது ஆளுகைக்கு உட்பட்ட உழைக்கும் மக்களின் பெண்களே. அம்மக்களுள் பெண்களை அனுபவிப்பது தலைவனுக்கு உரிமையாகும். இதனை தலைவியாலோ, பிற ஆடவர்களாலோ தடுக்கவோ, கட்டுபடுத்தவோ முடியாது. இது பரத்தமை என்று சுட்டப்படுகின்றது. இது பொருளாசையில் பரத்தமையானப் பெண்' என்ற பொருளில் வழங்கப்படவில்லை.

மேலும் அன்றைய சமூகம் ஊர்/சேரி என்ற பாகுபாட்டினை கொண்டு விளங்கியது. உயர்குடியினர் வாழ்ந்தது ஊர் எனவும் உழைக்கும் மக்கள் சேர்ந்து வாழ்ந்த பகுதி சேரி எனவும் சுட்டப்படுகின்றது. அந்த சேரி மக்கள் அதாவது உழைக்கும் கடைசியரும் வினைவலருமான மக்களின் பெண்களை அவன் அனுபவிக்கும் உரிமை 'சேரி பரத்தை' என்பதிலிருந்து அறியலாம். பார்ப்பனர் வாழ்ந்த இடமும் சேரி என்று குறிக்கப்படுகின்றதே? என்ற வினா எழுப்பி எந்தவிதமான ஒடுக்குமுறையும் அற்ற சமூகமே என்று கூறுவது தவறு. பார்ப்பனச்சேரி என்பது அவர்கள் பிறருடன் கலக்காமல் தமது தூய்மை காக்க தனியே இருந்த அக்ரகாரம். அது பார்ப்பனச்சேரி எனப்படுகிறது. உழைக்கின்ற மக்கள் ஒதுக்கி வைக்கப்பட்ட இடமும் சேரி என்றே அழைக்கப்படுகிறது. மேலும் பரத்தமை ஒழுக்கம் என்பது தலைவனுக்கு உரிய வீரயுகப் பண்பாகும்.[20]

### 2.5.10. சங்க காலத்தில் உற்பத்தி அல்லாத கருவிகள் அல்லது இசைக் கருவிகள்

பொதுவாக இசைக் கருவிகள் **'இயம்''** எனப்படும் **கூடு கொள் இன்னியம்** (*புறம்* 153;11) **யாழொடு பல் இயம் கறங்க** (*புற* 281;2) **இயவரும் அறியாப் பல் இயம்** (*புறம்* 336-6) **இயம் இசையா மரபேத்தி** (*புற* 400-4) ஆகிய பாடல் வரிகளால் இதனை விளங்கிக் கொள்ள முடியும். இத்தகைய இசைக் கருவிகளை இசைப்பவர்கள் இயவர் ஆவர். (*மது* 304, *நற்* 113-10, *ஐங்* 215-3, 425-2; *பதி* 17-7, 19-7, 27-10, *புற* 336-6). மேழி என்பது யாழைக் குறிக்கும் **மேழி கிணை தொடா** (388;1) என்பது *புற நானூறு*. நெய்தல் என்பது ஒரு வகை சாவுப் பறையாகும். **ஓரில் நெய்தல் கறங்க** (*புறம்* 194;4 **நெய்தல் கேளன் மார்** (*புறம்* 389;17) என்ற புறப்பாடல் சுட்டுகின்றது. **முரற்கை** என்பது ஒரு தாளக்கருவியாகும். **முரற்கை நீக்கி** (*புறம்* 376;13) தாளக் கருவியை வாங்கிக் கொண்டு என்ற பொருளில் வரும் **கோடு** எனும் கொம்பு வாத்தியத்தை இசைப்பவர் **கோடியர்** ஆவர். (*புறம்* 29-23, 368-16) **தண்ணுமை** என்பது முழவு ஆகும். இது சங்க இலக்கியத்தில் (26) இடங்களில் இடம் பெறுகின்றது. பறையானது **கிணை** என்றும் குறிப்பிடப்படுகின்றது. இது *பதிற்றுப்பத்தில்* (2) இடங்களிலும்,

அகநானூற்றில் (5) இடங்களிலும், *புறநானூற்றில்* (20) இடங்களிலும் இடம் பெற்றுள்ளது. **தடாரி** என்பதும் பறையாகும் . இது **தடாரி** என்றும், தெடாரி என்றும் அழைக்கப்படுகின்றது. தடாரி (*பொரு* 70; *பரி* 12-4; *புற* 249-4, 369-21, 370-18, 371-17, 372-1,381-12,385-4,390-8,395-25,398-12) ஆகிய இடங்களிலும் **தெடாரி** (*புற* 368-15, 376-4) ஆகிய இடங்களிலும் இடம் பெறுகிறது. **எல்லி** என்பதும் பறையாகும். இது **எல்லரி** என்றும் குறிக்கப்பட்டுள்ளது. **எல்லரி கொடுமின்** (*புறம்* 152-16) எல்லரியை முழக்குங்கள் என்பது இதன் பொருளாகும். இன்னும் பல நூறு இசைக் கருவிகள் சங்க இலக்கியத்தின் வழியில் காணலாகும்.

மேலும் **யாழ்** என்னும் நரம்பிசைக் கருவியும் சங்க இலக்கியமான எட்டுத் தொகை, பத்துப் பாட்டில் (69) இடங்களில் இடம் பெற்றுள்ளது. **''யாழோர்''** மதுரை காஞ்சியில் ஓரிடத்தில் சுட்டப்படுகின்றனர். **முழவு** எனும் தோற்கருவி எட்டுத் தொகை, பத்துப்பாட்டினுள் (86) இடங்களிலும், முழவன் (*அகம்* 352) ஓரிடத்திலும், முழவம் (*பரி* 8-99)ஓரிடத்திலும் சுட்டப்படுகின்றது. **முரசு** எனும் போர்ப்பறை பதினெண் மேல் கணக்கினுள் (79) இடங்களிலும் **முரசம்** (44) இடங்களிலும் சுட்டப்படுகின்றன. **மகுளி** எனும் தாளக்கருவி (*மலை* 103; *பரி* 12-41; *அக* 19-4) மூன்று இடங்களிலும் இடம் பெறுகின்றது. **மத்தரி** எனும் இசைக்கருவி (*பரி* 12-41) ஓரிடத்திலும் **பாண்டில்** எனும் தாளக்கருவி சங்க இலக்கியத்துள் (18) இடங்களிலும் இடம் பெறுகின்றன. இத்தகு இசைக் கருவிகளைக் கொண்டு இசைக்கும் **இயவர்** **'வயிரியர்'** என்றும் அழைக்கப்பட்டனர்.

**வயிரியர்** (*மது* 268,750; *நற்* 100-10; *பதி* 20-16, 43-34, 64-8, *பரி* 10-130 *அக* 45-11, 155-13,328-1, *புற* 9-9, 164-12) மேலும் **நைவளம்** என்னும் பண்ணும் (நட்டபாடை) **இளி, உழை** முதலான (ராகங்களும்)பண் களும் அறியப்படுகின்றன. இசைக் கருவிகளை சுட்ட **'தூரியம்'** எனும் சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது. மணமுரசு (*பரி* 22-15) **மணமுழவு** (*அக* 136-7) என்றும் அறியப்படுவதால் திருமணத்திற்கு தனிவகை இசைக் கருவிகள் இருந்த தென்பதை அறிகிறோம். உற்பத்தி அல்லாத தொழில்களில் சேவை குடிகளாய் **பாணன், பாடினி, விறலியர், கூத்தர்** உயர்ந்தோர் மாட்டே தொழில் புரிந்து வாழ்ந்து வந்துள்ளதை இதனால் அறிய முடிகின்றது.

**துடியன் பாணன் பறையன் கடம்பனென்**
**நின் நான் கல்லது குடியுமில்லை**

(*புறம்* 335 17-8) **துடி:** வெட்சிப் போருக்குரிய பறையாக *தொல்காப்பியம்* சுட்டுகின்றது. இது (*பொரு* 125,210; *பெரு* 124; *மது* 320; *பட்டி* 265; *மலை* 458; *நற்* 77-2; *பரி* 7-28; 21-19; 21-60, 21-64, 22-42; *கலி* 11-8, 15-4; *அக்* 19-4, 62-7,

79-13, 89-14, 154-9,196-3, 261-15, 265-19, 372-12, *புற* 170-6, 260-14, 287-1, 260-14, 287-1, 369-26, 370-6)

**துடியர்** (*புறம்* 280-8)

**துடியன்** (*புறம்* 269-6285,1,335-7) துடியெனும் இசைக் கருவியை கொண்டு இசைப்பவன் துடியன் எனப்பட்டான். வாயால் பாடும் தொழிலை உடையவர் பாணர் ஆவர். தலைமக்களுக்கு துணையாய் வருபவர்கள் பாணன், பாடினி ஆவர்.

வறுமையுற்ற பாணர்களை ஆற்றுப்படுத்தும்படி எழுந்த இலக்கியங்கள் *சிறுபாணாற்றுப்படை, பெரும் பாணாற்றுப்படை, பொருநராற்றுப்படை கூத்தராற்றுப்படை* ஆகும். **பாண்மகள்** (5) இடங்களிலும் **பாண்மகன்** (7) இடங்களிலும், **பாண** (43) இடங்களிலும், **பாணர்** (48) இடங்களிலும் **பாணரேம்** (1) இடத்திலும், **பாணன்** (35) இடங்களிலும் சங்க இலக்கியத்தில் பயின்று வருகின்றன.

**பறை, குறும்பறை, பறை**யினை இசைப்பவன் **பறையன்** ஆவர். **பறை** எனும் சொல் (87) இடங்களிலும் பறைஇ (1) இடத்திலும், **பறைந்த** (4) இடங்களிலும், **பறைந்தன** (1) இடத்திலும், **பறைந்து** (1) இடத்திலும், **பறையன்** (1) இடத்திலும் சங்க இலக்கியத்தில் இடம் பிடித்துள்ளன. **கடம்பன்** (*புற* 355-7) ஓரிடத்தில் மட்டும் இடம் பிடித்துள்ளது.

### 2.5.11. சங்க காலத்துப் போர் கருவிகள்

சங்க காலச் சமூகம் பலவிதமான போர் ஆயுதங்களை பயன் பாட்டில் கொண்டிருந்தது. வேட்டையாடியும், உணவு சேகரித்தும் வாழ்ந்த கற்கால மனிதர்களின் ஆயுதங்களில் இருந்து வளர்ந்து பல கட்டங்களைக் கடந்த இரும்பினால் உருவாக்கிய தேர்ந்த நுட்பங்களைக் கொண்டு வடிவமைக்கப்பட்ட ஆயுதங்களை பயன்படுத்திய சமூகமாகவே சங்ககாலச் சமுதாயம் விளங்குகின்றது. **எஃகு** என்பது படைக் கலன்களையே குறிக்கின்றது. **எஃகம்** என்பது **வேல்** ஆகும். இது (23) இடங்களில் இடம் பெருகின்றது. வாள் சங்க இலக்கியத்தில் (218) இடங்களில் வருகின்றது. வாளினை உடையவர் **வாளர்** எனப்பட்டனர். **வாளர்** (*மது* 636; *புற* 345-15) **வாளோர்** (*புறம்* 13-7) எனப்பட்டனர். வில்லானது **'சிலை ' 'சாபம்'** என்றும் வெவ்வேறு பெயர்களில் குறிப்பிடப்படுகின்றது. **சிலை** (57) இடங்களிலும் சாபம் (7) இடங்களிலும் பயின்று வருகின்றன. அம்பானது 'கணை 'வாளி' என்ற பெயர்களில் குறிப்பிடப்படுகின்றது. **அம்பு** (83) இடங்களிலும் **வாளி** (9) இடங்களிலும் இடம் பிடித்துள்ளன. கூரிய வாட்படை இரும்படை எனப்படுகின்றது. **கணையோர்** (*அகம்* 321-12) இடம் பெறுகின்றனர் வாள் ஏந்திய போர் வீரனை

**வாளேர் உழவன்** என்று (*புற* 378) பாடினர். பதினெண் கீழ்கணக்கு நூல்களுள் களவழி என்பது ஒரு நூல் வகை ஆகும். இது ஏர்களம் பாடுதல், போர்க்களம் பாடுதல் என இருவகை படும். பொய்கையார் பாடிய களவழி நாற்பது என்னும் நூல் போர்களம் பாடியது ஆகும்.

குறுவாள் என்பது **குறும்பிடி** (*மது* 637) எனப்பட்டது. இதனை இடுப்பில் மறைத்துக் கொண்டு ஊர் காவலர்கள் காவல் புரிவதாக *மதுரைக் காஞ்சி* சுட்டுகின்றது. **சுரிகை** (*பெரு* 73) என்ற சூரிக் கத்தி சங்க காலத்தில் பயன்பாட்டில் இருந்துள்ளது. **'கதுவாய் எஃகு'** என்றொரு வகையும் (பதி 45-4) சுட்டப்பட்டுள்ளது. **ஈட்டி** (*பரி* 5-66) இடம் பெற்றுள்ளது. **குந்தம்** (*முல்* 41; *பரி* 11-50) என்பதும் ஒரு போர்க் கருவியாகும். **அங்குசம்** 'தோட்டி' எனப்பட்டது. இது குத்துவதற்கும் மாட்டி இழுப்பதற்கும் பயன்பட்டது. யானையைச் செலுத்தவும் பயன்பட்டது.

**தோட்டி** (*மது* 693; *பதி* 25-5, 38-5, 38-6,,40-27, 53-19, 62-11, 71-13; *பரி* 8-86, 10-49; *பரி-தி* 1-32; *கலி* 97-13,138-2; *அக* 286-9; *புற* 14-3, 150-25)

வெட்டுக் கத்தியாகிய மழுவானது **கணிச்சி, கனலி** என்றும் பெயர் பெற்றுள்ளது.

**பொறிவரிச் சாபமும் மரனும் வாளும்**
**செறி இலை ஈட்டியும், குடாரியும், கணிச்சியும்**
**தெறுகதிர் கனலியும் மாலையும் மணியும்**

(*பரி* 5-65-87) இப்பாடல் மூலம் 'பரசு' வகையினதாகிய கோடரியானது குடாரி எனச் சுட்டப்படுவதையும் அறிகின்றோம். குடாரி (*பரி* 5-34, 5-66, 8-100) மேலும் ஆதித்த நல்லூர் அகழ் வாய்வில் கண்டெடுக்கப்பட்ட கருவிகளின் அடிப்படையில் பண்டைத் தமிழர்களின் படைக்கலன்களை சாத்தான்குளம் அ.ராகவன் அவர்கள் கீழ்கண்டவாறு வகைப்படுத்தியுள்ளார்.

**(1) வாள் வகைகள்**

**1. உவணி 2 ஏதி 3. கடுத்தலை 4. துவட்டி 5. நவிர் 6. நாட்டம் 7.வஞ்சம் 8.வாள்** (கட்கம், கரவாளம், நாந்தகம், வசி, மட்டாயுதம் தூவத்தி)

9. **அரிவாள்** (அரிகதிர், கத்தி, குனிக்குயம்)

10. **கூன் வாள்** (முகண்டி, சிறுவாள்)

11. **கொடுவாள்** (குயம், புள்ளம்)

12. **ஈர்வாள்** (வேதினம், கரபத்திரம்)

13. **உடைவாள்** (சுரிகை, பத்திரம்)

14.**குத்துவாள்**

15. **புல்லரிவாள்** (பன்னரிவாள்)

16. **பாளை அரிவாள்**

17.**வெட்டரிவாள்**

18. **அங்குசம்** (வளைந்த வாள்)

19. **கண்டம்** (குறும்பிடி)

20. **கொடுக்கரிவாள்**

**2. குறுவாள் வகைகள்**

1.குறும்பிடி 2. கைவாள் 3. கத்தி (சூரி)

**(3) வளைந்த வாள் வகைகள்**

1. **கோணம்** (சரணம், கணச்சி)

2. **இட்டி** 3. **ஈட்டி** 4. **கழுக்கடை**

**(4) வேல் வகைகள்**

1. **அயில்** (கைவேல், தோமரம், கப்பணம்)

2. **அரணம்**

3. **எஃகம்** (எறி ஆயுதம், பீலித்தண்டு, பிண்டி பாலம்)

4. **எஃகு**

5. **குந்தம்** (கைவேல்)

6. **ஞாங்கர்** (கைவேல்) 7. **உடம்பிடி** 8. **விட்டேறு**

**(5) மூவிலைவேல் (சூலம்)**

1. **கழு** (காளம், நல்வசி, கழுமுள், மூவிலைவேல், முத்தலை வேல், கழுக்கண்)

2. **காழ்** 3. **இரும்பு முள்**

**(6) கோடரி வகைகள்**

1. மழு (பாசம், பாலம்) 2. கணிச்சி (கண்ட கோடரி)

3.நவியம் (கோடரி, குடாரம்) 4. குந்தாலி

5. குளிர் 6. தண்ணம்

**(7) வில் வகைகள்**

1. கார் முகம் 2. கோதண்டம், 3. துரோணா 4. சராசனம்

**(8) அம்பு வகைகள்**

1. அம்பு 2. கணை. 3. கதிரம் 4. கதிர். 5. கோ. 6. கோல்.

7.தொடை 8. தோணி 9. பகழி 10. பள்ளம் 11. புடை

12. வண்டு 13. வாளி 14 நெருப்புக்கணை

15. நச்சுக்கணை 16. மயக்குகணை 17. பூக்கணை

**(9) தண்ட வகைகள்**

1. தடி( தண்டம், சீர், வயிரம், மழை, எறுழ், தண்டாயுதம்)

2. கதை

3. உலக்கை

4.கோல்

5.குறுந்தடி.

**(10) கேடயம்**

1. கிடுகு (தோலால் செய்தது)

2. பலகை (வட்டம், தட்டி)

3. வேதிகை (உலோகத்தாலானது)

4. குதிரைக் கேடயம்

**(11) பாசம் வகைகள்**

1. பாசக் கயிறு (கச்சை, நாண்வடம், பழுதை, தாமம்)

2. வலைக் கயிறு.

**(12) வச்சிராயுதம்**

1.வச்சிரம் (முது கெழும்பு)

2. வயிரப்படை (குலிசம், சம்பம், அசனி, சதகோடி)

**(13) சக்கர வகைகள்**

திகிரி (சக்கரம், நேமி, ஆழி, எஃகம், வளை பாதி, ஒளி வட்டம், சுதரிசனம்) ஆதித்த நல்லூர் அகழ் வாய்வில் கிடைக்கப் பெற்ற கருவிகளைப் பகுத்துப் பார்த்து இத்தகைய வகைபாட்டிற்கு வந்திருந்தாலும் சங்க இலக்கியம் சிற்ப நூல், ஓவிய நூல் ஆகியவற்றிலிருந்து திரட்டி செய்திகளின் அடிப்படையில் 500க்கும் மேற்பட்ட போர்க் கருவிகளை அகரவரிசைப்படி பதிப்பத்துள்ளதாக சாத்தான்குளம் அ. ராகவன் பட்டியலிட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.[21]

சங்க இலக்கியங்களில் **கிடுகு** (*முல்* 41; *பட்* 78, 167) **பலகை** (*பெரு* 120; *நற்* 30-9 177-5, *பத* 53-15, *அக* 67-11 131-12; 369-18; *புற* 15-282-11) **தோல்** (58) இடங்களில் வழங்கப்படுகின்றன. இது **கேடய** வகையாகும். கேடயமானது **கேடகம் வட்டம்** (*திரு* 111; *நெடு* 378;58 *பரி* 21-42; *அக* 340 -16) என்ற பெயர்களிலும் அறியப் படுகின்றது.

மேலும் சங்க இலக்கியத்தினுள் (14) இடங்களில் வில் இடம் பெற்றுள்ளது. வில்லினை உடையவர் **வில்லர்** (*கலி* 4-2) 52-13; *அக* 284-9 *புற* 378-7) **வில்லவன்** (*கலி* 35-14) **வில்லன்** (*நற்* 376-7, *பதி* 0.3 *கலி* 37-3; *அக* 48-12) எனச் சுட்டப்படுகின்றனர். போர்க்களத்தில் விளங்கும் போர் வீரர் **வயவன்** (நற் 260-6) வயவர் (23) இடங்களில் இடம் பெற்றுள்ளனர். படை (16) இடத்திலும் படை மடம் (*புறம்* 142-6) **படையன்** (*பதி* 77-1) ஓரிடத்திலும் **படையோர்** (*மது* 38; *புற* 33-10) இரண்டு இடங்களிலும் வந்துள்ளனர். படையை உடையவன் **படையன்** ஆவான். தானையை உடையவன் தானையன் (*புறம்* 69-11) **தானையர்** (*கலி* 31-24) ஆவர் **தானை** (129) இடங்களிலும் இடம் பெறுகின்றது.

**பாசறை** (440 உடையவர்கள் **பாசறையீர்** (*புற* 285-1) **பாசறையேம்** (*நற்* 341-10, *அக* 24-18. 84-17) **பாசறையோர்** (*ஐங்* 461-5; *பதி* 83-9; *அக* 264-15) எனச் சுட்டப்படுகின்றனர். மேற்கண்ட எல்லா வளமும் (வள்ளி) உடையவர் **வள்ளி** (*புறம்* 109-6, 211-8) **வள்ளியோர், வள்ளல்கள்** (*புற* 47-1, 179-1, 206-2, 376-21) ஆவர். இதுவரை ஆராய்ந்த எல்லா தொழில் நலனும் மிக்க கொடை நலனும் உள்ளவன் **ஆண்டான்** (*கலி* 118-7) **ஆண்டார்** (*கலி* 56-9) **ஆண்டை** (*கலி* 13-16, 20-16, *அக* 317-17) **ஆண்டோர்** (*பதி* 69-12; *பற* 17-8, 360-8) ஆவர்.

இது வரைக்குமான தரவுகளின் மூலம் சங்ககாலச் சமூகம் ஐந்து திணை நிலங்களாக நிலவியல் அமைப்பின்படியே வேறுபட்டு இருந்ததையும், அவை ஒவ்வொன்றும் தத்தமக்கேயுரிய பண்பாடு, பழக்க வழக்கங்கள், உற்பத்தி முறைமை நீர்ப்பாசன முறைமை ஆகியவற்றினைக் கொண்டிருந்தன என்பதையும், அத்திணை நிலை சமூகங்கள் அரசுடன் உள் அமைந்திருந்தன. அல்லது நானிலந்தாங்கியதாக வேந்தர் நாடுகள் பரந்து விரிந்திருந்தன என்பதையும் அறிய முடிந்தது. குறிஞ்சி நிலம் ஆதி வேளாண் உற்பத்தி முறைகளையே தொடர் வதையும், முல்லை நிலம் அதிலிருந்து மாற்றமடைந்து மேட்டு நில விவசாயத்துக்கு முன்னேறிய நிலையில் அதனைத் தொடர் வதையும், அதாவது அந்தந்த நிலைமைகளுக்கே தகவமைந்து நீடித்து வருவதையும், இவ்வாறே ஐந்து நிலங்களும் வேறுபட்டுள்ள நிலைமைகளையும் தன்னகத்தே கொண்டதாகவும், தன்னுடைய பரந்த மேம்பட்ட தொழில் முறைமையால், உற்பத்தி முறைமையால் அரசுகள் கட்டமைக்கப்பட்டு

உறுதியுடன் நிலைப்பட்டு நின்றதையும் இதன் மூலம் அறிய முடிகின்றது

### 2.5.12. நீர் பாசன ஏற்பாட்டால் நிலையான அரசு அமைதல்

மேலும் அரசு உறுதியுடன் எழுந்து நிற்கவும், அதிகார கட்டமைப்புக்களை செம்மைபடுத்தவும் உற்பத்தி முறைமைகளை மாற்றியமைத்து, பெரும் பரப்பில் மென் புல வேளாண்மைக்கு கொண்டு செல்வதையும் இன்றியமையாததென கருதி செயல்பட்டது. **வருபுனல் தாங்கும் கற்சிலை போல** (*தொல்* பொருள் புறத்திணை)

**வருபுனல் கற்சிறை கடுப்ப இடை அறுத்து**
**ஒன்னார் ஒட்டிய செருப்புகல் மறவர்**

(*மதுரை.* 725-6) இங்கு கற்சிறை என்பது கல்லணை என்று **புலவர் குழந்தை,**[22] **பழ. கோமதி நாயகம்** ஆகியோர் எடுத்து காட்டுகின்றனர்.[23] அக்காலத்தே எல்லா ஆட்சியாளர்களுமே நீர்பாசன வசதிகளை அவரவர் நிலங்களில் அவரவர் நிலைக்கேற்ப மேற்கொண்டிருந்தனர். அவற்றுள் தலையாயதாக விளங்குவதே கல்லணை ஆகும். இது அதிகமான உடலுழைப்பையும், திட்டமிடலையும், மிக நுட்பமான தேர்ந்த பொறியியல் தொழில் நுட்ப அறிவையும் கொண்டு கட்டப்பட்டதாகும்.

இவ்வாறே பாண்டியர்களால் கட்டப்பட்ட சங்க காலத்து அணையும் இன்றுவரை கல்லணையைப் போன்றே நிலைத்துள்ளது. கன்னியாகுமரி மாவட்டத்தின் தென் கோடியில் பல சிற்றாறுகள் ஓடுகின்றன. அத்தகைய பல சிற்றாறுகள் ஒன்று கூடி 'பழையாறு' உருவாகின்றது. அச்சிற்றாறுகள் ஒன்று கூடி மகேந்திர கிரியின் தென் புறம் தோன்றும் கானாறு பலவற்றுடன் கூடி பூதப்பாண்டி, கோட்டாறு, நாகர் கோயில் சுசீந்திரம் ஆகிய ஊர்களை அணைத்துச் சென்று மணக்குடி என்னும் இடத்தில் கடலில் கலக்கின்றது. இவ்வாறு உற்பத்தியாகுமிடத்தில் சங்க காலத்தில் கட்டப்பட்ட அணை ''பாண்டியன் அணை'' என்று வழங்கப்படுகின்றது. இதனை பறளியாறு என்றும் மக்கள் அழைப்பதால் '' *சிலப்பத்திகாரத்*தில் குறிப்பிடப்படும் பஃறுளி ஆறும் இதுவும் ஒன்றாக இருக்குமா? என்பது பற்றி ஆய்வாளர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகின்றது.[24] இவ்வாறு நீர் பாசனவசதியும் வேளாண் பெருக்கமும் ஏற்பட்டு திணைமயக்குறுதலும் நிகழ்ந்தன.

### 2.5.13. அரசனின் இருவகையான நில விரிவக்க முயற்சி

இதனால் வெவ்வேறு திணை ஒழுக்கங்களும், சமூக பொருளியல், உற்பத்தி முறைமையும் கொண்டுள்ள மக்களும் ஒன்று கலந்து பொதுவான உற்பத்தி முறைக்கும், பண்பாட்டு தளத்திற்கும் மாற்றமுறுவதும் வேகமாக நடைபெற்றன.

மேலும் இத்தகைய நீர்வளம் மிகுந்த பசுமையான வயல் வளம் மிகுந்த ஊர்களுக்காக போர்கள் நடைபெற்றன. வேந்தர்கள் அரசு விரிவாக்கத்திற்காக இரு வழிகளில் முயன்றனர். 1. போரின் மூலம் வென்று கைப்பற்றுதல் 2. மகற் கொடை வேண்டுதல் மூலமாகவும் நடந்தது. மகற்கொடை மறுக்கப்பட்ட நிலையில் போரிட்டு வென்று கைபற்றுதல் நிகழ்ந்தது. திணை மயக்குறுதலுக்கு எதிர்ப்பு காட்டும் வகையில் மகட் கொடை மறுப்பு அமைந்துள்ளது எனலாம். திணை மயக்குறுதல் நிகழ்ந்ததை ஆற்றுப்படை நூல்கள் புலப்படுத்துகின்றன. நானிலந்தாங்கிய வேந்தமைப்பில் உருவான ஆற்றுப்படை நூல்களின் சமுதாய காட்சிகள் நால்வகை நிலங்களும் ஒருங்கிணைவதைப் பின்புலமாகக் கொண்டு வடிக்கப்பட்டுள்ளன.

### 2.5.14. அரசனின் இரு விதமான கடமைகள்

வேந்தனின் முதல் கடமையாக 1. ''காடு கொன்று நாடாக்கி குளம் தொட்டு வளம் பெருக்கி'' (*பட்* 281) விளை நிலத்தை உருவாக்குவதும் உற்பத்தியைக் கூட்டுவதும் 2. வள ஆதாரங்களை பெற போரிட்டு வெற்றியின் மூலம் நிலப்பரப்பினை விரித்து அரசினை வலுப்படுத்துவதும் ஆகும். இதனை ''ஏர்க்களம் பாடுதல் போர்க்களம் பாடுதல்'' என வரையறுத்துக் கொண்டு இவ்விரு வகைகளுக்குள் இலக்கியம் படைத்தனர். *பொருநறாற்றுப்படை* கரிகாலனின் போர்க்கள வெற்றியைச் சிறப்பித்துப் பாடுகின்றது. பட்டினப்பாலை கரிகால் பெருவளத்தானின் விளை நிலம் உருவாக்கம், நீர் நிலை உருவாக்கம் உற்பத்தி பெருக்கத்திற்கான முயற்சிகளைப் பாடுகின்றது. ஏற்றுமதி வாணிபத்தையும் வருவாய் ஆதாரத்தையும் குறிப்பிடுகின்றது எனலாம்.

> ***''காட்டை அழித்து பண்படுத்துபவருக்கே நிலம் சொந்தம் என்று மிலிந்த பன்ஹா குறிப்பிடுகின்றது. முட்புதர்களை அகற்றுபவருக்கே நிலம் சொந்தமாகும். மானை முதலில் காயப்படுத்தியவருக்கே அந்த மான் சொந்தமாவதை இதனுடன் சேர்த்துப்புரிந்து கொள்ளவேண்டும் என மனுஸ்மிருதி வாசகங்கள் குறிப்பிடுகின்றன. மன்னர் அல்லது ஆட்சியாளர்களின் உதவியின்றி தனிப்பட்ட விவசாயிகள் எவ்வாறு நேரடியாக நிலங்களை கையகப்படுத்த முடியும். மேலும் இவ்வாறு சுத்தப்படுத்துவது பெருங் கூட்டத்தாரால் அல்லது சமூகத்தாரால் அல்லாமல் சாத்தியமில்லை''.***

மேற்கண்ட கூற்றின்மூலம் போரில் வென்றடக்கப்பட்ட அடிமைகளைக் கொண்டு காடழித்தவனாக வேந்தன் இருக்கிறான். நிலம் அவனுக்கே சொந்தம் என்பதை உணர்த்துகின்றது. அவன் ஆறிலொரு பங்கு வரியை பெற்றதும் இதனால் தெளிவாகும்.[25]

## 2.5.15. அரசின் வரிவருவாய் அடிப்படை

இத்தகைய நீர்ப்பாசன மேம்பாடானது அரசமைப்பிற்கு நிலைத்த வரி வருவாயினை மிகுதியும் பெற்றுத்தந்தது. வேந்தர்களின் நீர் நிலைகளை உருவாக்கும் முயற்சியானது அரசின் நிலையான வருவாய் பெறும் முயற்சியுமாகும். வரி வருவாய் என்பது நிலத்தின் உற்பத்தியிலிருந்து ஈட்டப்பட்டது. அது நீர் வளத்தால் தான் சாத்தியமானது. நீர் பெருக நிலம் விளைந்து வருவாய் கொடுக்கும். நிலத்தின் மீதான உரிமையுடையோரே, நீரின் மீதான உ ரிமையினையும் உடையோராவர். எனவே நில வருவாய்க்கு இன்றியமையாத ஆதாரமாக நீர் பாசன முயற்சி அமைந்திருந்தது. அக்காலத்தில் பெற்ற வரி வருவாய் புரவு முற்றூட்டு என்று சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ளது. நெல், கரும்பு, வாழை, முதலான பயிர்கள் விளையும் நிலங்கள் **''தண்ணடை'' ''பணை ''** என்று குறிபிடப்பட்டன. இவை முக்கிய வரிவருவாய் நல்கிய நிலங்களாகும்.

## 2.5.16. உயர் குடியினர் ஆட்சியும் நிலக்கொடையும்

சங்க காலத்தில் நிலம் மற்றும் நீர் உரிமை ஆகியன அரசுடைமையாகவே இருந்தன. குளம், கூவல் போன்றவற்றில் மழைக் காலத்தில் பெய்யும் பெருமழையால் அவற்றின் கரைகளை உடைத்து விடாமல் காக்கப்பட்டது. அரசன் அதற்கென்று காவல் காரர்களை நியமித்து அதற்கான ஊதியமும் வழங்கியுள்ளான் என்பதை சங்கபாடல்கள் சுட்டுகின்றன.

'மாரிக் குளத்து காப்பான் அன்ன' (*ஐங்குறுநூறு*) பாடல் வரிகளின் மூலம் மேற்கண்டவற்றை அறிய முடிகின்றது. பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நிலம் அரசுக்கு சொந்தமாகயிருந்ததோடு. அவை தம்முடைய பிரதிநிதிகளாக இருந்து நிர்வாகம் செய்யக் கூடியவர்களிடம் வழங்கப்பட்டது. அந்நிலத்தினை வரியிலியாக தானமாக பெற்றதற்கான பதிவுகளும் காணப்படுகின்றது. *பதிற்றுப்பத்*தின் இரண்டாம் பத்தின் பதிகத்தின் படி ''குமட்டூர் கண்ணனார் எனும் புலவர் ஐநூறு ஊர்களை வரியிலியாகப் பெற்றார் என்றும், முப்பத்தெட்டு ஆண்டுகளுக்கு தென்னாட்டின் ஒரு பகுதியின் வருவாயையும் பெற்றார் என்றும் குறிப்பிடுகின்றது. ஐந்தாம் பத்தின் பதிகம் அதே உம்பர் காட்டின் வருவாயை பரணர் பெற்றார் என்று குறிப்பிடுகின்றது. அவ்வாறே ஏழாம் பத்தின் பதிகமானது கபிலர் குன்றின் மீது ஏறி அங்கிருந்து கண்ட ஊரெல்லாம் கொடையாகப் பெற்றார் என்று கூறுகின்றது. இதனை உறுதிபடுத்தும் வகையில் புகழ்ப்பெற்ற புலவர் கபிலர் பெற்ற எண்ணற்ற பல ஊர்கள் என்று கூறுவதையும் உற்று நோக்கவேண்டியுள்ளது. அதே ஏழாம் பத்தின் பதிகமானது அப்பத்தின் தலைவன் ஒகந்தூர் என்னும் ஊரின் விளையுலைத் திருமாலின் வழிபாட்டிற்

களித்தாகவும் கூறுகின்றது. வரையா ஈகையின் சிகரமாகப் பெருஞ் சேரல் இரும்பொறை தமது அரண்மனை செல்வம், அரியாசனம் அனைத்தையும் புலவர் அரிசில் கிழாருக்கு வழங்கியபோது அவர் அதனை மறுத்து அவருக்கே வழங்கியதோடு அதற்கு ஈடாக அமைச்சர் பணியினைப் பெற்றார். *புறநானூற்*றில் இத்தகைய குறிப்புகள் இரண்டே உண்டு. 35ம் பாடலின் அடிக்குறிப்பு அரசனது கடமைப்பற்றி அறிவுறுத்துவதாகப் புலவரால் பாடப்பெற்றதை கூறுகின்றது. இதன் விளைவாக புலவரின் கடன்கள் நீக்கப்பட்டன. உ.வே.சா. இதன் வழியாகப் புலவர் இறையிலியாக உரிமைபெற்றதாக கருதுகின்றார். (*புற* 46) திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக பதிப்பாசிரியர் இதனை வேறு வகையாகக் கூறுகின்றார். விளைவு பொய்த்தமையால் குடிமக்கள் சார்பாக புலவர் செய்கடன் நீக்க வேண்டி வேண்டுகோள் விடுப்பதாக நெடிதுரைக்கின்றார். (*புறம்* 98) இவ்வாறு பொருள் கொள்வதற்கு செய்யுளில் அல்லது அடிக் குறிப்பில் எந்த ஆதாரமுமில்லை. 110 ஆம் பாடல் பறம்பு மலையைச் சுற்றியிருந்த முன்னூறு ஊர்களைத் தம்மை வேண்டியோர்க்களித்ததாக குறிப்பிடுகின்றது.[26] எனவே நிலத்தின் தேவையும் இன்றியமையாமையும் உணர்த்திருந்தனர். வேளாண் உற்பத்திக்கான அடிப்படை வளமாக நிலம் கருதப்பட்டது. வேந்தர்கள் நிலத்தின் மீதான ஆதிக்கத்தை விரிவுபடுத்த அடிக்கடி போரில் ஈடுபட்டதும், சீறூர் மன்னர்கள் அவர்களுக்கு சார்பாக இருந்து உதவியமையும் அறியப்படுவதுடன் அவற்றைப் பங்கிட்டு வழங்கப்பட்டதும் அறியமுடிகின்றது.

### 2.5.17. இனக்குழு குடியரசுகளின் சாம்பலின் மீது கட்டமைக்கப்பட்ட அரசு அமைப்பாக்கம்

சங்க கால சமூக அமைப்பானது தொடக்கத்திலிருந்த ஜனபதங்களான இனக்குழு குடியரசுகளின் சாம்பலிலிருந்து உதித்தெழுந்து எழுச்சியுடன் விரைந்து வளர்ந்து அரசாக மலர்ந்தது என்பதை மேற்கண்டவை உணர்த்துகின்றன. பொதுவாக நோக்கும் போது இவ்வியலில் அரசு அமைப்பின் பொருளாதார அடித்தளமாக விளங்கக்கூடிய 1 உற்பத்தி சக்திகள் (மூலப்பொருள்கள் கருவிகள் இயந்திரங்கள்) 2. உற்பத்தி உறவுகள் (உற்பத்தியாளர்கள் தத்தம் தொழில் கடமையினை மேற்கொள்ளும் போது ஏற்படுத்திக் கொள்ளும் உறவுகள்) ஆகியவற்றைமட்டுமே உற்பத்தி முறைமையின் அடிப்படையாக கொள்ளமுடியும்.

### 2.6.0 அரசில் உயர் குடியனர் அதிகாரமும் உற்பத்தியாளர்களின் அடிமை நிலையும்

சங்க காலச் சமூகமானது நகர நாகரிகமுடையது. இவற்றை நகரங்கள், துறைமுக நகரங்கள், தலை நகரங்கள் என்று வகைப்படுத்த முடியும். வணிகப் பெருவழிகளால் இவை ஒவ்வொன்றும் இணைக்கப்பட்டிருந்தன. துறைமுக நகரங்கள் வழியாக அயல்

நாடுகளுக்கு கடல் வழி வாணிகம் மேற்கொள்ளப்பட்டன. .உள்நாடுகளிலிருந்தும் உற்பத்தி பண்டங்கள் தலை நகரங்களுக்கும் துறைமுக நகரங்களுக்கும் கொண்டு செல்லப்பட்டது.

அக்காலத்தில் இன்றியமையாத தொழில்களாக பல விதமான தொழில்கள் நிலவின 1 மண்பாண்டத் தொழில் 2. செங்கல் தொழில் 3. சுடுமண் பொம்மைகள் 4. தச்சுத் தொழில் 5. இரும்பு செம்பு முதலான உலோகத் தொழில் 6. பொன், வெள்ளி அணிகலன் தொழில் 7. நெசவுத் தொழில் 8. தோல் தொழில் 9. கண்ணாடி மணிகள் ஆபரணத் தொழில் 10 கூடை, பாய் முடைதல், கயிறுதிரித்தல் முதலான தொழில்கள் 11 சங்கு அறுத்தல் 12. தந்தத் தொழில் 13. உப்பு விளைவித்தல் 14. பனைவெல்லம் 15. அரிசி உற்பத்தி 16. இசைத்தல் தொழில் 17. பொம்மை விளையாட்டு பொருள்கள் உற்பத்தி 18. ஓவியத் தொழில் 19. சிற்பத்தொழில் 20. கட்டடக் கலை 21. மீன் பிடித்தல் 22. அழகு சாதனத் தொழில் 23. மருத்துவத்தொழில் 24. மது வடித்தல் 25. தேனி வளர்ப்பு 26. பாக்கு உற்பத்தி 27. அகில், சந்தனம் முதலான வாசனைப் பொருட்கள் தயாரித்தல் 28. கரும்பிலிருந்த சர்க்கரை வெல்லம் தயாரித்தல் ஆகிய கணக்கற்ற தொழில்கள் நடைபெற்றதை அறிய முடிகின்றது.[27] இவற்றில் பலவிதமான வேலைப் பிரிவினையுடன் தேர்ந்த தொழில் நுட்ப அறிவுடைய பல நுண்மான் நுழை புலமும், கவின் கலை திறமும் வாய்க்கப் பெற்றாரும் ஈடுபட்டனர். இத்தனை விதமான தொழில் புரிவோருக்கும் அடிப்படையாக வேளாண் தொழிலில் ஈடுபட்ட கடைசியரும், வினைவலரும் இருந்தனர்.

### 2.6.1.கைவினைச் சங்கங்கள்

வேந்தனும், வேந்தனைச் சார்ந்த, அவனது அரசுக்கு உட்பட்ட ஆட்சியாளர்களுமாகிய உயர் குடியினருக்கும், அவர்களுக்கு உற்பத்தி செய்து விளைவித்து கொடுத்த அடிமை மக்களுக்கும் இடையில் கைவினைச் சங்கங்களும் அக்காலத்தில் நகரங்களை ஒட்டி நிலவியிருந்தன. அவை சுதந்திரமான அமைப்புக்களாகும். அவற்றின் கைவினைப் பொருள்களாக நவமணிகளாகிய அணிகலன்களும், சங்கு வளையல்கள், தந்தங்களால் ஆன பொருள்கள் முதலியன உருவாக்கப்பட்டன. பொருந்தல், கொடுமணல், அழகன் குளம் முதலிய இடங்களில் நிகழ்த்தப்பட்ட அகழ்வாய்வுகள் இதனை பெரிதும் வெளிப்படுத்துகின்றன.

இதற்கான பட்டறைகள் தொழில் முறையாக அமைத்து செய்யப்பட்டதை இவை புலப்படுத்துகின்றன. இவற்றினை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்த வணிக வர்க்கம் வேந்தனுக்கு இணையாக வளர்ந்திருந்ததை காப்பியங்கள் புலப்படுத்துகின்றன. துறைமுக நகரங்களில் வணிகம் மேற் கொண்ட செல்வர்களின் நிலை பற்றி அவை பெரிதும் பேசுகின்றன.

இத்தகைய பட்டறைகளில் தொழில் புரிந்தவர் துளையிடுபவர், கடைசலாளர், குயினர் என்றும், உளி கொண்டு பணிபுரிந்தவர் உளியர் என்றும், கொல்லர் என்றும், தச்சர் என்றும், ஆசில் கம்மியன் எனப்பட்டனர்.

பண்டைத் தமிழகத்து வணிகர்கள் மிளகு, ஏலம், இலவங்கம், இஞ்சி, அகில் சந்தனம், தந்தம், கருங்காலி, தேக்கு முதலியவற்றையும், முத்து, நவமணிக் கற்களாலான அணிகலன்களையும், பட்டு முதலிய துகில்களையும் கொண்டு சென்று விற்றனர். இவற்றில் முத்து நவமணிக் கற்கலாலான அணிகலன்கள், பட்டு துகில் ஆகியன கைவினைச் சங்கங்கள் தமது பட்டறைகளில் உருவாக்கியவை.பிற நிலத்தில் உற்பத்தி செய்யப்பட்டவை. பொன், வெள்ளி, செம்பு ஆகிய உலோகங்களைக் கொண்டு அணிகலன்களை வடித்த பட்டறைகளும் அகழாய்வில் கிடைத்துள்ளன. இவற்றுக்கான இலக்கியச் சான்றுகளும் மிகுதியும் உள்ளன. கி.மு. பத்தாம் நூற்றாண்டில் பாலஸ்தீன மன்னர் சாலமன் தமிழகத்து வணிகர்களிடமிருந்து பெறப்பட்ட பொன், வெள்ளி, யானை தந்தம், அகில், சந்தனம் ஆகியவற்றைக் கொண்டு தனது அரியணை, அரண்மனை ஆகியவற்றை வடிவமைத்திருந்தது பற்றி அந்நாட்டு வரலாற்று நூல்கள் கூறுகின்றன.[28]

ஒரு புறம் அரசு உபரி உற்பத்தி பெருக்கமும், வரிவருவாயும் பெற்று நிலை பெற்றதும், புதிய வணிக வர்க்கம் தலையெடுத்து அரசுக்கு இணையாக மன்னனுக்கு இணையாக வளர்ந்ததும், *மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை* உணர்ந்துகின்றன. இத்தகைய சமுதாயம் செல்வ செழிப்பின் மத்தியிலே சிக்கல்களையும் முரண்பாட்டையும் கொண்டு இயங்கியதை *சிலம்பு, மணிமேகலை* விளங்கின்றது. உற்பத்தி உறவுகள் என்ற அளவில் நோக்கும் போது உயர்குடினராகிய ஆட்சியாளர்களுக்கும், உழைத்துக் கொடுத்த அடிமை மக்களுக்கும் இடையிலான உறவும் பகைமுரணும் முதன்மை முறண்பாடாக விளங்குகின்றது. வணிக வர்க்கத்துக்கும், ஆட்சியாளர்களுக்குமான முரண் இரண்டாம் நிலையிலமைந்ததே ஆகும்.

### 2.6.2. கடைசியரும் இழிசினரும்

ஆசில் கம்மியரும், கொல்லரும், தச்சரும், உமண் சாத்தரும், மண்ணீட்டாளரும், குயவரும், நூலறிபுலவரும், அறுவையரும் உயர்குடியினரைச் சார்ந்து வாழ்ந்தவராவர். புலையரும், கடைசியரும், வினைவலரும் இழி பிறப்பாளரும், இழி சினரும் ஆகிய வேலைப் பிரிவினையோர் அடிமைத் தொழில்களில் ஈடுபட்டு வந்தனர்.

> ***''பயன்-மதிப்புகளின் வெவ்வேறு வகைகளுக்கும் சமுதாய உழைப்புப் பிரிவினையில் பயனுள்ள உழைப்பின் அத்தனை***

***வெவ்வேறு வகைகள் உள்ளன. அவை சார்ந்துள்ள வகுப்பு, இனம், மாதிரி ஆகியவற்றின் படி இந்த வகைப்பிரித்தல் அமைகின்றது. இந்த உழைப்புப் பிரிவினை சரக்கு உற்பத்திக்கு இன்றியமையாத தேவையாகும்; ஆனால், அதற்கு மறுதலையாக சரக்கு உற்பத்தி உழைப்பு பிரிவினைக்கு இன்றியமையாத் தேவை என்று இதிலிருந்து பெறப்படுவதில்லை. பண்டைய இந்திய கிராம சமுதாயத்தில் சரக்கு உற்பத்தி இல்லாமலே சமுதாய உழைப்பு பிரிவினை உள்ளது'' நமக்கு அண்மையில் உள்ள உதாரணத்தை எடுத்துக் கொள்வதனால் ஒவ்வொரு தொழிற்சாலையிலும் ஒரு முறைக்கேற்ப உழைப்பு பிரிக்கப்படுகின்றது; ஆனால் இந்த பிரிவினை வேலை செய்வோர் தமது தனித்தனி உற்பத்திப் பொருள்களைத் தமக்குள் பரிவர்த்தனை செய்து கொள்வதால் ஏற்படுவதன்று. உழைப்பின் வெவ்வேறு வகைகளிலிருந்து (ஒவ்வொரு வகையும் சார்பின்றியும் சுதந்திரமாகவும், தனியாட்டுகளின் நலனுக்காகவும் பிரயோகிக்கப்படும் நிலையில்) விளைகிற உற்பத்தி பொருட்களே ஒன்று மற்றதன் தொடர்பாக சரக்குகள் ஆகமுடியும்''***

என்று **கார்ல்மார்க்ஸ்** குறிப்பிகிறார்.[29]

அதாவது தனது பயன்பாட்டிற்கு அல்லாமல் மற்றவருக்காக உற்பத்தி செய்யப்படும் பொருட்களே சரக்குகளாக முடியும் என்கின்றார். சரக்குகளின் பண வடிவம் என்பது சாமானிய மதிப்பு வடிவத்தின் உயர்நிலை வளர்ச்சியே என்று பண்டைய கிரேக்கச் சமூகத்தில் உற்பத்தியான சரக்குகளின் மதிப்புவடிவம் பற்றி அரிஸ்டாட்டில் குறிப்பிட்டதை எடுத்துக் காட்டும் அவர், அவற்றில் அடங்கியுள்ளது மனித உழைப்பு என்பதை அரிஸ்டாட்டில் உணரத் தடையாக இருப்பது எது என்பதையும் விளக்குகிறார். சரக்குகளுக்கு மதிப்பை உரித்தாக்குவது சமமான மனித உழைப்பாக ஆதலால் சம பண்புடைய உழைப்பாக., உழைப்பு அனைத்தையும் தெரிவிக்கின்ற ஒரு முறைதான் என்பதை பார்க்க விடாமல் அரிஸ்டாட்டிலை தடுக்கிர நிலைமையாக கிரேக்க சமுதாயம் அடிமை முறையை அடிப்படையாகக் கொண்டிருந்தது'' என்றும் குறிப்பிடுகின்றார். அடிமை சமுதாயத்தின் விதிகள் அடிமை சமுதாயத்தில் வாழ்ந்தவருக்கு தெரிந்திருக்கமுடியாது. கிரேக்கத்திலும் பொருள் உற்பத்தி இருந்தது. இந்தியாவில் குறிப்பாக பண்டைய தமிழகத்திலும் பொருள் உற்பத்தி இருந்தது. மேலும் வேலைப் பிரிவினையுடன் உற்பத்தி நடந்தது. அது தற்கால முதலாளித்துவத்தின் உற்பத்தி முறைமைக்குள் நிலவும் வேலைப்

பிரிவினையின் ஆதி வடிவம் போன்றது தான். (இங்கு தன்னிறைவுக் கிராமங்களாக சுயதேவை பூர்த்தி கிராமங்களாக இருந்ததால், அவை பரிவர்த்தனை ஆகாததால் சரக்கு என்ற வகையில் கருதமுடியாது. ஆனால் பிறருக்காக உற்பத்தி செய்யப்பட்ட பயன் மதிப்பு உள்ள மனித உழைப்பை உட் கொண்டுள்ள பொருள் உற்பத்தி கிரேக்கத்தில் போன்றே இங்கும் நடைபெற்றது. கிரேக்க அடிமை மக்களை ஒத்த கடைசியரே இங்கும் இவற்றை மேற்கொண்டனர்) ஆனால் கிரேக்கத்தின் பொருள் உற்பத்தி சரக்கின் வடிவத்தை பெறுகிறது. இந்தியாவில் பொருள் உற்பத்தி 'சரக்கு' என்ற வகையில் சந்தைப்படவில்லை. பார்க்கப்படவில்லை. ஆனாலும் இரு வெவ்வேறு இடங்களில் உற்பத்தியான உற்பத்திப் பொருட்களில் அங்கியுள்ளது 'அடிமையுழைப்பு'தான் என்பதை யாராலும் மறுக்க முடியாது. அன்றைய சமூக உழைப்பு மொத்தமும் அடியோரும், வினைவலருமாகிய கடைசியருடையதே ஆகும்.. மேலும் அவர்கள் உயர் குடியினராகிய தலை மக்களிடமிருந்து அதிகார வர்க்கத்திடமிருந்த கீழ்பட்ட நிலையில் அழுத்தி வைக்கப்பட்டிருந்தனர்.

சங்க இலக்கியத்தில் அடிமைகளைப் பற்றி மேலும் ஓர் பதிவாக ''கொண்டி மகளிர்'' என *பட்டினப்பாலை* குறிப்பிடுவதை காணமுடிகின்றது. புகார் நகரத்தின் அம்பலங்களில் விளக்கேற்றி நிற்கும் கொண்டி மகளிர் போரில் தோற்றவர்களையும், தோற்றவர்களின் மனைவியரையும் சிறை பிடிக்கப்பட்டு அடிமையானவர்களின் பெண்கள் என்று ஆய்வாளர்கள்[30] கருதும் நிலையில், 'மிகுதியான சீரை கொண்ட மகளிர்' என்பதே பொருள் என்பாரும் உளர். இதற்கு உதாரணமாக **''பெருஞ்சீரருங் கொண்டியளே''** (*புறம்.* 338;5) கொள்வர். ஆயினும், **கே.என். சிவராஜ பிள்ளை** அவர்கள் கொண்டி என்பதே கொள்ளையடிக்கப்பட்ட கைப்பற்றப்பட்டப்பொருள் ஆகும். கொண்டி மகளிர் அடிமைப்பெண்களே என்று ஆராய்ந்து உரைக்கின்றார்.[31] எனவே, தோற்றவர்கள் அடிமையாகக் கொள்ளப்பட்டனர் என்பதற்கு இது தெளிவான சான்றாகும்.

**புதுவன ஈகை வளம்பாடிக் காலின்**
**பிரியாக் கவிகைப் புலையன்** (*கலி* 95)

**துடி எறியும் புலைய**
**எறி கோல் கொள்ளும் இழிசின** (*புறம்* 287)

**இழி பிறப்பாளன் கருங்கை சிவப்ப**
**வலி துறந்து சிலைக்கும் வன்கட் கருந்துடி** (*புறம்* 170)

**மடி வாய்த் தண்ணுமை இழிசினன் குரலே** (*புறம்* 289)

**அவ்வரி கொன்ற கரைசேர் வள்ளுகிர்ப்**
**பசை விரல் புலைத்தி** (*அகம்* 387)

**கட்டில் நிணக்கும் இழிசினன்** (*புறம்* 820)

மேற்கண்ட பாடல் வரிகள் கீழான, அடிமட்டத்தொழில்களை செய்பவர்கள் புலையர், இழிசினர் என்பதை உணர்த்துகின்றன. ஆனால் அவை சாதி முறையாக வண்ணமாக எல்லாம் காணப்படவில்லை. தொழில் சார்ந்த பாகுபாடாகவே அமைந்திருக்கக் காண்கின்றோம், ஊர்/சேரி என்றபாகுபாடும் உயர் குடியினர் அடிமைத் தொழில் புரிவோர் என்கின்ற பாகுபாடும் தான் அறியப்படுகின்றது. சங்கால சமூகத்தின் சமூக அமைப்பை உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் இரண்டு வகையாகவே பிரிக்கமுடியும். இதனை க. கைலாசபதி பின் வருமாறு விளக்குகின்றார்.

| | | |
|---|---|---|
| ***வீரர்*** | *x* | ***வீரர் அல்லாதார்*** |
| ***உரிமையுடையவர்*** | *x* | ***அடிமைகள்*** |
| ***உயர் குடியினர்*** | *x* | ***தாழ்ந்த குடியினர்*** |
| ***அருஞ்செயல்கள்*** | *x* | ***இழிந்த பணி*** |

***இந்த பாகுபாடும் இதனால் குறிப்பிடும் எல்லாமும் 'சான்றோர்' 'இழிசினர்' என்ற இரு சொற்களுக்குள் சுருக்கப்பட்டு விட்டன. பின்னது 'இழி' என்பதினின்றும் பெறப்பட்டது. தாழ்த்தப்பட்ட அவமதிக்கப்பட்ட சூழல்களில் குறைக்கப்பட்ட, கீழான, ஒப்பிடும் போது கீழ்நிலையிலான, விழ, கீழே விட்டு விட்ட முதலான பொருள்களை இச்சொல் பெற்றது. இதன் பொருள் கீழான நாகரிகமற்ற ஆள் என்பது. இஃது இப்பொழுது சாதி விலக்கப்பட்டவர், தாழ்ந்த சாதியினர் என மொழி பெயர்க்கப்படும். செய்யுள் தொகுப்பில் சாதி முறை இல்லாத போது அதனை அவ்வாறு மொழி பெயர்ப்பது சரியா? என்ற வினா எழும். ஆனால் பிற்கால இலக்கியத்தில் அஃது இப்பொருளைப் பெறும் என்பது மறுக்க முடியாதது. பண்டைக் காலத்தில் இச் சொல்லின் பொருளைத்தரும் மற்றொரு சொல் 'புலையர் 'என்பது 'சான்றோர்' என்ற சொல்லிற்கு சரியான எதிர் சொல்லாக இருந்தது எனக் கருதுவது சரியானதும் ஏற்றுக் கொள்ளத் தக்கதுமாகும். புலையர் என்பது 'புல்' என்பதனடியாகத் தோன்றியது. இழிந்த, கீழான என்ற***

***பொருளுடைய இச் சொல் பிற்காலத்தில் பறையர்களைக் குறிக்க வந்தது. ஆனால் கீழே காட்டுமாறு செய்யுள்களிலேயே அச் சொல் இழிந்த, கீழான, அடிமையானத் தொழில்களில் ஈடுபட்டதாக குறிப்புள்ளது. இச்செய்யுட்கள் வழங்கப்பட்டமை காணுமுன்பு இவ்விரு சொற்களுக்கும் சுவையான ஒப்புமை கொண்ட கிரேக்கச் சொற்களான 'பொனிரோஸ், மாக்தரோஸ்' என்பவற்றை இங்கு குறிப்பது தகும். இவற்றில் முன்னது உழைப்பால் அமுக்கப்பட்டவர்கள், கடுமையாக உழைப்போர், பயனற்றவர், ஒன்றுக்கும் உதவாதவர், தகுதி யற்றவர் கயவர், இழிந்தவர், கோழையர் என்ற பொருளை உடையது. மாக்தரோஸ் என்பது துன்பத்தை அனுபவிப்போர், இழிந்தவர், கயவர், வீணர் முதலான பொருள்களை உடையது. மூல நிலையில் இச் சொற்கள் சமூகத்திற்கு இன்றியமையாத பணி செய்வோரைக் குறித்தன. இவர்கள் சிறப்புடைய வீர வெற்றிகளுக்குரிய வாய்ப்பற்றோர், செல்வமற்றோர், அரசியல் வலிமையற்றோராவர். பின்னர் இச் சொல் ஒழுக்கத்தின் கறையை குறிப்பதாயிற்று. இந்த ஒப்புமை தமிழ் கருத்தோடு பொருந்துவது இனித் தெளிவாகப் புலப்படும்.''[32]***

கைலாசபதி அவர்கள் குறிப்பிடுவதைப் போல பிற்சங்க காலத்தில் சாதிய முறையும், வேதியர் வழக்கங்களும் தமிழகத்தில் கால் கொண்ட பிறகு அவை சாதி முறைமைகளாகவும், இழிவானதாக, கறையைக் குறிப்பதாக மாறியது. உயர்ந்தவர் கீழானவர் என்பதைப் போல கலை x புலை என்ற பொருளில் அவை வழங்கப்பட்டு வந்தன. தொல்காப்பியம் குறிப்பிடுவதைப் போல, உயர் குடியினராகி, உரிமையுடையோர் ஆகிய, அருஞ்செயல் புரிபவருக்கே, வீரருக்கே காதலும், இல்லற வாழ்வும் உரிமையுள்ள தாகின்றது. வீரரல்லாத அடிமைகளான, தாழ்ந்த குடியினராகிய இழிந்த பணியினை மேற்கொள்பவர்களுக்கு காதலும் இல்லறமும் மறுக்கப்பட்டன.

**அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்**
**கடிவரை இல தென்மனார் புலவர்**

என்று தொல்காப்பியர் தெளிவாகவே குறிப்பிட்டுள்ளார். முற்சங்க காலத்தில் குடியாகிய குல முறைமைகளே இருந்தன. வலிமையான அரசு மேலெழுந்த போது குடிகள் சிதைவுற்ற போது, அடிமையுற்ற போது தோற்ற போது ஆட்சியாளரின் நடவடிக்கைகளை கட்டுப்பாடுகளை ஏற்காத போது சமூக ஒழுக்கங்களை மீறிய போது அவர்கள் சமூகத்தில் அமுக்கி வைக்கப்பட்டு கீழானவர்களாக தாழ்ந்தவர்களாக

ஆக்கப்பட்டனர். வேத மரபு தமிழகத்தில் வேர் கொண்ட பிறகு இவை வேகமாக நடைபெற்றன.

புலையரும், புலைத்தியும், இழிசினரும், இத்தகையவரே ஆவர். ஒரு வகையில் அவர்கள் உற்பத்தி உறவுகளுக்குள் வராமல், கலகக்காரர்களாக, புதிய நிலைமைகளுக்கு தக்கவாறு மாற்றத்தை ஏற்காதவர்களாகவும் இருந்திருக்கலாம். பழைய திணைச் சமூகத்தில் மரபாகக் கற்றிருந்த தொழில்களையே தொடர்ந்து மேற் கொண்டவர்கள் வழிப்பறி கொள்ளையிடல் முதலியவற்றில் ஈடுபட்டு, வேளாண் உற்பத்தியிலிருந்து நீங்கியவர்களாக ஏற்காதவர்களாகவும் இருந்திருக்கலாம். இவர்கள் இழிசினர் என வழங்கப்பட்டனர்.

மேலும் தடைசெய்யப்பட்ட குருதி தொடர்புள்ள இனக்குழுக்களுக்குள்ளே மணவுறவு மேற்கொண்டவர்கள் இவ்வாறு புறக்கணிக்கப்பட்டனர். நாகரிகமடைந்த வளர்ந்த பண்பட்ட சமூக அமைப்பில் மீண்டும் பின்னோக்கி செல்லும் வகையில் அநாகரிக நிலைக்கு செல்லும் இயல்பு என இதனை கருதும் நிலை உருவானது. சமூக விதிகளுக்கு விலக்காக விளங்கிய இம்மக்கள் வலிமையற்றவர்களாக, புறக்கணிக்கப்பட்ட நிலையை காணமுடிகின்றது.

மொத்தத்தில் கடைசியர் எனப்பட்ட அடியோரும் வினைவலரும் அடிமையுழைப்பை மேற்கொண்டோர் ஆவர். இழிசினராக கருதப்பட்டோர் முதன்மை உற்பத்தி உறவிற்குள் வராதவர்கள், முதன்மை உற்பத்திக்குள் ஈடுபட மறுத்தவர்கள் அல்லது புறக்கணிக்கப்பட்டவர்கள் ஆகும்.

### 2.6.3. கடைசியரின் அடிமை நிலை

பட்டினப்பாலை வழி நோக்கும்போது கரிகாற் சோழன் கடைசியராகிய அடிமைகளைக் கொண்டு செயற்கரிய செயல்கள் பலவும் மேற்கொண்டுள்ளான். நீர்ப்பாசன ஏற்பாடு, நீர் நிலை உருவாக்கம், மென்புலமாக்கல், நகரங்களை ஏற்படுத்தி வணிகத்தின் மூலமும் தனது அரசிற்கான வருவாயை ஈட்டியதுடன் நிலைத்த ஆட்சியினை மேற்கொண்டவனாக அறியப்படுகின்றான். அவனது செயல்கள் ஆட்சியாளர்களுக்கான அரசியல் நூல்களான *அர்த்தசாத்திரம், மனுநீதி* ஆகியவற்றின் வழிகாட்டுதல்களை ஒத்த நடிவடிக்கைகளே ஆகும். 301 அடிகளைக் கொண்ட பட்டினப்பாலை அவனது வீரச்செயல்களைக் குறிப்பிடுவதுடன், அவனுக்கு உரிமையுள்ள அரசிருக்கை தனது வீரத்தால் திரும்பப் பெற்றமை, பகைவரை அழித்து அடிமைகளை கைக்கொண்டமை, அமைதிக் காலத்தில் மேற்கொண்ட ஆக்கப்பணிகள், அரசை வளப்படுத்தியமை, புலவர்களுக்கும் வழங்கிய ஆதரவு ஆகியவற்றை குறிப்பிடுகின்றது.

> ***''சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படும் புகழ்பெற்ற அரசன் கரிகாலனாவார். புகாரில் தனது தலை நகரத்தை நிறுவினார். அது வர்த்தக மையமாக, குறிப்பாக பருத்தி வர்த்தகத்திற்கு புகழ் பெற்றதாக உருவானது. அவர் பல வேத பலி சடங்குகளை நடத்தியவர். மேலும் நீண்டகாலம் உயிர் வாழ்ந்தார்''***

என்று வரலாற்றிஞர் **திவிஜெந்திர நாராயண் ஜா** கூறுகிறார்.[33]

> ***இத்தகு சிறப்பு வாய்ந்த அரசன் கரிகாலன் கட்டிய கல்லணை திருச்சிக்கு அருகில் 10 மைல் தொலைவில் அமைந்துள்ளது. அது முழுமையும் கற்களால் ஆன கட்டிடம். அதன் நீளம் 329 மீட்டர் அல்லது 1080 அடி; அகலம் 12.20 முதல் 18.30 மீட்டர் அல்லது அல்லது 40 முதல் 60 அடி; உயரம் 4.57 முதல் 5.49 மீட்டர், 15 முதல் 18 அடியாகும். அவ்வணை தடுத்து உயர்த்தும் ஆற்று நீர் காவிரி, வெள்ளாறு, கல்லணைக்கால்வாய் வழியாக பாய்ந்து தஞ்சை மாவட்டத்தில் மட்டும் 12 லட்சம் ஏக்கர் பாசன வசதியளிக்கிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு கரிகாலன் கட்டிய கல்லணை ஆங்கிலேய ஆட்சியில் பழுதுபார்க்கப்பட்டு நிலைத்து நிற்கிறது. இதனுடைய மணல்போக்கி மதகுகள் பண்டைய நீரியல் தொழில் நுட்பத்துக்கு வியக்கத்தக்க முறையில் கட்டியங்கூறி நிற்கின்றன.***[34]

வடமலை பிறந்த மணியும் பொன்னும் (*பட்டின.* 187) என்று குறிப்பிடப்படும் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய உலோகங்களை கோலாரில் வெட்டி எடுத்து உருக்கி அணிகலன்களும், கருவிகளும் செய்துள்ளனர்.[35] இதுபோன்ற சுரங்கப் பணிகளிலும், கட்டுமானப்பணிகளிலும் பரந்த வேளாண் உற்பத்தியிலும் தமிழகத்திலேயே முதன்மையான அடிமையுடைமையாளனாக இருந்திருக்கக் கூடிய கரிகாலனால் மேற்கொள்ளப்பட்டிருக்கின்றது. நகரங்களும் கட்டமைக்கப்பட்டு வாணிபமும் பெருகிய நிலையில் சிறந்த ஆட்சியாளனாகவும் விளங்கினான் என்பது தெளிவாகின்றது. இந்நிலையில் தொழும்பர், ஆள் ஆகிய அடிமைகள் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளதை காணமுடிகின்றது.

### 2.6.4. அடிமைத் தொழுவர்

நேரடியான பதிவுகள் இல்லாத அடிமை மாந்தர் **ஏரின் வாழ்நர், ஏராளர், கலப்பையர், படுநர், களமர், அரிநர், அரிஞர், நெல்லறி தொழுவர்,** என்றெல்லாம்

அவர்களது உழைப்பால் செயலால் சுட்டப்படுகின்றனர். *தொல்காப்பியம்* இவர்களை அடியோரும் வினைவலரும் என்று சுட்டுகிறது. வினையால் பெயர் பெற்ற இவர்கள் இலக்கியங்களில் தொழுவர் என்றும் சுட்டப்படுகின்றனர்.

**நீர்த் தெவ்வும் நிரைத்தொழுவர்**

(*மதுரை :* 890) வயல்களுக்கு நீர்ப்பாய்ச்ச குளங்களிலிருந்து வரிசையாக நின்று நீர் இறைக்கும் தொழுவர் என்றும்.

**''சிறுகுடி பெருந் தொழுவர்** (*மதுரை* 122)

**''நெய்தல் அம் கழனி நெல் அரி தொழுவர்**

(*புறம்* 379-3) நெய்தல் மலர் மலர்ந்துள்ள நெல் வயலில் அறுவடை செய்யும் தொழுவர் என்றும்

**நெல்லரி தொழுவர் கூர் வாள் மருங்கின்**

(*புறம்* 379-3) கருக்கு மழுங்கிய அரிவாள் கொண்டு அறுவடை செய்த தொழுவர் என்றும்.

**நெல்லறி தொழுவர்** (*நற்;* 195-6) என்று பலவிடங்களில் சுட்டப்படுகின்றனர். பிற்காலத்து நூலான திவாகர நிகண்டு **''ஆளும் தொழும்பும் அடிமையாகும்''** என்று குறிப்பிடுகின்றது. இதனால் சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள தொழுவர் அடிமை மக்கள் தான் என துணிய முடியும். மேலும் பெண்ணடிமைகள் தொழுத்தைமார் எனப்பட்டனர்.

**புறத்து இரு; போகு என்னும் இன்னாச் சொல் இல்லுள்**
**தொழுத்தையால் கூறப்படும்**

(*நாலடி.* 326;3-4) புல்லறிவாளனை அவனது இல்லத்தில் உள்ள தொழுத்தை கூட ''வெளிப்புறத்தில் இரு'' ஒழிந்து போ என்று கடுஞ் சொல் கூறுவாள் என *நாலடியார்* குறிப்பிடுகின்றது.

மேலும்

**''இயல்பு இல்தொழுவு**

(*திரி.* 67;2) குறிப்பிடுகின்றது. நற்குணம் இல்லாத அடிமை என்று பொருள் ஆகும். சங்கம் மருவிய காலத்து அற நூல்கள் நேரடியாக அடிமை

முறையைப்பேசுகின்றன. ஆயினும் முற்காலத்தில் நாம் உய்த்துணர்ந்து கொள்ளும் வகையில் தான் இலக்கியப் பதிவுகள் அமைந்துள்ளன.

### 2.6.5. ஆள் எனும் அடிமை

பண்டைய இந்தியாவில் வேத காலத்தில் ''தஸ்யூ'' ''தாஸ்''என்ற சொற்கள் முதலில் பகைவரையும் பிறகு அடிமையையும் குறித்து வந்தது[36] என்ற செய்தி தொழுவர். தொழுத்தமையர் என்பதுடன் ஒப்புநோக்கத்தக்கது. இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப் பெயரகராதியானது 'ஆள்' என்பதற்கு 'அடிமை ' என்று பொருள் தருகின்றது 'ஆளாயிருத்தல்' ஆளானேன்' என்பதற்கு அடிமையாயிருத்தல் அடிமை ஆனேன் என்று பொருள் ஆகும்.

சங்க இலக்கியத்துள் 'ஆள்' எனும் சொல் 35 இடங்களில் இடம் பெறுகின்றது. இது இன்றைய பொருளில் 'ஆள்' என்றால் நபரை குறிக்கவில்லை. போரில் வெட்டி வீழ்த்தப்பட்ட உயிரற்ற சடலங்களை குறித்தே வருகின்றது. எகிப்தில் Killed என்று போரில் பிடிக்கப்பட்டவர்கள் அழைக்கப்பட்டனர். அதன்பிறகு அடிமைகள் Living Killed எனப்பட்டனர்.[37]

**அஞ்சா மறவர் ஆட்போர்பு அழித்துக்**
**கொண்டனை பெரும!.................................**

(*புறம்* 373:25-26) இதில் ஆட்போர்பு அழித்து என்பது பிணப்போரை அழித்து என்ற பொருளில் கூறப்பட்டுள்ளது.

**யானை எருத்தின் வாள் மடல் ஓச்சி**
**அதறி திரித்த ஆள் உகு கடாவின்**

(*புறம்* 371: 15-16) ஆள் உகு கடாவின் என்பது இங்கும் பிணக் குவியலை அழித்து என்றே கூறப்பட்டுள்ளது. இதனால் தோற்றவர், வீழ்ந்தவர். உயிரற்றவர், சடலம் போன்றவர் ''ஆள்'' என்று பிறகு ஏற்பட்டிருக்கலாம் என்று கருத இடமுள்ளது.

**குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்**
**ஆள் அன்று என்று வாளில் தப்பார்**

(*புறம்.* 74) குழந்தை இறந்து போனாலும், வயிற்றில் உள்ள குழந்தை இறந்தே பிறந்தாலும்கூட அது 'அடிமை அன்று' என வீரமரபினராக வாளில் கீறியே புதைப்பர் என்பதால் 'ஆள்' என்பது அடிமை என்பது விளங்கும்.

**நோய்ப்பால் விளிந்த யாக்கை தழீஇ**
**காதல் மறந்து அவர் தீது மருங்கு அறுமார்**
**..........................................................................**
**மறம் கந்தாக நல் அமர் வீழ்ந்த**
**நீழ்கழல் மறவர் செல்வுழிச் செல்க என**
**வாள்போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர்**

(*புறம்.* 93)நோயில் இறப்பவரையும், வீரர்களைப்போன்று வாளால் கீறி அடக்கம் செய்தனர். இது, வென்றால்தான் வாழ்வு, தோற்றால் அடிமையாக நேரிடும். எந்த நிலையிலும் வாழும்போதும், இறந்தபோதும் அடிமையாகக் கூடாது என்பதை உணர்த்துகின்றது.

**இரும்பு ஆர்க்கும் காலர் ஆய், ஏதிலார்க்கு ஆள் ஆய்**
**கரும்பு ஆர் கழியார் சேர்வர்:**

(*நாலடி.* 122-1-2) காட்டில் சுதந்திரமாக வாழும் பறவையினைப் பிடித்து கூண்டில் அடைப்பவர் காடை, கௌதாரி, முதலியவற்றை வேட்டையாடுபவர். கால்களில் இரும்பு விலங்குகள் பூட்டப்பட்டு அயலவர்க்கு அடிமைப்பட்டு விளைநிலத்தில் உழைப்பர் என்பது இதன் பொருள் ஆகும். காலில் விலங்கு பூட்டி அடிமைகளிடம் வேலை வாங்கியதையும் வேளாண்மையில் ஈடுபடுத்தியதையும் இதனால் அழியலாம்.

**மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்**
**கடிமை புகுத்தி விடும்**

(*குறள்:* 608) உயர்குடியில் பிறந்தவனிடம் சோம்பல் வந்து சேர்ந்தால் அது அவனுடைய பகைவருக்கு அடிமையாக்கிவிடும். உயர்குடியினரும் அடிமை நிலையை அடைவர் என்பதும் உயர் குடியினர் ஆட்சியில் அடிமைகள் இருந்தனர் என்பதும் இதனால் விளங்கும்.

### 2.6.6. சங்க இலக்கியத்தில் அடிமை நிலை

*புறநானூறு* முதலான சங்க இலக்கியத்தில் வீழ்த்தப்பட்டவர் போரில் கொல்லப்பட்டவர் ''ஆள்'' எனக் கருதப்பட்ட காலம் தொடங்கி தோற்றவரை உயிரோடே கொண்டு வந்து உடலுழைப்புக்கு பயன்படுத்திய காலம் வரை நீண்ட நெடிய பரப்பினுள் நிகழ்ந்தேறியுள்ளது. அடிமையுடைமையின் தோற்றம் வளர்ச்சி சங்க காலம் சங்கம் மருவிய அற நூல்களின் காலம், காப்பிய காலம் வரை ஓராயிரம் ஆண்டுகால இடைவெளியில் ஏற்பட்ட வளர்ச்சிகளையும் மாற்றங்களையும்

உள்ளடக்கியது, இதனை சங்கம் மருவிய காலத்து நாலடியார், திருக்குறள் முதலியவற்றின் கருத்திலிருந்தும் பிற்பட்ட காப்பியங்கள். திவாகர நிகண்டும் அடிமையுழைப்பின் தோற்றம், வளர்ச்சி,உச்சிநிலை அடைந்ததைப் பற்றி வெளிப்படுத்துகின்றன. மேலும்,

**இளமாங்காய் போழ்ந்தன்னை கண்ணினால், என் நெஞ்சம்**
**களமாகக் கொண்டு ஆண்டாய்; ஓர் கள்வியை அல்லலையோ?**

**..........................................................................................**

**நின் நெஞ்சம் களமாக் கொண்டு யாம் ஆள, எமக்கு எவன் எளிதாகும்**
**புனத்துளான் என்னைக்குப் புகாய்த்துக் கொடுப்பதோ?**
**இனத்துளான் எந்தைக்குக் கலத்தொடு செல்வதோ?**
**தினைக் காலுள் யாய் விட்ட கன்று மேய்க்கிற்பதோ?**

(முல்லைக்கலி 108;32 27-33) மேற்கண்ட *கலித்தொகை* பாடலில் தன் நெஞ்சை இருப்பிடமாகக் கொண்டு தன்னை அடிமையாக்கிக் கொண்டாயென தலைவன் தலைவியை நோக்கிப் பாட, தலைவியானவள் ''உன் நெஞ்சை நான் இருப்பிடமாகக் கொண்டு உன்னை அடிமையாக்குதல் எளிதான செயலாகுமா?

உன் நெஞ்சம் தினைப்புனத்தில் இருக்கும் என் தமையனுக்கு உணவு கொண்டு செல்லுமா?

பசுக் கூட்டங்களை மேய்த்துக் கொண்டிருக்கும் என் தந்தைக்குக் கறவைக் கலன் கொண்டு செல்லுமா?

அறுத்த தினைத்தாளிடையே என் தாய் மேய விட்டிருக்கும் கன்றை மேய்க்குமா? என்று கேள்விமேல் கேள்வி கேட்கின்றாள். இப்பாடலை எடுத்துக் காட்டி மேய்ச்சல் சமூக வாழ்வில் தந்தை வழிச் சமூகத்தின் தோற்றமும் அதன் அடிப்படையில் தனிச் சொத்துரிமையும் உருவாகின்றது. தனிச் சொத்துரிமை உருவாகும் போது அது தன்னுடைய துணைப் படைப்பாக அடிமை முறையையும் உருவாக்கிக் கொள்கிறது என்ற வரலாற்றுப் பொருள் முதல் வாத கண்ணோட்டத்தை பேரா. ஆ. சிவசுப்பிரமணியன் தமது நூலில் விளக்குகின்றார்.[38] மேற்கண்ட பாடல் முல்லை நிலத்து இனக்குழுத் தலைவனின் மகளுக்கும், பிற நிலத்து தலைவனுக்கும் இடையிலான காதல் பாடலாக அமைந்துள்ளது. இது அடிமை பற்றி பேசுகிறது.

பண்டைய இனக்குழுச் சமூகங்கள் பிற இனக் குழுக்களுடன் போரிட்டுக் கொண்டன. ஒருவ னை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதுவதன்று இவ்வுலகத்து இயற்கை (*புறம்* 76:1-2) வெற்றி பெற்றவர், தோற்றவர்களை தமது குல மனைத்திறக்கும் அடிமையாகக் கொள்ளுதல் முறையாகும். இந்நிலையில் வட

இந்தியாவில் தஸ்யூ என்று பகைவரைக் குறித்த சொல் பிறகு அடிமைகளைக் குறித்தது (மழவர் X தொழுவர்) இதே நிலை தமிழகத்திலும் பகைவராக கருதப்பட்ட மழவர் குலச் சமூகங்கள் தொழுவர் எனப்பட்ட நிலைக்கு மாறி தோற்று அடிமைப்பட்டு தம்மிடத்திலேயே உழைத்து வாழவேண்டிய நிலை ஏற்பட்டது. தொழுவர், தொழுத்தமையர் என்பது அடிமை என்ற பொருளில் மாறுபட்டிருக்கலாம்.

அவ்வாறு தோற்ற இனக்குழுக்களை தம் குலமனைத்திற்கும் அடிமையாகக் கொள்ளும் போது உபரி உற்பத்தி அதிகரித்து தனியுடைமை பெருக்கம் ஏற்படுகின்றது. வேந்து உருவாக்கத்தை நோக்கி வெற்றி பெற்ற இனக்குழுத் தலைவர்கள் பார்ப்பனர்களின் தூண்டலில் செயல்பட்டனர் என்பதும் முழுமையாக காணப்படுகின்றது. வேந்தராக மாற்றம் பெற்று வளர்ந்தவர்கள் மருதம் நெய்தல் ஆகிய இரு பகுதிகளிலும் செல்வாக்கும் ஆதிக்கம் கொண்டிருந்த தலைவர்களே ஆவர்.

சங்காலத்து இனக்குத் தலைவர்கள் பலரும் தங்களை மழவர் என்றே அழைத்துக் கொண்டனர் . தகடூரை ஆண்ட அதியர்களும் திருக்கோயிலூரை ஆண்ட மலையமான் திருமுடிக்காரியும், கொல்லிமலையை ஆண்ட ஓரியும், சேதி நாட்டை ஆண்ட காரியும் மழவர் குடியைச் சார்ந்தவரென்றே அறியப்படுகின்றனர். மழவன் என்பதற்கு கட்டிளமையோன் என்றும், மழவு என்பது இளமை என்றும் தமிழ்ப் பேரகராதி பொருள் கூறுகின்றது. கட்டிளமையானவன் அஞ்சாத வீரமும் வெற்றியும் உடையவன் என்ற பொருளில் அவர்கள் மழவர் என்று அழைத்துக் கொண்டார்கள் என்றால், தோற்றவர்கள்கள், வெற்றி கொள்ளப்பட்டவர்கள் தொழுவர் எனப்பட்டனர் என்பதே பொருந்தும். தொழும்பு என்பதற்கு தமிழ்ப் பேரகராதியானது அடிமை என்று பொருள் தருகின்றது. சங்க காலத்தில் மூவேந்தருடன் தொடர்ந்து நீடித்த இனக்குழு குடியரசுகளின் தலைவராகிய மழவர்கள் அவர்களால் கைப்பற்றப்பட்டு தொழுவர் தொழுத்தமையர் ஆயினர். வேந்து உருவாக்கத்தின்போது அரசு கட்டமைக்கப்பட்டபோது அதன் அருகிலேயே இத்தகைய இனக்குழு குடியரசுகள் அக்கம் பக்கமாக பல எதிர்ப்புகளுக்கு இடையில் நீடித்திருந்தன.

நூற்றுக் கணக்கான இனக்குழு குடியரசுகள் நிலவி யிருந்தமை அழிக்கப்பட்டு படிப்படியாக நானிலந் தாங்கிய வேந்து விரிவுபடுத்தப்பட்டு மூவேந்தர் அரசமைப்பு நிலைப்பட்டது. வலிமையான (வேந்தர்களுக்கு இணையான) இனக்குழு குடியரசின் தலைவனாக விளங்கிய அதியமான் வீழ்த்தப்பட்டான். இனக்குழு குடியரசுகள் முற்றாக அழிக்கப்பட்டு வேந்தர்கள் நிலைப்பெற்றதைச் சுட்டுவதே தகடூர் யாத்திரை. அரசுக்கும் ஜனபதங்களுக்கும் இடையிலான தொடர் மோதல்கள் இவ்வாறு முடிவுக்கு வந்தன. இதனை ''வீரநிலைக்காலம் விரைந்த அரசுகளின் அரசுரிமைகளின்

எழுச்சியைத் தொடக்கால இனக்குழு குடியரசுகளின் சாம்பலின் மீதிலிருந்த கண்டன்'' என்று கலாநிதி க. கைலாசபதி அவர்கள் குறிப்பிடுகின்றார். நிலம் கைப்பற்றுதல் போருக்கான அடிப்படை காரணமாக அமைந்திருந்தது.[39]

உபரி உற்பத்தியும் சுரண்டலும் அற்ற எளிய இனக்குழு குடியரசுகளாக விளங்கிய சமூகங்களின் தலைவர்கள் அத்தன்மையிலிருந்து மாறாமல் நீடிக்கவே விரும்பினர். இந்நிலையில் எதிர்த்து போராடி அழிந்துபட்டனர். அல்லது வேந்தர்களின் தலைமையின் கீழ் அவர்களது வெற்றிக்கு பாடுபட்டனர். சீறூர் மன்னர்கள் இதற்காக வேந்தர்களிடமிருந்து நிலக் கொடை பெற்ற வேளாண்குடியாவர். முதுகுடி மன்னர் இயல்பான வேளாண் குடியாவர். வேந்தனின் தொழில் நன் செய் நில உருவாக்கமும். நன் செய் நிலம் கவர்த்தலும் ஆகும். ஆட்சி அமைப்பும், நிர்வாகத்திறமும் நிலையாகக் கொண்டிருந்த வேந்தன் நிலக் கொடை வழங்கி கோயிலுக்கும் தனது பிரதிநிதிகளுக்கும் பங்கீடு செய்து நிர்வாகம் மேற்கொண்டான்.அவனது பிரதிநிதிகளாக சீறூர் மன்னர்களும் அறிவுச் சான்றோராகிய புலவர்களும் இருந்து நிலக் கொடை பெற்றனர்.

### 2.6.7. சங்கச் சமூகத்தின் உற்பத்திச் சக்திகள்

உற்பத்தி அனுபவமும் திறமையும் கொண்ட மக்களின் உழைப்புச் சக்தியும் உற்பத்தி கருவிகளும் சேர்ந்து உற்பத்தி சக்திகள் எனப்படுகின்றன. சங்கச் சமூகத்தில் '' அடியோர் பாங்கினும், வினைவலர் பாங்கினும் கடி வரையில் '' என்று தொல்காப்பியரால் குறிப்பிடப்பட்ட, மண வாழ்வும், குடும்ப அமைப்பும், சொத்துரிமையும் கூட இதனால் மறுக்கப்பட்ட கடைசியராகிய அச்சமூக அடுக்கில் கடைசியில் வைக்கப்பட்டிருந்த அடிமை மக்கள் முதலாவதான உற்பத்தி சக்தியாக விளங்கினர். நிலமும் உற்பத்தி கருவிகளும் உயர்குடியினராகிய மன்னன், அவனது அதிகாரிகள், புலவர்கள், கோயில் ஆகியவற்றுக்கு சொந்தமாக இருந்தது. மன்னன் வறியிலியாக புலவர்களுக்கும் தமது வெற்றிக்கு உடனுழைத்த தளபதிகளாக விளங்கிய சீறூர் மன்னர் போன்றவர்களுக்கும் நிலக் கொடை வழங்கினான். ஆட்சியாளர்களுக்கும் அடிமை உழைப்பாளர்களுக்கும் இடைப்பட்ட நிலையில் கைவினைச் சங்கங்களும், பெருஞ் செல்வந்தர்களாகிய வணிக வர்க்கமும், வேந்தனுக்கு இணையாக நாளடைவில் வளர்ந்திருந்தனர், ஆகவே சங்கச் சமூகத்தில் பின் வருமாறு ஒரு சமூக அடுக்கு நிலவியது.

**உயர்குடியினர்**

**வணிகப் பிரிவினர்**

**அடிமை உழைப்பாளர்கள்**

உழைப்புச் சக்தி ஓரிடத்திலும், உற்பத்தி கருவிகள் பிறிதோரிடத்திலும் இருந்தாலும், இவை இரண்டும் சேர்ந்தால் தான் உற்பத்தி இணக்கமாக நடைபெறும். எனவே சேர்ந்தியங்கி வந்த சங்கச் சமூகம் இனியும் சேர முடியாது என்ற பகை முரண் அதிகரித்தபோது வீழ்ச்சியை சந்தித்தது. அதுவே களப்பிரர் காலம் ஆகும்.

**2.6.8. சங்கச் சமூகத்தின் உற்பத்தி உறவுகள்**

**அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்**
**ஐவகை மரபின் அரசர் பக்கமும்**
**இருமூன்று வகையின் ஏனோர் பக்கமும்**
**மறுவில் செய்தி மூவகைக் காலமும்**
**நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்**
**நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்**
**பால் அறி வகையின் பொரு நர்க் கண்ணும்**
**அணை நிலை வகையொடு ஆங்கு எழு வகையான்**
**தொகை நிலை பெற்றது என்மனார் புலவர்**

(*தொல்* 1020) ஒன்பது அடிகள் கொண்ட இந்நூற்பாவின் முதல் மூன்று அடிகள் பார்ப்பார், அரசர், வணிகர் ஆகிய மூன்று பிரிவினரையே குறிப்பிடுகின்றது. அவற்றுடன் தாபதர் எனப்படும் சமணத் துறவிகளைப் பற்றியும், பொருநர் எனப்படும் பாணர், முதலான புலவர் பற்றியும் கூறுகின்றது.

மூன்றாவது அடியானது **''இரு மூன்று வகையின் ஏனோர் பக்கமும்''** என்பது வணிகரும் வேளாளரும் ஆவர் என்று பிற்கால உரையாசிரியர்கள் மனுவின் தாக்கத்தாலும் பிற்கால நிலைமையாலும் அவ்வாறு உரைகண்டனர் என வெ. பெருமாள்சாமி கருதுகின்றார்.[40] இதனை உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் நோக்கும் போது அரசரும், அவரிடம் நிலக் கொடை பெற்ற வேளாளரும் புலவரும், பார்ப்பாரும் உயர்குடியினரே, ஆளும் வர்க்கமே எனக் கொண்டும், அவர்களுக்கு இணையாக வளர்ந்த இன்னொரு புதிய வர்க்கமாகிய வணிக வர்க்கமும், விளங்கியது என்பதே சரியாகும். நிலம், கருவி முதலானவற்றை தமது உடைமையாகக் கொண்டிருந்த உயர்குடியினரும், வணிக வர்க்கத்தினரும் தொல் காப்பியரால் சுட்டப்படும் அதே வேளையில், அவற்றின் மீது எவ்வித உரிமையும் மறுக்கப்பட்ட அடிமை மாக்களைப் பற்றியும் வேறோரிடத்தில் **அடியோர் பாங்கினும், வினைவலர் பாங்கினும் கடி வரையில** என்று தெளிவாக குறிப்பிடுகின்றார்.

பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் அரசு இயந்திரம் இந்த எதிரிடையான இரண்டு வர்க்கங்கள் இணைந்து செயல்பட்ட போது உயிர்பெற்று இயங்கியது. உபரிகளை

குவித்தது. நகரங்களை ஏற்படுத்திக் கொண்டது. கடல் கடந்து சென்றும் பொருள் ஈட்டச் செய்தது. அடிமையுழைப்பின் மீதே மிகச் சிறந்த நாகரிகத்தையும், பண்பாட்டையும், கலை இலக்கியத்தையும் படைத்துக் கொண்டது. இலக்கணங்களை வகுத்தது. வரையறுத்தது.

அகன்ற இடமுடைய தானியக் குவியல் பற்றி சங்க இலக்கியங்கள் மிகுதியாக குறிப்பிடுகின்றன. **நெற்கூடு கெழீஇய நாடு** (*புறம்* 353;9) மறுபுறத்தில் பசியும் வறுமையும் துன்புறுத்தியதையும் இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. இந்நிலையில்

**அல்லல் பட்டு ஆற்றாது அழுத கண்ணீரன்றே**
**செல்வத்தை தேய்க்கும் படை**

(*குறள்* 555) என்று திருவள்ளுவர் குறிப்பிடுகின்றார். இந்நிலையில் சமூகத்தின் கீழடுக்கில் இருந்த முதன்மையான உற்பத்தி சக்தியான கடைசியராகிய பகை முரண்பாடும், இரண்டாம் பகை முரணான வணிக வர்க்கமும் இணைந்து மூவேந்தர் அரசுகளை கவிழ்த்தன. அவர்களால் ஆட்சி மேற்கொள்ள இயலவில்லை.

பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் உற்பத்திப் பொருட்களையும், வினியோகம், பரிவர்த்தனை நுகர்வு ஆகியவற்றினை ஆராயும் போது அவை பண்டைக் காலத்து மேற்கத்திய சமூகங்களில் காணப்பட்ட உற்பத்தி முறைகளையே அடிப்படையில் ஒத்திருந்தாலும், அதன் தன்மையிலும், குணத்திலும் வேறுபாடுகளையும் கொண்டுள்ளது. அது இச் சமூகத்திற்கே உரிய சில தனித் தன்மைகளாகும்.

### 2.6.9. சங்கச் சமூக அடிமை முறையின் தனித்தன்மை

பண்டைக் காலத்தில் கிரேக்கம், ரோம், எகிப்து ஆகிய நாடுகளில் அடிமைகள் வாணிபம் நடைபெற்றது. விலங்குகளைப்போல அவர்களுக்கு சூட்டுக் குறி இடப்பட்டதும், விலங்கு பூட்டி, சவுக்கால் அடித்து வேலை வாங்கப்பட்டதும், கொட்டடிகளில் அடைத்து வைக்கப்பட்டதும் நடந்தது. ஆனால் இந்தியாவில், தமிழ் நாட்டில் அடிமையுழைப்பு இருந்தும் அவ்வாறு விலங்கு பூட்டப்பட்டு சந்தையில் விலை பேசப்பட்ட அடிமைகள் இல்லை. அடிமைகள் மீது செலுத்தப்பட்ட ஒடுக்கு முறையும், ஆதிக்கமும் மேற்கில் செலுத்தப்பட்டதை விடவும், கொடுமையானதாக இங்கு நிகழ்ந்தேறியுள்ளது. இது பிரிவினை கருத்துக்களாலும், கீழ்படுத்தி வஞ்சித்து ஆதிக்கம் செலுத்துவதன் மூலமும் நடந்தேறியது. நிலவியல் அடிப்படையிலும், வாழ்க்கை முறைகளிலும் மாறுபட்ட தன்மைகளையும், இயல்புகளையும் கொண்டு விளங்கிய இச் சமூகத்தில் பார்ப்பனிய பிரிவினைவாதம் வெற்றிகரமாக செயல்பட்டு வந்துள்ளது. இது சமூகத்தின் வளர்ச்சிப் போக்கில் தொடக்கத்தில் இருந்தே தனக்கான வர்க்க நலனை ஆற்றி வந்திருக்கின்றது.

இச் சமூக அமைப்பில் அடிமை முறை நிலவிய போதும், வெளித் தோற்றத்தில் அறிய முடியவில்லை. கையில் விலங்கிடப்படாமல் சிந்தனையில் விலங்கிடப்பட்டு அறிவைப் பெறும் வழிகள் தடுக்கப்பட்டு வந்துள்ளனர். பார்ப்பனியம் என்பது ஏற்றத் தாழ்வையும், பிரிவினைகளையும், கீழ்படிதலையும், பெரும் பான்மையோரின் மீது சிறுபான்மையினர் செலுத்தும் கொடிய ஒடுக்குமுறையினையும் இயல்பானதாக, நன்மை விளைவிக்கத் தகுந்ததாக, மேம்பட்ட ஒரு கருத்தியலாக தம்மால் ஏமாற்றப்பட்ட அடிமையுழைப்பாளர்களை நம்பவைத்து ஏற்கச் செய்து வந்துள்ளது. மேற்கில் போன்று அல்லாமல் இந்தியாவிலும், தமிழகத்திலும் அடிமைகள் கற்றலில் இருந்து விலக்கப்பட்டிருந்தனர். அறிவு சார்ந்த பணிகளில் ஈடுபடுத்தப்படாமல் உடல் உழைப்பைச் செலுத்துவோராக மட்டுமே பயன் படுத்தப்பட்டு வந்தனர். இதற்காக அவர்கள் கோயிலோடும், நிலத்தோடும் பிணைக்கப்பட்டிருந்தனர். இறந்தாலும் விடுவித்துக் கொள்ள முடியாது.

## 2.7.0. இயல் தொகுப்புரை

சங்க காலத்தில் உற்பத்தியிலே நேரடியாக ஈடுபடாத தலைமக்களே அறியப்படுகின்றனர். பிற மக்கள் காணக் கிடைப்பதில்லை. ஆயினும் இயற்கையும், மரம் செடி, கொடிகளும், புள்ளினங்களும் பாடப்பட்டுள்ளதைப் போல, உற்பத்திக் கருவிகளும், அக்கருவிகளைக் கொண்டு உற்பத்தியில் ஈடுபட்ட உழைப்பாளர்களும் அறியப் படுகின்றனர். மேலும் உற்பத்தியில் ஈடுபட்ட உழைக்கும் மக்களுக்கும் அவர்களை உற்பத்தியில் ஈடுபடுத்திய உயர்குடியினராகிய ஆட்சியாளர்களுக்கும் இடையில் நிலவிய உற்பத்தி உறவுகளும் ஆய்வுப்பொருளாகின்றன. இன்னும் முன்னோக்கிச் சென்று பழைய கற்காலம், புதிய கற்காலம், நுண்கற்காலம் என்று அரிய தொல்லியல் சான்றுகளாக விளங்கும் கற்கால கருவிகளை வகைப்படுத்தி அவற்றின் காலம் அவர்கள் தாய்வழிச் சமூகத்திலும் வேட்டைச் சமூகத்திலும், கால்நடை மேய்ப்பு சமூகத்திலும், ஆதி வேளாண்மை மேற்கொண்டமை பற்றியும் இவ்வியல் ஆராய்கின்றது. இந்நிலைகளைக் கடந்து நாகரிக வளர்ச்சியும் உயர்ந்த கலை இலக்கிய பண்பாடும் கொண்ட அடிமையுழைப்பை அடிப்படையாகக் கொண்ட, சங்க கால அடிமைச் சமூகத்தின் பொருளாதார உற்பத்தி உறவுகளைப் பற்றி இவ்வியல் விரிவாக ஆராய்கிறது.

மேலும், குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்று நானிலங்களிலும் நடைபெற்ற வேறுபட்ட தொழில்களும், அவற்றின் தன்னிறைவு கொள்ளும் தன்மை பற்றியும் அவற்றைக்கடந்த, நானில வேந்துருவாக்கத்தின் போது உள்நாட்டு வாணிபம் நானிலத்தை ஒருங்கிணைத்தலும், அயல் நாட்டு வாணிகத்தின் பொருட்டு நானிலத்தின் விளைச்சலாகிய (மதிப்புறு பண்டங்கள்) அகில், சந்தனம், மிளகு,

யானைதந்தம், முத்து, மயிலிறகு ஆகிய அரிய பொருட்கள் சேகரிக்கப்பட்டு துறைமுகப்பட்டினங்களுக்கு கொண்டு செல்லப்பட்டமையும், இதன் பொருட்டு நானிலங்களையும் ஒருங்கிணைக்கும் வணிகப் பெருவழிகளும் பற்றியும் இவ்வியல் ஆராய்கின்றது.

அடிமை மக்கள் உழைப்பில் ஈடுபட்டு உழைத்துக் கொடுத்திட காரணமானவை உற்பத்திக் கருவிகள் அல்லது தொழிற்கருவிகள் என்றும் உற்பத்தி சாராத ஆட்சியாளர்கள் பயன்படுத்திய கருவிகள் போர்க்கருவிகள் என்றும், அவர்களைச் சார்ந்து வாழ்ந்த பாணர்களின் இசைக் கருவிகள் ஆகியனவும் பாகுபடுத்தப்பட்டு கருவிகளின் அடிப்படையில் உற்பத்தி உறவுகளையும் உற்பத்தி சக்திகளையும் விளக்கி அடிமையுழைப்பை முதன்மையாகக் கொண்ட சமூகமாக சங்கச் சமூகம் விளங்கியதை இவ்வியல் விரிவாக ஆராய்கிறது.

வேளாண் உற்பத்தியில் ஈடுபட்ட கடைசியர், இழிசினர், அடிமைத் தொழுவர், ஆள் எனும் அடிமை ஆகியன பற்றி போதிய சான்றுகளுடன் விரிவாக ஆராய்கிறது. சங்க இலக்கியத்தில் அடிமை பற்றிய பதிவுகளும், மேற்கத்திய அடிமை முறையிலிருந்து வேறுபடும் விதத்தில் அமைந்துள்ள, தனித்த இயல்புள்ள அடிமை முறை பற்றியும் ஆராய்கிறது. வேந்தர்களின் நில விரிவாக்க முயற்சிகள், நிலையான அரசு அமைய வரிவருவாய் அடிப்படை, தண்ணடை கிராமங்களாக நிலங்களை ஏரிகுளம் வெட்டி மாற்றியமைத்தல் ஆட்சியாளர்களின் நிர்வாக தலங்களாக கோயில்களை ஏற்படுத்துதல் ஆகியன பற்றியும் இவ்வியல் விரிவாக ஆராய்ந்து கூறுகிறது.

மேலும் சங்க காலத்திலேயே உடன் கட்டை ஏறும் வழக்கம் இருந்துள்ளது. உழைக்கும் மக்களுக்கு, கடைசியராகிய அம்மக்களுள் பெண்களை அனுபவிக்கும் உரிமை அச்சமூகத்தின் தலைவனுக்கு இருந்தது. இது பரத்தமையாகச் சுட்டப்படுகின்றது.

இது மருத நிலத்தில் பெரும்பான்மையாக நிலவியதை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

கோயில்கள், அணைகள் கட்டியதை அடிமையுழைப்பைக் கொண்டே நிறைவேற்றினார்கள் பொன், வெள்ளி, இரும்பு வெட்டி எடுத்திடவும், கட்டுமானப் பணிகளிலும் அடிமைகள் பயன்படுத்தப்பட்டுள்ளனர். நிலக்கொடையாகக் கொடுக்கப்பட்ட வெள்ளாண் வகை ஊர்களாக காட்டு நிலம் மற்றும் தரிசு நிலங்களைக் கண்ணுக்கெட்டிய தூரம் வரை ஆட்சியாளர்கள் அறிவித்தனர். குடிநிறுவினர். இவற்றுக்கு அடிமைகள் பயன்பட்டனர். அரசு உபரி உற்பத்திப்

பெருக்கமும், வரிவருவாயும் பெற்று நிலை பெற்றதும், புதிய வணிக வர்க்கம் தலையெடுத்து அரசுக்கு இணையாக வளர்ந்ததும், மதுரைக் காஞ்சி, பட்டினப்பாலை ஆகியவை உணர்த்துகின்றன. இத்தகைய சமுதாயம் செல்வச் செழிப்பிற்கு நடுவே முரண்பாட்டையும் கொண்டிருந்ததை *சிலம்பு மணிமேகலை* குறிப்பிடுகின்றன.

- - - - -

# சான்றெண் விளக்கம்

1. சிவத்தம்பி, கா,. *இலக்கணமும் சமூக உறவுகளும்,* பக்கம் 14, 15, 16, 1982, முதல்பதிப்பு, NCBH, சென்னை - 98.

2. துளசிராமன், து., *தமிழகத் தொல் பழங்காலமும்,* பூண்டி அகழ் வைப்பகமும், பக்கம் 6-7, முதல்பதிப்பு, 2005, தமிழ்நாடு அரசு, தொல்லியல் துறை.

3. மேலது நூல், பக்கம் 19-20.

4. சுப்பிரமணியன், தி., *தமிழகத் தொல்லியலும் வரலாறும் (தகடூர் பகுதி)* பக்கம் 51, முதல் பதிப்பு 2009, NCBH, சென்னை - 98.

5. துளசிராமன், து., *தமிழகத் தொல் பழங்காலமும் பூண்டி அகழ் வைப்பகமும்,* பக்கம் 23, முதல் பதிப்பு, 2005, தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை.

6. கைலாசபதி, க., *பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,* பக்கம் 38, 2010, குமரன் பப்ளிசர்ஸ், சென்னை - 26.

7. சுப்பிரமணியன், தி., *தமிழகத் தொல்லியலும் வரலாறும் (தகடூர் பகுதி)* பக்கம் 80-81, முதல் பதிப்பு, 2009, NCBH, சென்னை - 98.

8. சுப்பிரமணியன், தி., *தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு,* 2010, NCBH, சென்னை - 98.

9. ஆறுமுக சீதாராமன், *சங்ககால காசுகள்,* பக்கம் 14-16, 2006, முதல் பதிப்பு, தனலட்சுமி பதிப்பகம், தஞ்சை.

10. இராமசாமி, அ., *தொன்மைத் தமிழர் நாகரிக வரலாறு,* பக்கம் 65, முதல் பதிப்பு, 2013, NCBH, சென்னை - 98.

11. சிவத்தம்பி, கா., *பண்டைத் தமிழ்ச்சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி,* பக்கம் 189, முதல் பதிப்பு, 2010, NCBH, சென்னை - 98.

12. மாதையன், பெ., *சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,* பக்கம் 65, இரண்டாம் பதிப்பு, 2010. NCBH, சென்னை - 98.

13. அதியமான், ந., ஜெயக்குமார், பா., *ஆவணம்* இதழில் வெளியான கட்டுரை, இதழ் 7, 1996.

14. மாதையன், பெ., *சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்,* பக்கம் 16, முதல் பதிப்பு, 2014, NCBH, சென்னை - 98.

15. ராமன், கே.வி., *தொல்லியல் ஆய்வுகள்,* பக்கம் 37, முதல் பதிப்பு, சேகர் பதிப்பகம், MGR நகர், சென்னை - 88.

16. கைலாசபதி, க., *பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,* பக்கம் 61, 2010, குமரன் பப்ளிசர்ஸ், சென்னை - 26.

17. நல்லூர் சரவணன், சா., *மாதவ சிவஞான முனிவர் நூற்களஞ்சியம்,* சிவஞான முனிவர் சுபக்க பொழிப்புரை, தொகுதி 3, பக்கம் 2655, 2010, கவிதா வெளியீடு, சென்னை - 17.

18. ராமன், கே.வி., *தொல்லியல் ஆய்வுகள்,* பக்கம் 15, முதல் பதிப்பு, சென்னை - 83.

19. பாக்யமேரி, எஃப்., *வெற்றி நோக்கில் இலக்கணம், இலக்கிய வரலாறு, மொழித்திறன்,* பக்கம் 108, முதல் பதிப்பு 2014, பூவேந்தன் பதிப்பகம், சென்னை - 4.

20. கைலாசபதி, க., *தமிழ் வீர நிலைக்கவிதை,* பக்கம் 372, 2006, (தமிழாக்கம் கு.வெ.பா.) குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

21. சாத்தான்குளம் ராகவன், அ., *ஆதித்த நல்லூரும் பொருநை வெளி நாகரிகமும்,* பக்கம் 91-95, மறுபதிப்பு 2007, தொகுதி 13, அமிழ்த்தம் பதிப்பகம், சென்னை - 17.

22. புலவர் குழந்தை, *தொல்காப்பியர் காலத்தமிழர்,* பக்கம் 6, முதல் பதிப்பு 2008, கௌரா ஏஜென்சீஸ், சென்னை - 5.

23. கோமதிநாயகம், பழ., *தமிழக பாசன வரலாறு,* பக்கம் 31, 2010, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

24. பிள்ளை, கே.கே., *தமிழக வரலாறும் மக்கள் பண்பாடும்*, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.

25. இர்பான் ஹபீப், *இந்திய வரலாறு குறித்த ஆய்வுரைகள்*, பக்கம் 95-96, முதல் பதிப்பு, 2010, NCBH, சென்னை - 98.

26. கைலாசபதி, க., *தமிழ் வீர நிலைக்கவிதை*, பக்கம் 309, 2006, குமரன் புத்தக இல்லாம், கொழும்பு.

27. Dr. G. Kuppuram, *Evolution of Industries and Industrialisation in Primordial Tamilnadu,* I Edition, 1981, Page 45 - 48, Dr. G. Kuppuram, Trichy.

28. சசிவல்லி, வி.சி., *பண்டைத் தமிழர் தொழில்கள்*, பக்கம் 219, உலகத் தமிழாராய்ச்சி நிறுவம், சென்னை - 113.

29. கார்ல் மார்க்ஸ், *மூலதனம்*, பக்கம் 68, முதல் பாகம், முதல் பதிப்பு, (தமிழில் தியாகு) NCBH, சென்னை - 98.

30. சிவசுப்பிரமணியன், ஆ., *தமிழகத்தில் அடிமைமுறை*, பக்கம் 22, 2005, காலச்சுவடு பதிப்பகம்.

31. சிவராஜபிள்ளை, கே.என்., *புறநானூற்றின் பழைமை*, பக்கம் 134, 154, முதல் பதிப்பு, 2009.

32. கைலாசபதி, க., *தமிழ் வீரநிலைக்கவிதை*, பக்கம் 359, 2006, குமரன் புத்தக நிலைய்ம, கொழும்பு.

33. D.N. ஜா, *பண்டைக்கால இந்தியா*, பக்கம் 150, முதல் பதிப்பு, 2011, பாரதி புத்தகாலயம், சென்னை - 18.

34. துரையரசன், மு., *கல்லணை*, பக்கம் 20, முதல் பதிப்பு, 1994, கீதா பதிப்பகம், சென்னை - 40.

35. ராமன், கே.வி., *தொல்லியல் ஆய்வுகள்*, பக்கம் 23, சேகர் பதிப்பகம், சென்னை - 83.

36. சிவ சுப்பிரமணியன், ஆ., *தமிழகத்தில் அடிமை முறை*, பக்கம் 15, 2005, காலச்சுவடு.

37. Thapar, Romila, *From Lineage to State,* Page 42, 1984, Oxford University, New Delhi.

38. சிவசுப்பிரமணயன், ஆ., *தமிழகத்தில் அடிமைமுறை,* பக்கம் 22-23, 2005, காலச்சுவடு பதிப்பகம்.

39. கைசாபதி, க., *தமிழ் வீரநிலைக்கவிதை,* பக்கம் 310, 2006, குமரன் புத்தக இல்லம், கொழும்பு - 4.

40. பெருமாள்சாமி, வெ., தொல் காப்பியமும் நால் வருணப் பாகுபாடும், *சமூக* விஞ்ஞானம் கட்டுரை, இதழ் 34.

- - - - -

# இயல் - 3

# சங்க காலக் கருத்தியல்களும் பார்ப்பனியம் மேலாண்மை பெறலும்

## 3.1.0. இயல் முன்னுரை

எந்த ஒரு கருத்தியலும் தத்துவமும் கூட தனிமனிதர்களின் சிந்தனையிலிருந்து, சொந்தப்படைப்பாக உருவாகிவிடுவதில்லை. அவர்கள் வாழும் சமூக நிலையிலிருந்தும் அவர்களது சமூக இருப்பிலிருந்தும் தான் படைத்துக் கொள்கிறார்கள். அத்துடன் அவற்றுக்கென ஒரு வரலாறும் மனித அறிதலின் ஒரு பகுதியாக இருந்து வரும் நிலையில் அவற்றின் விளைவாக படைத்துக் கொள்ளப்படுவதாகவே அவை அமைகின்றன.

மனிதன் புறத்தின் மீது செயல்பட்டு அதன் மீது தனது கட்டுப்பாட்டை செலுத்தியும், அவற்றை மாற்றியமைத்தும் அவன் முன்னேறத் தொடங்கும் போது புறத்தே உள்ள புவியும், பிரபஞ்சமும் மனித சமூகமும் பற்றிய அறிதல் ஏற்படத் தொடங்குகின்றது. இந்த அறிதலானது நாள்தோறும் வளர்ச்சியடைந்து விரிவும் நுட்பமும் கொண்டு முன்னேறும் தன்மையுடையது. தொடக்கத்தில் இயற்கைக்கும் மனிதனுக்குமிடையிலான உறவில் ஏற்பட்ட சிந்தனையிலிருந்தும், அறிதல்களிலிருந்தும் உருவான கருத்துக்களின் அடிப்படையே பிற்காலத்தில் சமச்சீரற்ற வளர்ச்சியும், ஏற்றத்தாழ்வான வாழ்க்கை முறைகளும், வர்க்க சமூக ஆக்கமும் நிகழ்ந்துவிட்ட பிறகு உருவான பல்வேறு தத்துவப் போக்குகளுக்கும் காரணங்களாகின்றன. இவை பல முரண்பட்ட வர்க்கச் சார்பு கருத்தியல்களாக அமைந்து விடுகின்றன.

## 3.1.1. கருத்தியல் விளக்கம்

1. இயற்கை, சமூகம், மனிதன் பற்றிய அறிதலை (Cognition)யும், உலகைப் பற்றிய புரிதலையும் கருத்தியல் என்கிறோம்.

2. அது ஒருவகையான உலகப் பார்வை அல்லது உலகக் கண்ணோட்டம் (World out Look) என்றும் கூறலாம்.

3. இத்தகைய உலகக் கண்ரோட்டங்களையும் அணுகுமுறைகளையும் மானுட நடைமுறைக்கான கருத்து நிலைகளையும் அடிப்படையாகக் கொண்டு தத்துவங்கள் செயல்படுகின்றன.

4. தத்துவம் மானுட அறிதலின் உயரிய வடிவம்; கருத்தியல்களின் அமைப்பாக்கப்பட்டு ஒழுங்கமைக்கப்பட்டது. சமூக உணர்வை வெளிப்படுத்துவது; வர்க்கச் சார்பு கொண்டது.

5. மானுட அறிதலின் தத்துவார்த்த கருத்தியல்களின் பொது ஒழுங்கமைப்பு (System) தத்துவ அமைப்பாக வளர்க்கிறது. தத்துவம் என்பது மெய்யியல் எனவும் வழங்கப்படும்.

6. ஆங்கிலத்தில் Philosophy என்ற சொல் 'அறிவின் மீதான விருப்பம்' என்ற கிரேக்க மூலத்திலிருந்து (Philo-sophia) பெறப்பட்டது. இந்திய மரபில் தத்துவம் என்று அழைக்கப்படுகின்றது. தமிழர் மரபியலும் 'உலக கண்ணோட்டம்' அல்லது 'காட்சி' எனப்படும் கருத்தியல்களை தரிசனங்களாக அறியப்படுகின்றது. 'சத் தர்சனம்' என்றும் சன்மதம் என்றும் இந்திய மரபு கூறும். இந்த தரிசனங்கள் ஒழுங்கமைக்கப்பட்டு தத்துவ அமைப்புகளாக வளர்ந்தன. 'தத்துவமஸி' என்ற உபநிடத சூத்திரத்தை அடிப்படையாகக் கொண்டு தத்துவம் என்ற சொல் உருவானது.[1]

### 3.1.2. சங்க கால உற்பத்தி முறைக் கருத்தியல் விளக்கம்

**1. கண்ணுக்கு அணிகலம் கண்ணோட்டம் அஃதின்றேல்**
**புண்ணென்று உணரப் படும்**

(*குறள்.* 575) என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

2. சங்கப் பாடல்கள் திறவோர் காட்சி என்று குறிப்பிடுகின்றன.

**திறவோர் காட்சியின் தெளிந்தனம் ஆதலின்**
**பெரியோரை புகழ்தலும் இலமே**
**சிறியோரை இகழ்தலும் அதனினும் இலமே**

பூங்குன்றனாரின் (*புறம்.* 192-10, 221-4) இப்பாடல் திறவோர் காட்சி என அறுவகை காட்சிகள் பற்றி பேசுகின்றது. உலகைப் புரிந்து கொள்வது பற்றிய கருத்தியல் போராட்டத்தை வெளிப்படுத்துவதே 'அறுவகை காட்சிகள்' ஆகும்.

3. *மணிமேகலை பெருங்கதை* முதலிய காப்பிய இலக்கியங்கள் அறுவகை காட்சிகள் என்று குறிப்பிடுவதும் வடநூலார் 'சத் தரிசனம்' என்று குறிப்பிடுவதும் ஒன்றே. 1. காட்சியளவை, 2. கருதலளவை, 3. ஆகமம், 4. உவமம், 5. அருத்தாபத்தி, 6. அபாவம் ஆகிய அறிவைப் பெறும் வாயில்களாகும்.

4. அளவையைப் பற்றி *சிவஞானசித்தியார்* சுபக்கம் அளவை நூல் முதல் பாவில் கூறியுள்ளதைப் பார்க்கலாம்.

**அளவை காண்டல் கருதலுரை**
**அபாவம் பொருளொப்பாறென்பர்**
**அளவை மேலும் மொழி புண்மை**
**ஐதி கத்தோடியல்பென நான்கு**
**அளவை காண்பரவையிற்றின்**
**மேலு மறைவ ரவையெல்லாம்**
**அளவை காண்டல் கருதுலுரை**
**என்றின் மூன்றினடைங்கிடுமே**

அதாவது,

I. காண்டல் - காட்சி

II. கருதல் - அனுமானம்

III. உரை - ஆகமம்

IV. அபாவம் - இன்மை - இல்லது

V. பொருள் - அருத்தாபத்தி

VI. ஒப்பு - உவமானம்

VII. ஒழிபு - பகுத்தறிதல்

VIII. உண்மை - சம்பவம்

IX. ஐதிகம் - வழக்கு

X. இயல்பு - இயற்கையைக் கொண்டு அறிதல்

என்பன *சிவஞான சித்தியார்* குறிப்பிடும் பிற்காலத்து பத்து அளவை முறைகளாகும்.[2]

5. உலக தோற்றம், இயக்கம், முடிவு பற்றிய இந்த அறுவகை காட்சி அடிப்படையிலான கண்ணோட்டங்கள், கருத்தியல்கள் கடவுள் உண்டு அல்லது கடவுள் இல்லை என்பதைப் போன்று இல்லாமல் இந்தியாவில் வேதத்தை மறுப்பது நாத்தீகம் என்றும் வேதத்தை ஏற்பது ஆத்திகம் என்றும் இருவிதமான போக்கில் அமைந்தது.

6. வேத மறுப்பு, வைதீக மறுப்பு, பார்ப்பனிய எதிர்ப்பு என்ற சமூக உள்ளடக்கம்

கொண்டவை அறுவகை அவைதீக சமயங்களாகும். சாருவாகம், உலகாயதம், சமணம், பௌத்தம், சாங்கியம், ஆசிவகம் ஆகியவனவாகும்.வேதத்தை ஏற்பவை வைதீக பார்ப்பனிய கருத்தியலாகும். இவை அறுவகைக் காட்சிகளை அடிப்படையாகக் கொள்ளாமல் ஒலியாலான வேதத்தை மட்டுமே உண்மை என ஏற்பது ஆகும். ஆகமம் அல்லது தொன்மம் எனும் ஒரு அளவையை மட்டுமே அடிப்படையாக கொள்வது வைதீக சமயங்கள் ஆகும்.

### 3.1.3. அறுவகை காட்சியுள் ஆகம அளவையை மட்டுமே ஏற்பது வைதீகக் கருத்தியல்கள்

தமிழ்ப் பெயரகராதியானது புறச்சமயங்கள் ஆறு என்பதுடன் அவற்றை 1. உலகாயதம் 2. புத்தம் 3. சமணம் 4. மீமாம்சம் 5. பாஞ்சராத்திரம் 6. பாட்டாசாரியம் என்று விளக்கப்படுத்துகின்றது. மேலும் அகச்சமயங்கள் ஆறு என்றும் 1. வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்றும் வகைப்படுத்துகின்றது.[3] இவற்றுள் புறச்சமயங்கள் ஆறனுள் முதலாவதாக இடம் பெறும் உலகாயதம் மட்டுமே தூய பொருள் முதல்வாத கொள்கையுடையதாகும். காண்டல் அளவை ஒன்றை மட்டுமே அடிப்படையாக ஏற்பது ஆகும். அவ்வாறு தூய கருத்து முதல்வாதமான வைதீக சமயங்களும் ஆறு அளவைகளுள் ஆகமம் எனும் அளவையை மட்டுமே ஏற்கும் வேத உபநிடதங்களை அடிப்படையாகக் கொண்ட ஆத்தீகக் கொள்கையுடையவையாகும்.

இவை இரண்டையும் தவிர பிற சமயங்கள் புறச்சமயங்களே ஆனாலும் சமணம், பௌத்தம் முதலியன ஆகம அளவையினையும் ஏற்பதால் நாளடைவில் கடவுள் வழிபாட்டு கொள்கைக்கு இடம் ஏற்படுத்திவிட்டன. இவை வேத, உபநிடதங்களை மறுத்தாலும் தொல்குடி மரபிலிருந்தும் அவற்றின் சடங்குகள், நம்பிக்கைகளிலிருந்தும் அனைத்து தரப்பினரையும் ஒருங்கிணைக்கும் வகையில் ஏற்றுக்கொண்டன. அவை தொன்மங்களிலிருந்தும், சடங்குகள் நம்பிக்கைகளிலிருந்து தமக்கானதைப் பெற்றுக் கொண்டன.

### 3.1.4. வைதீகமல்லாத புறச்சமயங்கள் ஏற்றுக்கொண்ட ஆகமம் (அ) தொன்மங்களின் தன்மைகள்

1. இவை தொன்மத்தை அடிப்படையாகக் கொண்டது. சித்தாந்தங்கள் ஏதும் இல்லை.

2. தொல்குடி சமூகத்தின் இனக்குழு அறிவு, ஒழுக்கம், நம்பிக்கை ஆகியவற்றை அதன் உறுப்பினர்களுக்கு மரபாக வழங்கியது.

3. இனக்குழு நலன் சார்ந்தது. கூட்டுத் தன்மையுடையது.

4. இயற்கை - மனிதன் உறவு தொடர்பானது. வளமை சார்ந்தது. இயற்கைக்கும் மேலான சக்தி பற்றிய கருத்தியல் ஏதும் இல்லை.

5. இயற்கை - சக்திகளை மனித ஆணைகள் மூலம் கட்டுப்படுத்த முடியும் என்ற குழந்தைமைக்குரிய நம்பிக்கைகள் சார்ந்தது. அவற்றை புறச் சமயங்கள் ஏற்றுக் கொண்டதன் மூலம் பல்வேறு இனக்குழு - குடி சார்ந்த மக்களையும் அரசு கட்டமைப்பிற்குள் கொண்டு வந்து இணைத்தன.

### 3.1.5. வைதீக அகச்சமயங்கள் ஏற்றுக்கொண்ட தொன்மம் (அ) ஆகமங்களின் தன்மைகள்

1. மத அடிப்படைகளைக் கொண்டது. அதற்கேற்ப தொல்குடி தொன்மங்களும் திருத்தப்பட்டு மதவாதத்துக்கான கருவியாக மாற்றப்பட்டது.

2. இறை நம்பிக்கை, ஏற்றத்தாழ்வு, சமூக வேறுபாடு போன்றவற்றை ஏற்க வைப்பது.

3. தனிமனித ஆன்ம விடுதலைப் பற்றி பேசுவது.

4. எல்லா சடங்குகளும் அண்டவியல் பற்றிய இயற்கைக்கும் மேலான சக்தி பற்றியன.

5. இறைசக்தி மீதான வழிபாடு சரணாகதி அடைதல் ஆகியன.

### 3.1.6. அறுவகைக் காட்சிகள் அடிப்படையில் கருத்தியல் உருவாதல்

இந்த அறுவகைக் காட்சிகள் பற்றி *மணிமேகலை* காப்பியத்தின் வழி அறியமுடிகிறது. அளவைகளின் அடிப்படையில் உலகை விவரித்தவர்களையே அறுவகை சமயத்தார் என சாத்தனார் குறிப்பிடுகின்றனர். இருபத்தேழாம் காதையில் பத்துக்கு மேற்பட்ட சமயங்கள் கூறப்படினும் பௌத்த துறவியான மணிமேகலை பிற ஐவகைச் சமயங்களை மட்டுமே கணக்கில் கொண்டு ஐவகை சமயத்தார் என குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. சைவம் முதலானவை வைதீகச் சமயங்கள் அறுவகைக் காட்சிகளின் அடிப்படையில் அறிவாராய்ச்சியின் அடிப்படையில் எழுந்தவை அல்ல என்பதை இது உணர்த்துகின்றது.

**பாங்குறு முலோகாயுதமே பௌத்தம்**
**சாங்கியநையாயிகம் வைசேடிகம்**
**மீமாஞ்சகமாஞ் சமய வாசிரியர்**

**தாம் பிருகற்பதி சினனே கபிலன்**
**அக்கபாதன் கணாதன் சைமினி**
**மேய்பிரத்திய மனுமானஞ் சாத்தம்**
**உவமான மிருத்தா பத்தியத்பாவம்**
**இவையே யிப்போ தியன்று வளவைகள்**

(*மணி.* 27:78-85) சாத்தனார் அளவைகளை பத்து என்றும், எட்டு என்றும், ஆறு என்றும் வகைப்படுத்தினாலும் இறுதியில் ஆறு அளவைகளை மட்டுமே ஏற்றுக் கொள்கின்றார். எனவே அவர் விளக்கும் ஆறு அளவைகளைப் பின்பற்றும் கருத்தியல்களை அடிப்படையாகக் கொண்ட சமயவாதிகளை அல்லது தத்துவ வாதிகளை அவர் விளக்குகின்றார். உலகாயதம், யோகம், சாங்கியம் நையாயிகம், வைசேடிகம், மீமாம்சம் ஆகிய சமயங்கள் அல்லது தத்துவங்கள். பிருகற்பதி, சினன் (புத்தன்), கபிலன், அக்கபாதன், கணாதன், சைமினி ஆகியோர் அவற்றின் தத்துவங்களை தோற்றுவித்தவர்கள் என்பதையும் விளக்குமுற உரைக்கின்றார்.

காட்சி அளவையோடு கருதல் அளவையையும் ஏற்பவர்கள் பௌத்தர்கள் ஆவர். சாங்கியத்திற்கு காட்சி அளவை, கருதல் அளவையோடு ஆகமமும் அளவையாக ஏற்பர். நையாயிகர்கள் காட்சியளவை கருதலளவை, ஆகமம் அளவையுடன் உவமானத்தையும் கொள்வர். மீமாம்சகர்கள் இந்த ஐந்து அளவைகளுடன் அபாவ அளவையும் ஆறாவதாகக் கொண்டு உண்மையையறியும் அறிவுமுறைகளாகக் கொள்வர்.

அறுவகை சமயத்தாரில் உலகாயதக் கொள்கையினர் பிரத்யக்கம் என்ற ஒரு அளவை முறையினை மட்டுமே ஏற்றனர். பிரத்யக்கம் என்பது காண்டல் அளவை அதாவது கண்ணால் காண்பது, ஐம்புலனாலும் அனுபவித்து உணரக்கூடியது மட்டுமே உண்மை என்று ஏற்பவர் ஆவர். இவர்களது கொள்கை முழுவதும் இதன் அடிப்படையில் அமைந்தனவே ஆகும்.

### 3.1.7. கருத்தியல்களே தத்துவ அமைப்புகளாக வளர்தல்



*மணிமேகலையில்* சீத்தலை சாத்தனார் உலகாயதம் முதல் மீமாம்சை வரை அறுவகைச் சமயம் அல்லது ஆறுவகை தத்துவ அமைப்புக்களை முறைப்பட உரைக்கின்றார்.

### 3.1.7.1. உலகாயதம்

உலகாயதம் இந்தியாவில் தோன்றிய காலத்தை அரிதியிட்டு உரைக்க முடியாது. வேதங்களை இழித்து பேசுபவர்களையும், கடவுள் நம்பிக்கை இல்லாதவர்களையும் பற்றியும் வேதங்களில் கூறப்படுகின்றது. சாந்தோக்கிய உபநிடதத்தில் அசுரர்க்கரசனான வீரோசனன் பிரசாபதியிடமிருந்து தான் கற்ற உலகாயத கொள்கையே உண்மை என்று தம்மைப் பின்பற்றியோருக்கு போதித்தது பற்றி கூறப்பட்டுள்ளது.

பூதங்கள் தம்முள் கூடும் கூட்டத்தால் பல்வேறு உருவங்கள் தோன்றுகின்றன. அவ்வுருவங்கள் வளர வளர உணர்வு வளரும். அவை தேய உணர்வும் தேயும். அது குயவன் சக்கரத்திலிட்ட மண்ணின்கண்ணே பல் உருவங்கள் தோன்றுவன போலாகும். வினை, உயிர், கடவுள் என்று சமயங்கள் கூறுவது பொய்யாகும். உயிர் உடம்பின் தன்மையது. வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு சேரும் போது சிவப்பு நிறம் தோன்றுகிறது. இது முன்னரே சிவப்பு நிறத்தை உண்டாக்கவில்லை. இறைவன் இல்லை. இவ்வுலகில் ஐம்புலனாலும் அனுபவிக்கப் பெறும் மகிழ்வே மெய்யானது என்பது இவர்கள் கொள்கை. காண்டல் அளவை வழி நிற்போர். இதனை நிர்விகற்பக் காட்சி என்றும், பிரத்யட்சம் என்றும் கூறுவர்.[4]

### 3.1.7.2. யோகம் 

யோகம் என்பதற்கு இணைதல் அல்லது ஒன்றுபடுதல் என்பது பொருளாகும். ஆனால் யோகவாதிகள் பிரிதல் என்று பொருள் கூறுவர். யோகம் பிரிதல் அதாவது உலகியலினின்றும் உயிரை பிரித்தல் என்பது பொருளாகும். இது சாங்கியக் கொள்கையுடன் இணைந்து சாங்கியயோகம் எனவும் வழங்கப்படுகின்றது- இதன் கொள்கைகளை விளக்கியவர் பதஞ்சலி முனிவர் ஆவார்.

மனத்தூய்மை பெறுவதற்கும், யான் எனது என்ற நினைவு அறுவதற்கும் எண்வகை யோக முறைகளைக் கைக் கொள்ளல் வேண்டும் என்று இவர்கள் கூறுவர். அவை இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்யாகாரம், தாரணம், தியானம், சமாதி ஆகியன. உள்ளத்தை தூய்மையாக்க வேண்டுமானால் உடலைக் கட்டுபடுத்த வேண்டும். மேற்கூறிய எண்வகை முறைகளும் மனிதன் தன் நிலையிலிருந்து மாறி தேவநிலையை அடைவதற்கு உரிய ஏணிப்படிகளாகும். இவர்கள் இறையுண்மையை

ஒத்துக் கொள்ளினும் இறைவனுக்கு அத்துணைச் சிறப்பு அளிக்கவில்லை. இறைவன் படைத்துக் காப்பவன் அல்லன். அவர்கள் கொள்கைப்படி இறைவனும் ஓர் உயிரே. இறைவன் வினையினை நீங்கிய முதல்வன். இவர்கள் காண்டல் அளவை. கருதல் அளவை ஆகிய இரண்டையும் ஏற்பர். பௌத்தர்களும் யோக நெறி சார்ந்தவர்கள் ஆவர்.

### 3.1.7.3. சாங்கியம்

சாங்கியப் பிரிவினர் மிகப் பழைமையானவர். இது சாங்கிய யோகம். நிரீச்சுரசாங்கியம், பொருள் முதல்வாதம், பரிணாமவாதம், கபில தரிசனம், துவைதம், சத்காரியவாதம் எனப் பல பெயர் பெறும். சாங்கியம் என்ற சொல்லுக்கு நிறைவான அறிவு என்பது பொருளாகும். எனவே மூலப் பொருள் பற்றி நிறைவான அறிவைத்தரும் கொள்கைக்கு சாங்கியம் என்று பெயரிட்டனர்.

சாங்கியம் பற்றி மிகப் பழைமையான நூல் கி.பி.5ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகிய ஈசுவரகிருட்டிணர் இயற்றிய சாங்கிய காரிகையாகும். அசுவகோசர்பாடிய புத்த சரிதம் புத்தரின் ஆசிரியர்களுள் ஒருவரான அராபர் சாங்கியம் கற்றவர் என்று கூறுகிறது. எனவே தமக்கு முற்பட்ட கபிலரின் கொள்கைகள் புத்தருக்கும் தெரிந்திருந்தன எனலாம்.

சாங்கியம் மாற்றம் நிலைபேறு இரண்டும் உண்மை என்று கூறுகிறது. எது மாற்றம் அடைகின்றதோ அது அறிவுள்ள பொருள் ஆகாது. அதே சமயம் அறிவே சொரூபமான பொருள் எதுவோ அது மாற்றம் அடையாது என்ற பெரும் அடிப்படை நியதி ஒன்று இருப்பதாகவும் முடிவு கூறுகின்றது. மாற்றமடையும் பொருளை பிரகிருதி என்று சாங்கியர் அழைத்தனர். பிரகிருதி நித்தியமானது. வியாபகமானது. சட உலகம் தோன்றுவதும் அதில்தான். அது காட்சிக்கு புலனாகும் பொருள் அல்ல. அது அருவமானது. மூலப் பொருளாகிய பிரகிருதி சத்துவம், ராசசம், தாமசம் என்ற மூன்று குணங்களால் ஆனது. உள்ளதுதான் வரும். இல்லது வாராது என்பது சாங்கியர் கொள்கை.[5] சாங்கியத்தில் நிரீசுவர சாங்கியம், ஈசுவர சாங்கியம் என பிரிந்தனர். இவர்கள் காண்டல், கருதல் ஆகமம், ஆகியவற்றை அளவையாக ஏற்பர்.

### 3.1.7.4. நியாயம் (நையாயிகம்)

ஒன்றை அல்லது ஓர் உண்மையைத் தருக்க முறையில் ஆராய்ந்து நிலை நாட்ட வேண்டுமெனில் அதற்கு தருக்கத்திறன் வேண்டும். அத்திறமைக் கொண்டு நிலைநாட்டப் பெறும் உண்மையை விட அதனை நிலைநாட்ட எடுத்துக் கொள்ளும் முயற்சியே சிறப்பாக அமைய வேண்டும் என்று இவர்கள் கருதுவர். எனவே

இக்கொள்கையினர்க்கு நியாயவாதிகள் அல்லது நயாயிகர் என்று பெயர். நயாயிகர் எந்தப் பொருளையும் அறிவதற்கு நான்கு நிலைக்களன்கள் தேவை என்பர். அவை அறிபவன், அறிபொருள், அறிவு வளரும் வழி, அறிவு ஆகியன. அறிவை பெறுவதற்கு வழியாக அமைந்த அளவைகளை முதன்மையாகக் கருதினர். அதனால் இவர்களுடைய சமயத்தை அளவை வாதம் என்று குறிப்பிட்டனர்.[6]

நியாயவாதிகள் மட்டுமல்லாமல், சௌத்ராந்திகர், வைபாடிகர், சமணர் ஆகிய நால்வரும் இவ்வுலகம் அணுக்களால் ஆனது எனக் கொள்வர். நியாயவாதிகள் இறைவன் விருப்பத்திற்கிணங்க அணுக்கள் தாமும் முன்னர் இரண்டாகக் கூடிப் பின் மூன்றாய் இணைந்தும் அதன் பின்னர் நான்காய் இணைந்தும் இவ்வாறே ஒன்றிற்கொன்று கிளையும் முதலுமாய் முறையேத் தோன்றிச் செயல்படும் என்றும் அவர்கள் கருதுவர். நியாயம் இறைவன் ஒருவன் உண்டு என்பதை ஏற்றுக் கொள்கின்றது. நியாயம் பற்றிய முதல் நூலில் இறைவனைப் பற்றிய குறிப்பு இல்லை. இச்சமயம் காண்டல், கருதல், ஆகமம், உவமை ஆகியவற்றை அளவையாக ஏற்கும். பௌத்தரும், சமணரும், ஆசீவகர்களும் தமது கொள்கைகளை இதனடிப்படையில் வளர்த்தனர்.

### 3.1.7.5. வைசேடிகம் 

வைசேடிகர் இவ்வுலகமும், உலகிலுள்ள பொருள்களும் உண்மையென்று கருதினர். அணுக்கள் ஒரு தன்மையன அல்ல. நிலத்தின் தோற்றத்திற்கு நில அணுக்கள் பல சேர்கின்றன. அவை ஒவ்வொன்றும் மற்றவற்றினின்றும் குறிப்பிடத்தக்கச் சிறப்புத் தன்மை (விசேடத்தன்மை) உடையன என்பர். இவ்வாறு அவ்வணுக்கள் பலவற்றுக்கும் சிறப்புத் தன்மை உண்டெனக் கூறுவதால் இவர்கள் வைசேடிகர் எனப்பட்டனர். இதனை ஏற்படுத்தியவர் கணாதர். கணாதர் என்ற சொல்லுக்கு அணு உண்பார் (கணம்- அணு: அத் உண்ணுதல்) எனப் பொருள் உரைப்பர். மிகவும் நுண்ணிதான அணுவினை உள்பொருள் ஆக (Reality) மதித்ததால் இப்பெயர் பெற்றார்.

வைசேடிகர் பொருள்களை எழுவகையாக பாகுபடுத்துவர். அவை திரவியம் (பொருள்) கணம்( பண்பு) கர்மம் (தொழில்) சாமானியம் (பொது) விசேடம் (சிறப்பு) சமவாயம் (கூட்டம்) இன்மை (இல்லாமை) என்பன.

இவ்வுலகில் பொருள்களிடத்து வேறுபாடும் பன்மைத் தன்மையும் காணப்படுகின்றது. ஒருமை என்பதில்லை. எனவே உண்மைப் பொருள்கள் பல என்று கூறும் இக்கொள்கை பல பொருள் உண்மைவாதம் அல்லது அணுமுதற் பன்மைக் கொள்கை என்று அழைக்கப்படுகின்றது. வைசேடிகர்கள் காண்டல், கருதல்,

உரை, உவமை, அருத்தாபத்தி என ஐந்து அளவைகளை ஏற்கின்றனர்.[7]

### 3.1.7.6. மீமாம்சை ॐ

ஒன்றன் மெய்ம்மை தன்மையை முறையான அறிவால் ஆராய்ந்தறிவது மீமாம்சை ஆகும். மறையில் கூறப்படும் கருத்துக்கள் பகுத்தறிவுக்கு பொருந்தும் என காட்டுவதும், மறையின் விதிகளுக்கு நமது விளக்கம் சரியானதா? என்பதை ஆராய்வதும் மீமாம்சை எனலாம். இது பூர்வ மீமாம்சை, உத்திர மீமாம்சை என இருவகைப்படும். பூர்வ மீமாம்சை பிரமாணங்களை மட்டும் கொள்வதும். உத்திரமீமாம்சை உபநிடதங்களையும் ஏற்பதும் ஆகும். மீமாம்சகர்கள் கன்மத்துடன் ஞானம் தேவை என்று கருதுவதால் ஞானகன்மசமுச்சயவாதம் என்றழைக்கப்படுகின்றது. சைமினி என்பவரால் இயற்றப்பட்ட மீமாம்ச சூத்திரமே முதன்மையான நுலாக கருதப்படுகின்றது. இது காண்டல், கருதல், ஆகமம் உவமம், அருத்தாபத்தி, அபாவம் ஆகிய ஆறு அளவைகளையும் ஏற்கிறது.[8]

### 3.2.0. தத்துவ அமைப்புகளின் இருவிதமான போக்குகள்

புறவயமானப் பொருளை உணர்வினால் சிந்தனையினால் தோன்றியதாக கொள்ளமுடியுமா? என்ற பிரச்சினையே பொருள்வேறு, உணர்வு சிந்தனைவேறு என்று பிரித்து பார்க்கத் தூண்டியது. இந்த அடிப்படையான வேறு படுதல்களே பொருள் முதல்வாததையும், கருத்து முதல் வாதத்தையும் தனித்தனியே உருவாக்கி வளர்த்தெடுக்க காரணமாயின.[9] பொருள்தான் முதன்மையானது. அதிலிருந்தே உணர்வு தோன்றியது என்ற நிலைப்பாடு கொண்டவர்கள் பொருள் முதல் வாதிகள், அவைதீர்கள், உலகாயதர்கள், நாத்தீகர்கள் என்றெல்லாம் குறிப்பிடப்படுகின்றார்கள். உணர்வுதான் (கருத்து அல்லது ஆன்மா அல்லது உயிர்) முதன்மையானது: அவற்றினால் படைக்கப்பட்டதே, தோற்றுவிக்கப்பட்டதே பிற அனைத்தும் ஆகும் என்ற நிலைப்பாடு கொண்டவர்கள் கருத்து முதல்வாதிகள், வைதீகர்கள், ஆத்திகர்கள் என்றெல்லாம் குறிப்பிடப் படுகின்றார்கள். எது மூலமுதலானது என்ற இத்தகைய கேள்விகளால் தோன்றி வளர்ந்து பல்வேறு தத்துவப் போக்குகளும் தமக்குள் முரண்பட்டு ஒன்றை ஒன்று மறுத்தும், எதிர்த்தும் போராடி, தமது அறிதல் முறையை நிலைநாட்டியும், ஆட்சியாளர்களின் தத்துவமாக அவற்றை ஏற்கச் செய்தும் நிலைப்பட்டு அவை விளங்கி வந்தன. இத்தகைய அறிதல் முறைகளின் போராட்ட வரலாறு தத்துவப் போராட்டத்தின் வரலாறாக விளங்குகிறது. சங்க காலம் வரையிலும் கூட வலுப்பட்டு தொடர்ந்திருந்ததை தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள் உணர்த்துகின்றன. *தொல்காப்பியமும், எட்டுத் தொகை பத்துப்பாட்டும்,* பதினெண்கீழ்க்கணக்கும் நெறிப்படுத்தும் இத்தத்துவப் போக்குகள் சங்கச் சமூகத்தில் காப்பியகாலத்தில் பெரும் தத்துவப் போராட்டங்களை நடத்தியதை

*மணிமேகலை, சீவக சிந்தாமணி, நீலகேசி,* பெருங்கதை முதலான காப்பியங்கள் வழியாக அறிய முடிகின்றது.

### 3.2.1. முன்னிலை தத்துவங்களிலிருந்து தத்துவ அமைப்புகள் உருவாதல்

இயற்கையோடு இயற்கையாக வாழ்ந்து வந்த மனிதன் இயற்கையின் சீற்றங்களுக்கும், அவற்றால் விளையும் இன்னல்களுக்கும் அஞ்சி வணங்கினான். அவற்றைக் கண்டுவியந்து போற்றினான். நாளடைவில் அவற்றின் அங்கமாக இருந்த அவன் இயற்கையோடு போராடி அவற்றை மாற்றியமைக்க முயற்சித்ததுடன், உணவு சேகரித்தும் வேட்டையாடியும் வாழ்ந்த அவன் தானே உற்பத்தியில் ஈடுபட்டான். தன்னுடைய உற்பத்தி நடவடிக்கைகளுக்காக இயற்கைப் பற்றிய அறிதலைக் கொண்டு பல வளமைச் சடங்குகளையும், மேற்கொண்டான். காட்டு விலங்குகளைப் பழக்கி வீட்டில் வளர்த்தலும் இனவிருத்தி செய்தலும் காட்டு தானியங்களையும், தாவரங்களையும் தமது உழைப்பைச் செலத்தி விளைவித்தலையும், மனிதனுடைய இவையிருத்திக்கான செய்கையுடன் இணைத்து நோக்குதல் மூலமாக அக்காலத்தில் வளமைச் சடங்குகளும் நம்பிக்கைகளும் தோன்ற காரணமாகயிருந்தன. இயற்கைப் பொருட்களையும் மனிதனையும் மானுடத்தன்மையோடு அணுகும் முறையினாலே இது ஏற்பட்டது. இரத்த உறவு அடிப்படையிலான குழு- குடி உறவுச் சடங்குகளும் தொன்மக்கதைகளும் இவ்வாறு உருவாயின. இவற்றில் மரம், செடி, கொடிகளும். விலங்குகளும், மனிதனும் போலவே பேசும் தன்மயுடையனவாயிருந்தன. மனிதன் இயற்கையைக் கட்டுப்படுத்தி. அவற்றை வென்றடக்கி தனது ஆளுகையின் கொண்டு வந்தான். இயற்கையிலிருந்து மாறுபட்டு மேலாக அவன் பெற்ற வளர்ச்சிக்கு மனித அறிதல் மிகப் பெரும் பங்காற்றியது.

இங்கு மொழியின் மூலமாக வெளிப்படுத்தப்பட்ட மனித அறிதலானது அடுத்தகட்ட வளர்ச்சியை நோக்கி முன் நகர்ந்தது. அதுவரையிலான மனித அறிதல் தொன்மக்கதைகளாக, உற்பத்தி நடவடிக்கைகளில் நம்பிக்கை சார்ந்த புனைகதைகளாக வாய்மொழி மரபில் நிலைத்திருந்தவை எழுத்து மரபுக்குமாறும் கட்டத்தை எட்டியது. உணர்ச்சிகளின் அடிப்படையில் அமைந்திருந்த அன்றாட அறிதலில் இருந்து உருவான கருத்தமைவுகள், மதிப்பீடுகள் ஆகியன ஒரு பொதுமைப்படுத்தப்பட்ட அறிதலாகிய முன்னிலைத் தத்துவமாக உருவாகியது. இத்தகைய தொன்மம் வழியிலான அறிதல் தொன்ம எல்லைகளை மீறி தத்துவ அறிவாக மாறுவதை சமூகத்தின் தொழில்நுட்ப அறிவின் வளர்ச்சி ஊக்குவித்தது.

### 3.2.2. வாய்மொழி மரபிலிருந்து உருவான எழுத்து மரபில் வர்க்கச் சார்பு கருத்தியல்கள் உருவாதல்

இரும்புக்காலம் துவங்கிய பின்னர் நிலைத்த சமூக நிறுவனங்கள் உருவாகின்றன. வாய்மொழி மரபு எழுத்து மரபின் கீழ் இயங்கும் நிலை ஏற்படுகின்றது. நிலைத்த வேளாண்மை அரசு உருவாக்கம், மொழி இலக்கணப்படுதல், புதிய சமூகத்துக்கான வர்க்கங்கள் உருவாதல் ஆகிய சமூக பொருளாதார அரசியல் வளர்ச்சிப் போக்குகள் எழுத்து மரபு என்னும் சக்திமிக்க கருவியை வழங்குகிறது. இதனால் இலக்கிய இலக்கணங்களை ஆவணப்படுத்த முடிந்தது. இந்த ஆவணப்படுத்துதல் சமூக உற்பத்தி உறவில் உயர்குடியினரின் கண்ணோட்டத்தோடு கட்டமைக்கப்படுகின்றது. கல்லா மாக்கள் கற்றோரின் அறிதல் ஆளுமையை ஏற்கச் செய்கின்றனர். இங்கு உயர்குடியினர் ஆட்சி நிறுவப்படுகிறது. எழுத்து மரபு அடிப்படையிலான இலக்கிய மரபின் தோற்றம் முறையான தத்துவ அமைப்புக்களின் ஆக்கத்துக்கு வழிவகுத்தது. 'வர்க்கப் பிரிவினை முதன் முதலில் ஏற்படும் பொழுது உலகில் தத்துவமும் தோன்றியது' தத்துவம் பண்டைய இந்தியர்கள், கிரேக்கர்கள் எகிப்தியர்களிடையே தோன்றியது- ஏனெனில் அத்தேசங்களில்தான் வர்க்கப்பிரிவினை நீண்ட காலத்துக்கு முன்னரே தோன்றியது' என்பார் பேரா.நா.வானமாமலை.[10]

இரும்புக் காலமான சங்க காலத்தில் வேளாண் விரிவாக்கம், உபரி உற்பத்தி நகரங்களின் தோற்றம் அரசு உருவாக்கம், வர்த்தகத்தின் வளர்ச்சி ஆகியவற்றின் காரணமாக தோன்றிய புதிய வர்க்கச் சமூகத்தில் வேலைப்பிரிவினை காரணமாக சமூகப் பிரிவுகளும், படிநிலை சமுதாய அமைப்பும் ஏற்பட்டுவிட்டது. அதனால் சமூக படிநிலைகளில் வாழ்ந்தோர் உழைப்பின் பலன்களை அனுபவிப்போரும், அபகரிப்போரும். அபகரிக்கப்பட்டடோருமாக பலவாறு வேறுபட்டிருந்தனர். இந்நிலையில் வாழ்க்கை துன்பம் நிறைந்ததாக மாறியது. எனவே துன்பங்களை போக்குவதற்கான முயற்சியில் துன்பங்களுக்கான காரணங்களை அறிதலுக்கான அவசியம் தத்துவமாக வெளிப்பட்டது. இவ்வாறு முன்னிலை தத்துவமான தொன்மப்புனைவுகளின் சிந்தனையிலிருந்தும் தத்துவ சிந்தனை மரபு தோன்றியது. இங்கு இயற்கையை மறு ஆய்வுக்கு உட்படுத்தி ஆராய்ந்த அறிவியலாளராகவே முதல் தத்துவப் போக்குகளின் பிரதிநிதிகள் விளங்கினர். முதல் தத்துவம் இயற்கை சார்ந்ததாக இருந்தது. தத்துவத்தின் தோற்றுவாய் இயற்கைத் தத்துவத்திலிருந்தே பெறப்படுகின்றது. அது ஆதி பொருள் முதல் வாதம் ஆகும். ஆதி பொருள் முதல்வாதத்திலிருந்தே தத்துவ அமைப்புக்கள் பலவும் தோற்றம் பெற்றன.

### 3.3.0. தென்னிந்திய சமூக வரையறை பற்றி ஆய்வாளர்கள் கருத்து

இந்திய சமூக அமைப்பிலிருந்து தென்னிந்திய சமூக அமைப்பை வேறுபடுத்தி நோக்க வேண்டியுள்ளது. இதன் மீது பல அடிப்படையான கேள்விகளை தத்துவவியல் வரலாற்றியல் ஆசிரியர்கள் எழுப்பியுள்ளனர். வட இந்தியாவைப் போல் அல்லாமல் தென்னிந்தியச் சமூகம் பார்ப்பனர் பறையர் என்ற இரண்டு சாதிகளை மட்டுமே கொண்டிருந்தது என்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.[11] தொல்காப்பியத்தின் மரபியலில் அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும் என்ற நூற்பாவின் மீதும் பலவிதமான கேள்விகள் எழுப்பப்பட்டுள்ளன. இரண்டாவதாக திராவிடப் பண்பாடுடைய தென்னிந்திய சமூகத்தில் இயற்கை வழிபாடு இருந்திருக்கிறதா? வேள்விகள் நடத்திருக்கின்றதா? சங்க இலக்கியத்தில் குதிரை இடம் பெறுகின்றதா? என்பவற்றை போன்ற நுட்பமான கேள்விகளும் முன் வைக்கப்படுகின்றன.

### 3.3.1. தொன்மவியலின்படி வீரமும் காதலும்

'கருத்து நிலை தளத்திலான அறிதல் தோன்றாத ஆதி வாழ்க்கை முறையில் உணர்ச்சிகளும், நம்பிக்கைகளும் கலந்த நேரடி உடல் சார்ந்த அனுபவங்களால் பெறப்படும் அறிவே தொன்மங்கள் மூலம் வடிவம் பெறுகின்றது. தொன்மம் போன்ற வெளிப்பாடுகள் ஓர் இனத்தாரின் கூட்டு மனம், அந்த இனத்தின் இனக்கமான கூட்டுத்தன் முனைப்பு; தங்களைப் பற்றிய அர்த்தப்பாடு; ஆதலின் தொன்மம் என்பது அந்த இனத்தின் கூட்டு மனப் பிரதி நிதித்துவப்பதிவாகும்' என்று பக்தவத்சலபாரதி குறிப்பிடுகிறார்.[12] இதனால் தொன்மங்களாகிய புனைகதைகள் அக்கால மக்களின் கூட்டு அனுபவத்திலிருந்தும், கூட்டு முயர்ச்சிகளிலிருந்தும் உருவானவையாகும். இது சமூக ஒத்துழைப்பின் மூலம் நிறைவேறுகிறது. உற்பத்தி போர் குடும்பம், வாழ்க்கை ஆகிய அனைத்துமே சமூக ஒத்துழைப்பினால் நடைபெற்றதாக அக்காலம் இருந்தது.

இந்த தொல்குடி வாழ்வில் உருவான தொன்மங்களில் தாவரங்களும், விலங்குகளும், இயற்கை சக்திகளான காற்று, மழை, புயல், நெருப்பு ஆகியவையும் மனித வடிவம் கொண்டவையாகவே அவர்களால் உருவாக்கப்பட்டிருந்தன. அவனைப் போலவே மனித வடிவம் கொண்ட சக்திகளாகவே மனித தன்மையுடையனவாகவே அவை கருதப்பட்டன. தனிமனித அனுபவங்கள் இதன் வழியே பிறருக்கும் கொண்டு செல்லப்படுகிறது. இதனால் தொல்குடி சமூகத்திற்கான கூட்டு உணர்வும், கூட்டு அனுபவமும் குடி முழுமைக்கும் ஏற்படுகிறது.

அவன் வேட்டையாடல், உணவு திரட்டல் ஆகிய நிலைகளில் வாழ்ந்த போது நேரிட்ட பிரச்சினைகள் 1, உணவு, பாதுகாப்பு 2, மனித இனப் பொருக்கம் ஆகியன.

காட்டுமிராண்டி நிலையில் இருந்த தொல்குடி மரபில் வேட்டையாடும் வீரனும், மறு உற்பத்திக்கு காரணமான தாய்தெய்வமும் முதன்மை பெற்றிருந்தன. இங்கு உணவு, பாதுகாப்பு ஆகியன வீரத்தின்பாற்பட்டது; மனித இனப்பெருக்கம் காதலின்பாற்பட்டது.

### 3.3.2. குறிஞ்சி நிலத் தொன்மங்கள்

இயற்கைப் பொருட்களுக்கு மனிதப்பண்புகளை ஏற்றி போற்றுதல் தொன்மக்கதைகளின் இயல்பாகும். மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சி. மழைப் பொழிவால் மட்டுமே மலைபெறும் நிலம் குறிஞ்சியாகும். மழை, பொய்த்தபோது கடும் வறட்சிக்கு இடமாவது குறிஞ்சி. இந்நிலையில் இயற்கையில் மலைப்பகுதியில் பூமிக்கடியில் விளையக் கூடிய வள்ளிக் கிழங்கு எல்லாக் காலங்களிலும் குறிஞ்சி மக்களுக்கு பயன் தரக்கூடியது. இதனால் வளமைக்கும், உணவுக்குமான குறியீடாக வள்ளிக் கிழங்கு கொள்ளப்பட்டு வள்ளிப்பெண்ணாக தொன்மப்புனைவு உருவானது.

மேலும் மழையை வேண்டி குறவர்கள் குன்றுகள் முன்பு ஆர்த்தல் செய்கின்றனர். (*ஐங்* 251; *நற்* 165, *புறம்* 143) குறிஞ்சி நிலத்தில் நடைபெறும் நம்பிக்கை, சடங்குகளில் குறவன், வேலன், குறமகள், அகவன்மகள், சாலினி, வாலிழை மகளிர் போன்றோரும் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் பாடல் இசைத்து இயற்கையை தமது விருப்பின்படி இசைத்து வழிநடத்தும், கட்டுப்படுத்தும் மந்திரம் புரியும் ஆற்றலாளராகக் கருதப்பட்டனர். குறிஞ்சி நிலத் தெய்வமான முருகன் அவர்களின் இன்னல்களிலிருந்து காப்பவனமாக தீமைகளை அழித்து நன்மை செய்வனாக அவர்களால் வெறியாடல் மூலம் வருவிக்கப்பட்டு நோய்களைந்து செல்பவனாகிறான். ஆகவே வளமைத் தெய்வமாக வள்ளியும், பாதுகாப்பு வீரத்திற்கான கடவுளாக முருகனும் குறிஞ்சி நிலத் தொன்மத்தில் இடம் பெறுகின்றனர்.

### 3.3.3. முல்லை நிலத் தொன்மங்கள்

முல்லை நிலம் கால்நடை மேய்த்தல் ஆதி வேளாண்மை ஆகியவற்றை அடிப்படையாக கொண்டது. இது போதிய நீர்வளம் இல்லாத வான்மழையால் வளம் பெறும் நிலமாதலால் இதுவும் வறட்சி காலத்தில் பாலை வடிவம் கொள்ளும். பாலை என்றதோர் தனி நிலம் இல்லையென்பது அனைவரும் அறிந்ததே. எனவே ஆண்டில் ஒரு பகுதி காலத்தில் பாலை நிலமாகவும் இருப்பனவே குறிஞ்சியும், முல்லையும் ஆகும். முல்லை கால் நடை மேய்த்தல் சமூகம் ஓரிடத்தில் நிலையாக தஞ்கி வாழ்தலற்ற சமூகம், பாலை என்பது கவர்ந்து கொள்ளலே அறமாகவுடையது என்ற

இருவித போக்குகளும் உள்ளடக்கியவை இந்த அக்கம் பக்கமாக அமைந்துள்ள குறிஞ்சி, முல்லை, ஆகியனவாகும்.

இங்கு நிரை கவர்தல், நிறை மீட்டல், தொறு பூசல் ஆகியவன நடந்தவண்ணமே இருந்தன. இத்தகைய உயிர்நீத்த வீரர்களுக்கு நடுகல் எடுப்பது சங்க காலமரபு மனிதன் இறந்த பின்னரும் தனது சமூகத்துடன் இணைந்தே உள்ளான். ஆவியாக வாழ்கிறான் அவனை வழிபடுவதன் மூலம் அவனது ஆற்றல்களைப் பெறலாம் (*தொல்* பொருள்.63) என்று அக்காலத் மக்கள் நம்பினர் வழிபட்டனர். இது முன்னோர் வழிபாடு. எனலாம். அதியமானின் நடுகல்லுக்கும் நடத்தப்பட்டதை (*புறம்* 235) ஔவையார் பாடல் உணர்த்துகிறது. இத்தகைய முன்னோர் வழிபாடு வழிபாடு வளமை வழிபாடாகவே கொள்வாரும் உண்டு. தொல்லியல் அறிஞர் ர.பூங்குன்றன் அவர்கள் வள்ளிக் கூத்து நடுகல் வழிபாட்டின் அங்கமாக கள ஆய்வின்போது குறிப்பிட்டார். நடுகல் வீரர்கள் வெட்சி கரத்தை போரில் ஈடுபட்டவர்களே . அவர்கள் நடத்தியதே வள்ளி கூத்து. இருபாலாரும் இணைந்து நடத்திய இந்த வளமைச் சடங்கு பழங்குடி மரபில் இருந்து வருவது. இனக்குழு மரபின் ஒழுக்கத்தை பின்பற்றாதவர்களுக்கு உணவு (வள்ளிக்கிழங்கும், தேனும்) கிடைக்காது என்ற நம்பிக்கை (*கலி.* 39) இனக்குழு சமூகத்தின் அறநெறி இங்கு முன்வைக்கப்படுகின்றது. இது கொடிச்சி, வள்ளி என்ற நிலத் தெய்வமாக வளமைக்குரிய தாய் தெய்வமாக முல்லை நிலத்துக்குரிய தொன்மமாக இவ்வாறு உருப்பெற்றது.

### 3.3.4.பாலை நிலத் தொன்மம்

இங்கு நிலமழிந்த காலத்தில் 'பாலை நிலம்' எனக் கொள்ளும் போது கொற்றவை பலிதெய்வமாக, போரில் வெற்றி தருபவளாகவும் கருதப்பட்டார்.

மேலும் குருதியில் உயிர் இருப்பதாகவும், அதிலிருந்தே உயிர் தோன்றுவதாகவும் அம்மக்கள் கருதியதால் பலி கொடுத்தல் நிகழ்ந்தது. இதன் மூலம் உயிர் பல்கி பெருகும் . வேளாண்மை கூடும். இறப்பு, அழிவு ஆகியவற்றிலிருந்து புதிய உயிர் தோன்றுவதாக நம்பினர். வீரன் போரில் குருதி சிந்துதலும் மரணம் அடைத்தலும் புதியன உருவாவதற்கான குருதி சிந்துதல், பலி நேர்தலாகவே கருதப்பட்டது.

மதுரைக் காஞ்சியானது மாயோனுக்கும், சேயோனுக்கும் பிறவாயாக்கை பெரியோனுக்கும் உயிர் பலி கொடுத்தது பற்றி விரிவாக பேசுகின்றது. பிற்காலத்தில் பெருஞ்சமயங்களாக இவை உருப் பெற்றபோது வைதீகச் சமயங்களால் தன்வயமாக்கிக் கொள்ளப்பட்டபோது அவை பலியிடலை மறுத்து தடை படுத்திவிட்டன.

### 3.3.5. மருத நிலத் தொன்மம்

அரசு உருவாக்கம் நிகழ்ந்த பிறகும், குறிஞ்சி முல்லை நிலங்களுக்கான தொன்மங்கள் அரசின் பண்பாட்டு மரபிலும் ஏற்கப்பட்டு தொடர்ந்தன. பழங்காலம் தொட்டே இருந்து வரும் இந்த நம்பிக்கை சடங்குகளில் வேளிரும். வேந்தரும் பங்கு பெற்றனர், இயற்கைக்கும் இனக்குழு குடிகளின் கூட்டு வாழ்வுக்குமான அந்நம்பிக்கை ஏற்பது அவர்களது இருப்பிற்கு வலுச்சேர்த்தது.

சங்க இலக்கியம் இதனை பெரிதும் உணர்த்தும். பாணர், விறலியரோடு மன்னர்கள் இணைந்து இச்சடங்கிணை மேற்கொண்டதை அறியமுடிகின்றது. அத்தகைய ஆடல், பாடலுடன் நிகழ்த்தப்படும் சடங்குகள் வளமைச் சடங்குளே ஆகும். அவை மன்னனுக்கு வெற்றியை ஈட்டித் தருவதுடன். நாட்டின் செழிப்பையும் கொண்டு வருவன என்ற நம்பிக்கை நிலவியது. விறலியர்கள் மன்னனின் முழு உடலையும் அறிந்தவர்கள். (*பதிற்.* 44). அவர்களை மகிழ்விப்பதற்காக அவன் மலர்களை தருவான் (*புறம்.* 32). மருத நிலத்தில் இத்தகைய விறலியர் கணவனை கவர்ந்து கொள்வோராக (*நற்.* 170) தலைவி கருதினாள். தனிச் சொத்துடைமையும், குடும்ப அமைப்பும் வளர்ந்துவிட்ட நிலையில விறலியர் மருத நிலத்தலைவியால் இவ்வாறு பார்க்கப்பட்டிருக்கக் கூடும். ஆனால் பாணர், விறலியருடனான தலைவனின் நடவடிக்கைகள் வளமைச் சடங்குகளாகவே கொள்ள முடியும். 'விறலியருடனான இந்த நடனங்கள் சடங்குகள் சார்ந்ததாகவும் இருக்க கூடும்' என கலாநிதி கா.சிவத்தம்பி குறிப்பிடுகின்றார்.[13]

குறிச்சி, முல்லை , பாலை நிலத் தொன்மங்களில் வைதீகச் சமயங்களுக்கான கூறுகள் ஏதும் காணப்படவில்லை. ஆனால் மருதத்திணையின் வாழ்வியலில் புதிய வளர்ச்சியை ஏற்படுத்தியதுடன் புதிய கருத்தியலுக்கான புதிய தத்துவங்களுக்கான அடிப்படைக் காரணிகளைத் தோற்றுவித்தன. குறிஞ்சி, முல்லை முதலான திணை வாழ்வின் நெருக்கடிகளையும், அழிவுத்துயரங்களையும், விளக்கியதுடன் நிலையாமைப் பற்றி பேசலாயின. இதனை கனியன் பூங்குன்றன், கபிலர், ஔவையாரின் பாடல்கள் விரிவாகப் பேசுகின்றன.

### 3.3.6. இயற்கை அறிவிலிருந்து புலன்கடந்த பொருளியல் வளர்தல்

குறிஞ்சி முல்லை திணைகளின் இனக்குழு வாழ்வில் இயற்கையும், மரம், செடி, கொடி, புள்ளினம், விலங்குகளும் மனிதத்தன்மையுடனே கருதப்பட்டன. இதனை வளமைச் சடங்குகளில் தாய்தெய்வ வழிபாட்டில் அறிமுடிகின்றது. இயற்கையை வணங்குதலும் இதனால் ஏற்பட்டிருந்து. இதுவே பிறகு தத்துவங்கள் உருவானபோது அணுக் கொள்கை, வினைக் கொள்கை, ஊழ்க்கொள்கை உருவாக

அடிப்படையாயிருந்தன. ஆவி வழிபாடு மறுபிறப்பு, சார்ந்த நம்பிக்கைச் சடங்குகளில் இருந்தே இவை உதித்தன. குரங்காகவும், பாம்பாகவும், மாடாகவும், எலியாகவும். பலவாறாக மனிதன் பிறக்க கூடும் என்ற நம்பிக்கையும், தன்னுடனே வாழும் இத்தகைய உயிரினங்களை தம்மைப்போன்ற மனிதத் தன்மையுடையதாக கருதியதாலுமே சமண, பௌத்த, ஆசீவகக் கோட்பாடுகள் உருவாக்கம் பெற்றன. இத்தத்துவங்களுக்கான அடிப்படைகளை தொன்மப்புனைவுகளே வழங்கின என்பதற்கு வட நாட்டுச் சான்றாக புத்தசாதக கதைகள் விளங்குகின்றன.

குறிஞ்சி முல்லைத் தொன்மங்கள் பிற திணை வாழ்வில் ஏற்கப்பட்டன. மருதம் நெய்தல் நிலப் பகுதிகள் பிற நிலப்பகுதிகளையும் இணைத்துக் கொண்டு உருவான அரசும், அதன் நகரங்களும் அவற்றின் வழியாக நடைபெற்ற அயல்நாட்டு, கடல்வழி வர்த்தகத்தின் வாயிலாகவும், பிற தேசத்தவருடனான தொடர்புகளாலும், அதே செவ்வியல் பண்பாடுகளைக் கொண்டிருந்த கிரேக்கம், சீனம், முதலான வெளிநாட்டு தத்துவங்களும், வட நாட்டில் வழியே பெற்ற பாலி, சமக்கிருதம் வழியாக பெற்ற தத்துவக் கருத்துக்களும் தமிழர் தத்துவத்துடன் ஊடாட்டம் செய்து தமிழர் தத்துவம் வேகமான வளர்ச்சியைப் பெற்றது. மௌரியர்களாலும், யவனர்களாலும் இயற்கைப் பொருட்களில் இருந்து பெற்ற அறிவால் விளைந்த முன்னிலைத் தத்துவம், புலன் கடந்த பொருளியலாக (அப்பாலையியலாக) வளர்ச்சியைப் பெற்றது. இது அன்றைய தத்துவங்கள் ஒன்றுடன் ஒன்று கலந்துறவாடியதன் மூலம் பெற்றது. இது அன்றைய உலக தத்துவங்கள் ஒன்றுடன் ஒன்று கலந்துறவாடியதன் மூலம் பெற்ற அறிவு வளர்ச்சியால் விளைந்தது.

### 3.3.7. பாணர் மரபும் நூலறி புலவர் மரபும்

முன்னரே சுட்டிக் காட்டியது போல சங்கால அரசு உருவாக்கதின்போது பாடுபவரை புலவராக காட்டும் (*புறம்* 27, 30,47, 72) பாணர் மரபும் நூலறி புலவர் மரபும் என இருவிதமான மரபுகள் நிலவியிருந்தது. பாணர்களின் பாடல்களுக்கு தெய்வீகத் தன்மை இருப்பதாக நம்பப்பட்டது. இதனடிப்படையில் சீறூர் மன்னர், முதுகுடி மன்னர், கிழார் முதலிய இனக்குழு குடிகளிடம் சென்று அவர்களது வீழ்ச்சியை ஒட்டி அவர்களது வளமைச் சடங்கினைச் செய்து பாடல் பாடினார்கள். இவர்கள் நூலறி புலவரல்லர். இவர்ளது முதுவாய் மொழிகள் தத்துவமாகாது. இனக்குழு வளமைசார்ந்த நம்பிக்கைகளாகும்.

இன்னொரு மரபு வேந்தனைச் சார்ந்து நின்ற நூலறிபுவலர் மரபு. இவர்களின் வரிசை அறிந்து பரிசில் வழங்கப்பட்டது. இவர்கள் அரசின் நிர்வாகத்தில் தலையிட்டும், அறம்பல போதித்தும் தாம் பெற்ற அறிவின் வழி தத்துவத்தின் வழி நடந்தவர்கள். இவர்களது இலக்கியம் பாணர் மரபிலிருந்து மாறுபட்ட எழுத்து

மரபுடையது. கற்றறிந்த சான்றோராக விளங்கிய புலவராவர். இதனை வேறுபடுத்திக் காட்டுவதாகவே கால்லாக் கோவலர் (*ஐந்*.304) கல்லா விளைஞர் (*குறுந்* 69-3) கல்லா மாந்தர் (*மதுரை* 4-20) கல்லா இளையர் (*புறம்* 263-6) கல்லா இடையன் (*புறம்* 321-5) கல்லா வாய்ப்பாண் என்ற பாடலடிகள் அமைந்துதுள்ளன. இது கல்லாமை, பேதைமை, அறியாமையைச் சுட்டும் சொற்களாகும். இத்தன்மையிலிருந்து வளர்ந்த அறிவுச் சான்றோரான நூலறி புலவர்கள் வேந்தமைப்பிற்கான, வர்க்க சமூக ஆக்கத்துக்கான ஒழுக்கங்களை பண்பாட்டை நானிலங்களுக்கும் பொருத்தவும், திணை சமூகங்களின் பலதிறப்பட்ட வாழ்நிலைமையில் உதித்த சிந்தனை முறைகளையும் வேந்துருவாக்கத்துக்கான அடிப்படைகளாக ஒருங்கிணைத்தனர்.

### 3.4.0. தொல்காப்பியத்தில் கருத்தியல்கள்

இந்த வகையில் நமக்கு கிடைக்கும் ஒப்பற்ற நூலாக *தொல்காப்பியம்* விளங்குகின்றது. பண்டைத் தமிழ்ச் சமூகம் நிலவியல் அடிப்படையில் வேறுபட்டு பல்வேறுவிதமான தொழில், வாழ்க்கைமுறை, பழக்க வழக்கங்கள், பண்பாடுகளால் இணைவின்றி தனித்தனியாக இருந்து வந்த நிலையில், குழு- குடிகளாக நீடித்து வந்த நிலையில் அவற்றை ஒருங்கிணைத்திடவும், அதன் மூலம் உற்பத்தி முறைகளில் மாற்றம் ஏற்படுத்திடவும், பரந்த அளவிலான அரசு, ஆட்சியதிகாரம் ஏற்படவும் தேவையான தத்துவப் பின்புலத்தில் இவ்விலக்கண நூல் எழுந்தது. அது. தமிழ்ச் சமூகம் ஒருங்கிணைக்கப்பட்டு ஒத்திசைவுடன் இயக்கமுறுவதற்கான 'இயங்கியலை' அறிந்து முன் வைத்தது. புதிய சமூக மாற்றங்களுக்கு வழி கோலியது. அது மொழிக்கட்டமைப்பு பற்றிய இலக்கண நூல் மட்டுமன்று, தொடக்கத்தில் 'சிந்திப்பு' என்பது அனைத்தையும் பற்றியதாக அனைத்தையும் வெளிப்படுத்துவதாகவே அமைந்திருந்தது. *தொல்காப்பியத்*திற்கும் இது சாலப் பொருந்துவதாகும்.

*தொல்காப்பியத்*தில் 'எழுத்ததிகாரம்' எழுத்துக்கள் சேர்ந்து சொல்லாவது பற்றியது- சொல்லின் பகுதி விகுதி ஆராய்ந்து உரைக்கின்றது. சொல்லதிகாரமானது பெயர், வினை, இடை, உரி என நால்வகைச் சொற்களைக் கொண்டு வாக்கியங்களாக உருப் பெறுதல் பற்றியதாகும். ஆயினும், சொல்லதிகாரத்திலேயே சொற்கள் குறித்து வரும் பொருள் பற்றி பேசுகின்றது. சொல்லதிகாரத்தில் குறிப்பிடப்படும் திணைக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டே பொருளதிகாரத்தில் இயற்கை, சமூகம், மனிதன் பற்றிய தத்துவப் பிரச்சினைகள் விளக்கப்படுகின்றன. பொருளதிகாரத்தில் நிலவியல் அடிப்படையிலான வேறுபாடுகளும் வேறுபடும் தன்மைக்கியைந்து வாழ்ந்த குழு - குடிகளின் வாழ்க்கை முறைகளும் ஆராயப்படுவதுடன் அவர்களை அரசமைப்பிற்குள் கொண்டு வருவதற்கான முயற்சிகள் எடுத்தியம்பப்படுகின்றன.

### 3.4.1. தொல்காப்பியத்தில் உலகாயதம்

பொருள் ''முதல் கரு உரி'' என வகைப்படுத்துவதுடன் முதல் பொருளாக நிலமும் பொழுதும் தொல்காப்பியரால் குறிப்பிடப்படுகின்றது. கருப் பொருளாக தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, செய்தி, யாழ் ஆகியவற்றை கூறுகிறது. உரிப் பொருளாக ஒழுக்கங்கள் ஐந்து உரைக்கப்படுகின்றன. இவற்றில் நிலமே அனைத்திற்கும் அடிப்படையாக கொள்ளப்பட்டுள்ளது- நிலவியல் பின்படியே திணை வாழ்க்கை விளக்கப்படுகின்றது. திணை மயக்குறுதலும் (958) இல்லை என்று கூறுவதால் பொருள் பற்றிய வேறுபாடான புரிதலை இலக்கணப் படுத்தியுள்ளது. முதல் பொருளாக நிலமும் பொழுதும் குறிக்கப்படுவதால் இது பொருள் முதல்வாதத் தத்துவத்தையே அடிப்படையாக் கொண்டதுஜ. இதில் விளக்கம் பெறும் காலம் நிலம் சார்ந்ததே ஒழிய அது புலன் கடந்த பொருளியல் பற்றியதல்ல.

முதல் எனப்படும் முதன்மைப் பொருளில் தெய்வம் இடம் பெறவில்லை. ஆதலின், முதல் பொருள் கோட்பாடு தமிழகத்து உலகாயதம்ஜ சார்ந்த சிந்தனையாகக் கொள்ளற் குரியது என்பர் தேவ. பேரின்பன்,[14] ஆர்.பார்த்தசாரதி[15] ஆகியோர்.

இது முன்னிலை பொருள்முதல்வாதத்தின் தன்மை கொண்டது. கால்நடை மேய்ப்பு ஆதிவேளாண்மை மேற்கொண்ட தொல்குடி சமூகத்தின் உலக கண்ணோட்டமே முன்னிலை பொருள் முதல்வாதம் ஆகும். இது உலக மெங்குமே தொல்குடி வாழ்வின் தொடக்கால சிந்தனை வடிவங்களில் இருந்தே உதித்தனவாக அறியப்படுகின்றன. மனிதனின் சொல் உருவாக்கத்தில் இயற்கைக்கும், பொருளுக்கும் இடையிலான அவனது தொடர்பிலிருந்து வந்ததாகவே அறியப்படுகின்றது. அத்தகைய சமூக வாழ்வில் இருந்தே, நிலம் என்பதை அடிப்படையாகக் கொண்டு 'பொருள்' விளக்கப்பட்டது. 'பொருள்' பற்றி தத்துவ அடிப்படையில் வளர்த்தெடுப்பது அதற்கடுத்தடுத்து நிகழும் சமூக வரலாற்று நிலைமைகளை ஒட்டி நடைபெறுகின்றன. இங்கு *தொல்காப்பிய* பொருளதிகாரம் இனக்குழு வாழ்க்கையையும், அதிலிருந்து விடுபட்டு வர்க்க சமூக உருவாக்கம் நிகழ்தலையும் பற்றி, இரண்டுவிதமான வாழ்க்கைமுறைகளைப் பற்றி இலக்கணப் படுத்துகின்றது. தொல்காப்பியர் காலத் தமிழ்ச் சமூகம் இந்த இருவகையான ஏற்றத்தாழ்வான, முரண்பட்ட சமூகங்களை கொண்டிருந்தது. இதனால்தான் இது இனக்குழு நம்பிக்கைகள், முன்னிலை உலகாயதம், சமண- பௌத்த கொள்கையியல், வேத வேள்விச் சடங்குகள் போன்ற பல போக்குகளையும் வெளிப்படுத்துகின்றது. எனினும், *தொல்காப்பிய* கட்டமைப்பின் அடிப்படையாக

அமைவது முன்னிலைப் பொருள் முதல்வாதமே ஆகும். இங்கு *தொல்காப்பியம்* சமணத்தத்துவத்தை முன்வைத்து படைக்கப்பட்டதாகவும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[16]

சமணமும், பௌத்தமும் முன்வைத்த வினைக் கோட்பாட்டை (மறுப்பிறப்புக் கொள்கையை) மறுப்பனவாக சாருவாகமும், ஆசீவகமும் அறியப்படுகின்றன. குறிப்பாக ஆசீவகம் வினை, வினையின் விளைவு ஆகிவற்றை மறுக்கவில்லை. வினை அடிப்படையிலான மறுபிறப்புக் கோட்பாட்டையே மறுக்கின்றது- முன்னிலை பொருள் முதல்வாதத்தத்துவங்களாக கொள்ளத்தக்க சாருவாகம், ஆசீவகம் ஆகியவற்றின் வினைக் கோட்பாடு இன்ப நாட்டம் குறித்த இயற்கை தத்துவங்களாகும். சாருவாகர்களையும், ஆசீவகர்களையும் குடியர்கள், முடிவற்ற பாலியல் உறவு மீது நாட்டம் கொண்டவர்கள், இன்ப நாட்டம் மிகுந்தவர்கள் என்றெல்லாம் சமணர்களும் பௌத்தர்களும் தூற்றினார்.

### 3.4.2. மெய்ப்பாட்டியலில் இன்ப நாட்டக் கொள்கை

இத்தகைய இன்ப நாட்டம் குறித்தவற்றை மெய்ப்பாட்டியல் இலக்கணப்படுத்துகிறது, மனித அறிதல் உடல் சார்ந்த அறிதல் (நகை, அழுகை, இழிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை) என்ற நிலையில் தான் தொடங்குகின்றது. இவை உய்த்து உணராமல் 'தலைபடு பொருண்மையால் மெய்ப்பட முடிப்பது (1462) என *தொல்காப்பியம்* குறிப்பிடுகின்றது. சாருவாகர்கள், உலகாயதர்களின் நூல்கள் இன்ப நாட்டம் குறித்து அதிகம் அமைந்துள்ளன. தொல்காப்பியமும் தலைவன் தலைவியின் இன்ப நாட்டம், புணர்ச்சிக்குரிய மெய்பாடுகளை உளவியல் முறையில் அணுகுகின்றது. தலைவன் தலைவி இருவருக்கும் பொதுவான மெய்ப்பாடுகளை, அகத்திற்கும் புறத்திற்கும் உரிய மெய்ப்பாடுகளாகவும், தலைவனைப் புணர்ச்சிக்கு உடன்படுத்தும் பொருட்டுப் புணர்ச்சிக்கு முன் நிகழும் மெய்ப்பாடுகளாகவும், புணர்ச்சிக்குப்பின் அன்பினை மிகுவிக்கும்படி தோன்றும் மெய்ப்பாடுகளையும், அதன் பிறகு புணர்ச்சி மறுத்து அவனை விரைவில் திருமணம் செய்து கொள்ளும் பொருட்டு விரைந்து எய்தும் கூட்டத்திற்கு ஏதுவாகிய மெய்ப்பாடாகவும், திருமணம் முடிந்த பிறகு கற்பு வாழ்க்கையில் புணர்ச்சியின்பம் சற்றும் குறையாத வகையில் நீடிக்கும் பொருட்டு காமத்தை மிகுவிக்கும் குறியீடுகளைக் கற்புக்குரிய மெய்ப்பாடுகளாகவும் *தொல்காப்பியம்* சுட்டுகின்றது.

**புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்**
**நகுநய மறைத்தல் சிதைவு பிறர்க்கின்மையொடு**
**தகுமுறை நான்கே ஒன்றென மொழிப**

(*தொல்.*பொருள் 257) புகுமுகம் புரிதல் என்பது தலைமகள் புணர்ச்சிக் குறிப்பினளாய் இருக்க அம்முகக் குறிப்பு மாறுபடாது பொருந்துதல் என்பதையும், பொறிநுதல் வியர்த்தல் என்பது அவ்வழி பொருந்தும் தலைமகட்கு நாணம் மேலிட வரும் முதல் வியர்ப்பையும் நகுநயம் மறைத்தல் என்பது தலைவன் காதல் மேலீட்டில் கூறுவன கேட்டு நகை வந்தபோதும் அந்நகைத்தலாகிய விருப்பத்தினைப் புலனாகா வண்ணம் மறைத்தலையும், சிதைவு பிறர்க்கின்மை என்பது தலைவி தன் மனனழிவு பிறர்க்கு புலனாகா வண்ணம் நிற்றல் என்பதோடு தலைவிபால் நிகழும் மெய்ப்பாடுகளை முதல் அவத்தையாக கூறுகின்றார். மேலும்,

**கூழை விரித்தல் காதொன்று களைதல்**
**ஊழனி தைவரல் உடைபெயர்த்து உடுத்தலோடு**
**கெழி இய நான்கே இரண்டென மொழி**

(*தொல்.* பொருள் 258) என்று இரண்டாவது அவத்தையாக தொல்காப்பியர் கூறுகிறார். இங்கு கூழை விரித்தல் என்பது நகு நய மறைத்த தலைவி தலைவன் மேல் வேட்கை செல்லுமாயின் வாளாது நிற்றலாற்றாது மயிரினைக் குலைத்தல் என்பதையும், காதொன்று களைதல் என்பது தலைவி காதில் அணிந்த காதணி ஒன்றை விழச் செய்து அதனைத் தேடுவது போல தலைவன் முன் நிற்றலையும் குறிக்கின்றது. ஊழனி தைவரல் என்பது முறையாக அணிந்துள்ள அணியைத் திருத்துவது போல திருத்தி நிற்றல் என்பதையும், உடை பெயர்த்துடுத்தல் என்பது ஆடையைக் குலைத்துடுத்துதல் என்பதையும் குறிக்கிறது.

**அல்குல் தைவரல் அணிந்தவை திருத்தல்**
**இல்வலியுறுத்தல் இருகையும் எடுத்தலொடு**
**சொல்லிய நான்கே மூன்றென மொழிப**

(*தொல்.* பொருள் 259) இங்கு அல்குல் தைவரல் என்பது மேல் உடையைப் பெயர்த்துடுத்துதலையும், அணிந்தவை திருத்தல் என்பதுதன் அணிகலன்களை திருத்த முயலுதலும், இல் வலியுறுத்தல் என்பது தமது இற்பிறப்புச் சொல்லி இசைவில்லாரைப் போல மறுத்துக் கூறுதலையும் இருகையும் எடுத்தல் என்பது முடிவில் புணர்ச்சிக் கொருப்பட்ட உள்ளத்தாளாகி தம் கைகளைக் கிளர்த்தலையும் சுட்டுகின்றது.

புகுமுகம் புரிதலில் தொடங்கி புணர்ச்சிக்கு உடன்படும் நிலை வரை ஒரு பெண்ணுக்குள் நிகழும் ஒவ்வொரு மெய், மன நிகழ்வுகளையும் படிப்படியாக சுட்டிச் செல்வதன் மூலம், புணர்ச்சிக்கு முன்னும் பின்னுமான செய்கைகளையும், உள வெளிப்பாடுகளையும் விவரிப்பதன் மூலம் சாருவாகம், முன்னிலைப்

பொருள்முதல்வாதத்தை முன் வைக்கும் தன்மை அடங்கியுள்ளது. இன்ப நாட்டம் பற்றிய மறுதலிப்பு ஏதும் இல்லை. இவ்வாறு பண்டைத் தமிழரின் இல்லற வாழ்வு சிறக்கச் செய்யவே *தொல்காப்பியம்* வழி கூறுகிறது எனலாம்.

**காமம் காமம் என்ப காமம்**
**அணங்கும் பிணியும் அன்றே நுணங்கிக்**
**கடுத்தலும் தணிதலும் இன்றே யானை**
**குளுகு மென்று ஆண் மதம் போலப்**
**பாணியும் உடைத்து அது காணு நீர்ப்பெறினே**

(*குறுந்* 136) காமம் என்று சொல்லப்படுவது துன்பமுமன்று, நோயும் அன்று அளவு மீறிக் கடுத்தலும், குறைதலும் அதற்கு இல்லை. யானை குளகு மென்றால் மதம் பிடிப்பது போல் அது சேர்ந்து களித்தற்குரிய, ஆணை, பெண்ணைப் பெற்றால் காமம் மிகுதியாகத் தோன்றும்'' என்பதை எடுத்துக் கூறி நெறிபடுத்தும் பக்குவம் அன்றையத் தமிழ்ச் சமூகத்தில் இருந்தது. காமம் இயல்பான ஒன்றாகவே கருதப்பட்டது.

*தொல்காப்பியம்* கருதல் அளவை பற்றி மெய்ப்பாட்டியலில் (*தொல்*. பொருள் 256)

எடுத்துக் காட்டுவதுடன் அதை ஒரு மெய்ப்பாடாகவே உணர்த்தி நிற்கின்றது. இளம் பருவம் கொண்ட தலைவி தனது காதல் உணர்வை உட்குறிப்புக் கருத்து இல்லாதவர் போல் அவனைக் கடைக்கண்ணால் நோக்குதல் என்றப் பொருளில் *தொல்காப்பியம்* சுட்டுகின்றது. காட்சியளவை மட்டுமே ஏற்கும் அது அனுமானம் பற்றி கூறவே இல்லை.

### 3.4.3. திணை கடவுள்களும் பொருளே ஆதல்

ஐந்துநிலக் கருப் பொருளில் வழங்கப்பெற்ற குலதெய்வம், அதிதெய்வம் அல்லாமல் படைப்புக் கடவுளும் வழக்கத்திற்கு வரத் தொடங்கியிருந்தது. மேலும் அரசு அமைப்பு மேற்கொண்ட பெருவேந்தனது அகவய ஆற்றல் ஒப்பற்றது என உயரும்போது அறிலானது முதன்மை நிலையை அடையும் போக்கினில், அனுமானம் தனி அறிதல் அளவையாக மேம்பட்டது. சங்கத் தலை மக்கள் களவு வாழ்க்கை முடிந்து கற்பு வாழ்வில் மனை நலம் கண்ட புதிதில் பொருள் சேர்க்கைக்காக தலைவியைப் பிரிவதாக சங்க இலக்கியம் பெரிதும் பேசுகின்றது. தம்முடைய காதல் தலைவியை பொருட் பிணிகொண்டு பிரிந்தனர். அவளுடன் சேர்ந்து காணும் இன்பமானது பொருளின் பிணைப்பை விட வலியது. பொருளினைவிடக் காமம் வலியது (*தொல்*.155.41) இளமைப் பருவத்திலேயே இல்லற இன்பத்தை

நுகரவேண்டும் என்பது பொது நியதியாக இருந்தது. குலச் சந்ததி பெருக்கம் என்பது இதன் முக்கியத்துவம் ஆகும். தூர தேசம் சென்று ஈட்டும் செல்வத்தைவிட இளமை என்ற செல்வம் வளமை சார்ந்ததாக கருதப்பட்டது.

*தொல்காப்பியம்* சுட்டும் நிலம் சார்ந்த ஒழுக்கங்கள் புறப்பாடல்களிலும், அகப்பாடல்களிலும் திணையாகவே அறியப்படுகின்றது. பிரிதல் மருதம், முல்லை. குறிஞ்சி, நெய்தல் ஆகிய நான்கு வகை நிலங்களிலும் உள்ளோருக்கும் உரித்து (*தொல்.* பொருள். 975) அது மேலோர் முறைமை. பொருள் வயிற் பிரிதலும் உயர்ந்தோர்க்கு உரியது (பொருள் 979) என்று தொல்காப்பியர் சுட்டுவதை இலக்கியங்களும் வெளிப்படுத்துகின்றன. வறுமையால் பொருள் தேடி பிரியும் தலைவன் பற்றிய செய்திகள் மிகுந்துள்ளன.

புறத்திணையியலில் வெட்சித்திணை கால்நடைமேய்ப்புச் சமூகத்தின் முற்றிய ஊர்க்கொலை, ஆகோள்பூசல், பாதீடு, உண்டாட்டு, கொடை (*தொல்* பொருள் 1004) போன்றவற்றைக் கொண்டிருக்கிறது. வாகைத் திணையோ பார்ப்பனர். அரசர், அறிவர் பொருநர், ஆகியோரின் நிலைத்த வாழ்வும், ஒழுக்கமும் (*தொல்.* பொருள்: 1021. 1022) பற்றி விளக்குகின்றது.

இந்த இருவேறு சமூக வேறுபாடுகள் தத்துவ அறிதலிலும் வெளிப்படுகின்றது. முரண்பட்ட ஏற்றத்தாழ்வான சமூக வேறுபாடுகளை ஒருங்கிணைத்து வேந்து உருவாக்கத்திற்கான முயற்சி, சமூக மாற்றத்திற்கான முயற்சி உடையதாக *தொல்காப்பியம்* அமைந்துள்ளது. வேத- உபநிடதம் முன்வைக்கும் பிரம்மம். ஆன்மா பற்றிய தத்துவக் கருத்தியல் *தொல்காப்பிய*த்தில் எங்கும் இடம் பெறவில்லை. வேந்தமைப்பில் பார்ப்பனியச் சடங்குகள் ஏற்கப்பட்டு, இடம் பெற்றதையே *தொல்காப்பியம்* எடுத்துக் காட்டுகின்றது. இதில் காணப்படும் தத்துவக்கருத்தியல்கள் பழந்தமிழகத்தின் தனித்தன்மையுள்ள புவிசார் வாழ்க்கை வேறுபாடுகள் மீதான அகம்/ புறம் வாழ்வின் மீது அமைந்ததாகவே விளக்கப்படுகின்றன.

### 3.5.0. சங்க இலக்கியங்களில் தத்துவ நெறிகள்

மருத நிலத் தத்துவ அடிப்படைகளாக பிறவற்றை ஒருங்கிணைத்தவர்கள். இத்தகைய அறிவுச் சான்றோரான பிற தத்துவங்களை அறிந்த நூலறி புலவர்கள் உலகாயதம், சமணம், பௌத்தம், ஆசீவகம் ஆகியவற்றை தமிழர் தத்துவமாக வளர்த்தெடுத்தார்கள. அக்காலத்தில் தமிழகம் இலக்கியம், தத்துவம், தர்க்கவியல், சமயம், முக்திசாந்த நூல்களையும் கொண்டிருந்தது பற்றி (*சிறுபஞ்ச மூலம்* 86) அறிய முடிகின்றது. அன்றைய தத்துவங்களான அறுவகை நெறிகள் பற்றியும் (*ஏலாதி*-75) அறிய முடிகின்றது. அவை உலகாயதம், சாங்கியம், பௌத்தம், சமணம்,

நியாய வைசேடிகம், மீமாம்சம் ஆகியன. (*மணிமேகலை*:27-289) இந்த அறுவகைத் தத்துவ நெறிகளும். கடவுள் மறுப்புக் கொள்கைகயுடையனவாகும். மீமாம்சம் சடங்குகளை அடிப்படையாகக் கொண்ட கடவுள் மறுப்புக் கொள்கையாகும். சாங்கியம், பௌத்தம், சமணம் ஆகியன மறுபிறப்பு ஊழ்வினை ஆகியவற்றினை போக்க பிறப்பறுத்தல் எனும் கொள்கையுடையன. பற்றற்றானை பற்றுதல் நோக்கம் உடையன. இவற்றுள் முரணற்ற பொருள் முதல் வாதத் தத்துவமாக உலகாயதம் மட்டும் அமைந்துள்ளது.

அரசு அமைப்பு நிலைப்பட்ட பின்னர் பெரிய நகரங்களில் கல்வி கேள்விகளில் துறை போகிய முதிர்ந்த அனுபவமும், தத்துவப்பயிற்சியும் பெற்று இயற்கையாய் வாய்த்த பட்டறிவும் மிக்கவரான நல்லாசிரியர்கள் தமக்குள் நிலவும் கருத்தியல் குறித்து உரையாடல்கள் நிகழ்த்துவர். இதற்காக தமது புலமையின் உயர்சிறப்பினைப் புலப்படுத்தத் தாம் இருக்கும் இடத்தில் கொடிகளை ஏற்றி வைத்தனர். (*பட்டின*.169-171) அவர்கள் தமது கருத்தினை நிலைநிறுத்த விரல்கள் காட்டி வாதிட்டுக் கொண்டனர். அப்போது அவர்களது விரல்கள் பிரிவுபட்ட வரகுக் கதிர்களைப் போன்று காட்சி அளித்தன. (*மலை*.112) விவாத வடிவினில் புறநிலைப் பொருள்பற்றி கௌதமரின் நியாய நெறியானது அப்போது நிலவியது. வைசேடிகம் அதற்கு துணை புரிந்தது. சமணமும், பௌத்தமும் புறத்திணைக் கருப்பொருள்கள் பற்றி விளக்கம் கூறின. சாங்கியமானது உலகியல் பொருள்களினுடைய பரிணாமத்தினை எடுத்துரைத்தது. இவ்வாறு மதுரையில் சமணத் துறவிகளும், பௌத்த பிக்குகளும் தமது பணிகளை மேற்கொண்டிருந்தனர்.

கதிரோன் கதிர்களைத் தந்து மீண்டும் மடங்கி தன்னிடம் அடைவதைப்போல படைப்புக்கடவுள் உயிர்களை, உலகைப் படைத்துத் தன்னுள் பெயர்த்து ஒடுக்கிக் கொள்கிறது. (*கலி*.119, 129) ஐந்து பெரும் பூதங்களான மண், நீர், தீ, காற்று, ஆகாயம், கதிரவன், நிலவு, கோள்கள் இவற்றைவிட அளவிட இயலாததாக படைப்புக் கடவுள் உணரப்பட்டது. (*பதிற்*.14, 15) இந்த கடவுளை நிறுவ கருதல் அளவை பயன்பட்டது. திங்களானது தேய்கிறது, வளர்கிறது. வானத்தில் எப்போதும் நிலையாக இருந்து வருவதைப் போல இறந்துவிட்ட உயிர்கள் மீண்டும் பிறந்து மறைந்து பிறப்பதன் மூலம் நிலையானதாக இருக்கும் என்று வாதிட்டனர்.

படைப்புக் கடவுள் பற்றிய செய்திகள் *தொல்காப்பியத்*திலும் காணப்படவில்லை. புறத்திணையிலும், அகத்திணையிலும் பாடப்படும் தெய்வங்கள் வழிபாட்டிற்கும் இயற்கை உலகுக்கும் உரியவை என்றே *தொல்காப்பியம்* நோக்குகிறது. சங்க இலக்கியங்களில் பதிவாகியுள்ள வேத வேள்வியும், வேள்வித்தூணும் படைப்புக் கடவுளைச் சார்ந்தனவாக கொள்ள

முடியாது. பிறகு வந்த சைவம் வைணவம் ஆகியன தம்மை வேதத்தை அடிப்படையாக கொண்டுள்ளதாக அறிவித்துக் கொள்வதுடன், சிவனையும், திருமாலையும் இவ்வுலகிற்குரிய தெய்வங்களின் மரபிலிருந்து உருவாக்கிக் கொண்டனர். இதனால் அப்பாலைக் கடவுள்களின் உருவாக்கம் நிகழ்ந்துவிட்டது.

இதுவும் அரசு கட்டமைப்பிற்கேற்ப, தனியுடைமைச் சமூகத்திற்கான கருத்தியலாக வளர்ந்தது. *புற நானூற்*றிலும், *பதிற்றுப்பத்*திலும் மூவேந்தர்கள் அத்தகைய கடவுளின் நிலையில் வைத்து பாடப்பட்டுள்ளனர். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், செங்குட்டுவன், பெருஞ்சேரல் இரும்பொறை, இளஞ்சேரல் இரும்பொறை, தலையானங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், நன்மாறன், நலங்கிள்ளி, கிள்ளி வளவன், திருமாவளவன் ஆகியோர் அரசு உருவாக்கத்தின் போது மேன்மேலும் வெற்றியை ஈட்டிய மன்னர்களாவர். இவர்கள் மனித அறிவிற்கும், பஞ்ச பூதங்களுக்கும் அப்பாலானவர்களாக பாடல்கள் எடுத்துரைக்கின்றன. இளஞ்சேரன் இரும்பொறை திருமாலாக பாடப்பட்டுள்ளான். தனது ஒளிக்கதிர்களை வெளியே பரப்பி மீண்டும் அவனே அவற்றைத் தன்னுள் பெற்று ஒடுக்கிக் கொள்வதாக கதிரவனைப் பற்றி நல்லந்துவனார் குறிப்பிட்டு அவ்வாரே படைப்புக் கடவுளும் விளங்குவதாக (*கலி* 119, 129) பாடியுள்ளார். சிவன், திருமாலை படைப்புக் கடவுள்களாக *பரிபாடல்* தொடங்கி சைவ வைணவ இலக்கியங்கள் விரித்துப் பாடியுள்ளன. எனவே சங்க காலத்திற்கு பிறகே வேதம் உபநிடதம் அடிப்படையிலான வைதீக தத்துவங்கள் விளக்கப்பட்டுள்ளது என்பது இங்கு கவனிக்கத் தக்கது. அதற்கு முன்பு அவைதீக தத்துவங்களான சமணம், பௌத்தம், ஆசீவகம், உலகாயதம் ஆகியனவே ஆட்சியாளர்களின் தத்துவங்களாக இருந்தன.

சான்றோர் என்ற சொல் இனக்குழு சமுதாயத்தில் வீரரை குறித்தது. அரசு நிலைப்பட்ட காலத்தில் கற்றோரைக் குறித்து (*மதுரை* 764, 765) என *மதுரைக் காஞ்சி* குறிப்பிடுகின்றது. இத்தகைய கல்வியை அரசர்களும், வணிகர்களும் போற்றினர். கற்றவற்களை ஆதரித்தனர். அவர்கள் சமணர்களுக்கும், ஆசீவகர்களுக்கும், பௌத்தர்களுக்கும் உருவாக்கிய கற்படுக்கைகள் இதற்கு சான்று பகர்கின்றன. சிலவற்றில் அரசர்களின் பெயர்களும், கொலுவாணிகன், பொன் வாணிகன், அறுவை வாணிகன் முதலிய வாணிகர்களும், கைவினைஞர்களும் இவ்வாறு படுக்கை அமைத்தனர் என தொல்லியல் சான்றுகள் கூறுகின்றன. நகர அரசுகளைச் சார்ந்தும், வேளாண்மை சாராத வணிக குழுக்கள் வழியாகவும் அவைதீக நெறி சார்ந்த சான்றோர்கள் பாதுகாக்கப்பட்டனர். நகரங்களில் பள்ளிகள் அமைத்தனர். முல்லை நிலப் பகுதிகள் வணிகத் தடங்களில் கற்படுக்கை அமைத்து கொடுத்தனர்.

இவ்வாறு ஆதரிக்கப் பெற்ற தமிழ்ச் சான்றோர்களே தமிழ் மொழியை

இலக்கணப்படுத்தவும் பல்வேறு அறிவுப்புலங்களின் வளர்ச்சியை தத்துவ நிலைக்கு உயர்த்தியும், தர்க்கவியலை வளர்த்தும் தமிழர் தத்துவத்துக்கு சிறப்பாகப் பங்காற்றினர். சமக்கிருதம், பாலி, பிராகிருதம் ஆகிய வட இந்திய மொழிகளோடு, சீனம் கிரேக்கம் ஆகிய மொழிகளையும் அறிந்திருந்த அவர்கள் தமிழர் தத்துவ மரபினை உலகத் தரத்திற்கு உயர்த்தினர்.

### 3.5.1. சங்க இலக்கியத்தில் அகம்- புறம்

கவிதையின் தோற்றம் பற்றி ஆராய்கையில் தத்துவத்தில் ''அகத்தில் இருந்து புறத்தையும்'', ''புறத்தில் இருந்து அகத்தையும்'' பிரித்து நோக்குதல் என்பது சமூக அரங்கில் உணர்ந்தே செயல்படும் தத்துவ சிந்தனை உள்ள வர்க்கத்திற்கும் சமூகத்தின் பிறபகுதி யினரிடையே அறியாமை நிலவுவதற்குமான வெளிப் பாடே ஆகும். கொள்கை, நடைமுறை ஆகியன உணர்வில் பிரிந்துள்ளன. இவை சமூக யதார்த்தத்திலும் பிரிந்தே உள்ளன என்று கிறிஸ்டோபர் காட்வெல் குறிப்பிடுகின்றார்.[17] இரத்த உறவுள்ள இனக்குழு - குல வாழ்க்கைமுறை நெருக்கடிக்கு உள்ளாகி, குழு மணத்திலிருந்து தோன்றிய இணை மணக் குடும்பமும் ஒருதார மண முறையை நோக்கி வளர்ச்சியடைந்து முதல் வேலைப்பிரி வினை தோன்றிய சமூகமாக, வர்க்க ஆக்கம் நிகழ்ந்து கொண் டிருந்த சமூகமாக சங்ககால சமூகம் இருந்துள்ளது. இங்கு அகம் புறம் வேறுபடுதலும் இயல்பாகவே நிகழ்ந்து விடுகின்றது. வீரயுகம் எனக் கருதப்படும் சங்க கால சமூகம் நாகரீக நிலையும் வர்க்க ஆக்கமும் நிகழ்ந்து கொண்டிருந்த சமூகம் எனக் கொள்ளப் பட்டால் அதற்கு முந்தைய அநாகரிக சமூகமும், துவக்க கால காட்டுமிராண்டி சமூகமும் பற்றி அறிய பிற தொல்லியல், மானுட வியல் சான்றுகளையே நாட வேண்டியுள்ளது. (தொல் பழங்கால குகை ஓவியங்களும், பாறைக் கீறல்களும் தமிழ்நாட்டில் பரவலாக காணப்படுகின்றன). ஆனாலும் மாற்றமுறும் குல மரபின் எச்சங்களையும் தாய் வழி சமூகத்தின் அழிவையும், வர்க்க சமூகத்தின் தோற்றத்தையும் உள்ளடக்கியதாக சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன.

தாய் வழிச் சமூகத்திலிருந்து தந்தை வழிச் சமூகத்திற்கு மாறும் கட்டத்தில் புற வாழ்க்கை ஆணுக்குரியதாக மாறிவிட்டது. ஆண் உடைமையாளனாக மாறிவிட்டான். உயிர் வாழ்வதற்கான வழியை மேற்கொள்பவரே தலைமை பாத்திரத்தை அடைவர் என்று எங்கல்ஸ் குறிப்பிட்டவாறு உணவு சேகரிக்கும் வாழ்வில் தலைமை பாத்திரத்தை பெண் ஏற்றிருந்த நிலைமை மாறி உற்பத்தி சமூகமாக மாறிய சூழலில் ஆணே ஜீவனோபாயத்துக்கு முன் கை எடுத்து தலைமை பாத்திரம் ஏற்றுக் கொண்டான்.[18] சங்க இலக்கியத்தில் தினைபுனம் காத்தல் பெண்தான் மேற்கொள்கிறாள். இது நிலைத்த நீர் பாசன விவசாயத்திற்கு முந்தின

ஆதிவிவசாய நிலையாகும். பெண்ணுக்கு துணையாக வேட்டை யாடியும், உணவு சேகரித்தும் திரிந்த ஆண், விலங்குகளைப் பழக்கி வீட்டுச் செல்வங்களான கால்நடைகளை வளர்த்தும் நீராதாரங்களைத் தேடி நிலைத்த வேளாண்மையையும், அதன் தொழில் நுட்பங்களைக் கற்றலும் அவனுக்கு தலைமை பாத்திரத்தை ஏற்படுத்தி தந்தன. அங்கு குலச்சமூக சிதைவு தோன்றியது. அகம் / புறம் பிரச்சினையை சிக்கலாக்கியது.

அக இலக்கியத்தில் ஆணுக்கு எந்த குடும்பம் பற்றிய தந்தை கடமையும் இல்லை. தலைவி காதலுற்று தலைவனுடன் உடன்போக்கு மேற்கொள்ளும்போது அதனை தோழி, செவிலித் தாய், நற்றாய் ஆகியோர்தான் தீர்ப்பவர்களாக, நடத்துபவர்களாக வருகின்றனர். மேலும் தோழி, செவிலித்தாய், நற்றாய் இவர் களுக்கிடையேயான உறவு முறை என்ன? தாய் வழி சொத்துரிமை அடிப்படையிலான குடும்ப அமைப்பு முறைக்குள் இடம்பெறும் உறவுமுறைகளாக தோழி, செவிலித்தாய், நற்றாய் ஆகியோர் இருக்க முடியும். சமூகத்தின் இயக்கு சக்தியாக இருந்து முற்றிலும் புதிய ஒருவனுக்கு ஒருத்தி என்னும் தனிக் குடும்ப வடிவம் தோன்றக் காரணமாய் இருந்தவர்கள் இவர்களே.

தாய்வழிக் குடும்பம் என்பது குல உறுப்பினர்களை உள்ளடக் கியது. இதில் சொத்து, வாரிசுரிமைகளும்கூட தாய்வழி முறை யிலேயே தீர்மானிக்கப் பட்டன. ஆண் திருமணத்திற்கு பிறகு மனைவியின் இல்லில் (குலத்தாருடன்) வாழ்ந்திருக்கின்றான். இந்த குலத்தைச் சார்ந்த ஆண் பிறிதொரு குலத்தில் மணம் முடித்தால் அக்குலத்திலேயே தங்கி வாழ்வான். இவை சங்க இலக்கியத்தில் ‘எம்இல்’ என்று தலைவியால் அழைக்கப்படு கின்றது. இந்த ‘எம்இல்’ பற்றி *நற்றிணை* 293, *குறுந்தொகை* 138, 354, *கலி* 78, 83, 97) குறிப்பிடுகின்றன என்று பக்தவத்சல பாரதி குறிப்பிடுகின்றார்.[19] மேலும் திருமணத்திற்கு முன் வாழ்ந்த தனது குடும்பத்தை ஆண் ‘தம் இல்’ என்று குறிப்பிடுவதையும் எடுத்துக்காட்டுகிறார்.

ஒத்த அன்பினால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்து பிறந்த பேரின்பம் அகம். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்கு புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்து உணர்வே நுகர்ந்து இன்பம் உறுவதோர் பொருள். மேலும் புறம் என்பது அன்புடையார் தாமே அன்றி எல்லாருக்கும் துய்த்து உணரப்படுதலானும் இவை இவ்வாறு இருந்ததெனக் கூறப்படுதலானும் அவை புறம் எனப் படும் என்பது நச்சினார்க்கினியர் உரை. அகம்புறம் பிரிவினை பற்றிய இம்மாறுபட்ட விளக்கம் தனிக்குடும்ப அமைப்பு நிலைப் பட்டு நிலவுடைமை சமூகத்தின் அலகுகளாக மாறியிருந்த காலச்சூழலில் நச்சினார்க்கினியரால் தரப்பட்ட விளக்கம். அவர் காலத்தில் குடும்பம் அரசின்

அங்கமாய் இருந்தன. ஆனால் ஒரு சமூக மனிதனின் உற்பத்தி, மறு - உற்பத்திக்கான வாழ்க்கை முறையில், சமூகம் வர்க்கங்களாக பிரிய வேண்டியதற்கு முன் நிகழ்ந்த முதல் சமூக வேலைப்பிரிவினையின் வாழ்வியல் விளைவாகவே அகம் / புறம் தோன்றியது. அக வாழ்க்கை பெண் ணுக்கும், புற வாழ்க்கை ஆணுக்கும் உரியதானது. குழந்தைப் பெறுவதற்காக ஆணுக்கும் பெண்ணுக்குமிடையிலான வேலைப் பிரிவினைதான் முதல் வேலைப் பிரிவினையாகும். வரலாற்றில் தோன்றிய முதல் வர்க்கப் பகைமையும் ஒருதார மணத்தின் வர்க்கப் பகைமைதான். முதல் வர்க்க ஒடுக்குமுறை பெண்பாலை ஆண்பால் ஒடுக்குகின்ற ஒடுக்கு முறையுடன் பொருந்துகின்றது. இது வரலாற்று ரீதியில் ஒருதார மணமுறை மகத்தான முன்னேற்றமாகும். இந்நிலையில் அகம் / புறம் ஆகியவற்றின் செயலூக்கமுள்ள உறவு என்பது மனிதன் இயற்கை ஆகியவற்றின் உறவுநிலை பற்றியதுமாகும். இதனடிப் படையிலேயே ஒவ்வொரு திணை வாழ்வின் அகமும் சங்க இலக்கியத்தில் பெரிதும் விவரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு திணை வாழ்விலும் பாடப்பட்டுள்ள பாடல்கள் அகமாகவும், புறமாகவும் தனித்தனி இயல்புகளுடன் உதித்தன. இதனையே பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்கள் அகம் என்பது Life with in the house hold புறம் என்பது Life with in Community என்று குறிப்பிடுகின்றார்.[20] இவ்வாறு தனிக்குடும்பமும் ஆண் வழியிலான வாரிசுரிமையும் உருவானபோது ஒருதார மணமுறை நிலைபட்டு கற்பு என்ற கருத்தியல் உருவானது. திருக்குறளின் இதற்கான பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாகும். எனவே பிறர்க்கு அறிவிக்க இயலாத காதல் வாழ்வே அகவாழ்வு என்பதால் தலைமக்கள் இன்னார் எனச் சுட்டப்படுவதில்லை. மேலும் உள்ளப் புணர்ச்சி மெய்யுறு புணர்ச்சியின் போது கருதி பார்த்தல், உள்ளம் மகிழ்தல், மனமொருமித்தல் ஆகிய செயல்கள் நிகழுமாதலால் இத்தகைய அகச் செயற்பாடுகளாலும் அகமெனப் படும் என பிற்காலத்தே ஏற்பட்டது. சங்க அகநானூற்றுப் பாடல்களில் எழுபது பாடல்கள் தலைமக்கள் தம் நெஞ்சிற்கு கூறுவதாகப் பாடப்பட்டுள்ளன. ஒரு பாடல் தம் நெஞ்சிற்கு கூறுவ தாக தேர் பாகற்கு கூறி விரைவு படுத்துவதாக அமைந்துள்ளது. அல்ல குறிப்பட்ட தலைமகன் நெஞ்சிற்கு சொல்லியதாகவும் (*அகம்.* 62) இடைச்சுரத்து மீளக் கருதிய நெஞ்சினை கழறிப்போயதும், தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் நெஞ்சிற்கு சொல்லியது(*அகம்.* 152) முதலான இவை தம் மனதுள் நினைத்துச் சொல்வது போல் (Stream of Consiousness) நனவோடை அல்லது அகமனக் கூற்றாக வெளிப்படுகின்றது (Internal Monologue) எனலாம். பிரிவு துயரில் இன்னபிற காரணங்களில் எண்ணித் தனக்குத்தானே புலம்புதல், உருகுதல் என்பன இவையாகும்.

**மக்கள் நுதலிய அகனைந்திணையும்**
**சுட்டி ஒருவர்ப் பெயர் கொளப் பெறாஅர்**

(*தொல்*. அகத்திணை : 57) என்று *தொல்காப்பியம்* சுட்டுவதற்கேற்ப தலைமக்களின் காதல் பாடப்பட்டிருப்பினும், இன்னாரென்று சுட்டப்படவில்லை. புறப் பாடல்களில் பெயர்கள் சுட்டப்படலாமேயன்றி அகப்பாடல்களில் தொல்காப்பியரால் மறுக்கப்பட்டது.

**புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது**
**அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே**

(*தொல்*. அகத்திணை : 58) இவ்வாறு அகம் சார்ந்த காதல் பாடல்கள் தனிமனிதரைக் குறிப்பிடாதத் தன்மை உலகமெங்கும் பொதுவாகவே காணப் படுகின்றன. அவ்வாறே ஆண்மையும் வீரமும் சார்ந்தவை தனிமனிதனைக் குறித்தும், வரையறைக்குட்பட்டும் பாடப்பட் டுள்ளதையும் எடுத்துக் காட்டும் க. கைலாசபதி அவர்கள் இதற்கான மூலம் நீலகிரி தோடர் இன பழங்குடி மக்களிடம் காணப் படுவதை எடுத்துக் காட்டுகின்றார். தோடர்களின் காதற்பாடல்கள் மறைமுகத்தன்மை உடையன என்பதை அவர்கள் உணர்ந்தே பாடுகின்றனர். எல்லாரும் அறிந்த நிலையில் அவை பாடப் படுவதில்லை. இப்பாடல்களில் அவர்களின் குடிப்பெயர் அறியப் பெறுவதில்லை. இப்பாடலை பாடுபவர், அவரது காதலுக் குரியவர், காதலுக்கு துணை செய்யும் நெருக்கமானவர் தவிர இதைப்பற்றி பிறர் அறிய மாட்டார்கள் என்பதையும் விளக்குகின்றார்.[21]

அறமும், பொருளும் ''புறத்தில்'' அடங்கும். பொருளீட்ட லும், ஈட்டியப் பொருளினைப் பலருக்கும் கொடுத்து அதனால் பெற்ற மகிழ்ச்சியும் புறம் எனப்படும். புறத்திணையின் முக்கிய மான உளவியல் பண்பு நிலையாமை பேசும் காஞ்சித்திணையில் வெளிப்படும். எந்நேரமும் போரிடுவதும், இன்முகத்துடன் களம்புகுந்து எதிரியைக் கொல்வதும் அல்லது விழுப்புண் பெற்று மாள்வதும் அன்றைய வாழ்க்கை நெறியாகும். இரத்த உறவுள்ள இனக்குழு சமூகத்துக்கு உலகம் என்பதே அந்த இனக்குழுதான் என்ற அளவில் பிற இனக்குழுச் சமூகங்கள் வேற்றவர்களே. எனவே ஆநிரை கவர்தலும், நிரைமீட்டலும், பாதுகாத்தலும் ஆகிய போர்கள் நடந்தேறுகின்றன. நிறை கவர்தலாகிய வெட்சித்திணையில் உண்டாட்டு என்ற துறையும் நிரை மீட்டலான கரந்தைத் திணையில் கையறுநிலை, வேத்தியல், செருமலைதல், நீள்மொழி, நெடுமொழி, குடிநிலையுரைத்தல் ஆகிய துறைகளும் இவற்றை வெளிப்படுத்தும். விழுப்புண் பெற்று வெற்றியுடன் திரும்பி வருவதும் அதனால் கிடைக்கப் பெற்ற செல்வங்களை அனைவருக்கும் பாதீடு செய்வதும், பரிசில் கொடுத்தலும் அதனாலுண்டான மகிழ்ச்சியும் புறமாகும். அதாவது அன்றைய குலச்சமூகம் தொடர்ந்து நீடிக்கவும், நெருக்கடியினை சமாளிக்கவும் குலத்துக்குள் பகிர்ந்து கொள்ளப் பட்டது. பகைமேற் செல்லல் என்பது தன்னைச் சார்ந்திருப்ப

வரைக் காத்தல் என்னும் நோக்கத்திற்காக மேற்கொள்ளப்பட்டதே ஆகும். ஆகவே அன்றைய அக, புற வாழ்க்கை என்பது எது வந்தாலும் எதிர்த்திடும் வீரமும், அதற்கிணையான பெண்ணுடனான காதலும் நிறைந்த வாழ்க்கை ஆகும்.

### 3.5.2. வர்க்க பிரிவினையும் அகம் புறம் வேறுபடுதலும்

தொல்குடி மாந்தரிடம் (கவிதையும்) கலையும் அறிவியலும் எதிரெதிரானதாக இல்லாமல் எல்லாரிடமும் பொதுவாக சங்கமித்திருந்தன. அம்பையும், கோடரியையும் உண்டாக்கிய கைகளாலேயே ஓவியங்களையும் வடித்தான். ஆனால் வர்க்க உருவாக்கம் நிகழ்ந்தபோது மூளையுழைப்புக் குரியோருக்கானதாக கவிதையும் அதனுள் அடங்கிய சட்டம், வரலாறு, மந்திரம், மாயாஜாலம் எல்லாமே ஆளும் தரப்பாருக்கானதாகவும் மாறி விட்டது. அறிவியல் உடல் உழைப்புக்கு உரியவர்களுக் கானதாகி விட்டது. அது ஒரு தொழில் நுட்பம் என்ற வகையில் படகு கட்டுவது, கலப்பை செய்வது, அரிவாள் வடிப்பது எல்லாம் நுட்பமான மொழியின் துணையில்லாமல் பார்த்து செய்வதன் மூலமாகவே பழகிக் கொள்ள முடியும். இது நடை முறை அனுபவத்தைக் கொண்டு குழுவின் உறுப்பினர்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டது. இந்த மக்களின் மொழி நடைமுறை வாழ்வில் பயன்படும் கருத்து பரிமாற்ற பேச்சு மொழியாகும். ஆனால் உணர்ச்சி பூர்வமான கவிதையோ மந்திர சக்தி வாய்ந்தது. அதன் எதுகை, மோனை, சீர், தளை, ஓசை, நயம் மிகுந்த ஒலி ஆகியன அக வலிமை அளிக்கின்றன. எனவே கவிதை மூலமான தத்துவங்களைச் சட்டங்களைக் கொண்டு சமூகத்தை வழிநடத்த வும், கட்டுப்படுத்தவும் முடிந்தது.

இயல்பாகவே இலக்கணம் கூற முற்பட்ட போது 'தன்மை', 'முன்னிலை' என்று கூறியவுடன் தன்மை ''அகத்தையும்'' முன்னிலை ''புறத்தையும்'' வெளிப்படுத்துவதாகத்தான் அமைகின்றது. அவ்வாறே வினைச் சொல்லில் தன் வினை / பிறவினை என்ற பாகுபாடும் சமூகப் பாகுபாட்டை பேசுகின்றது. தானே செய்தல் தன்வினை என்றும்; பிறரைச் செய்யும்படி ஏவுவது பிறவினை என்றும் கருதப்படும். குலச் சமூகத்தில் ஒன்றிணைந்து கூடி தொழிலில் ஈடுபட்டு வாழ்ந்த போது ''நான்'' (தன்மை) அகத்தையும், நீ (முன்னிலை) புறத்தையும் குறித்தன. 'படர்க்கை' மூன்றாவதாக அயலிடத்தில் உள்ளவரைப் பற்றியது. அது பிறகு அடுத்தகட்ட வளர்ச்சியில் உருவானது. தன்வினையும், பிறவினையும் சொத்துடைமை தோன்றியபோது ஏவுபவனுக்கும், ஏவப்படுவோனுக்குமானதாக குறித்து வந்ததாகும். இது மறை முகமாக கிழான், வினைஞர், வினைவலர் ஆகியோருக்கு இடையிலான உறவினை பிரதிபலிக்கின்றது. உற்பத்தி உறவுகளில் ஏற்படும் மாற்றங்களையே இலக்கியங்களும் இலக்கணங்களும் வெளிப்படுத்துகின்றன. வினைவலர் நிலமற்ற விவசாயத் தொழிலாளர்களாவர்.

இவர்கள் உழுதல், விதைத்தல் நீர்ப் பாய்ச்சுதல், அறுவடை செய்தல் ஆகிய செயல் மேற்கொள்பவர் களாவர் (*குறு;* 309, *நற்;* 60, 400; *பெரும்* 196-262; *பொருந;* 7-19). சொத்துடைமையும், கிழான் என்றழைக்கப்பட்ட உடைமை யாளர்களால் பேரளவு நெல் சேமித்து வைக்கப்பட்டதும் (*அகம்;* 44 *நற்றிணை;* 26, 60) அறிய முடிகின்றது. இனக்குழு சமூகம் உடைந்து நிலைத்த வேளாண்மை அடிப்படையிலான சொத்துடைமை வர்க்கம் தோன்றியதும் வரப்பில் நின்று ஏவுவோனுக்கும் சேற்றில் பரம்படிப்பவனுக்குமான வர்க்க முரண்பாடும் வளர்கின்றது. நெல் களஞ்சியத்தில் நெல் குவிந்து கிடப்பதும் மறுபுறம் கடைசியர், வினைவலர் வறுமையுறுதலும் அந்நியமாதலைக் குறிக்கிறது. இங்கு D.D கோசாம்பி அவர்கள் வேத நாகரீகம் குறிப்பிடும் மூலமுதலான சாதிகளில் தென்னிந்தியா இருசாதிகளை மட்டும் வளர்த்தது; பிராமணர்கள் மற்றும் ''சூத்திரர்கள்'' என்று குறிப்பிடுவது கருதத் தக்கதாகும்.[22] சங்க காலத்திலேயே ஊர்/சேரி என்ற சமூக பாகுபாடு இருந்தது. இது அறிவுக்கும் உடற் செயற்பாட்டுக்கும் இடையில் நிகழ்ந்த பாகுபாடாகும்.

தொல்குடி வாழ்க்கையில் தனிநபர் அகம் தொல்குடி சமூக கூட்டு பிரதிநிதித்துவத்தை பிரதிபலிக்கக் கூடிய ''குழு அகமாக'' விளங்கியது. அரசு உருவான காலத்தில் அன்றைய வர்க்க வடிவமான சாதிகளாக பிளவுபட்டு அவையே நிலைபட்டபோது சாதிய அகமாக தனிநபர் அகம் மாறிவிட்டது. இது தவிரவும் தனி நபர் அகம் இருக்க முடியுமென்றால் வெறியாடிய பூசாரி, மாயமந்திரம் நிகழ்த்திய புரோகித பிராமணன் குழுப் பாடல்களை எடுத்து பிற்காலங்களில் காப்பியங்களாக மாற்றிய படைப்பாளிகள், நடிகர்கள் ஆகியோரிடத்தில் 'தனிநபர் அகம்' வெளிப்பட்டது.

### 3.5.3. அகம் புறம் ஒருங்கிணைதல்

இரத்த உறவுள்ள இனக்குழு வாழ்க்கையிலிருந்து, குடி வாழ்க்கையிலிருந்து மாறி திணை வாழ்க்கைக்குரிய மனிதனை உருவாக்குவது என்பது நில அடிப்படையிலான அரசு உருவாக்கத் திற்காகத்தான். மருத நிலத் தலைவர்களாக விளங்கியவர்களே முதுகுடி மன்னர்களாக ஆற்றுப் படுகைகளை ஒட்டி உருவாயினர். இந்த மருத நில தலைவர்கள் வேந்தர்களாகவும் அரசேற்படுத்தும் முயற்சியிலீடுபட்டனர். தொல்காப்பியரின் திணைக் கோட்பாடு அரசு உருவாக்கத்திற்கான அடிப்படைகளை வழங்குகின்றது. இனக்குழு சமுதாயத்தின் எச்சங்களை இன்னமும் கொண்டிருந்த, தம்மைச் சார்ந்துள்ளோரைப் பாதுகாத்து உணவளித்திடவும் போரிட்ட சீறூர் மன்னர்களிலிருந்து மாறுபட்டு, குறிப்பிட்ட நில எல்லைகளைக் கொண்டு மருத நிலத்தலைவர்களாக விளங்கிய முதுகுடி மன்னர்கள் முல்லை நிலங்களையும் இணைக்க முயற்சித்தனர். அவர்களை விடவும் மேலான

நிலையில் இயற்கை வளம் சார்ந்த மலைப்பகுதிகளின் தலைவர்களாக விளங்கிய குறுநில மன்னர்களும் சங்கப் பாடல்களின் மூலம் அறியலாகின்றனர்.உபரி உற்பத்தியும் மக்கள் தொகை பெருக்கமும், நீரியல் வேளாண் தொழில்நுட்ப வளர்ச்சி ஆகிய காரணங்களால் மருத நிலம் சார்ந்த இனக்குழுத் தலைவர்களே போர்த்தொழில் மூலம் பூர்வ கால அரசுருவாக்கத்திற்கு முனைந்தனர். வேந்து, வேந்தர், பாசறைத் தொழில் பற்றி நெடுநல் வாடை குறிப்பிடுகின்றது. ஆகவே இவற்றிலிருந்து பரந்த நானிலந் தாங்கிய வேந்தர் உருவாக்கமும் இனக்குழு வழிவந்த சமூகத்திலிருந்தே உருவானது. அரசில் உள்ளது போன்ற நிலையான படையணிகள் வேந்தில் இருந்ததற்கான சான்றுகள் சங்க இலக்கியத்தில் உண்டு.

இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்ற முறையில் தொல்காப்பியர் ஐவகை நிலத்துக்குரிய அகப்புற இலக்கணங்களைக் கூறியதுடன் நில்லாமல், அகத்தையும் புறத்தையும் இயைபுபடுத்தியும், ஒன்றுடன் ஒன்று தொடர் புடையதாகவுமே அமைத்தார். ஆனால் தன்னெழுச்சியாக உருவான காலத்தில் அவை வேறு வேறாகவே பாடப்பட்டிருந்தன. 'வெட்சிதானே குறிஞ்சியது புறனே' என்ற நூற்பாவால் அகப் பாடல்களும், புறப்பாடல்களும் வெவ்வேறான தன்மை யுடையவை என்றே கருதப்பட்டாலும் அகம் புறம் இயைபு தொல்காப்பியரால் மேற்கொள்ளப்பட்டது. ஒரு மனிதனின் இருவேறுபட்ட முரணான வாழ்க்கை, முதல் வேலைப் பிரிவினையை ஒட்டி நிகழ்ந்த இந்த வாழ்க்கைமுறை வேறுபடுத் தியும் இயைபு படுத்தியும் இலக்கணப் படுத்தப்பட்டது. மனிதன் தான் வாழ்வதற்கானத் தேவைகளுக்குத் தானே உற்பத்தி செய்து கொள்வதோடல்லாமல் தன்னைத்தானே மறு உற்பத்தி செய்து கொள்கின்றான் என்ற மார்க்சிய அடிப்படையில் நோக்கும்போது வர்க்க சமூகம் உருவான காலத்தில் இவ்வாறுதான் பிரிந்தும், இணைத்தும் நோக்கும் விதத்தில் உருவாக்கப்பட்டது. சமூகத்துடன் இணைந்த பொருளுற்பத்தி 'புறம்' என்றும், தன் இனம் நீடிப்பதற்கான மறு உற்பத்தி 'அகம்' என்றும் பிரித்துணரப் பட்டது. ஒவ்வொரு முதற் பொருளும் அல்லது நிலமும் அதற்கேயுரிய அகச் செயற்பாடாகிய உரிப் பொருளுடன் இணைத்துக் கூறப்படக் காரணம் அதற்கான அகப்புற இயைபுகள் சங்க பாடல்களிலும் காணப்படுவதால்தான். வாழப்பெறும் வாழ்க்கை ஒன்றுதான். அதன் இருபகுதிகள் இவ்வாறு பிரித் தறியப்பட்டது. ஒரு மனிதனின் தனிப்பட்ட வாழ்க்கையும், சமூகம் சார்ந்த வாழ்க்கையும் அவனது வாழ்வில் இணைந்தே உள்ள பிரிக்கமுடியாத இரண்டு கூறுகள் ஆகும்.

அரசு உருவான பிற்சங்க காலத்தில், வேந்தர் உருவான காலத்தில் அகம் புறம் ஒருங்கிணைந்த பார்வை ஏற்பட்டது. எனவே சங்கப் பாடல்களில் அங்கொன்றும், இங்கொன்றுமாக வெளிப்பட்ட அகம்புறம் இயைபுகள் உச்ச பட்சமாக நெடுநல்

*வாடை*யில் வெளிப்படுகிறது.

காப்பிய இலக்கியங்கள் உருவாவதற்கு முன் நிலையாக விளங்கும் நெடுநல் வாடை 188 அடிகளைக் கொண்டு அமைந்த ஆசிரியப்பாவால் பாடப்பட்டதாகும். கூதிர் காலத்தில் மக்களும் பிற உயிரினங்களும் குளிரால் வருந்தும் நிலையும் ஊரின் அமைப்பும், பொறுமை மிகுந்த கோவலர் நிலையும், நிலைத்து தங்கி விட்டாற்போன்ற கூதிர் காலத்தால் ஏற்பட்ட விளைவுகளும், அரண்மனையின் அந்தபுரத்தில் அரசமாதேவியின் பிரிவுத் துயரமும் அரசனின் கடமையும் ஒருமித்து சொல்லப்படுகின்றன. அகமும் புறமும் ஒருங்கிணைக்கப்படுகின்றன.

சூல் முற்றித்தளர்ந்த இயல்புடைய மகளிரின் பால் முற்றித் திரண்ட முலையைப் போல பக்கம் உருண்டிருக்கும் குடத்தை உடையதாக கட்டிலின் கால்கள் அமைந்திருக்கும். அன்னத்தின் தூவி முதலியவற்றாலான பஞ்சணையில் தக்க அணிகலன்களை அணியாமலும், வண்ணங்களைக் கொண்டு ஒப்பனை செய்யாமலும் அரசமாதேவி மன்னனின் பிரிவாற்றாமல் வருந்து கின்றாள். அவன் மீது நேரத்துக்கு நேரம் பெருகும் அன்புடைய வளாக இருக்க நெடிய வாடை அவளை வருத்துகின்றது.

பாசறையில் அரசனின் நிலை வேறானது. அனைவரும் உறங்கும் நள்ளிரவில் கூதிர் காலத்து வாடைக் காற்று வீச, போரில் விழுப்புண் பட்ட வீரர்களின் உள்ளத்தில் மகிழ்ச்சி தோன்ற அவர்களை அணுகி முகமலர்ந்து நோக்கினான். பாசறையின் புண்பட்டோரின் வருத்தத்தைப் போக்கிடத் திரிந்த வண்ண மிருந்தான். மழைநீர் சொட்ட நீர் துளிகளைச் சிலிர்த்து உதறிய குதிரைகளைத் தடவிக் கொடுத்தான். இவ்வாறு அரசமாதேவிக்கு பிரிவாற்றாமையைத் தந்த நெடிய வாடை அரசனுக்கு தொழிலில் ஊக்கத்தை அளித்ததால் நல்ல வாடையாயிற்று. இவ்வாறு முழுதளவிலான அகம் புறம் ஒருமித்த நோக்கு கொண்டு காப்பியங்களுக்கு முன்னிலை காப்பியமாக நக்கீரரால் படைக்கப் பட்டது *நெடுநல்வாடை*.

### 3.5.4. பிரிவு, துன்பியலானது

அகம் புறம் பாகுபாட்டுடன் தொடர்புடையதும் திணையுள் மிகுந்த முக்கியத்துவமுடையதும் 'பாலை' எனலாம். பாலை என்ற சொல்லே 'பிரிதல்' என்ற பொருளில் அமைந்ததாகும். அகனைந்திணை அனைத்திற்கும் பிரிவு பொதுவானது. பிரிவு என்பது துயரம் (Tragedy) சார்ந்தது. அது மானுட வாழ்வின் அர்த்தம் / அர்த்தங்கள் பற்றிய தேடல் சார்ந்தது.[23] பிரிவினாலுண்டான துயரத்திற்கு ஆட்பட்டவர்கள் தலைமக்கள். அவர்கள் சார்ந்த சமூகத் திற்கு பொறுப்பும், அக்கறையும் கொண்டும், மாற்றங்களுக்கு முன் கையெடுத்தும் முனைபவர்கள்.

நெருக்கடிகளைத் தீர்க்கவும் அதற்காக கற்கவும், போரிடவும் உயிரைக் கொடுக்கவும், பொருளீட்டவும் முனைந்து நிற்பவர்கள். அவர்களின் தலைமை பண்பும் இதிலிருந்தே உருவானதாகும். சொத்துடைமையுடன் இணைந்ததான தலைமைப் பண்பு பிறகு உருவானது.

வெவ்வேறு நிலம் சார்ந்த, குலம் சார்ந்த ஆணும் பெண்ணும் இணைந்து வாழ உடன்போக்கு மேற்கொள்ளல் பாலை. தோன்றப் போகும் ஒரு புதிய சமூகத்துக்கான வேர்களாக இருந்து அதனை தொடங்கி வைப்பவர்கள் இத்தலை மக்கள். துன்பமும் அதனைப் போக்கிடும் முயற்சியும் பற்றியது பாலைத் திணை.

தமிழ் நாட்டில் நிலத்தால் பாலை இலதேனும் காலத்தால் பாலை உண்டு (*சிலம்பு* 11 : 64 - 66) அதாவது வளந்திரிந்த நானிலங் களின் தன்மையும் பாலையாகும். நிலமழிதல், உற்பத்தி இன்மை யைச் சுட்டுவது இது. உறுப்பு நலங்கெடுதல், பிரிவாற்றாமை பற்றியது. பிரிவின் பாற்பட்டு துன்பத்திற்காளாகி அடுத்தகட்ட நகர்வை நோக்கி தள்ளுவது, நானில மக்களும் பொதுமை படுவது பாலை.

**திணை மயக்கம்**




முல்லை முதலான நானில மக்களும் முறைமையில் தவறிய வழி தவறாது அறத்தை நிலை நிறுத்தல் காரணமாகவும் பொருள் ஈட்டுதல் காரணமாகவும் பிரியும் பிரிவு (*அகத்திணையியல் :* 30) அதாவது நானில மக்களும் தமது நிலம் கடந்து எல்லை மீறி, வரம்பு தாண்டி, மரபுடைத்து சென்றபோதும் ஒண்பொருள் இழைத்து செவ்விதின் வாழும் முயற்சியாக மேற்கொண்ட பிரிவு பாலை. நானிலந் தாங்கிய வேந்து உருவாக்கத்திற்கு வழங்கும் பங்களிப்பாகும் இது. (*குறுந்தொகை :* 40:1-5) என்ற பாடலின் தலைமக்கள் இவர்களே.

பொருளீட்டல், வாணிபம், நகர் மயமாக்கம், உற்பத்தி பெருக்கம், பொருள் தேடிய இடப் பெயர்ச்சி முயற்சிக்கு 'பிரிவு' எனப்படும் பாலைத் திணையே

அடிப்படையாகும். ஓதற் பிரிவு, தூதிற்பிரிவு, பொருள் வயிற் பிரிவு, பகை வையிற் பிரிவு எனப்பட்ட எவ்வகைப் பிரிவாயினும் கட்டமைக்கப்படும் புதிய அரசின் பகுதிச் செயல்பாட்டாளர்கள் இவர்கள்.

நீண்ட நெடிய வரலாறுடைய தமிழ்க் கவிதை காலந்தோறும் சமூகச் சிக்கல்களை முன்னின்று எடுத்துக்கூறி அதனைத் தீர்ப்பதற் கான வேலைகளைச் செய்து வந்திருக்கின்றது. எதிர்கொண்ட துயரங்களையும், நெருக்கடிகளையும் பாடியதுடன் எதிர்கொண்டு போராடி தீர்த்திடவும் முயன்று வந்திருக்கின்றது. அதனை ஒட்டி அதன் பாடுபொருளும் தன்மைகளும் கூட மாற்ற முற்றும் வளர்ந்தும் வந்துள்ளன. அவ்வகையில் பூர்வீக தாய்வழிச் சமூகத்திலிருந்து மாறி ஆண் வழியிலான வர்க்க சமூகம் உருவானபோது ஆணுக்கு தலைமை பாத்திரம் ஏற்பட்டதுடன் பெண்ணுடனான காதல் வாழ்வை அக வாழ்க்கை என்றும், அன்றைய சமூக உற்பத்தி உறவில் தமக்குரிய பங்கை சிறப்பாகச் செய்து கடமையாற்றியப் பகுதி புறவாழ்க்கை என்றும் பிரிவினை கண்ணோட்டத்துடன் பாடியது சங்க இலக்கியம். திணை வாழ்க்கை நெருக்கடியினை ‘பாலை’ உணர்த்துகின்றது. அகம் புறம் ஒருங்கிணைவில் *நெடுநெல் வாடை* தோன்றுகிறது.

பாலையாகிய பிரிவால் திணை வாழ்க்கை அழிந்து நானிலந் தாங்கிய வேந்து உருவாவதே திணை மயக்கம் ஆகும்.

திணை மயக்குறுதலின்படி ஒவ்வொரு நிலமும் தனக்குரிய தாக கருதப்பட்டு வரும் ஒவ்வொரு ஒழுக்கத்தை மட்டுமே கொண்டுள்ளதாக அமையாமல் பிறநிலங்களுக்குரிய ஒழுக்கங் களையும் ஏற்பதையே திணை மயக்கம் குறிக்கின்றது. குறிஞ்சியில் புணர்தல் ஒழுக்கத்துடன் பிற ஒழுக்கங்களும் வரும். அவ்வாறே மற்ற நிலங்களின் ஒழுக்கங்களும் அவ்வவற்று ஒழுக்கங்களுடன் கலந்தும் தனித்தும், பெருந்திணை, கைக்கிளை ஆகியவற்றை உள்ளடக்கியும் வரும். ஒவ்வொரு நிலமும் பிற நிலத்தொடர்பு ஏற்படாத வரையில் தனக்குரிய முதல், கரு, உரிப் பொருள்களுடன் இயற்கையாய் அமைந்து வாழ்ந்த வரையில் அந்நிலத்து மக்களுக் குரிய உணர்வு நிலை மாறுபடாதிருந்தது. அந்நிலம் பிற நிலங் களுடன் வணிகத்தொடர்பும், திருமணத் தொடர்பும் ஏற்படுத்திக் கொண்டபோது நிலம் சார்ந்த உணர்வுகளிலும், பழக்க வழக்கங் களிலும், உணவுமுறைகளிலும், தெய்வ வழிபாட்டு முறைகளிலும் கூட மாற்றம் ஏற்பட்டன. நானிலந்தாங்கிய வேந்து உருவான போது குறிஞ்சி முல்லை நிலங்களுடன், மருதம் நெய்தல் நில உறவுகளும் வணிக பண்பாட்டு அடிப்படையில் வலுப்பட்டு ஒன்று கலந்தன.

இவ்வாறு ஆதரிக்கப் பெற்ற தமிழ் சான்றோர்களே தமிழ் மொழியை இலக்கணப்படுத்தவும் பல்வேறு அறிவு புலங்களின் வளர்ச்சியை தத்துவ நிலைக்கு

உயர்த்தியும், தர்க்கவியலை வளர்த்தும் தமிழர் தத்துவத்துக்கு சிறப்பாக பங்காற்றினர். சமக்கிருதம், பாலி, பிராகிருதம் ஆகிய வட இந்திய மொழிகளோடு, சீனம் கிரேக்கம் ஆகிய மொழிகளையும் அறிந்திருந்த அவர்கள் தமிழர் தத்துவ மரபினை உலகத்தரத்திற்கு உயர்த்தினர்.

### 3.6.0. காப்பியங்களில் தத்துவ நெறிகள்

சங்க காலத்தில் வைதீகத்தின் எழுச்சிக்கு முன்பாகவே அவைதீக சமயங்களான பௌத்த, சமண, ஆசீவகமும் தமிழகத்தில் ஏற்பட்ட சமூக மாற்ற நிகழ்வுகளுக்கு அடிப்படையாய் அமைந்திருந்தன. இவை மூவேந்தர் அரசு ஏற்பட்டதன் பின்னணியில் செயலாற்றிய தத்துவங்களாகும். அவைதீகச் சமயங்களின் வீழ்ச்சியுடன் மூவேந்தரின் வீழ்ச்சியும் அமைந்திருந்தது. வட நாட்டில் வேத - உபநிடத மரபை எதிர்த்து தத்துவப் போராட்டத்தை நடத்திய அவைதீகச் சமயங்களுக்கு தென்னாட்டில் அதற்கான அவசியம் இருக்கவில்லை. வேத உபநிடத மரபு இல்லாத நிலையில் தமிழகத்தில் இனக்குழுச் சமூகம் வர்க்கச் சமூகமாய் மாற்றமடைவதற்கான தத்துவத்தையும், அறக்கோட்பாடுகளையும் வழங்கும் தன்மையிலேயே அவைதீகச் சமயங்கள் செயல்பட்டன. கி.பி. 4-5 நூற்றாண்டுகளில் ரோமானியருடனான வர்த்தகம் மறைந்து போனது. மௌரியருடன் நடந்து வந்த வர்த்தகம் நெருக்கடியைச் சந்தித்தன. வர்த்தக / அரசு நகரங்களின் வீழ்ச்சியும் திணை வாழ்க்கை முறைகளில் ஏற்பட்ட நெருக்கடிகளும் உற்பத்தி சாராத உயர்குடி மக்களின் வாழ்க்கை நெருக்கடிக்குள்ளானதையும் சுருங்கச் சொன்னால் அரசியல் நெருக்கடிகளையும் அறநெருக்கடிகளையும் *சிலப்பதிகாரம் மணிமேகலை* காப்பியங்கள் வெளிப்படுத்துகின்றன. பண்டைய நகரங்களின் எழுச்சி கடல்கடந்த அயல்நாட்டு வாணிபத்துடன் தொடர்புடையதாகும். அவை வீழ்ச்சியுற்று கி.பி. 3-ம் நூற்றாண்டுக்கு பிறகு கிராமங்களை மையமாகக் கொண்ட நிலமான்ய சமூக அமைப்புக்கான அடிப்படைகள் உருவாயின. வண்ண கட்டமைப்புக்குள் பற்பல சாதிகள் உருவானதுடன் புராண அங்கீகாரம் மூலம் நிலைநாட்டப்பட்டன. வர்த்தகத்துக்கு தேவையான ''பணம்'' மதிப்பிழந்தது. தன்னிறைவு கிராமச் சமூகங்களில் பண்டமாற்று பரிவர்த்தனை நிகழ்ந்தது. வாழ்விழந்த கைவினைஞர்கள் கிராமங்களில் கோயில் பொருளாதாரத்துடன் பிணைக்கப்பட்டு குடியமர்த்தப்பட்டனர். காவிய புராண வைதீக மரபு வளர்க்கப்பட்டது. பிராமணிய சமூக சாதி முறை மீது அமைந்த வைணவ / சைவ சமயங்களின் எழுச்சியுடன் பல்லவ பாண்டிய அரசுகளின் ஆட்சிக்கும் வழியேற்பட்டது.

கி.பி. 3 முதல் கி.பி. 7 வரையிலுமான இக்காலப் பகுதி வட நாட்டில் கலியுகம் என்று புராண மரபு மூலம் விளக்கப்பட்டது. ஆனால் தமிழகத்தில் கி.பி. 7-ம்

நூற்றாண்டு வரையிலுமான காலகட்டம் அறியப்படவுமில்லை. வைதீக புராண மரபும் தோன்றவில்லை. ஆனால் நகர வாழ்வின் சமூக நெருக்கடியை விளக்கும் *சிலப்பதிகாரம், மணிமேகலை* காப்பியங்கள் தோன்றி கி.பி. 3-5 வரையிலான தமிழ்ச் சமூகத்தின் வாழ்க்கை நெருக்கடிகளை விளக்குகின்றன. சமணம், பௌத்தத்தின் வழியாக இக்காப்பியங்கள் தத்துவப் படுத்தப்பட்டன. கி.பி. 5 முதல் கி.பி. 7 வரையிலுமான காலத்தில் பக்தி இயக்கத்தின் எழுச்சி காரணமாக ஏற்பட்ட சமய நெருக்கடிகளும் பூசல்களும், *சீவகசிந்தாமணி, நீலகேசி* வழியாக விளக்கப்படுகின்றன.

''குப்தர்கள் காலத்தில் இத்தகைய கலியுகத்துக்கான பிராமணிய நெறிகள் ஸ்மிருதிகள் மூலமாகவும், புராணங்கள் மூலமாகவும் பரப்பப்பட்டன. வேளாண் பகுதிகளில் வாழ்ந்த இனக்குழு மக்கள் வேளாண் சாதிகளாக மாற்றப்பட்டபோது அந்த இனக்குழு மக்களின் நம்பிக்கைகள், சடங்குகள், வழிபாடுகள் யாவும் புராண இதிகாசங்கள் வழியாக ஒருங்கிணைக்கப்பட்டன. வேதமறுப்பு, கடவுள் மறுப்புத் தத்துவங்களும் அவற்றின் மடங்களும் வர்த்தக நகரங்களின் வீழ்ச்சி காரணமாக வேளாண் சார்பு அமைப்புகளாக மாற்றம் பெற்று கிராமங்களை நோக்கி நகர்ந்தன. வேளாண் மக்களின் வளமை வழிபாடுகளும், சடங்குகளும் பௌத்தம், சமணம் போன்ற தத்துவங்களால் புதிய விளக்கத்துக்கு உட்படுத்தப்பட்டு ஏற்கப்பட்டன. சமணம், பௌத்தம் சமயங்களுள் பற்பல உட்பிரிவுகள் தோன்றி அவைகளுக்கு இடையே தத்துவ மோதல் வலுவாக நடந்தது. சமண - பௌத்த தத்துவ அமைப்புகளின் தர்க்கவியல் வளர்ச்சி தத்துவ நூல்கள் பலவற்றின் ஆக்கங்களை ஊக்குவித்தது. சமண ஆகமங்களில் அந்த காலத்தில் 350 வேறுபட்ட தத்துவப் பிரிவுகள் நிலவியதாக குறிப்பிடப்பட்டுள்ளது. இவைகளில் சுபாவவாதம், உலகாயதம், சாங்கியம் முதலிய வேத மறுப்புத் தத்துவங்கள் பௌத்தத்தில் இணைந்து பொருள் முதல்வாதத்தின் மிகப் பெரும் இயக்கத்தை துவக்கின. சமணம் அதனைத் தொடர்ந்தது. என்று சோ.ந. கந்தசாமி அவர்கள் தமது ஆய்வில் குறிப்பிடுகின்றார்.[24]

### 3.6.1. காப்பியங்கள் உருவானதன் சமுதாயப் பின்னணி

கி.மு. ஆறாம் நூற்றாண்டு முதலே சாருவாகம், உலகாயதம், சாங்கியம், யோகம், சமணம், பௌத்தம், ஆசீவகம் ஆகிய தத்துவ தரிசனங்கள் உருப்பெற்று போராடி வந்தன. கங்கை நதிப் பிரதேசத்தினை மேற்கு கிழக்கென இரு பகுதிகளாகப் பிரித்தால், மேற்கில் குருபாஞ்சாலப் பகுதியில் வேத வண்ணப் பாகுபாட்டின் அடிப்படையிலான அரசுகளும், கிழக்கில் மகதம் பாஞ்சாலம் ஆகிய பழங்குடி மக்களின் சமுதாய அமைப்புகளால் இணைந்த மகா ஜனபதங்களும் வேளாண் விரிவாக்க அடிப்படையில் ஒருங்கிணைந்து உருவெடுத்திருந்தன.

எப்போது உபரியாக உற்பத்தி செய்யப்படுகின்றதோ, எப்போது உற்பத்திப் பொருள் உற்பத்தியில் ஈடுபடாதவனிடம் சேர்கிறதோ, அப்போது உற்பத்தியை அபகரிப்பவர்களுக்கு ஆதரவான அரசு உருவாகின்றது. அது கலை பண்பாடு ஆகியவற்றையும் தமக்கானதாகக் கொண்டு புதிய சமூகத்தை கட்டமைக்கின்றது. ஒரு குறிப்பிட்ட உற்பத்தி உறவுகளின் அடிப்படையில் அரசு உருவாகியதுடன் புதிய நிலைமைகளில் சமூக வேலைப் பிரிவினை ஏற்பட்டு கெட்டிப்படுகின்றது. அப்போது அதனை எதிர்த்து கலகங்களாக உருவானவையே அவைதீக தத்துவ தரிசனங்கள். கங்கை நதிப் பிரதேசத்தில் வர்ணாஸ்ரம எதிர்ப்பில் அவைதீக தத்துவ தரிசனங்கள் போராடின. புதிய வாழ்நிலைமையில் நேரிடும் துன்பங்களுக்கும், கேடுகளுக்கும் காரணம் எது? உண்மை எது? என அறியவே தரிசனங்கள் முயன்றன. கூட்டுச் சமூக வாழ்க்கை வர்க்கங்களாகவும், வண்ணங்களாகவும் பிரிந்த நிலையில் தனிச் சொத்துடைமை, குடும்பம், அரசு வளர்ந்த நிலையில் கங்கை நதிப் பிரதேசத்தில் வேத உபநிடத மரபு சார்ந்தவை; வேத உபநிடத மரபினை எதிர்ப்பவை என்ற பொதுவான வகைப்பாட்டின்படி அறுபத்து இரண்டு தத்துவ தரிசனங்கள் இருந்ததாக அதாவது வைதீக / அவைதீக தத்துவப் பிரிவுகள் 62 இருந்தன. மகத அரசு மேலெழுந்த போது அரசுடனும் நகரங்களுடனும் தொடர்புடைய வேத மறுப்புத் தத்துவங்கள் ஆறு இருந்ததாக சுத்தபீடகம் குறிப்பிடுகின்றது. அஜாத சத்ரு இந்த ஆறு தத்துவ தரிசன தலைவர்களுடனும் வாதிட்டு முடிவில் பௌத்தமே ஏற்றதென பௌத்தத்தை தழுவினான். வேத மறுப்பு நிலையிலிருந்து உண்மைகளை தேடுகின்ற அரசின் முயற்சிகளுக்கு சமணம், பௌத்தம் துணை நின்றன. அத்தகைய அரசுகளின் ஆதரவு சமயங்களாக அவை மாறி வளர்ந்தன.

முரண்பாடில்லாத கடவுள் மறுப்புக் கொள்கையை உடையன சாருவாகம், உலகாயதம் மட்டுமே ஆகும். பௌத்தத்தில் கடவுளுக்கோ, பிரமத்துக்கோ இடமில்லை என்றாலும் அது மறுபிறவிக் கோட்பாட்டை ஏற்று வினைக் கோட்பாட்டை முன்வைத்ததுடன் பிறவாநிலை (நிர்வாண நிலை) அடைய அறங்களை போதித்தது. மேலும் நால்வகை அணுக்களின் கூட்டுச் சேர்க்கைதான் உலகம் என்றனர். இதே நான்கு அணுக்கள் கோட்பாட்டையும், வினைக் கோட்பாட்டையும் பேசினாலும் சமணம் அநேகாந்த வாதத்தை முன்வைத்தது. உண்மைக்கு பல தன்மைகள் இருக்க வேண்டும் என்பதே அநேகாந்தவாதம். உண்மை என்பது சார்புத்தன்மையுள்ளது. பலரும் பல கோணங்களில் பார்க்கின்றனர். ஆனால் உண்மை இயக்கத்தில் இருக்கின்றது. உண்மையின் இயக்கத்தில் ஏதாவது ஒரு கட்டத்தைப் பற்றித்தான் பேசப்படுகின்றது என்பதே சமணரின் அநேகாந்த வாதம். வினையின் பலனை வினைபுரிந்தவர் அனுபவித்தே ஆகவேண்டும் என்று சமணம் பேசுகின்றது.

சமணம், பௌத்தம் போலல்லாமல் நிலம், நீர், நெருப்பு, காற்றுடன் விசும்புவையும் ஐந்தாவது அணுவாக ஏற்பது ஆசீவகம் ஆகும். மேலும் அணுக் கோட்பாடு வினைக்கோட்பாட்டுடன் ஊழ்க் கோட்பாட்டையும் முன்வைப்பது ஆசீவகம். ஊழ்க் கோட்பாடு என்பது நியதிக் கோட்பாடு ஆகும். தமிழகத்தில் சமணம் பௌத்தம் போன்று வலுவான தாக்கத்தை ஏற்படுத்திய தத்துவமாக ஆசீவகம் விளங்கியது.

கபிலரால் தோற்றுவிக்கப்பட்ட பொருள் முதல்வாதத் தத்துவம் சாங்கியம் ஆகும். காரண-காரிய கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. பிரகிருதியில் இருந்துதான் ''புருஷ்'' உருவானதாக கூறுவது சாங்கியமாகும். பிறகு வேதத்தின் செல்வாக்கு சாங்கியத்தில் நுழைந்தபோது பிரதான காரணவாதம் முன்வைக்கப்பட்டு அது வேதாந்தத்தின் பிரம்ம காரணவாதத்தோடு ஒன்றுகலந்தது. இதன் வழியே ''புருஷ்'' (உயிர்)தான் பிரகிருதியை தீர்மானிப்பதாக மாற்றப்பட்டு எதிர்நிலையை அடைந்தது. எனவே பிற்காலத்தில் இது கருத்து முதல்வாதமாக மாறியது.

சாங்கியத் தத்துவம் போன்றே அவைதீக / வைதீகத் தத்துவங்கள் அனைத்துமே உருவான காலத்திலிருந்த நிலையிலிருந்து மாறி, அவற்றின் குறைகளை களையும் முயற்சியிலீடுபட்டு அதன் நிலைப்பாட்டிற்கு எதிரான நிலையை அடைந்தன. புறவயமானப் பொருளைச் சிந்தனையினால் தோன்றியதாக கொள்ளமுடியுமா? என்ற ஐயப்பாட்டால் மனிதன் கருத்து முதல் வாதத்தையும், பொருள் முதல் வாதத்தையும் தனித்தனியானதாக தோற்றுவித்து வளர்த்தான். இது கூட்டுச் சமூக வாழ்க்கை சிதைவுற்று வர்க்கங்களாகவும், சமுதாயக் குழுக்களாகவும் பிளவுற்றபோது ஏற்பட்ட முன்னேற்றமாகும். அவரவர் சிந்தனைப் போக்குகள் அவர் சார்ந்த வர்க்க நலன்களைப் பிரதிபலித்தன. இந்த அகம் / புறம் பிரிவினை கண்ணோட்டமானது நாளடைவில் தனது குறைகளை உணர்ந்து, நடைமுறை வாழ்வில் அவற்றை களையும் முயற்சியிலீடுபட்டு எதிர் நிலையிலான போக்கினை மேற்கொள்வதே வரலாறு நெடுகிலும் நடந்தேறியுள்ளது. இது தூய பொருளாகவோ, தூய கருத்தாகவோ பிரித்து பார்க்கும் இயக்க மறுப்பியலான கண்ணோட்டத்தால் நேர்ந்துவிடும் குறைபாட்டின் விளைவுகளாகும்.

### 3.6.2. மணிமேகலையின் தத்துவ பின்புலம்

புத்தரின் கொள்கைகளையும் அது அடைந்த மாற்றங்களையும் அதனை மணிமேகலை பெற்றுள்ள விதத்தையும் இங்கு ஆராய்வது தகும். கி.மு. ஆறாம் நூற்றாண்டில் வேத-உபநிடதங்கள் முன்வைத்த ஆன்மீக அப்பாலையியலை மறுத்து வேத மறுப்புத் தத்துவமாகவே புத்தரின் கோட்பாடுகள் அமைந்திருந்தன. கடவுள் - ஆன்மா மறுக்கப்பட்டது. புத்தரின் வினைக் கோட்பாடு பல வகையான

பிறப்புக்கள் - மறுபிறப்பு ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டது. இது வைதீக - வருண வினைக் கோட்பாட்டை வன்மையாக மறுத்து பற்றறுத்து பிறப்பற்ற நிர்வாண நிலை அடைய முடியும்; பேரின்ப நிலை அடைய முடியும் என்று அவரால் விளக்கப்பட்டது. பௌத்த தத்துவச் சாரம் குறித்து ராகுல சாங்கிருத்தியாயன் பின்வருமாறு கூறுகிறார் ''மூன்று சொற்களில் பௌத்த மெய்ப் பொருளைச் சுருக்கி கூறிவிடலாம். அநித்யம், துக்கம், அநாத்மம் ஆகும். அநாத்மம், அதாவது நிலையாமை, நிறைவின்மை, ஆன்மா இன்மை துக்கமும் அநாத்மமும் நிலையின்மையில் சேரும் என்றாலும் அவை தனித்தனியே பிரித்துக் கொள்ளப்படுகின்றன. நிலையாமையே முழுமுதல் பிரபஞ்ச விதி. இதற்கு விலக்கில்லை. உள்ளும் புறமும் உள்ள எல்லா பொருட் கூறுகளுக்கும் இது பொருந்தும்... நிலையாமை விதியே பௌத்தத்தின் ஆதாரம் எனலாம் என்று கூறுகின்றார். இதனை எளிமையாக அணுக்கோட்பாடு, வினைக் கோட்பாடு மூலம் தமிழில் விளக்கி வருகின்றனர். பிறப்பற்ற நிர்வாண நிலை அடைய பற்றறுத்தல் வாழ்வை முன்வைத்தார் புத்தர். ஆன்மா பற்றி விவாதிப்பதையே மறுத்த புத்தர் அதனை ஏற்பவருக்கும், மறுப்பவருக்கும் இடையில் நடுவாந்திர பாதையை ஏற்றார். தமது வாழ்நாளிலேயே சங்கங்களை ஏற்படுத்தினார். இனக்குழு குடி அரசின் மன்னர் குலத்தில் பிறந்த அவர் நகரங்களில் தனது நடவடிக்கைகளை மேற்கொண்டார். சாதி இழிநிலைக்கு ஆளானவர்களை எல்லாம் பௌத்த சங்கத்தில் ஒன்று சேர்த்தார். இதனால் வருண ஏற்பாட்டிலிருந்து புறக்கணிக்கப்பட்ட மக்களின் ஆதரவு புத்தருக்கு கிடைத்தது. வருண ஏற்பாட்டில் கீழான நிலையிலிருந்த வணிகர்கள் புத்தரை ஆதரித்தனர். பௌத்த மடங்கள் வணிகர்களின் ஆதரவை பெற்றிருந்தன. கி.மு. ஆறாம் நூற்றாண்டில் கடல் கடந்த வாணிகம் மூலம் வருவாயைப் பெருக்கிக் கொண்ட அரசுகள் பௌத்தத்தை ஆதரிக்கத் தொடங்கின.

புத்தர் மறைந்த பிறகு மகா காஸ்யபர் தலைமையில் ராஜகிருகத்தில் முதல் பௌத்தக்குழு கூடியது. ஆனாலும் வரலாற்று ஆதாரங்களால் நிறுவப்படவில்லை. அதன் பிறகு ஒரு நூற்றாண்டு கழித்து வைசாலியில் கி.மு. 360-ல் இரண்டாவது பௌத்தக்குழு கூடியது. இங்கு தேர வாதம், மகாயானம் என்ற இரு பிரிவினராக பௌத்தர்கள் பிரிந்துவிட்டனர்.

இந்த முதல் பிளவு துறவிகளின் பத்து ஒழுக்கங்கள் பற்றிய கருத்து வேறுபாடுகளால் தோன்றியதாகும் என்றும், பற்றி ஏற்பட்டதே என்றும், புத்தரின் போதனைகளை விளக்குவதில் ஏற்பட்ட வேறுபாடுகளே காரணம் என்றும் கூறப்படுகின்றது. அதன் பிறகு தேரவாதம் 12 பிரிவுகளாகவும், மகாயானம் ஆறு பிரிவுகளாகவும் பிரிந்து 18 பிரிவுகள் நிலவியதாக அசோகர் காலத்து தீப வம்சம், மகாவம்சம் குறிப்பிடுகின்றன. இப்பதினெட்டு பிரிவினருக்கும் பீடகங்கள்

தனித்தனியே இருந்தன. வினய, அபிதர்ம பீடகங்களில் வினய சூத்திரம் மட்டும் அனைவருக்கும் பொதுவானதாகவும், அபிதர்மம் வெவ்வேறானதாக அமைந்திருந்ததாக ராகுல் சாங்கிருத்தியாயன் குறிப்பிடுகின்றார்.[25] இந்த அபிதர்மம் என்பது சூத்திரங்களை சிறப்பான முறையில் புரிந்து கொள்வதுதான் என்று மகாயான சூத்திராலங்காரம் என்ற நூல் கூறுகிறது. சூத்திரங்கள் மரபு ரீதியில் பெறப்பட்டவை. அபிதர்மமோ பொருளுக்கும் மனதுக்குமான தொடர்பை அடிப்படையாக கொண்டு முழு உண்மையை விளக்குவது. இந்த அடிப்படையில் தான் நான்கு பௌத்த தத்துவ பிரிவுகள் ஏற்பட்டன.




தேரவாதமாகிய சர்வாஸ்திவாதமும், சவுந்தராந்திகமும் சங்கபத்திரர் வசுபந்து ஆகியோரால் விளக்கப்பட்டது. மத்யாமிகமாகிய சூனியவாதம் நாகார்சுனர், ஆரியதேவர், சந்திர கீர்த்தி, பாவ்வியர், புந்திபாலர் ஆகியோரால் வளர்க்கப்பட்டது. யோகாச்சாரம் வசுபந்து, திக்நாகர், தர்மகீர்த்தி, தர்மபாலர் ஆகியோரால் வளர்க்கப்பட்டது. புத்தர் பிராமணிய-வேத உபநிடத எதிர்ப்பு வாதியாக தமது பிரச்சாரங்களை மேற்கொண்டு சங்கங்களை அமைத்தது முதல் தென்னிந்தியாவிலும், இலங்கையிலும் ஆசியக்கண்டம் முழுமைக்கும் பரவியது வரையில், மணிமேகலை, நீலகேசி காலம் வரையில் நமது ஆய்வுக்கான காலம் 1500 ஆண்டுகால இடைவெளியில் நிலவிய பௌத்தம் பற்றியதாகும். எனவே பௌத்தம் கால்கொண்ட இடங்களில் எல்லாம் அங்குள்ள சமூக உற்பத்தி உறவுகளுக்கு ஏற்பவும் பண்பாட்டு நிலைமைளுக்கு ஏற்பவும் தகவமைத்துக் கொண்டு, அவற்றை தன் வயமாக்கிக் கொண்டும் நிலைப்பட்டது. பாஹியான், யுவான் சுவாங் ஆகியோரின் பயண நூல்களில் இருந்து ரைஸ்டேவிஸ் இத்தகைய பிரிவுகள் பற்றி ஆய்ந்துள்ளார்.[26] பாஹியான் காலத்தில் குறைவாகவும், யுவான் சுவாங் காலத்தில் அதிகமான பிரிவுகளும் அறிய முடிகின்றது. யுவான் சுவாங் தேரவாதப் பிரிவுகள், மகாயானப் பிரிவுகள், இரண்டும் கலந்த பிரிவுகள் என மூன்றாக பிரித்து அவைகளில் முறையே 98430, 35,000, 54,500 (மொத்தம் 1,82,930) பிக்குகளும் பிக்குணிகளும் பௌத்த தத்துவவியலை பயின்று பரப்பி வந்ததாக ரைஸ் டேவிஸ்

குறிப்பிடுகின்றார். மேலும் பௌத்தவியல் அறிஞர் ராகுல் சாங்கிருத்தியாயன் தமது நூலில் ஹீனயானம் சிறுவழி என்றும், மகாயானம் பெருவழி என்றும் இவை இரண்டின் இணைவில் உருவான, இந்தியாவிலிருந்து பௌத்தம் வீழும் முன்பு வளர்ச்சி பெற்றிருந்த பௌத்தம் மந்த்ராயனம் என்றும் தமது ஆய்வில் குறிப்பிடுகின்றார்.[27]

அது மந்திரங்களை அடிப்படையாகக் கொண்டது. சப்த அளவையை ஏற்காத பௌத்தம் முதலில் ஓம் என்ற சொல்லையும் இறுதியில் ஸ்வாஹா என்ற சொல்லையும் கொண்டு இடையில் அக்கால மக்களின் நம்பிக்கைகள், சடங்குகளை அடிப்படையாகக் கொண்டு எவ்வளவோ மந்திரங்களை உருவாக்கிக் கொண்டது. புத்த பிட்சுகள் நோய், கெட்ட தேவதை, பேய், துரதிஷ்டம் ஆகியவற்றை விரட்ட இத்தகைய மந்திரங்களை உருவாக்கி பயன்படுத்துவாராயினர். மரபு வழுவை ஏற்காத தேரவாத பௌத்தம் பாமர மக்களின் தேவைகளை பூர்த்தி செய்ய இத்தகைய மாற்றங்களை மேற் கொண்டது.

இந்த மந்த்ராயன பௌத்தமே கி.பி. நான்காம் நூற்றாண்டுக்கு பிறகு வஜ்ராயனமாக பெருவளர்ச்சி பெற்றது. பல நூற்றாண்டு கால யோகப் பயிற்சியினால் மனிதனுக்கு மனிதனுள் மறைந்திருந்த பல மனோசக்திகளை வளர்த்துப் பல வழிகளில் அற்புதங்களைச் செய்து காட்டினார்கள் புத்த பிட்சுகள். பயிற்சி முறைகளை வகுத்தார்கள். இப்பயிற்சிகளுடன் தேவர் - தேவதை வழிபாட்டையும் இணைத்து பழங்குடி மக்களையும், பிறரையும் கூட தன்வயப்படுத்திக் கொண்டனர். மந்த்ராயனமும், வஜ்ராயனமும் ஒன்றேயானாலும், மந்த்ராயனத்தின் அடுத்தகட்ட வளர்ச்சி வஜ்ராயனம் ஆகும். இந்த வஜ்ராயனத்தின் அடிப்படை தாந்திரீக வழிபாடும் தேகவாதமாகிய யோகாசாரமும் ஆகும். யோகாசார தாந்திரீக பௌத்தம் என்ற பெயர் கொண்டும் வஜ்ராயனம் அழைக்கப்படுகின்றது.

இயற்கையின் இனவிருத்தியானது பெண்களின் இனவிருத்தி செயலை சார்ந்திருப்பதாக துவக்கத்தில் நம்பியதன் அடிப்படையில் உருவானதே தாந்திரீக வளமை சடங்குகளாகும். தாந்ரீகத்தின்படி பேரண்டம் என்பது பால் உணர்வின் மூலம் (காமம்) தான் தோன்றியது. அது (வாமோத்பவா) ஒரு பெண் ஆணுடன் இணையும் போது அவளிடம் இருந்து தோன்றுகிறது. வேளாண் மந்திரத்தில் உள்ள நம்பிக்கையின் விரிவாக்கமாகவே இவ்வழிபாடு அமைந்திருக்கிறது.[28]

கடல் கடந்த வர்த்தகம், நகரங்களின் வீழ்ச்சியால் பௌத்தம் கிராமங்களை நோக்கி நகர்ந்து கால் கொள்ள வேண்டியிருந்தது. அது உள்நாட்டு உற்பத்தியில் கவனம் செலுத்த முயன்றது. கிராமங்கள் சுயதேவை பூர்த்தி அமைப்புகளாக அமைந்திருந்தன. பல பிரிவினைகளைக் கொண்டு செயல்படத்

தொடங்கியிருந்தன. அவற்றிடையே பல விதமான நம்பிக்கைகளும் சடங்குகளும் வழிபாடுகளும் இருந்த காலத்தில் அவற்றை தமக்குள் இணைத்துக் கொள்ளும் முயற்சியும் நடந்தன. இந்த தருணத்தில் படைக்கப்பட்ட மணிமேகலை காப்பியம் இவற்றையெல்லாம் பிரதிபலிக்கின்றது.

### 3.6.3. *மணிமேகலை* பின்பற்றும் பௌத்த தத்துவப் பிரிவு

**கள்ளூமூனுங் கைவிடி னிவ்வுடம்**
**புள்ளுறை வாழுயி ரோம்புத லாற்றேன்**
**தமக்கொழி மரபிற் சாவுறு காறும்**
**எமக்கா நல்லற மெடுத்துரை யென்றலும்**
**நன்று சொன்னாய் நன்னெறி படர்குவை**
**உன்றனக் கொல்லு நெறியற முறைக்கேன்**
**உடைகல மாக்க ளுயிருய்ந் தீங்குறின்**
**அடுதொழி லொழிந்தவ ராருயிரோம்பி**
**மூத்துவிழி மாவொழித் தெவ்வுயிர் மாட்டும்**
**தீத்திறமொழிகெனச் சிறுமக னுரைப்போன்**
**ஈங்கெமக்காகு மிவ் வறஞ் செய்கேம்**
**ஆங்குனக் காகுமரும்பொருள் கொள்கெனப்**

(*மணி,* காதை 16: 108-119) பசியால் வருந்திய சாதுவனுக்கு வேண்டிய அளவு கள்ளையும் ஊனையும் கொடுத்து பின்பு இளையவளாகிய நங்கையையும் கொடுக்கும்படி நாகர் தலைவன் ஆணையிட அதற்கு சாதுவன் மறுத்துரைத்தபோது, இவையன்றி வேறு இன்பம் தருவது எது என்று கேட்ட நாகர் தலைவனுக்கு பஞ்ச மகரங்களாகிய அவற்றை மறுத்து ''அழியக்கூடிய உடம்பிற்கு வேறாக உள்ள உயிறானது பிரிந்த பிறகும் அழியாது தமது வினைப் பயனை தீர்க்கும் பொருட்டு அதற்கென உள்ள உயிரின் கண் புகுந்து துன்பமோ, இன்பமோ அடையும் என்பதை அறிவாய் என்று கூறுகிறான். அறம் போதித்த செட்டி மகனாகிய சாதுவனின் காலில் வீழ்ந்து வணங்கிய நாகர் தலைவன் ''இவற்றை தவிர்த்து உயிர் வாழ முடியாது. எனவே இவையன்றி நான் கடைபிடிக்கவேண்டிய நல்லறங்களை கூறுவாயாக'' என்று கேட்கின்றான். உனக்கு முடியும் வழியில் அறம் செய்வாய்! உடைந்த மரக்கலத்திலிருந்து உயிர் தப்பி கரைசேர்ந்தவர்களை கொல்லாமலும், முதுமையுற்று இறக்கும் விலங்குகளை மட்டுமே உண்ணுங்கள் என்றும் அறவுரை கூற எமக்குப் பொருந்திய இவ்வறத்தினை யாம் செய்வோம் என மறுமொழி உரைக்கிறான். இதனால் பௌத்தம் பல சமரசங்களுக்கும் இடம் கொடுத்து மாற்றங்களை அடைந்திருந்தது என்பதை உணரமுடியும்.

உ.வே. சாமிநாதய்யரும், மயிலை சீனி. வேங்கடசாமியும், தெ.பொ. மீனாட்சிசுந்தரனாரும் மணிமேகலை தேரவாத பௌத்தத்தை அடிப்படையாகக் கொண்டது என்று குறிப்பிடுகின்றனர். மணிமேகலையில் இடம் பெறும் ஆபுத்திரன் கதை வேள்வி எதிர்ப்பு, பசுக் கொலைத் தடுத்தல் ஆகியவற்றை பேசுவதுடன் முதன்முதலில் பசியைப் போக்குவது பற்றியும் பேசியதும், ஆறவணரின் போதனை ஆகிய தேரவாதவாதத்தின் அடிப்படைக் கருத்துக்கள் இப்பாத்திரங்கள் மூலம் முன்வைக்கப்படுவதால் இம்முடிவுக்கு வந்தனர். காப்பியமானது வட்டாரத் தொன்மங்களை மறுகட்டமைப்பு செய்து தன்னுள் இணைத்துக் கொண்டுள்ளது. உள்ளூர் தன்மைக்கேற்ப தத்துவத்தை கட்டமைப்பதும் சமூகத்தின் பல பிரிவினரையும் பௌத்தத்தின்பால் ஒன்றிணைப்பதும் இதன் நோக்கமாகும். இடைக்காலத்தில் வைதீகச் சமயங்களும் இதே முயற்சியில் இறங்கி வெற்றிகண்டன. மணிமேகலை காப்பியம் வலியுறுத்தும் கருத்தியலுக்கு அதன் கிளைக் கதைகள் வலு சேர்க்கின்றன.

மேலும் இக்காப்பியத்தை பெண் தெய்வங்களும், பெண் பாத்திரங்களுமே வழிநடத்துகின்றன. சுதமதி, மாதவி, கோமதி, காயசண்டிகை, ஆதிரை, வைசாகை, பீலிவளை ஆகிய பெண் பாத்திரங்கள் பெரிதும் பேசப்படுகின்றது. மணிமேகலை தெய்வம், சம்பாபதி, தீவதிகை, சிந்தாதேவி, கண்ணகி ஆகிய பெண் தெய்வங்களும் காப்பியத் தலைவி மணிமேகலையை வழிநடத்துகின்றன. மணிமேகலா தெய்வம் கடல் தெய்வம். கோவலனின் முன்னோர் கடலில் சென்றபோது அவர்களது கலம் உடையவும் காப்பாற்றியது இத்தெய்வம். அது இந்திரனுக்கு கட்டுப்பட்டது. இந்திரன் புத்தரை வணங்குபவன். இந்திரன் கட்டிய புத்த பீடிகையை மணிமேகலா தெய்வம் வணங்குபவள். முக்காலமும் அறிந்தவள்; வானத்தில் பறக்கவும், மந்திரங்கள் கற்பிக்கவும் அறிந்தவள். இம்மந்திரத்தை மணிமேகலைக்கும் இத்தெய்வம் கற்பித்தவழியே அவளும் வானில் பறந்து சென்றாள்.

சம்பாபதி, தீவதிலகை, சிந்தாதேவி ஆகியன காவிரிபூம்பட்டினத்தையும், தீவையும் காக்கும் காவல் தெய்வங்கள். சிந்தா தேவி ஆபுத்திரனுக்கு அமுத சுரபியை வழங்கிய தெய்வம். கண்ணகி பத்தினி தெய்வமாக போற்றப்படுகின்றாள். இக்காப்பியத்தின் தலைவியாக மணிமேகலை விளங்குகின்றாள். மணிமேகலை தாந்திரிக பௌத்தத்தின் கூறுகளைக் கொண்டிருப்பதாகவும், மகாயானத்தின் சௌராந்திக யோகாச்சார பிரிவை பிரதிபலிப்பதாகவும் மணிமேகலை பெண் போதி சத்துவராக ஆக்கப்படுவதைக் காட்டி சோ.நா. கந்தசாமி குறிப்பிடுகின்றார். (சௌராந்திகம் தேரவாதப் பிரிவு யோகா சாரம் மகாயானப் பிரிவு) இரண்டின் இணைவு என்று அவர் கருதுகின்றார்.

### 3.6.4. மணிமேகலை தருக்க நூலும் ஆகும்

மேலும் மணிமேகலை தமிழ்க் காப்பியம் மட்டுமல்ல, இந்திய தத்துவ நூலும், தர்க்க நூலும் ஆகும். இதில் சௌராந்திக பௌத்த அறிஞர்களால் வளர்த்தெடுக்கப்பட்ட தர்க்க முறைகள் கையாளப்படுவதாலும் அவர் தவிர்க்க முடியாமல் மேற்காணும் முடிவிற்கு வருகின்றார். ஐந்து கூற்றுகளைக் கொண்ட தர்க்க உரையாடல் மூலம் சௌராந்திக வாதிகள் தமது கருத்தை நிலைநாட்டினர். பண்டை கிரேக்கத்தின் முக்கூற்று உரைகள் (Sylogism) போலல்லாமல் கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் ஐங்கூற்று உரைகள் கொண்ட தர்க்கவியலை பௌத்த தத்துவவாதிகள் வளர்த்துள்ளனர் என்பது பெரிதும் வியப்பான ஒன்று. பிற சமயங்களை அறிமுகப்படுத்துமிடத்தில் சாத்தனார் ஒவ்வொரு பிரிவினருக்கும் உரிய கருத்துக்களை எடுத்து காட்டுமிடத்தில் சௌராந்திக யோகாசார அளவையியலைக் கையாண்டு விவாதிக்கிறார்.

எனவே மணிமேகலை தேரவாதத்தை அடிப்படையாகக் கொண்டதல்ல. அதுமட்டுமல்லாமல் தேரவாதம் தர்க்கவியலை அடிப்படையாகக் கொண்டதல்ல. அது அறம் உரைக்க எழுந்த நூலாகும் போதி சத்துவர் என்ற கருத்தும், பெண் தெய்வங்களும், அப்பாலைத் தத்துவமும் தேரவாதத்தில் இல்லாதவை. இவை அனைத்தும் மணிமேகலையில் காணப்படுவதால் இது தேரவாத அடிப்படை கொண்டதல்ல.

### 3.6.5. மணிமேகலையின் புத்தர், கடவுள் தன்மையர்

மலர்வனம் புக்க காதையில் புத்தர் பகவானின் ஆணையால் பூக்கள் பூத்தன வென்றும் உவவனத்தில் புத்தரின் பாதபீடம் வழிப்படப்பட்டது என்றும், அப்பீடத்தில் வைக்கப்படும் அரும்புகள் தாமாக மலர்ந்து விடும்; வாடாது; வண்டுகள் மொய்க்காது; தனது வேண்டுதலுக்கு காணிக்கையாக வைக்கப்படும் மலர் நினைத்தபடி அவ்விடத்தை சென்று சேரும் தன்மையுடையது என்பதுபோன்ற கருத்துக்கள் முன்வைக்கப்படுகின்றன.

பவத்திறம் அறுகென பாவை நோற்ற காதையில் அறவண அடிகள் எண்ணில் புத்தர் பற்றியும் 25 புத்தரில் இருபத்தைந்தாவது புத்தர் இவர் என்றும், இனி வரப்போகும் புத்தர் மைத்ரேய புத்தர் என்று கூறுவதாலும் இது தேரவாத பௌத்தம் சார்ந்ததல்ல எனலாம். மேலும் கச்சிமாநகர் புக்க காதையில் மணிமேகலை காஞ்சி சென்று தமது பாட்டனார் மாசாத்துவானை புத்தரின் கோயிலில் சென்று வணங்குமிடத்தில் சந்தித்ததும், மாசாத்துவான் புத்தருக்கு தாம் கோயில் எடுப்பித்து வணங்கி வருவது பற்றியும் கூறுகிறார். (கச்சிநகர் புக்ககாதை வரி 136, 176.) மேலும்

சமணத்தில் மகாவீரருக்கு முன்பாக குறிப்பிடப்படும் தீர்த்தங்கரர்களுக்கு போட்டியாகவே பௌத்தத்திலும் ஆதிசினேந்திரர் முதலாக 24 புத்தர்கள் இருந்ததாக படைத்துக் கொள்ளப்பட்டிருக்கின்றது என்பதே உண்மையாகும். பௌத்தத்துக்குள்ளேயே புத்தர் கடவுளாக்கப்பட்டது ஒருபுறம் இருந்தாலும், இதனுடைய தொடர்ச்சியில் வைணவம் எழுச்சி பெற்றபோது திருமாலின் பத்து அவதாரங்களில் கடவுளை மறுத்த புத்தரும் ஒரு அவதாரமாகக் கொள்ளப்பட்டார். சிவனையும், பிரம்மாவையுமே அவதாரங்களாக ஏற்காத வைணவம் கடவுள் மறுப்பாளரான புத்தரை ஒரு அவதாரமாக ஏற்றுக் கொண்டதை இங்கு நாம் கவனத்தில் கொள்ள வேண்டியிருக்கின்றது.

அவ்வாறே பல்லவர் காலத்தில் வளர்ச்சி பெற்ற சைவம் சமணக் கடவுளான அருகத் தேவனின் தன்மைகளை சிவனுக்கு படைத்துக்கொண்டதையும் ஒப்புநோக்க வேண்டியுள்ளது. சைவம், வைணவம் ஆகிய வைதீகச் சமயங்களுக்கு பௌத்தம், சமணம் போன்று அவற்றை உருவாக்கியவர் இல்லாததால், கடவுள் அடிப்படையிலான சமயம் என்பதால் சிந்து சமவெளி நாகரிகத்தில் இருந்து தமிழகத்திற்கு வந்தது சைவம் என்றும், தமிழகத்திலிருந்து வடநாட்டிற்கு சென்றது வைணவம் என்றும் ஆய்வாளர்கள் முடிவிற்கு வருகின்றனர். சமயங்களே இல்லாத சிந்து வெளியிலிருந்து உருவ வழிபாட்டையும், முல்லைநிலத் தெய்வமான மாயோனை வைணவத்தின் கடவுள் என்றும் எடுத்துக் காட்டுகின்றனர். ஆனால் தொல் வடிவங்களிலிருந்து தமக்கானதை எடுத்துக்கொண்டு வளர்தல் என்பது சமய உருவாக்கத்தில் பெரிதும் நிகழ்ந்துள்ளது. இது வைதீகச் சமயங்களுக்கு காலம், இடம், சூழல் கடந்து அதிகமான வாய்ப்புக்களை வழங்குகின்றது. அவைதீகச் சமயங்களான பௌத்தம், சமணம் முதலியவற்றில் அவற்றை உருவாக்கிய மனிதர்களாகிய தத்துவவியலாளர்கள் அறியப்படுவதால் காலம், இடம் சூழல் கடந்து பொருந்துவதற்கு தடையாக இருக்கின்றனர். இந்த தத்துவவியலாளர்கள் கடவுளாக்கப்பட்டவுடன் அந்தந்த மண்ணுக்கேற்ப, நிலவுகின்ற வரலாற்றுக் கட்டத்துக்குரிய, உற்பத்தி உறவுகளுக்கு உரிய முறையில் பொருந்துதலும், ஏற்றத்தாழ்வான, வேறுபாடுகள் நிறைந்த சமச்சீரற்ற சமூக அமைப்பில் அனைத்து பிரிவினரையும் ஏற்கச் செய்தலும் எளிதாக அமைந்து விடுகின்றது. எனவே ஆயிரத்து ஐநூறு ஆண்டுகால இடைவெளியில் தமிழ்ச் சமூகத்தில் நிலவிய பௌத்தத்தைப் பற்றி ஆராய முற்படும்போது அதன் பல பரிமாணங்களிலான வளர்ச்சிகளையும் வெளிப்படுத்து வனவாகவே மணிமேகலை அமைந்துள்ளது.

வைதீக எதிர்ப்பிலும், வண்ண, சாதிய ஏற்றத்தாழ்வுகளுக்கு எதிராகவும் போராடிய புத்தரின் கொள்கைகள், இனக் குழு குடி அரசுகளின் இயல்புகளை பாதுகாத்தல் என்ற அடிப்படையில் அமைந்த புத்தரின் கொள்கைகள் அவர்

காலத்துக்கு பிறகு பல மாற்றங்களை அடைந்து தனிச் சொத்து, குடும்பம், அரசு உருவாக்கத்துக்கான கருவியாக வளர்ச்சியடைந்து. குடும்பம், தனிச் சொத்து அமைதலும், அரசு அவற்றை பாதுகாத்தலும் என்பதற்கு வலு சேர்க்கும் வகையில் பத்தினிக் கோட்பாட்டையும் பௌத்தம் ஏற்றுக் கொண்டது துவக்கத்தில் தாய்தெய்வ வழிபாட்டை யக்சி வழிபாடாக கொண்டிருந்த சமணம், பௌத்தத்தில் பௌத்தம் பிறகு கற்ற நெறியோடு இணைத்து பத்தினி வழிபாட்டை முன்வைத்ததும் குறிப்பிடத்தக்கது[29] என்பதை மணிமேகலை வழி உணரமுடிகின்றது. கணவனை இழந்த பத்தினிப் பெண்டிற் கணவனது சிதையில் உடன் புகுந்து மாள்வர் என்றும் (*மணி* 18:11-5) (*மணி* 2 : 45-5) *மணிமேகலை* எடுத்துக் காட்டுகின்றது. இதனால் தனியுடைமை வளர்ச்சிக்கும், வேந்து வலிமை பெறுதலுக்கும் வழி வகுக்கும் பிராமணிய செயல்முறையினை பௌத்தமே ஏற்று நிறைவேற்றியது என்பதை மணிமேகலை வழி அறிய முடிகின்றது. இந்த நடைமுறையை சமணர்கள் எதிர்த்ததை நீலகேசி வழி அறியமுடிகின்றது.

மந்த்ராயனம் என்று அழைக்கப்படுகின்ற பௌத்தத்தின் கூறுகள் மணிமேகலையில் பல இடங்களில் இடம் பெறுவதை சுட்டிக்காட்ட முடியும். மணிமேகலா தெய்வம் முக்காலமும் உணர்ந்தவள், மந்திரங்களை கற்பிப்பவள், வானில் பறக்கவும் அறிந்தவள். மணிமேகலா தெய்வத்திடம் இம்மந்திரங்களைக் கற்றதன் பயனாலேயே மணிமேகலை வானில் பறந்து சென்றாள். பல நூற்றாண்டுகால யோகப் பயிற்சியினால் தமக்குள் மறைந்திருந்த பல ஆற்றல்களை வெளிப்படுத்தி சாதனைகளை புத்த பிக்குகள் நிகழ்த்த முடிந்தது. மந்திரங்களுக்கு தோதாக தேவதை வழிபாடான தாந்த்ரீக வழிபாட்டையும் இணைத்து சமூகத்தின் அனைத்து பிரிவினரையும், இனக்குழு மக்களையும் கூட தன்வயப்படுத்தினர். இந்த மந்த்ராயனம் கி.பி. 4-ம் நூற்றாண்டுக்குப் பிறகு வஜ்ராயனமாக மலர்ந்தது என பௌத்தவியல் அறிஞர் ராகுல் சாங்கிருத்தியாயன் குறிப்பிடுகின்றார். யோக நெறிகளும் தாந்ரீக வழிபாடும் கொண்ட தாந்ரீக யோகாசார பௌத்தத்தை மணிமேகலை பாத்திரம் இதனால் வெளிப்படுத்துகின்றது. மணிமேகலை காப்பியத்தில் மானிடப் பிறவிகளும், தெய்வப் பிறவிகளும் பெண் பாத்திரங்களாகவே படைக்கப்பட்டிருப்பதாலும் இது தாந்ரீகம் பற்றியது என்று துணிந்து கூற முடியும். பௌத்த சித்தர் மரபுகளுடைய தாந்ரீக யோகமும், மருத்துவ முறைகளும் இதனுள் அடங்கி இருந்தன.

### 3.6.6. மணிமேகலை காட்டும் தமிழ்ப் பௌத்தம்

இந்நிலையில் பௌத்த காப்பியமான மணிமேகலை பல்வேறு வட்டாரத்தன்மைகளை உட்கொண்டிருந்த பௌத்த பிரிவுகளையும்

ஒருங்கிணைக்கும் தன்மையில் கட்டமைக்கப்பட்டிருந்தாலும் அதனை வெளிப்படையாக அறிய முடியவில்லை. ஆனால் பௌத்த தத்துவத்தை மறுத்து சமணத்தை நிலைநாட்டும் நீலகேசி அன்றைய தமிழ்ச் சூழலில் பௌத்தத்தின் நிலையினை தெளிவுறவே எடுத்துக் காட்டுகின்றது. குண்டலகேசிக்கு மறுப்பாக எழுந்தது நீலகேசி என்பதே உண்மையானாலும், மணிமேகலை உருவான காலத்து பௌத்தத்தின் வளர்ச்சியில் முகிழ்த்ததாகவே குண்டலகேசி இருந்திருக்க முடியும் என்பதால், சமண நூலான நீலகேசி குறிப்பிடும் பௌத்தம் என்பது மணிமேகலை காலத்து பௌத்தத்தையும் அறிய உதவி புரியும்.

அறம் போதிக்கவேண்டிய பௌத்த பள்ளிகளில் சுகபோக வாழ்வை மேற்கொண்டுள்ள பிக்குகள், கொல்லாமை நெறியை கைவிட்டு புலால் உண்பதையும், அவர்களின் தகாப்புணர்ச்சி முதலான ஒழுக்கக்கேடுகளையும் சுட்டிக்காட்டி பௌத்தத்தை சாடுவதாக நீலகேசி அமைந்துள்ளது. இதன் குண்டலகேசி வாத சருக்கமும், அருக்க சந்திரவாத சருக்கமும் இதை வெளிப்படுத்துகின்றன. அசங்கர், வசுபந்து ஆகிய பௌத்த அறிஞர்களின் மந்த்ராயனத்தை பின்பற்றும் அருக்கசந்திரனிடம் அவள் வாதிடுகின்றாள். அவருடைய பௌத்தப்பள்ளியில் பஞ்ச மகரங்களாகிய மது, மச்சம், மாமிசம், முத்ர (வறுத்த தானியம்) மைதுனம் ஆகியவற்றை மேற்கொண்டிருந்த பிக்குகளைக் கண்டு அவள் வெறுப்படைந்து (*நீலகேசி* 141-250) அவருடைய விஞ்ஞானத்வைதக் கொள்கையை மறுத்தாள். *நீலகேசி* குறிப்பிடும் மந்த்ராயன பௌத்தத்தின் கூறுகள் கி.பி. 4ம் நூற்றாண்டு *மணிமேகலையில்* காணப்படுகின்றது. மேலும் கி.பி. 4ம் நூற்றாண்டில் பௌத்தம் மந்த்ராயனமாக வடிவெடுத்திருந்தது என்ற ராகுல சாங்கிருத்தியனின் கருத்துக்கு வலுசேர்க்கும் வகையில் சமீபத்தில் ஸ்ரீசக்ர மேருவாகிய கற்சிற்பம் ஒகேனக்கல்லில் கண்டெடுக்கப்பட்டு தருமபுரி அருங்காட்சியகத்தில் தேவ.பேரின்பன் அவர்களால் அளிக்கப்பட்டு அவர் தமது செய்தி மடலில் இதைப்பற்றிய குறிப்புரையும் வழங்கினார். தொல் குடிகளின் வளமை வழிபாடான தாந்திரீகம் கி.பி. 4-ம் நூற்றாண்டில் பௌத்த சமய வழிபாடாக மாற்றப்பட்டது எனவும், பெண்மையை வணங்கும் தொல்குடி நம்பிக்கைகளை பௌத்தம் சித்தர் மரபுடன் இணைத்தது. 84 சித்தர்களின் பலத்தால் உருவான மரபு தமிழகத்தில் காங்சிபுரத்தில் காஞ்சிபுரம் கன்னியாகுமரி ஆகியவிடங்களிலும் பரவியிருந்தது என்கிறார். பிற்காலத்தில் சைவம் எழுச்சி பெற்ற போது சைவமானது பௌத்த தாந்ரீக மரபையும், சித்தர் மரபையும் தன் வசமாக்கிக் கொண்டதாக அவர் குறிப்பிடுகின்றார்.[30]

இனக்குழு மக்களின் வளமைச் சடங்குகள், நம்பிக்கை சார்ந்த தொன்மைக் கடவுள்களையும், வேதக் கடவுள்களையும் தன்வயப்படுத்தி உருவானதே புத்த

ஜாதகக் கதைகள். இதை ஒத்ததாகவே சங்க கால பௌத்த மரபும் உள்ளூர் காவல் தெய்வங்களுடன் இணைந்தும் வட்டாரத்தன்மைகளுடன் செயல்பட்டு சமூக பிரச்சினைகளுக்கு தீர்வுகாண முயன்றது. இது தனி நபருக்கான பிறப்பறுத்தல் என்ற நிலையை தாண்டி அன்றைய ஒட்டு மொத்த சமூக பிரச்சினைகளுக்கு தீர்வு காணும் முயற்சியாக விரிவடைந்தது. ஆன்மாவை மறுத்த பௌத்த நெறியானது இறுதியில் போதிசத்துவநிலையை அடைதலுக்காக புத்தரை கடவுளாக மாற்றியது. இதனை ஆலய விஞ்ஞானம் என்று குறிப்பிட்டனர். *மணிமேகலை*யானது பொருள் முதல் வாத அடிப்படையில் அணுக்கோட்பாட்டை விளக்கிவிட்டு, வினை கோட்பாட்டின் மூலம் 'மறுபிறப்பு' பற்றி கூறுவதால் அது தமக்குள்ளாகவே ஆன்மீக வாதத்துக்கான இடத்தை ஏற்படுத்திக் கொண்டது. இது சமூக வளர்ச்சிப் போக்கில் உழைப்பும், சிந்தனையும் பிரிந்துள்ள நிலையில் ஏற்பட்டுவிடும் குறைபாடாகும். எனவே இவை தத்துவத்தில் தொடக்ககால பொருள் முதல் வாதங்களிலிருந்தே ஆன்மீக வாதத்தை தோற்றுவிக்கும் காரணிகளாயின. இப்போக்கால் அவை ஆன்மீக வாதங்களால் வீழ்த்தப்படும் நிலை ஏற்பட்டது.

இவ்வாறு பௌத்த நெறியானது அதன் வரலாற்றில் சமயமாக உருமாற்றம் பெற்று, அதன் கடவுளாக புத்தர் ஆக்கப்பட்டதுடன், அதன் இறுதிகாலத்தில் பல்வேறு போக்குகளையும் தன்வயப்படுத்திக் கொண்டதன் விளைவால் வீழ்ச்சியை சந்தித்தது. மேலும் தமிழகத்தில் மூவேந்தர்களின் அரசுகள் வீழ்ந்தன. அயல்நாட்டு வாணிபங்கள், வட இந்தியாவுடனான வாணிபம் ஆகியன இல்லாது ஒழிந்த நிலையில் அதனால் மதிப்புற்றிருந்த வணிக வர்க்கமும், ஆட்சியாளர்களும் நெருக்கடிகளை சந்தித்தனர். இது கிரேக்க, ரோம அரசுகளின் வீழ்ச்சியுடன் இணைந்திருந்தது என்று செம்பகலட்சுமி குறிப்பிடுகின்றார். இந்நிலையில் பௌத்தம் நகர அழிவுகள் காரணமாக கிராமங்களைச் சென்றடைந்தது. உள்நாட்டின் உணவு உற்பத்தியில் கவனம் செலுத்தவும், அனைவரின் உணவுத் தேவையை பூர்த்திசெய்யவும் அது முயற்சித்தது. இதனை அதன் அமுதசுரபி மூலம் பிச்சையிடல் என்ற குறியீட்டால் உணரமுடியும். பௌத்தத்தில் கனவாயிருந்த இக்குறியிலக்கு 'அமுதசுரபி'யாக சாத்தனாரால் படைத்தளிக்கப்பட்டுள்ளது. எனினும் அன்றைய பௌத்தத்தின் சீரழிவுப் போக்குகள் இதற்கு தடையாக இருந்தன. எனவே கற்பனையால் கண்டு செயல்படுத்த முடியாதிருந்த இதனை பிறகு வந்த சைவ நெறியானது நடைமுறைப்படுத்தியது. யானைப் பசிநோயைப் போக்குவது அமுதசுரபி மூலம் பிச்சையிடுவது என்பதை நனவாக்க பரந்த அளவில் வேளாண் உற்பத்தியை மேற்கொண்டது. ஏரி குளம் வெட்டியது, வன்புலம் / மென்புலம் வேளாண்மை பெருகியது.[31]

எனவே *மணிமேகலை* காட்டும் பௌத்தம் தமிழ் சமூகத்துக்குள் உருவான

அன்றைய வாழ்நிலைமைகளுக்கு ஏற்ப கட்டமைக்கப்பட்டிருந்த தனித்தன்மையுள்ள தமிழ்ப் பௌத்தமாகவே அறியப்படுகின்றது. இது தமது வீழ்ச்சிக்குரிய உள் முரண்பாடுகளை கொள்கையளவிலும், நடைமுறையிலும் கொண்டிருந்ததால் வைதீகச் சமயங்களால் வீழ்த்தப்பட்டது.

### 3.6.7. *சீவக சிந்தாமணியில்* அரசியல் கருத்தியல்

*சீவக சிந்தாமணி* சமண நூல் என்று அறியப்பட்டாலும் அக்காலத்து ஆட்சியாளர்களுக்கு பயன்படும் வகையில் ஆட்சியைக் கைப்பற்றவும், தக்கவைத்துக்கொள்ளவும் வழிகாட்டு நெறி முறைகளை வழங்குகின்றது. அது துறவொழுக்கத்தின் மேன்மைகளை மட்டும் கூறாமல், ஆளும் வர்க்கம் செய்ய வேண்டிய கருத்துக்களையும் உள்ளடக்கியதாக அமைந்துள்ளது. அது வணங்கிய கைகளிலும், அழுத கண்ணீரிலும், மயிர் முடியிலும் கொலைக் கருவிகள் மறைத்து வைக்கப்பட்டிருக்கலாம். ஆராய்ந்து தீய நட்பை விலக்குக (*சீ.சி.* 1891). அரசன் மகளிரை கூடும்போது, ஆடைய அணிகளை நீக்கி, நம்பிக்கைக்குரிய முதுமகளிரை கொண்டு நீராட்டி, நறுமண மலர், சந்தனம், நல்ல அணிகலன்களால் அழகுபடுத்திய பிறகு கூடச் செய்க (*சீ.சி.* 1892) அரசன் அணியத்தக்க அணிகலன்களை உணவை அன்னம், சரக்கரவாளப் பறவை கொண்டு பரிசோதித்தும், உணவும் நீரும் கருங்குரங்கை கொண்டு பரிசோதித்தும் அளித்து, உண்ணச் செய்க (*சீ.சி.* 1893) குறிஞ்சி (மலை)யிலும், முல்லை (காடு) நிலத்திலும் வாழும் மன்னர்களின் மகளும், வலிமை பொருந்திய வேந்தர்களின் மகளும் ஆகிய எந்த பெண்ணையும் மணப்பதே வேந்தர்களின் வழக்கம் (*சீ.சி.* 1919) ஆறிலொரு பங்கு வரியினை ஈட்டுதலும், பகைவர்களுக்குள்ளே மோதலை உண்டாக்கி பகைவரை மாய்த்தலும், பகைவருள் ஒருவரை தம்மவராக்கிக் கொள்ளுதலும், வேந்தனின் செயலே (*சீ.சி.* 1920) என்றெல்லாம் அரசன் பின்பற்றவேண்டிய நடைமுறைகளை போதிக்கின்றது. நாட்டை ஆள்பவரும் நாட்டையும், செல்வத்தையும் இழந்துள்ள நிலையில் தாழ்ந்த குலத்தவராவர் என்று வண்ணப்பாகுபாடுகள் கீழ் மேல் ஆதலை குறிப்பிடுகின்றது. தமக்கு விதிக்கப்பட்ட வரிகளை தராதவர்களை ஒறுத்து துன்புறுத்தும் முறைகளாக, கைகளில் விலங்கிட்டு சேற்றில் நிறுத்துதல், தீப்புகையில் நிறுத்துதல், அடித்து உதைத்தல், அறைதல், கை கால்களை வெட்டுதல் (*சீ.சி.* 2794) ஆகிய கொடுஞ்செயல்களை மேற்கொள்வதையும் கூறுகின்றது. தொடக்கக் கால சமணம்போல் அன்றி வைதீக மயமாக்கத்துக்கு உட்பட்டுவிட்ட சமணம் பற்றியதாக *சீவக சிந்தாமணி* அமைந்துள்ளது.

தீவினை செய்வோருக்கு ஏற்டும் நரக கதி பற்றி மேலும் இவ்வாறு கூறுகிறது.

◘ உடும்பை வேட்டையாடிக் கொன்ற வேடர்கள் நரகத்தில் செந்நாயால் கடித்துக் குதறப்படுவார்கள். (*சீ.சி.* 2767)

◘ மீன் பிடித்து கொன்ற பரதவர்கள், வாய்கள் பிளக்கப்பட்டு, அவற்றுக்குள் உருக்கிய செம்பு பாளத்தை சொருக, வலி தாங்காதவராக ஊளையிட்டு ஓட, அவர்களின் பாதங்களில் தரையில் பதித்து வைக்கப்பட்டுள்ள ஊசிகள் ஏற வீழ்ந்து கதறுவார்கள் (*சீ.சி.* 2768)

◘ வேடர், பரதவர் வயிற்றில் அழல் (நெருப்பு) இடப்படுவர் (*சீ.சி.* 2770)

◘ ஊன் உணவு உண்டவர்கள், தீயில் விழுந்து எழுந்து மீண்டும் விழுந்து வெந்து கிடப்பார்கள் (*சீ.சி.* 2765)

◘ பிற உயிர்களைக் கொன்றவர்கள் கழுவேற்றப்பட்டு, அவர்கள் கொன்ற விலங்குகளின் மயிர் ஒன்றுக்கு ஒரு தசை வீதம் கணக்கிட்டு அறுக்கப்படுவார்கள் (*சீ.சி.* 2766)

◘ பிறன் இல் விழைந்தவன், உலையில் உருக வைத்த செம்பு பாவையோடு புணர வைக்கப்படுவான். செக்கில் ஆட்டப்படுவான். நெஞ்சில் கூர் உளிகள் செருகப்பட்டு பானையைப் போல இரண்டாக பிளக்கப்படுவர். (*சீ.சி.* 2771) உயர்ந்தோரைத் திட்டிய நாத்திகர்களின் நாக்குகள் பிடுங்கப்பட்டு, அவர்களுடைய நகக் கண்களில் செலுத்தப்பட்டு, இரும்பு வானலில் பொறிக்கப்பட்டு தோல் உரிக்கப்படுவார்கள் என்று குறிக்கப்படுகின்றது. இங்கு உயர்ந்தோர் என்பவர் சமணர்கள் மட்டுமே ஆவர். (*சீ.சி.* 2753) பிற மக்கள் எல்லாம் இந்நிலைகளை அடைந்து துன்புறுவர்.

### 3.7.0. *நீலகேசியில்* கருத்தியல் போராட்டங்கள்

பௌத்தம் மகாயானமாக வளர்ச்சியடைந்த பிறகு மந்திராயனமாகவும், விஞ்ஞானத்வைதமாகவும் தமது கொள்கைளை வடிவமைத்துக் கொண்ட பிறகு பஞ்சமகரங்களை அனுபவிப்பார்களாக மாற்றியதை நீலகேசி ஏற்கெனவே சாடினாள்.

**செம்படர்கள் இறைவன் உறையும் இடம்** (*நீலகேசி* 464)

**கயன் மீனிரியக் கழி நீழ் வரியும்**
**வயன் மாண்புடைய வளமைத்து**

(*நீலகேசி* 467) பௌத்தர்கள் தமது பள்ளியருகே கழி மீன்கள் கவர்ந்து வருதலையும் நீலகேசி குறிப்பிடுகின்றது.

ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்றான குண்டலகேசிக்கு மறுப்பாக எழுந்த காப்பியமே நீலகேசியாகும். இது பௌத்த சமயக் காப்பியமான குண்டலகேசியின் கதைத்தலைவியான குண்டலகேசியை தமது வாதத்திறமையால் வென்று அடக்கி சமணத்தை நிலைநாட்டும் நோக்கில் எழுந்த சமணக் காப்பியம் ஆகும். ஆயினும் இது பௌத்தத்தை மட்டும் மறுக்கும் வகையில் இல்லாமல் பல்வகை சமயப் போக்குகளைக் காட்டிலும் சமணம் சிறந்ததாக இருப்பது எங்ஙனம்? என்று எடுத்துக் காட்டுவதுடன் பிற சமய நெறிகளைப் பற்றியும் அவற்றின் உண்மைத் தன்மைப் பற்றியும் உரசிப்பார்த்து ஆராயும் உரைகல்லாகவும் அமைந்துள்ளது.

### 3.7.1. நீலகேசி x ஆசீவகம்

பௌத்தம் மட்டுமின்றி ஆசீவகம் முதலிய உலகாயதத் தத்துவங்களையும் மறுத்துரைத்தது. சமணர்களுள் ஒரு பிரிவினராகவே ஆசீவகர்கள் கருதப்பட்டுள்ள நிலையில், சமணர்களிடமிருந்து அவர்களை வேறுபடுத்தி காட்டுவதுடன் நேரடியான மோதலை அவர்கள் மீது தொடுக்கின்றது. ஆசீவகர்களும், சமணர்களும் திகம்பரர்களாய்த் திரிந்ததால் இருவரையும் ஒன்றென மயங்குதல் கூடாது. சமணர்கள் அடிப்படையில் அநேகாந்தவாதிகள். ஆசீவகர்கள் அவர்களிலிருந்து மாறுபட்டவர்கள் என்பதை

'அயலியர் தாமல்ல ஆசீவகர்கள்: திகம்பரராயினும் அநேகாந்த வாதிகளாகிய நீர்க்கந்தரல்லர் ஆசீவகர்' என்று நீலகேசியின் உரையாசிரியர் குறிப்பிடுகின்றனர். 'அலப்பா தொழீயேனிவ் ஆசீவகனை, அருகிருந்தார் தாமறிய ஆசீவகனை' (நீலகேசி 687) அதாவது ஆசீவகத்துறவியானவன் பெண்ணோடு கூடினாலும் தீங்கொன்றும் செய்தவன் ஆகமாட்டான் என்பதே ஆசீவகர் கொள்கை. ஆசீவகர்கள் கொல்லாமை வெஃகாமை, உண்மை, கள்ளாமை என்ற நான்கு கொள்கைகளை மட்டுமே ஏற்று பிரம்மச்சரியத்தை துறவின் அடிப்படையாக ஏற்காதவர்கள். சமணர் பௌத்தரிடமிருந்து பிரம்மச்சரியத்தை பின்பற்றாத நடைமுறையால் இவர்கள் வேறுபட்ட கொள்கையாளராகவே அறியப்படுகின்றனர். உலகாயதர்களை ஒத்துள்ள இன்ப நாட்டத்தை ஏற்று நடப்பவர்கள். நீலகேசி காலத்து ஆசீவகர்களின் கொள்கைகள் பின்வருமாறு:

1. நிலம், நீர், தீ , காற்று உயிர் ஆகிய ஐந்து அணுக்களால் ஆனது பொருள். அவை என்றும் இயல்பாய் உள்ளன. அழிவில்லாதன.

2. அவைகளின் இயல்பு (நியதி) படி நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன.

3. காலம் என்ற பொருள் இல்லை.

4. பொருளின் பண்புகள் தனியாக இல்லை, அவை பொருளின் பகுதிகளே.

5. இல்லாத பொருள் தோன்றுவதும் இல்லை; உள்ள பொருள் அழிவதுமில்லை.

இவை கடவுள் மறுப்பு பொருள் முதல்வாத நிலைகள் ஆகும். பொருட்கள் நிலையானவை என்பதை மறுத்து அவை இயக்கத்திலிருக்கின்றன. மாற்ற மடைகின்றன. காய் கனியாவதைப் போலவென்று விளக்கப்படுத்துகின்றது நீலகேசி. பொருள். காலம், இடம் என்ற நிலைகளில் இயங்குவதால் பண்புகளைப் பெறுகின்றது. இத்தகைய பொருள் நான்கு வகைகளில் ஆக்கமுறுகின்றது.

1. ஆக்கம் எய்துதற்குரிய பொருள். 2. ஆக்க மெய்துமுறை , 3. அக்கமெய்துமளவு, 4. ஆக்கமெய்தும் காலம் ஆகியவகைகளில் பண்புகளை பெறுகின்றது பொருள் தனது இயக்கத்தில் உண்மையுமாய், இன்மையுமாய் உள்ளது, ஒரு வகையில் நிலையுயைது ஒருவகையில் நிலையாமையுடையது என்று பொருளின் இயக்கவியலை மேலும் விளக்குகிறது. எனவே ஆசிவகர்கள் பொருளின் மாறாத்தன்மை பற்றி பேசுவது இங்கு மறுக்கப்பட்டு இயக்கவியல் நிலைநாட்டப்படுகின்றது.

### 3.7.2. நீலகேசி x சாங்கியம்

அடுத்ததாக நீலகேசி வாதிடுவது சாங்கியத் தத்துவமாகும். சாங்கியம் ஆதி பொருள் முதல்வாத தத்துவமாகும். கபிலரால் தோற்றுவிக்கப்பட்டது. இந்திய மருத்துவத்தில் காஙகியத்தின் பங்களிப்பு முக்கியத்தும் வாய்ந்தது. வலியுறுத்தியது. பிரகிருதி (புற உலகு)யிலிருந்துதான் புருஷ் (உயிர்) பிரகிருதியை தீர்மானிப்பதாகக் கொள்ளப்பட்டு கருத்துமுதல் வாதத்துவமாக சாங்கியம் மாற்றப்பட்டது. இந்நிலையில் நீலகேசி சந்திக்கும் சாங்கியம் ஆன்மீக வாதமாக மாற்றப்படும் நிலையிலிருந்து சாங்கியம் ஆகும். எனவே நிலைப் பெற்ற உயிர் தெளிவற்ற பிரகிருதி என அறிமுகமாகின்றது. அது பரமாத்மனை விளக்குகிறது. இன்ப வடிவானவன், வேறுபாடில்லாதவன், பற்றில்லாதவன், நித்தியன், எங்கும் உள்ளவன், நெடுஞ்காட்சியன், குணம், குலம், செயல் சீவன் என்றெல்லாம் இறை கொள்கை பேசப்படுகின்றது.

நிலம், நீர், தீ. வளி, ஆகாயம் என்ற ஐந்து அணுக்களின வழியே சாங்கியத் தத்துவம் நிலை நாட்டப்படுகின்றது. ஆன்மா உள்ளிட்டு இருபத்து ஐந்து தத்துவங்கள் சாங்கியம் என்று சொல்லப்படுகின்றது. இவற்றையெல்லாம் பொருந்தாப் பொய் என நீலகேசி மறுக்கின்றாள்.

உயிரை பேருயிர் (பரமாத்மன்) இடையுயிர் (அந்தராத்மன்) வினையுயிர்

(கருமாத்மன்) என சாங்கியன் கூறுவதை குற்றம் என நீலகேசி வாதிடுக்கின்றாள்.

'' நின் பரமாத்மன் செயல் ஒன்றுமில்லாமல் உடல் போன்ற பொருட்களோடு கலப்பேதும் கொள்ளாமல் எல்லாவற்றையும் அறிவது எப்படி? உருவமற்ற காரணமற்ற பிரகிருதி 'யான்- எனது' என்னும் உருவமுடைய 'மானை' எப்படி? பிறப்பிக்கமுடியும்?.

இந்த கேள்விக்கு சாங்கியன் பதிலுரைக்காமல் ஆக்கல், அழித்தல், படைத்தல் பற்றிய பேரான்மா மீது மறுபடியும் பழியைப் போடுகின்றான். சாங்கியனின் ஏகாத்மவாதத்தைத நீலகேசி மறுக்கிறாள். பேருயிர் இடையுயிருடன் சேர்வது என்ற பொய்யுரையை மறுக்கும் நீலகேசி ''இது பேடிகள் இருவர் கூடி குழந்தை பெறுவதற்குச் சமம்'' என எள்ளி நகையாடுகின்றாள். இதன் வழியே படைப்புக் கோட்பாட்டை நிராகரிக்கின்றாள்.

**தன்னை படைப்பின் தான் முன் இன்மையால் இல்லை**
**பின்னைப் படைக்கின் படைக்கப்படுவதின்**
**ன்னைப் படைப்பென் முடிவில்லை மூடனே**
**துன்னைப் படைத்தவர் யாரினி நோக்காய்**

'மூடனே! நின் ஆத்மன் தன்னைத்தானே படைத்துக் கொள்வான் எனில் அவன் தன்னைப் படைத்துக் கொள்ளுமுன் இல்லை; அவன் வேறு ஒருவனால் படைக்கப்பட்டால் அவனைப் படைத்தது எது? இவ்வாறு இது முடிவின்றிப் போகும் கேள்வி. இது பொருந்தாக் கேள்வி. இந்த மாதிரி பொருந்தாமை கூறும் உன்னைப் படைத்தது யாரோ?

நின் ஆத்மன் எல்லா செயலும் உடையவன் எனில் தவம் செய்பவனும் அவனே; கொலை செய்பவனும் அவனே என்றாகிறது. அத்தகைய ஆத்மன் (இன்றவன்) அறிவற்றவனும், தீமையானவனுமே ஆகும்.

'அணுக்கள் நான்குதான் (ஆகாசம் இல்லை), அணுக்கள் தம்முன் ஒன்றோடு ஒன்றாக கூடி உலகெங்கும் பரவி உயிரோடு வினைவடிவில் கலந்திருக்கின்றன. அத்தகைய உயிர்களுக்கு நுகர்ச்சியும். காட்சியும், அறிவும் இயற்கைப் பண்பே ஆகும்.

சாங்கியத்தை மறுத்து சமணத்தை நிலைநாட்டிய பின்பு வைசேடிகத்தத்துவத்தை மறுத்தும் வாதம் நிகழ்த்தப்படுகின்றது- வைசேடிகத்தத்துவத்தின் மூலவர் கனாதன் என்பவராவார். பிற்காலத்தில் அணுக் கோட்பாட்டையும், கடவுள் கோட்பாட்டையும் இணைக்கும் முயற்சியில் வைசேடிகர்கள் ஈடுபட்டனர். இதனால் ஆதிசங்கரரின் அத்வைதத் தத்துவத்துக்கான அடிப்படையை இது வழங்கியது.

### 3.7.3. நீலகேசி x வைசேடிகம்

வைசேடிகம் ஆறு தத்துவ அடிப்படைகளைக்கொண்டது. அவைபொருள் குணம், தொழில், பொது, சிறப்பு, கூட்டம், என்பன. பொருள் ஒன்பதாகும். அவை நிலம், நீர், தீ. வளி, வெளி, திசை, மனம், காலம், உயிர் என்பன. குணம் என்பது அப்பொருளின் பண்புகள். செயல் என்பது அவற்றின் புடைப் பெயர்ச்சி. இவ்வாறு தத்துவார்த்த கருத்தினங்களை வைசேடிகம் (Philosophical catagories வளர்த்தெடுத்தது.

பொருளுக்குள்ளே காணப்படும் பொதுதன்மைகள் பொது (General) எனவும் பொதுவான இயல்புக்குள் உள்ள பொருட்களின் தனி இயல்புகளை சிறப்பு எனவும், பொருட்களுள் ஒரே மாதிரியான குணங்கள் உள்ளவற்றை கூட்டம் எனவும் வகைப்படுத்தின. பொருள் குணம் தொழில் ஆகியவற்றில் பொது இயல்பு கொண்டிருந்தாலும் ஒவ்வொன்றும் வேறு வேறான தனிப்பொருளே ஆகும். என்பது வைசேடிகம் ஆகும்.

இங்கு நீலகேசி ஐம்பூதங்களின் வகைப்பாட்டை மறுக்கிறாள். குறிப்பாக (ஆகாசம்) வெளியின் இருப்பையும், குணத்தையும் (ஞாயிற்றின்) கதிரவனின் எழுச்சி வீழ்ச்சி காரணமாக மனிதர்கள் படைத்துக் கொண்ட வழக்கு மொழியே வெளி என்றும் சொல்லும் நீலகேசி பூதத்தின் பகுதிகள் உள்ளதே ஆகாயம் (ஆகாயம்) என்கிறாள்

அவ்வாறே திசை என்பதும் தனிப் பொருள் அல்ல. பலரின் மத்தியில் நிற்பவன். ஒவ்வொவருக்கும் ஒரு திசையைக் கூறுவான். திசை சார்பு நிலையுடையது. சார்பற்ற தனியான நிலை ஏதுமில்லை அதேபோல மனம் என்பதும் உடலோடு உயிர் கலப்பதில் ஏற்படுவது. எனவே அதுவும் தனிப்பொருள் அல்ல. குணம் என்பது பொருளின் இயல்பில் ஏற்படும் மாற்றங்களால் விளைவது. பொருளுக்கும் (இனி) குணத்துக்கும் இடையே ஒற்றுமை உண்டு. குணம் வினையைச் சார்ந்தது. நல்வினை, தீவினைகளின் பலனை அனுபவித்தாகவேண்டும் என வாதிடும் நீலகேசி பொருளின் மூன்று தன்மைகளை விளக்குகிறாள். தோற்றம், நிலைப்பு, அழிவு ஆகிய மூன்று தன்மையுள்ளது. பொருள், குணமும் குணியும் ஒன்றி நிற்பதால் மானுடர்க்கு நற்காட்சி, நன்தானம், நல்லொழுக்கம் தேவை என்கிறாள் நீலகேசி.வைசேடிகத்தின் அறிதலியலை செழுமைப்படுத்தும் நீலகேசி அதனுள்ளே அமைந்துள்ள இறைக்கோட்பாட்டை வலுவாக மறுக்கிறாள்.

### 3.7.4. நீலகேசி x வேதவாதம்

வேதவாதத் தோடு சொற்போர் நிகழ்த்தும் நீலகேசி வைதீகத்தோடு மிகக் போர்க்குணம் கொண்டு தாக்குகிறாள். பூதிகன் எனும் பார்ப்பனன் வேத நெறியை விளக்குகிறான்.

வேதம் அநாதியானது. உணர்தற்குரியது: வேதத்துக்கு ஆதியுமில்லை, அந்த முமில்லை. அது சுயம்புவானது என்று கூறக் கேட்ட நீலகேசி ‘வேதத்திலிருந்து உருவான வேதாந்த நூல்களும், உபநிடதங்களுமே தமக்குள் இரண்டுபட்டுள்ளதால் அவை பயனற்றவை என்று மறுக்கிறாள். இதற்கு சூத்திர சாதிக்காரி, நாத்திகம் பேசுகிறாய் என பார்ப்பனன் எதிர்க்கவும் நீலகேசி இவ்வாறு மறுக்கிறாள்.

’நின்வேதம் மனிதனால் செய்யப்பட்டது. காண்டல் முரண் உடையது; புதுமையுடையது; பொய்யுடையது: பொருள் வேட்கையை வெளிபடுத்துவது; கூடா ஒழுக்கத்தை வளர்ப்பது; இருளைப் போன்ற மயக்கமும், கொலை முதலிய தீவினைகளையும் ஏதுவாக்குவது. இப்படிப்பட்ட வேதம் எப்படி தான் தோன்றியாக (சுயம்பு) இருக்க முடியும்?

ஒருவன் ஓர் ஊரினது நடுவிடத்தேயுள்ள வீட்டின் வாசலில் நல்லிரவில் மலம் கழித்துவிட்டு யாருமறியாமல் போய்விட்டால், அதைச் செய்தவர் பெயர் தெரியாமல் போனால், அதற்காக மலம் கழித்தவர் யாரும் இல்லை. அது சுயம்புவாகத் தோன்றியது என்று சொல்வாரும் உண்டோ? நின் வேதமும் அதனைப் போன்றதே. மேலும் மருத்துவ அறிஞர் அந்த மலத்தை ஆராய்ந்து அந்த மலம் பிணியுடையது அல்லது பிணி இல்லாதது என்று அறிந்து கூற முடியும். ஆனால் அந்த மலம் மேற்குலத்தாருடையது இழிகுலத்தார் மலம் என்று ஆராய்ந்து அறிய முடியுமா? அவ்வாறே உன் வேதத்தைச் செய்தவர் அறிவுடையவர் அல்லது அறிவில்லாதவர் என அறிய முடியும். ஆனால் அதைச் செய்தவன் மேற்குலத்தான், கீழ்குலத்தான் என்பதை அறிய முடியாது.

’வேதம் எழுத்துக்களால் ஆனது; சொற்களால் ஆனது, அதனை ஆக்கியவர் அதிலேயே குறிப்பிடப்படுவதால் வேதம் மனிதரால் செய்யப்பட்டதே: இயற்கையான வேள்விக்காக உயிர்பலியிடல் அறம் என்பர். காமத்தைவிட்டொழிக்க வேண்டும் என்பர் : பிறகு காமத்தால் வீடு பேறு கிட்டும் என்பர். வேத மறுப்பு சமயங்களின் கூற்றுக்கள் தீமை பயப்பன என்பர். பிறகு உலகில் உள்ள எல்லா சித்தாந்தங்களும் எங்களுடைய வேதத்திலேயே உள்ளன என்பர். இவ்வாறு பல நிலைமாறிய, முரண்பாடுகளைக் கொண்டதே வேதம்.

பிரம்ம தேவனுடைய உறுப்பிலிருந்து நால்வகை மக்கள் பிரிவுகள் தோன்றியதாக கூறுவர். சூத்திரர்களை வேள்வியிலே சேர்க்க மாட்டார்கள். இத்தகு முரண்பட்ட வேதக் கருத்துக்களால் குழப்பமே விளையும். இது தத்துவமுமல்ல. உண்மையில் வேதியர் எனப்பட்டோர் வேள்வி என்று பேரால் கொலை தொழில் புரியும் கொலைபாதகர்கள். இவர்களுக்கு அறக்கோட்டம் வைத்து உணவூட்டினாலும், வேதக் கடவுள்களின் பேரால் உயிர்கொலைபுரிவர். அந்த

கடவுளை அழைத்து காட்டுவதும் செய்வர். இவை பேதமை செயல். இவர்கள் பண்பிலிகள். இவ்வாறு நீலகேசியின் வாதம் தொடரும் நிலையில் இங்கு எட்டுக் செய்யுள்கள் கிடைக்கப் பெற வில்லை. வைதீகத்தின் கைவரிசை இங்கு நிகழ்ந்துள்ளதை அறிய முடிகின்றது.

### 3.7.5. நீலகேசி x பூதவாதம்

இறுதியில், நீலகேசி பூதவாதியோடுவாதம் புரிகின்றாள். பூதவாதிகள் ஆதிபொருள் முதல் வாதிகள். ஐம்பூதங்களே பொருள் என்று பூதவாதி உரைக்கின்றான். ஐந்து பொருட்களாக சேர்ந்ததால் (மது)கள் உருவாவது போல் ஐம்பூதங்களின் சேர்க்கையால், இன்பம், அறிவு முதலியன ஏற்படுகின்றன. உலகம் என்பது ஐம்பூதங்களின் கூட்டமே ஆகும்; இதிலிருந்து மாறுபட்ட உயிர் தனியே இல்லை. உலகின் தன்மை கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூன்று நிலைகளின் நிகழ்ச்சியே ஆகும் என்கிறான் பூதவாதி. மேலும் பூதவாதி மறுபிறப்பு, பேய் முதலியவற்றை மறுத்து உரைக்கின்றான். நீலகேசியால் மேற் கொண்டு வாதிட இயலவில்லை. அவள் வாதிடுவதை நிறுத்தி தனது பேயுருவைக் காட்டி பூதவாதியை மிரட்டி அச்சமூட்டி பணிய வைக்கின்றாள். இதனால் நீலகேசி தமது வாதத்தால் தத்துவ வலிமையால் பூதவாதியை வெல்லவில்லை என்பது நமக்குத் தெளிவாகின்றது.

நீலகேசி சமண சமயத்தின் அடிப்படையில் தத்துவ விவாதம் நடத்தினாலும் பொருள் முதல்வாத அடிப்படையில் வாதங்கள் முன்னெடுத்துச் செல்லப்படுகின்றன. இறைக்கோட்பாட்டுக்கு ஆதரவான தத்துவநிலைகள் மறுக்கப்படுகின்றன. ஆனால் அருக வழிபாடு, மறுபிறப்பு, ஊழ் வினைகருத்துக்கள் சமணசமயத்தின் அடிப்படையாக இருப்பதால் உறுதியான பொருள் முதல்வாத நிலையை எடுக்க இயலாமல் நீலகேசி தடுமாறுகின்றாள். இந்த தடுமாற்றம் தவிர்த்து தமிழர் அறிவியல், தத்துவ வரலாற்றை அறிய நீலகேசி என்ற தர்க்க நூல் தமிழருக்கு கிடைத்த மகத்தான இலக்கியச் செல்வமாகும் என்று தோழர் தேவ. பேரின்பன் தமது ஆய்வில் தெளிவுபட உரைக்கின்றார்.[32]

### 3.8.0. காப்பியங்களில் பார்ப்பன மயமாக்கம்

ஐம்பெருங்காப்பியங்கள் சமணம், பௌத்தம் சார்ந்தவை ஆகும். இவை வினைக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டு கட்டமைக்கப்பட்டவை. வினை பற்றிய பார்வை இச்சமயங்களுக்கிடையே வேறுபடுகின்றன. சமணம் ''சிந்தையின்றிச் செய்யினும் செய்த வினை வந்து உறும்'' என்று இறுக்கமாக பின்பற்றுவது. ஆனால் பௌத்தம் ''பற்றில்லாமலும், தன்னுணர்வின்றியும் செய்கின்ற செயலால் வினை பற்றாது அதற்கு வினைப்பயன் கிடையாது என்ற நெகிழ்ச்சியான நிலைபாடு கொண்டதாக அமைந்துள்ளது. (மலர்வனம் புக்க காதை)

### 3.8.1. *சிலப்பதிகார*த்தில் பார்ப்பனியக் கருத்தியல்

இதன் மூன்று காண்டங்களில் புகார் காண்டமும், மதுரை காண்டமும் ஊழ்வினை குறித்த விளக்கங்களையும், அளிப்பதுடன், வஞ்சிக் காண்டத்தில் சேரனின் வைதீகச் சார்பு, வழிபாடு, சடங்குகள், வேள்வி செய்தல் பற்றி குறிப்பிடுகின்றன. 'சிந்தையின்றி செய்யினும் செய்த வினை வந்து உறும்'. அத்தகைய ஊழ்வினையின் குறியீடாக காற்சிலம்புகள் அமைந்துள்ளன. முற்பிறப்பில் கோவலன் செய்த தீவினை (கொலை)யால் அவன் மனைவி கண்ணகியின் சிலம்பு கொண்டு மதுரை ஏகுகிறான். கல்லா களிமகன், பொற்கொல்லன், பாண்டிய மன்னன் ஆகியோரின் தீவினைகளால் கோவலன் உயிர் பறிக்கப்படுகின்றது. ஒரு சிலம்பு கோவலன் உயிரையும், இன்னொரு சிலம்பு பாண்டியன் உயிரையும் பறித்தது. வினைக்கு ஊற்று இல்லற வாழ்க்கை. இதனை யாராலும் தடுக்க முடியாது. ஊழ்வினை உறுத்து வந்து ஊட்டும் என்று முதல் இரண்டு காண்டங்களில் விளக்கிவிட்டு, இறுதி காண்டத்தில் சேரனின் மூலமாக வைதீக மயமாக்க முயற்சிகள் மேற்கொள்ளப்படுவதையும், மாடலமறையோன் என்றும் பார்ப்பானின் வழிகாட்டுதலின்படி நிகழ்ந்தேறுவது ஆகியவற்றை உள்ளடக்கமாகக் கொண்டமைந்தது *சிலப்பதிகாரம்* ஆகும்.

வஞ்சிக் காண்டம் நடுகற்காதையில் 125 முதல் 135 வரை சேரனின் வீரமும், தோல்வியே காணாத படை செருக்கு பற்றியும் இவ்வாறு ஐம்பது வயது கடந்துவிட்டதையும், இன்னமும வேத வேள்வி புரியாமல், போர் மேற்செல்வதே தொழிலாகக் கொண்டிருப்பது வீணானது என்றும் எடுத்துக் காட்டுகின்றது. 149 முதல் 168 வரையிலான அடிகளில் அவன் வெல்லப்பட முடியாதவன், வடவரும் எதிர்த்து வீழ்ந்தனர் என்றும், இதன் மூலம் யாக்கை நிலையமை, செல்வம் நிலையாமை இளமை நிலையாமை பற்றியும் மூவகையான நிலையாமைகள் கூறப்பட்ட பின்னர் 176 முதல் 182 அடிகள் வரை வேள்வி மேற்கொள்ள செய்தலும் ஆகிய கருத்துக்கள் அமைந்துள்ளன. பெருங்காஞ்சி துறையைச் சேர்ந்ததாக அமைந்துள்ள வைதீக கருத்தியல் செயல்படுத்தப்பட்டது.

### 3.8.2. *மணிமேகலை*யில் பார்ப்பனிய கருத்தியல்

உயிர்களின் வினைகளுக்கு ஏற்ப அவை அறுவகை பிறப்புகளை அடையும். அவை 1. பேய் 2. நரகர் 3. விலங்கு 4. மக்கள் 5. தேவர் 6. பிரமர் ஆகும். இவற்றுள் தீவினைகளால் பேய், நரகர், விலங்கு ஆகிய பிறப்புகளும், நல்வினைகளால் மக்கள், தேவர் பிரமர் பிறப்புக்களும் ஏற்படும் என்று விவரிக்கின்றது. ஆனால் சமணம், உயிர்களின் வினைகளுக்கு ஏற்ப நால்வகை பிறப்பினை அடையும். 1. நரகர் 2.

விலங்கு 3. மனிதர் 4. தேவர் ஆகும் என உரைக்கின்றது. இங்கு மணிமேகலை, சிலப்பதிகாரம், சீவக சிந்தாமணி, சூளாமணி ஆகிய காப்பியங்கள் இயற்றப்பட்ட காலம் என்பது தமிழகத்தில் வண்ண பாகுபாடு ஏற்கப்பட்டிருந்த காலம் ஆகும். பௌத்தம் முதலான சமயங்கள் உயிர்களின் பிறப்புக்களை கூறுவதன் மூலம் வினைப்பாகுபாட்டை தமக்குள்ளே கொண்டிருந்தன.

இதற்கு தெளிவான சான்றாக மணிமேகலை பாத்திரம் அமைந்துள்ளது. மணிமேகலை முற்பிறவியில் சத்திரிய வண்ணத்தில் பிறந்தவள். அவளது தீவினைகளின் காரணமாக புகார் நகரில் கணிகை குலத்தில் பிறக்க நேரிட்டது. ஆயினும், கணிகையாக வாழாமல் பௌத்த மதத்தில் துறவு மேற்கொண்டு நல்வினைகள் செய்ததன் பயனால் அடுத்த பிறவியில் வடக்கே மகத நாட்டில் ஆணாக பல பிறவிகளில் பிறந்து இறுதியில் புத்தரின் தலைமைச் சாவகனாகப் பிறப்பிலிருந்து விடுதலை பெற்றாள். ஆணாய் பிறந்துதான் விடுதலை பெறவேண்டும். அதாவது பெண்ணாய் பிறந்தவர்கள் இப்பிறப்பில் தேரி, பிக்குணிகளாகத் துறவு மேற்கொண்டால் அடுத்தடுத்த பிறவிகளில் ஆண்களாய் பிறந்து விடுதலை பெறலாம் என்று *மணிமேகலை* வழி அறிய முடிகின்றது.

இவ்வாறு வண்ண, சாதிய நிலைமைகளுக்கு ஏற்ப அவைதீக சமயங்கள் தம்மை வடிவமைத்துக் கொண்டதுடன், வைதீக மயமாக்கலுக்கும் தம்முள் இடமேற்படுத்திக் கொண்டனர்.

### 3.8.3. *சூளாமணி* யில் பார்ப்பனியக் கருத்தியல்

அரசு எந்திரம் இயங்குவதற்கான அங்கங்களாக ஐம்பெருங்குழுவும், எண்பேராயமும் அமைந்திருந்தன. இதன் உறுப்புக்களே அரசின் செயலகங்கள் ஆகும். பார்ப்பனப் புரோகிதர்களும், சோதிடர்களும் இவற்றின் முதன்மை அங்கம் ஆவர். அரசாட்சிக்கு அரசனின் உடல் வலிமையைவிட அமைச்சர் முதலான ஆலோசர்களின் மூலம் பெறப்படும் சூழ்ச்சி (அரசியல் அறிவு) மிக்க துணையாகும். அரச நீதி என்பதே சூழ்ச்சிதான். எனவே *சூளாமணி* காப்பியமானது அரசின் **கண்கள்** அமைச்சர், **தோள்கள்** நண்பர் கூட்டம், **காதுகள்** ஒற்றர், **வாய்** தூதர், **உணர்வு** (அறிவு) அரச நூல்கள், **பாதங்கள்** குடிமக்கள் என்று கூறுகின்றது. அதாவது வேதத்தின் நால் வண்ணத்தை புருசனின் வாய், தோள், தொடை, தாள் என ஏறுவரிசை துறையில் கற்பித்து, தம்மால் ஆளப்படும் குடிக்களை, தமக்கு வேண்டிய செல்வத்தை பெறும் வாயிலாக அமைந்துள்ள குடிகளை, கீழ்வாழ்வாரை கீழ்ப்படுத்திதான் என்று குறிப்பிடுவதன்மூலம் அரச அங்கங்களில் குடிகள் கீழ்மக்கள், சூத்திரர்கள் என்று விதிக்கின்றது.

மேலும் வேந்தனை பகைத்துக் கொண்டால் அழிவு நேரும் (1089) நெருப்பு தீண்டியவரை மட்டும் சுடும். அரசனோ, தீண்டியவரை அடியோடு எரித்து விடுவான் (250) மழை, விளைச்சல், உணவு, பெண்டிர் கற்பு, அறம் ஆகியனவெல்லாம் அரசனை சார்ந்து அமைவன (256) என்றெல்லாம் குறிப்பிடுகின்றது. அரசியல் செயல்பாடுகளை 'சூழ்ச்சி' என்றும், மந்திரம் என்றும் கூறுகிறது.

### 3.8.4. *பெருங்கதையில்* பார்ப்பனியக் கருத்தியல்

பிருகத்கதா எனப்படும் குணாட்டியர் எழுதிய பைசாச மொழியில் அமைந்துள்ள நூலின் தமிழ்ப் படைப்பாகிய பெருங்கதையும் அரசியலார் மேற்கொள்ளவேண்டிய சூழ்ச்சிகளை விவரிக்கின்றது. இவை அனைத்திற்கும் கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம் அடிப்படையாக அமைந்துள்ளது என்பதே உண்மையாகும்.

பகைவரின் படையைப் பிளவுபடுத்தி தம் பக்கம் சேர்த்துக் கொள்ள அப்படைத் தலைவருள் யாருக்காவது யானை, குதிரை, தேர், பொற்பாவை, முத்து, பணம், கணிகை முதலியவற்றைப் பரிசாக கொடுத்தும், பொருள் தந்தும் தம் பக்கம் இழுக்க வேண்டும்.

அரசன் தனது படைப்பிரிவுகளிலுள்ள ஒருவனுடைய படையோடு உட்பகை ஏற்பட்டது போலக் காட்டி எதிரியை நம்ப வைக்க வேண்டும். அவன் நம்பிய பிறகு, உட்பகை கொண்டதாகக் காட்டிய படைப்பிரிவை எதிரியோடு சேரவைத்து, தக்கதருணத்தில் எதிரிக்கு தோல்வி ஏற்படுத்த வேண்டும்.

அரசனானவன் தான் இறந்ததாகவோ அல்லது தனக்கு மிகவும் வேண்டியவர் இறந்ததாகவோ வதந்திகளை பரப்பவேண்டும். இறந்ததை நம்பவைக்க அரசனால் கொலைத்தண்டனை விதிக்கப்பட்டு சிறையில் வைத்திருக்கும் குற்றவாளிகளை உருத்தெறியாதபடி கொன்று சிதைத்து பயன்படுத்தவேண்டும் என்றெல்லாம் அரசியல் சூழ்ச்சிகள் குறிப்பிடுகின்றன.

மேலும் ஒற்றறிவதற்கான மாறுவேடங்களாக தொழுநோயாளி, சாமியாடி, பைத்தியம்,தேசாந்திரி, பணிப்பெண், வியாபாரி, பார்ப்பனன் ஆகிய வேடங்கள் ஒற்றறிவதற்கு வசதியானவையாகும் என்பன போன்ற பல்வேறு அரசியல் சூழ்ச்சிகளையும் *பெருங்கதை* விளக்கிச் செல்கின்றது.

### 3.8.5. ஆசாரக்கோவையில் பார்ப்பனிய கருத்தியல்

ஆசாரக்கோவை அன்றாடம் கடைபிடிக்கவேண்டிய புற ஒழுக்கங்களையே விரிவாகப் பேசுகிறது. குறிப்பாக, பழக்கவழக்கங்களையே பெரிதும் முன்வைக்கின்றது. வைகைறையில் எழுவது முதல் இரவு தூங்கப் போகும் வரை

கடைபிடிக்க வேண்டிய காலைக் கடன்கள் செய்யும் முறை, உண்ணும் முறை, உண்ணக் கூடாதமுறை, உண்ணும் கலம், கறி வகைகளை உண்ணும் முறை, நீர் குடிக்கும் முறை, இவையனைத்திற்குமான விதிமுறைகள், உண்டபின் செய்ய வேண்டியவை, வாய் அலம்பக் கூடாத இடங்கள், புகக்கூடாத இடங்கள், எச்சில்கள், மாலையில் செய்யக்கூடாதவை, தவிர்க்க வேண்டியவை, செய்யத் தகாதவை, ஒழுக்கமற்றவை, நினைக்கக் கூடாதவை, நூல் படிப்பதற்கு ஆகாத காலம், மனைவியுடன் சேரக்கூடாத காலம், சேர வேண்டிய காலம் என இவை போன்ற அன்றாட நடைமுறை செயல்பாடுகளைப் பற்றி அமைந்துள்ளது.

இவையனைத்தையும் பார்க்கும்போது சமூகத்தில் ஆசாரங்களை வடிவமைக்கும் பல்வேறு அமைப்பு கூறுகளில் பழக்க வழக்கங்கள் பாற்பட்டவை ஆசாரக் கோவை என்பதை அறிய முடிகிறது. பழக்கவழக்கங்கள் சமூகத்தில் தனிமனிதர் வாயிலாக அறியவேண்டியவையாகும். தனிமனிதர் சார்ந்த அமைப்புருவாக்கத்தையே ஆசாரக்கோவை முன்னிறுத்துகிறது. குலம் தொடங்கி கிளைச்சாதி, சாதி, தமிழ்ச் சமூகம் வரை காணக்கூடிய அமைப்பாக்கத்தை ஆசாரக் கோவை முன்வைக்கவில்லை. இதற்கான காரணங்கள் முக்கியமானவை. அவற்றைப் பின்வரும் விவாதத்தை உள்வாங்கிக் கொண்டபின் உய்த்துணர முடியும்.

ஆசாரக்கோவையானது பார்ப்பனர்கள் தென்னிந்தியப் பகுதிக்குள் வந்து சேர்ந்த அசைவியக்கத்தை காட்டுகிறது. இந்த மிக நீண்ட அசைவியக்கத்தினால் பொது அடையாளம், தனியடையாளம் என்னும் இரண்டு அடையாளங்கள் ஏற்பட்டன. இந்த அடையாள உருவாக்கத்தில் பொது அடையாளத்தை முன்னிறுத்தும் ஒரு பனுவலாக ஆசாரக்கோவை அமைகிறது.

ஆதியில் புரோகித பார்ப்பனர்கள் இந்தியாவிற்குள் வந்தடைந்தபோது தொடக்கத்தில் அவர்கள் மிகச்சில பிரிவினர்களாகவே இருந்தனர். இந்த மிகச் சில பிரிவினர்கள் ஒவ்வொருவரும் ஒரு பொது அடையாளத்தைக் கொண்டிருந்தனர். அவர்கள் கால ஓட்டத்தில் மெல்ல மெல்ல நகர்ந்து தேசந்தோறும் வட்டாரந்தோறும் பரவிக் குடியமைந்தனர். இந்த மிக நீண்ட அசைவியக்கத்தில் எண்ணற்ற நுண்பிரிவினர்களாக அடையாளம் பெற்றனர். இப்பிரிவினர்களுக்கென்று தனித்த அடையாளங்கள் ஏற்பட்டன.

தனித்த அடையாளங்களுடன் தொழிற்பட வேண்டிய அதே நேரத்தில் அவர்களுடைய ஆதி பொது அடையாளத்தையும் விட்டுவிடாமல் தங்கள் உயர்குடி மேலாண்மையைத் தக்கவைக்க விரும்பினர். இதுவே பார்ப்பனர்களின் மேலாண்மைக்கு ஒரு காரணமாகவே அமைந்தது.

ஆசாரக்கோவையில் முந்தையோர் கண்டமுறை (ஆ.கோ.4, 11), யாவரும் கண்ட நெறி (ஆ.கோ.16), நல்லறிவாளர் துணிவு (ஆ.கோ.17), பேரறிவாளர் துணிவு (ஆ.கோ.19), நூல்முறையாளர் துணிவு (ஆ.கோ.61) ஆகிய தொடர்கள் அனைவருக்கும் தேவையான நடத்தை நெறிகளை முன்வைக்கின்றன. சான்றோர்கள் அனைவரும் வலியுறுத்திய நன்னெறிகளாக அவை அமைந்தன.

### 3.8.6. சங்கச் சமூகத்தில் பார்ப்பனிய மேலாண்மை

சங்க இலக்கியத்தில் பார்ப்பனர்கள் அந்தணன், பார்ப்பான், நான்மறையாளன், முனிவன் என்று குறிப்பிடப்படுகின்றனர். பிராமணன் என்ற சொல் குறிப்பிடப் படவில்லை. பிராமணர்கள் வேதம் அறிந்தவர்கள். அதனைத் தினந்தோறும் ஓதுபவர்கள் என்று குறிப்பிடப்படுகிறது.

**அறம்புரி கொள்கை நான்மறை முதல்வன்''** (*புறம்.* 93)

**ஆன்ற கேள்வி அடங்கிய கொள்கை**
**நான்மறை முதல்வர் சுற்றமாக**

(*புறம்.* 26) அந்தணர் வேதம் ஓதுதலை வண்டுகளின் ரீங்காரத்துடன் ஒப்பிட்டு,

**தாதுண் தும்பி போது முரன்றாங்கு**
**ஓதல் அந்தணர் வேதம் பாட**

(*மதுரை.* 655-6) என்றுகூறப்பட்டுள்ளது.

வேதம் அறிந்தமை பார்ப்பனர்களின் தனிச்சிறப்பு. தமிழ்ச்சமூகத்தில் வேறு யாரும் வேதம் அறிந்திருந்ததற்கான குறிப்பு ஏதும் சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை.

பார்ப்பனர்கள் ஆறு தொழிலை உடையவர்கள்.

**ஓதல் வேட்டல் அவை பிறர்ச் செய்தல்**
**ஈதல் ஏற்றல் என்று ஆறு புரிந்தொழுகும்**
**அறம் புரி அந்தணர்**

(*பதிற்.* 24) என்று குறிப்பிடப்படுகின்றனர். இதுவும் பிராமணர்களின் தனித்தன்மைச் செய்கைகளாகக் குறிப்பிடப்படுகின்றன என்பது கவனிக்கத்தக்கது. மேலும், 'பிராமணர்கள் அந்திக்காலத்தே, தீயை வளர்ப்பர், தம் கடமையைச் செய்வர்.

**அந்தி அந்தணர் அயர** (*குறிஞ்சி.* 225)

**அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்**
**முத்தீவிளக்கிற்றுஞ்சும்**

(*புறம்.* 2) பிராமணர்கள் வேள்வி நடத்தி வைத்த செயல் சங்க இலக்கியங்களில் சிறப்பித்துக் கூறப்படுகிறது.

**நெய்மலி ஆவுதி பொங்கப் பன் மாண்**
**வீயாச்சிறப்பின் வேள்வி முற்றி**
**யூபம் நட்ட வியன்களம் முற்றி**
**யூபம் நட்ட வியன்களம் பவகொல்** (*புறம்.* 15)

**வேத வேள்வி துறை முடித்தூ உம்** (*புறம்.* 224)

**வேள்வி முற்றிய கேள்வி அந்தணர்க்கு**
**அருங்காலம் நீரோடு சிதறி** (*புறம்.* 361)

**அவிர் சடை முனிவர் அங்கி வேட்கும்**
**ஆவுதி நறும்புகை**

(*பாலை.* 54, 55) வேள்வி செய்விக்கும் சிறப்பு பிராமணர்களுக்கு மட்டுமே இருந்தது. வேறு யாரும் வேள்வி செய்வித்தாகக் குறிப்பு இல்லை.

பார்ப்பனர்கள் தனியாக வாழ்ந்தனர். அங்கு நாய், கோழி போன்றவை இல்லை என்று குறிப்பிடப்படுகிறது. கிளிகளுக்கு வேதம் சொல்லிக் கொடுத்தனர் என்ற செய்தி கூறப்படுகிறது.

**பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்**
**மனையுற கோழியொடு ஞமலி துன்னாது**
**வளைவாய்க்கிள்ளை மறைவிளி பயிற்று**
**மறை காப்பாளர் உறை பதி**

(*பெரும்.* 298-301) அந்தக் காலத்திலேயே அக்ரகாரங்கள் தமிழகத்தில் தோன்றிவிட்டன என்பதை இது தெரிவிக்கிறது.

பார்ப்பனர்களுக்கும், அரசர்களுக்கும் உள்ள தொடர்பு பல இடங்களில் குறிப்பிடப்படுகிறது.

''பார்ப்பார்க்கல்லாது பணி பறியலையே'' (*பதிற்.* 63) என்று சேரவேந்தனை சிறப்பித்து கூறப்படுகிறது. பார்ப்பனருக்கு அரசர்கள் எவ்வளவு முக்கியத்துவம் அளித்தனர் என்பது இதனால் விளங்கும். மேலும் சோழ அரசன் ஒருவன்,

**நின் முன்னோரெல்லாம்**
**பார்ப்பார் நோவன செய்யலர்**

(*புறம்*. 43) என்று குறிப்பிடப்படுகிறான். பார்ப்பனருக்கு எந்த தீங்கும் அரசர்கள் செய்யமாட்டார்கள் என்ற செய்தி கவனத்தில் கொள்ள வேண்டிய ஒன்று. பாண்டிய அரசனுடைய அவையில் பிராமணர் இருந்தனர் என்பதை

**நான்மறை முதல்வர் சுற்றமாக**

(*புறம்*. 26) என்று குறிப்பிடுவதிலிருந்து அறியலாம்.

பார்ப்பனர்கள் அரசனுக்கு அருகில் இருந்து ஆலோசனை கூறி அவனை வழி நடத்தும் இடத்தில் செல்வாக்குடன் இருந்தனர் என்பது சங்க இலக்கியத்தால் அறியப்படுகிறது.

பார்ப்பனர்களுக்கும் புதிதாக தமிழகத்தில் தோன்றிய அரசுக்குமான நெருங்கிய பிணைப்பை உறுதி செய்யும் சான்றுகள் சங்க இலக்கியங்களில் காணக் கிடக்கின்றன. பார்ப்பனர்களும் அவர்களின் புதிய பண்பாடும், அரசும் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள் ஆகும். தமிழக வரலாற்றில் சங்க காலத்தை அடுத்து பல்லவர், சோழர் காலங்களில் தமிழ்ச் சமுதாயம் நிலவுடைமை சமுதாயமாக வளர்ச்சியடைந்த பின் அதன் தத்துவமாக பார்ப்பனியம் முழுமை அடைந்து சமூக ஆதிக்கம் பெற்றதை அறிய முடிகிறது.

சங்க காலத்தில் தொடங்கிய பார்ப்பனிய தத்துவ வளர்ச்சியுடன் சமக்கிருத மொழியும் தமிழ்ச்சமூகத்தில் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியது. பல்லவ, சோழர் ஆட்சிக்காலத்தில் சமக்கிருத மொழி கோவில்களில் தமிழைப் புறந்தள்ளி ஆதிக்கம் பெற்றது. தெய்வங்களின் பெயர்கள் சமஸ்கிருதமாயின. வழிபாட்டு மொழியாக சமக்கிருதம் நிலைபெற்றது. ஆனால் சாதாரண பொதுமக்கள் வழிபட்டு வந்த கிராமப்புற தெய்வ வழிபாட்டில் பார்ப்பனர், சமக்கிருத ஆதிக்கம் ஏற்படவில்லை என்பது கவனிக்கத்தக்கது.

சோழர்கள் ஆட்சிக் காலத்தில் கோயில்கள் சமூக ஆதிக்க நிறுவனமாக செயல்பட்டன. கோயில்கள் யார் கட்டுப்பாட்டில் உள்ளனவோ அவர்கள் சமூக ஆதிக்கம் செலுத்தினர். அரசனை தலைமையாகக் கொண்ட பெரும் நிலவுடைமையாளர்கள் கோயில்களை தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர் என்பது சோழர் கால கல்வெட்டுக்களிலிருந்து நன்கு தெரிய வருகிறது. சமூகத்தின் இந்த ஆளும் வர்க்கங்களுக்கு பார்ப்பனியம் தத்துவமாக விளங்கியது. சமூக ஆதிக்க சக்திகள் பார்ப்பனர்களையும், சமக்கிருத மொழியையும் ஊட்டி வளர்த்தனர்.

### 3.9.0. இயல் தொகுப்புரை

தான் வாழும் சமூகம், இயற்கை, பிரபஞ்சம் பற்றியும் அவற்றின் தோற்றம், இயக்கம் முடிவு பற்றியும் அறியும் முயற்சியில் ஈடுபட்டு மனிதன் தமது தேடலின் விளைவால் பல்வேறு முடிவுகளை வந்தடைகின்றான். அக்கருத்துக்களின் அடியொற்றியே இவ்வுலகை மாற்றியமைக்கவும், வெற்றி கொள்ளவும், நடைமுறையில் கருத்தியல் போராட்டங்களையும் நிகழ்த்துகின்றான். ஏற்றத் தாழ்வுமிக்க படிநிலைச் சமுதாயமாக விளங்கும் சமூகத்தில் அவனது வர்க்கச் சார்பே அவனது கருத்தியல் போராட்டங்களை வடிவமைக்கின்ற சக்தியாக அமைந்துள்ளது. இது அவரவர் சார்ந்த வர்க்கச் சார்பு கண்ணோட்டத்தால் ஏற்படுகின்றது. இது பெரும்பான்மையோர் நலன் சார்ந்த கருத்தியலாக விளங்கும் போது 'உலக கண்ணோட்டம்' என்று ஏற்கப்படுகின்றது. பெரும்பான்மையோர் பின்பற்றும் சமயமாக, தத்துவமாக, கருத்தியலாக அது அமைகின்றது.

அவை பழந்தமிழகத்தில் அறுவகை காட்சிகளாக அறியப்பட்டன. அவை

1. உலகாயதம் 4. நியாயம்

2. யோகம் 5. வைசேடிகம்

3. சாங்கியம் 6. மீமாம்சம்

என அறுவகைப்பட்டதாக அறியப்படுகின்றன. இத்தகைய வேறுபாடுகளால் சமணம், பௌத்தம், ஆசீவகம், முதலான தத்துவப் பிரிவுகள் தமக்குள் முரண்பட்டும் எதிர்த்தும் மறுத்தும் செயலாற்றின. இதன் அடிப்படையாக 'எழுத்தவையாகவே சங்கப்பாடல்களும், மணிமேகலை, சீவக சிந்தாமணி நீலகேசி, முதலான காப்பியங்களுமாகும். பொருள் முதல்வாத அடிப்படையிலான நாத்திக தத்துவங்கள் தமக்குள் முரண்பட்டும், மோதியும் தம்மை வளர்த்துக் கொண்டது ஒரு புறமிருப்பினும், இன்னொரு புறம் ஆத்திக தத்துவங்கள் இத்தகைய அளவை நெறிகளை சார்ந்திராமல், அறிவைப் பெறும் வாயில்களை ஏற்காமல், ஒலி அளவையினை மட்டுமே உண்மை எனக் கொண்டு அநாதியான வேதத்தை முதலாகக் கொண்டு பார்ப்பனியத்தை வளர்த்தெடுத்தன. புராண இதிகாச மரபுகளில் இருந்து தமக்கானதை பெற்றுக் கொண்டு வைதீக கருத்தியல்கள் வளர்ந்தன.

தொடக்கத்தில் பொருள் முதல்வாதமாக உருக் கொண்டு வளர்ந்த சமணம் பௌத்தம் போன்ற நாத்திக கருத்தியலுக்குள்ளும் வைதீகத்தின் தாக்கம் ஏற்பட்டு அவற்றை எதிர்கொண்டு நிலை கொள்ளவும், இனக் குழு குடி மரபுகளில் நீடித்து வந்த தொன்மங்களை தமக்கானதாக ஆக்கிக் கொண்டன. இதனால் இயக்கி வழிபாடு,

பத்தினி வழிபாடு, முதலியன ஏற்பட்டன.

தமிழர் மரபில் திணை அடிப்படையில் நீடித்து வந்த அம்மக்களின் நம்பிக்கைகள் சடங்குகள் சார்ந்தும் காதல், வீரம் அடிப்படையில் முருகன் வள்ளி வழிபாடு ஏற்பட்டதும், வளமை சார்ந்த சடங்குகளும் வழிபாட்டுக்கு உரியவையாக மாறின என்பதும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது.

இதனால் தமிழ்ச் சமூகத்துக்கே உரிய தனித்தன்மை முருக வழிபாட்டில் அமைந்துள்ளது. முருகன் தமிழ்க்கடவுள். பிறகு சைவ சமயம் எழுச்சி பெற்ற போது திணைச் சமூகங்களின் கடவுள்கள் சிவனுடன் இணைக்கப்பட்டு பெருஞ்சமயத்துள் குழு - குடி சமூகங்களுக்குரியதை தமதாக்கிக் கொண்டனர். நந்தி வழிபாடு, நாக வழிபாடு, சக்தி வழிபாடு, முருக வழிபாடு, திருமால் வழிபாடு ஆகியன இவ்வகையில் சேர்க்கப்பட்டன. தொல்காப்பியத்தில் மாயோன் மாயோள், சேயோன் எனப்படும் சிறு தெய்வங்கள் சிவனாகிய பெருந்தெய்வத்துடன் இணைக்கப்படுகின்றன.

சங்க இலக்கியம், தொல்காப்பியத்திற்கு பிறகு காப்பியங்களின் வழியே பௌத்த, சமண, ஆசீவக கருத்தியல் போராட்டங்கள் எடுத்துக் காட்டப்படுகின்றது. மணிமேகலையில் அறியப்படும் பௌத்தம் தமிழ்ச் சமூகத்துக்கே உரியது. தனித்தன்மை கொண்டு தமிழ் மண்ணுக்கேற்ப கட்டமைக்கப்பட்டது. தமிழ் மண்ணில் 1500 ஆண்டுகாலத்தில் அது பெற்ற வளர்ச்சி, வீழ்ச்சிகளை ஆராய்கிறது.

நீலகேசி பிற சமயத்தாருடன் வாதிட்டு சமண சமயத்தை நிலை நாட்டும் பாங்கும், சமணத்தின் தோல்விக்கான காரணங்களும் சுட்டிக்காட்டப்படுகின்றது. இவ்வியலில் உலகாயத, சாருவாக, சமண, பௌத்த, ஆசீவக, தாந்திரிக, யோகசார நெறிகள் விளக்கப்படுவதுடன் அவற்றை வீழ்த்தும் வகையில் பார்ப்பனியம் தலையெடுத்து ஆட்சியாளர்களின் கொள்கையாக அது மாற்றம் பெற்றவுடன் நாத்திக பொருள்முதல்வாத சமயங்களான இவை முற்றாக அழிக்கப்பட்டன. தனியுடைமை வளர்ச்சிக்கும் ஆதிக்கத்துக்குமான வலுவான கருவியாகப் பார்ப்பனியம் விளங்கியது என்பதையும் இவ்வியல் விரிவாக ஆராய்கிறது.

இவற்றையெல்லாம் உள்வாங்கிக் கொண்ட சைவ நெறியானது அடுத்து கருக் கொண்டிருந்த புதிய சமூகத்துக்கான உள்ளடக்கத்தைப் புரிந்து கொண்டு பல்லவர் காலம் தொடங்கி சோழப்பேரரசு உருவாகி நிலைப்பட அடிப்படையாக இருந்து செயலாற்றியது. இவ்வாறு ஆத்திக வைதீக இயக்கங்கள் செல்வாக்குப் பெற்றன என்பதை இறுதியாக இவ்வியல் நிறுவுகின்றது.

- - - - -

# சான்றெண் விளக்கம்


1. Debiprasad Chattopathyaya, *What is living and What is dead in Indian, Philosophy,* page 474 to 490, 1980, P.P.H., New Delhi.

2. நல்லூர் சரவணன், சா., *மாதவ சிவஞான முனிவர் நூற்களஞ்சியம்,* தொகுதி 3, சிவஞான சித்தியார் சுபக்க பொழிப்புரை, பக்கம் 2655, ஜூன் 2010, கவிதா வெளியீடு, சென்னை - 17.

3. இராமநாதன், பி., *இருபதாம் நூற்றாண்டுத்தமிழ்ப் பெயரகராதி,* தொகுதி 2, பக்கம் 552, 1980, தென்னக ஆய்வு மையம், சென்னை - 2.

4. பார்த்தசாரதி, ஆர்., *உலகாயதம்,* பக்கம் 22, முதல் பதிப்பு, NCBH, 2008, சென்னை - 98.

5. தேவிபிரசாத் சட்டோபாத்யாயா, *உலகாயதம்,* (தமிழில் தோதாத்ரி), 2010, பக்கம் 560, NCBH, சென்னை - 98.

6. பூங்குன்றன், ர., பெருங்கதையில் அறுவகைச் சமயம் கட்டுரை, *சமூக விஞ்ஞானம்,* ஆய்விதழ் மலர் 6, இதழ் 26, மார்ச் 2010ல் வெளிவந்த கட்டுரை.

7. முப்பால்மணி, *தமிழகத் தத்துவம் உலகாயதம்,* 195, 2013, முதல் பதிப்பு, NCBH, சென்னை - 98.

8. தேவிபிரசாத் சட்டோபாத்யாயா, *உலகாயதம்,* பக்கம் 47, 2010, தமிழில் தோதாத்ரி, NCBH, சென்னை - 98.

9. மார்க்ஸ், கார்ல்., எங்கெல்ஸ், பிரடரிக், *மார்க்ஸ் எங்கெல்ஸ் தேர்வு நூல்கள்,* தொகுதி1, பக்கம் 7, முன்னேற்ற பதிப்பகம், மாஸ்கோ.

10. வானமாமலை, நா., *இந்தியத் தத்துவ மரபும் மார்க்சிய இயக்கவியலும்,* பக்கம் 23, அலைகள் வெளியீடு, சென்னை - 24.

11. வேல்சாமி, போ., மார்க்ஸ், அ., *தமிழ் இலக்கியப் பாரம்பரியத்தில் சாதி எதிர்ப்புக்குரல்,* பக்கம் 6, NCBH, சென்னை - 98.

12. பக்தவத்சல பாரதி, *தமிழர் மானிடவியல்,* பக்கம் 104, மெய்யப்பன் தமிழாய்வகம், 2002, சிதம்பரம்.

13. சிவத்தம்பி, கா., *பண்டைத்தமிழ்ச் சமூகத்தில் நாடகம்,* பக்கம் 227, 2005, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

14. பேரின்பன், தேவ., *தமிழும் சமக்கிருதமும் மெய்யும் பொய்யும்,* பக்கம் 54, 2013, பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையம், மதுரை - 10.

15. பார்த்தசாரதி, ஆர்., *சிந்தனைக் களஞ்சியம்,* பக்கம் 36, NCBH, சென்னை - 98.

16. கோசாம்பி, டி.டி., *பண்டைய இந்தியா,* பக்கம் 334, NCBH, சென்னை - 98.

17. காட்வெல், கிறிஸ்டோபர்., *கானலும் உண்மையும்,* தமிழில் தோதாத்ரி, பக்கம் 53-55, 2007, NCBH, சென்னை - 98.

18. எங்கெல்ஸ், பி., *குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,* பக்கம் 259, 2005, NCBH, சென்னை - 98.

19. பக்தவத்சல பாரதி, சங்க இலக்கியத்தில் குடும்ப உறவுமுறை கூறும் கட்டுரை, *புதிய பனுவல்,* காலாண்டிதழ், ஏப்ரல் 2010.

20. சிவத்தம்பி, கா., ஜனசக்தி நாளிதழின் நேர்காணலில் குறிப்பிட்டது. *ஜனசக்தி* நாளிதழ், 14.7.2010.

21. கைலாசபதி, க., தமிழ் வீரநிலைக்கவிதை, பக்கம் 14-15, 2006, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

22. கோசாம்பி, டி.டி., *பண்டைய இந்தியா,* பக்கம் 187, 1980, NCBH, சென்னை - 98.

23. சிவத்தம்பி, கா., *பண்டைத்தமிழ்ச் சமூகத்தில் நாடகம்,* பக்கம் XVII, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

24. கந்தசாமி, சோ.ந., *இந்தியத் தத்துவக் களஞ்சியம்*, தொகுதி I, பக்கம் 42, 2003, மெய்யப்பன் பதிப்பகம், சென்னை - 14.

25. ராகுல சாங்கிருத்தியாயன், *பௌத்த தத்துவ இயல்*, பக்கம் 67, NCBH, சென்னை - 98.

26. Ed. Debiprasad Chattopadhyaya, Sec. of the Budhist, T.W. Rhys Davids, *Studies in history of Indian Philosophy,* Page 104.

27. ராகுல சாங்கிருத்தியாயன், *பௌத்த தத்துவ இயல்*, பக்கம் 69, NCBH, சென்னை -98.

28. தேவிபிரசாத் சட்டோபாத்யாயா, *உலகாயதம்,* பக்கம் 434, NCBH, சென்னை - 98.

29. நடராசன், செந்தீ., *புலைபேடி என்றொரு விசித்திர வழக்கம்,* பக்கம் 28, NCBH, சென்னை - 98.

30. பேரின்பன், தேவ., *ACSHR செய்தி மடல்,* மடல் 2, செய்தி 1, ஜனவரி 2013, பக்கம் 7.

31. இளங்கோ, க., *பின் நவீனத்துவத்தின் எதிர்காலம்,* பக்கம் 93, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

32. பேரின்பன், தேவ., *தமிழர் தத்துவம்,* பக்கம் 69, 2006 NCBH, சென்னை - 98.

- - - - -

★ முன்னுரை, முடிவுரை நீங்கலாக மூன்று இயல்களில் ஆய்வு மேற்கொண்டு பெறப்பட்ட முடிவுகள் இங்குத் தரப்படுகின்றன. முச்சங்கங்கள் பற்றிய தொன்மங்கள் வரலாற்றுக் காலத்துக்கு முந்தைய பத்தாயிரமாண்டுகால வளர்ச்சி குறைந்த வாழ்க்கை முறையை சிறப்பிக்க வந்தவை என்பது இவ்வாய்வில் விளக்கப்பட்டுள்ளது. மேலும் வேறுபட்ட நிலவியல் கூறுகளுக்கும், அதற்கொப்ப அமைந்த வாழ்க்கை முறைகளுக்கும் ஏற்ப வடிவமைந்திருந்த திணைச் சமூகங்கள் அழிக்கப்பட்டு அல்லது ஒருங்கமைக்கப்பட்டு உயர்குடியினர் ஆட்சியும், அரசும் கட்டமைக்கப்பட்டது. மாறுபட்ட இயற்கைச் சூழமைவுக்கு ஏற்ப தகவமைந்து வாழ்ந்து வந்த குழு-குடி அரசு சார்ந்த திணைச் சமூகத்து மக்களின் வாழ்க்கை முறை பரந்த அரசின் கீழ்வரும்போது பெரிதும் மாற்றமடைந்தது. வெற்றி கொள்ளப்பட்டு வீழ்த்தப்பட்ட அவர்கள் காடழித்து நிலம் திருந்தி விவசாயத்தில் ஈடுபடும்படி கிராமங்களில் குடியமர்த்தப்பட்டனர். இவை தன்னிறைவுச் சமுதாயங்களாக வடிவமைந்து பிற்காலத்தில் சாதிகளாக நிலைபெற்றன. இங்கு நானிலம் என்கின்ற பாகுபாடு மறைந்து வன்புலங்களை மென்புலமாக்கலும் நிகழ்ந்தது.

அக்கம்பக்கமாக நிலவியிருந்த திணைச்சமூகங்கள் ஒத்த தன்மையுடையனவல்ல. வளர்ச்சியில் முன்னேற்றங்கண்டிருந்த மருத நிலங்களும், வானம் பார்த்த பூமியாக, தம்முடைய கால்நடைகளையே செல்வமாக கருதி வாழ்ந்து வந்த முல்லைநிலமும், எரிபுனச் சாகுபடியும், தோட்ட வேளாண்மையும், உணவுதிரட்டலும், வேட்டையாடுதலும் கொண்டிருந்த குறிஞ்சி நிலமும், மீன் பிடித்தலும் உப்பு விளைவித்தலுமே தமது பொருளாதாரமாக கொண்டிருந்த நெய்தல் நிலமும் தன்னகத்தே கொண்டிருந்த சங்கச் சமூகமானது, முதுகுடி மன்னர், சீறூர் மன்னர், வேளிர், வேந்தர் எனப்பட்ட ஆற்றலிலும், தன்மையிலும், பண்புகளாலும் மாறுபட்ட ஆட்சியாளர்களைக் கொண்டதான இச்சமூகம் ஆசிய வகை உற்பத்திமுறைச் சமூகம் என்று கண்டறியப்பட்டுள்ளது.

இவற்றுள் 'வம்ப வேந்தர்' எனப்பட்ட மூவேந்தர் மட்டுமே 'அரசு' எனும் இயந்திரத்தை கட்டமைத்தவர்களாவர். தமக்குத் துணையாக முல்லை நிலத்து சீறூர் மன்னர்களை உடன் கொண்டு முதுகுடி மன்னர்களையும் வேளிர்களையும் அழித்தனர். சீறூர் மன்னர்கள் வேந்தரின் கீழிருந்து வேந்து விடு தொழில் மூலம்

படையேற்று நடத்தியும் வேந்தின் உள்ளடங்கிய நிலப்பகுதிகளின் ஆட்சிப் பொறுப்பாளர்களாகவும் 'தண்ணடை' பெற்று விளங்கினர். தனியுடைமைச் சிந்தனை முல்லை நிலத்தில் பெரிதும் முன் வைக்கப்படுகின்றது. ஆண் மகவு 'குலவிளக்கு' எனப்பட்டதும், முல்லை சான்ற கற்பு, என்ற வகையில் ஒருவனுக்கு ஒருத்தி எனும் வாழ்க்கை முறை சிறப்பாக கட்டமைக்கப்பட்டதும், 'இருத்தல்' ஆகிய காத்திருப்பும் முல்லை நிலத்திற்கே உரியனவாகும். வேந்தர்களின் நில விரிவாக்க முயற்சிகளுக்கு பெரிதும் ஒத்துப் போனவர்களாக சீறூர் மன்னர் விளங்கினர்.

அரசனின் நாடு பிடித்தலுக்கும், எல்லை விரிவாக்கத்துக்குமான பேரவாவினை தூண்டும் வகையில் பார்ப்பன வேள்விகள் நடத்தப்பட்டன. நானிலம் தாங்கிய வேந்து உருவாக்கம் பலவித அரசியல் சூழ்ச்சிகளை கையாண்டு நிகழ்த்தப்பட்டது. அவர்களின் போர் விருப்பங்களுக்கு குழு-குடி தலைவர்களிடம் 'மக்கட்கொடை' வேண்டுதலும், மறுத்த நிலையில் போர் தொடுத்தலும் என்ற வழிமுறையினையும் பின்பற்றினர். தம்மால் தோற்கடிக்கப்பட்டவரை அடிமையாக மைந்து பொருளாக கொண்டுவந்து அவர்களை பிரித்துவைத்து கிராமங்களில் குடியமர்த்தி நிலம்திருத்தி வேளாண்மை உற்பத்தியில் ஈடுபட செய்தனர். இதற்காக நீர்ப்பாசன ஏற்பாடுகளையும் அவர்களின் கடும் உழைப்பைக் கொண்டு கட்டமைத்தனர். விளையுளில் ஆறிலொரு பங்கு வரியாக அக்கிராமங்களிலிருந்து பெறப்பட்டது. மேலும், புறவு, முற்றூட்டு ஆகிய வரிகளும், உல்கு, தெறுபொருள் ஆகிய வரிகளும் பெறப்பட்டு அரசின் கருவூலம் நிரம்பும்படியாக பார்த்துக் கொண்டனர்.இவர்களுக்கு பின் வந்த ஆட்சியாளர்களின் குடி நாட்டமில்லாத போக்குகளாலும், தொடர்ந்து வேளாண் விரிவாக்கப் பணிகளை மேற்கொள்ளாமல் விளைச்சல் பொய்த்த நிலையிலும் வரியை பெறுவதில் அரசன் வன்முறையாளனாக மாறினான் என்பதையும், இதனால் துன்பமுற்ற கடைசியராகிய அடிமை மக்கள் கிளர்ந்து போராடினர். ஆட்சியாளர்களுக்கு இணையாக வளர்ந்திருந்த வணிக வர்க்கத்தினர் கடைசியரின் சார்பிலிருந்து இதனை மேற்கொண்டனர். இதுவே களப்பிரர் காலம் ஆகும் என்பது முதலாம் இயலில் பெற்ற முடிவாகும்.

★ எட்டுத்தொகை பத்துப்பாட்டு எனப்படும் சங்க இலக்கியமானது உயர்ந்தோர் மாட்டே பாடப்பட்டனவாகும். அவற்றுள் தலைமக்களைத் தவிர பிறர் பாடப்படவில்லை. இந்நிலையில் அக்காலத்தே நிலவிய உற்பத்தி முறை இத்தன்மையது என்று அறிய சான்றுகள் ஏதும் இல்லாத நிலையில் இலக்கியங்களின் வாயிலாக அறியப்படும் தொழிற்கருவிகள், அக்கருவிகளைக் கைக்கொண்டு அத்தொழில்கள் ஈடுபட்டோர் ஈடுபடுத்தியோரை ஆராய்ந்தும், அன்றைய உற்பத்தி முறை அடிமைகளைக் கொண்டு மேற்கொள்ளப்பட்டது. அன்றைய ஆட்சியாளர்கள் அடிமையுடைமையாளர்களாக இருந்துள்ளார்கள் என்பதுவும் முடிவாக பெறப்பட்டது.

**வினையே ஆடவர்க்குயிரே வாணுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்**

(*குறு*.135:1-2) போர்மேற்செல்லவும், பொருள் தேடவும், கற்றலுக்காகவும் பிரிய நேரிட்டது. சமூக பொருளிய அடிப்படையில் நோக்கும்போது வினை ஆடவர்க்கு உயிர் என்றும், மனையுறை மகளிர்க்கு ஆடவரே உயிர் என்றும் கூறப்பட்டது. இது தனியுடைமைச் சிந்தனையின் வெளிப்பாடே ஆகும்.

சங்க இலக்கியத்தில் பேசப்படும் வீரமும், சங்ககாலப் பெண்களின் மறப்பண்பும் கூட ஒரு குறிப்பிட்ட சமூக பொருளிய வாழ்நிலையின் அடிப்படையில் உருவானதே ஆகும். என் மகன் மார்பிலே வேல்தாங்கியவனாய் போர்க்களத்தில் வீழ்ந்து கிடப்பான் என்ற தாயின் வீரம், அவன் போரில் தோற்று, பிடிக்கப்பட்டு இந்நேரம் அடிமை கொள்ளப்பட்டிருக்க மாட்டான் என்பதை கூறாமல் கூறுகிறது. அடிமையாவதைக் காட்டிலும் களத்திலே மாள்வது சிறந்த பண்பு. வாழ்ந்தாலும் வீரன், வீழ்ந்தாலும் வீரனாய் வீழ வேண்டும் என்பதன் சமுதாய பின்புலத்தில் அடிமை நிலை எய்தாமைக்கான போராட்டத்தையே குறிக்கிறது. 'குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும் ஆளன்றெண்ணி வாளின் தப்பார், என்பதும், ''அடிமையல்லோம்'' என்ற அறைந்துரைக்கின்றது. ஆள் என்னும் அடிமையும் தொழுவர், தொழும்பர், கடைசியர், வினைவலர், அடுமகள், கொண்டி மகளிர் ஆகிய போரில் வீழ்த்தப்பட்டு அடிமையானவர்களை மிகுதியும் கொண்டு நில விரிவாக்கம், மென்புலமாக்கல், நகர கட்டமைப்புகள், நீர் நிலை பெருக்கம், நீர் பாசன ஏற்பாடுகள் ஆகியவைகளை வேந்தர்கள் மேற்கொண்டிருந்தனர். உலகமெங்கும் இரும்புக்காலம் அடிமையுடைமை சமுதாயமாக விளங்கியதைப் போன்றே சங்கச் சமுதாயமும் அடிமையுடைமை மீது கட்டமைக்கப்பட்டிருந்தது.

நெடிய கால அடைவிற்குள் பாடப்பட்டதாக விளங்கும் *புறநானூறு, நற்றிணை* ஆகியன இனக்குழு அரசுகள் அழிக்கப்பட்டு அரசுகள் உருவானதைப் பேசுகின்றன. *பொருநராற்றுப் படை*யும் *பட்டினப்பாலை*யும் சோழர் ஆட்சி பற்றியதாகும், *நெடுநல் வாடை*யும், *மதுரைக் காஞ்சி*யும் பாண்டியர் ஆட்சி பற்றியதாகும். *பதிற்றுப்பத்து, தகடூர் யாத்திரை* சேரர் ஆட்சிமுறை வெற்றி ஆகியவை பற்றியதாகும்.

மூவேந்தர்களும் பார்ப்பனர்களின் வழிகாட்டுதலில், நிலவிரிவாக்கம், அடிமை கொள்ளல் போன்ற முயற்சியில் ஈடுபட்டு வேள்வி மேற்கொண்டனர். மிகுதியான சான்றுகள் இதனை வெளிப்படுத்துகின்றன. ஆனால் கிடைக்கப் பெறும் நூல்கள் சமண, பௌத்த சார்பு கொண்டவை என்பதால் அவை பார்ப்பனர்களின் மேலாதிக்கத்தை வெளிப்படுத்தவில்லை. அவர்களையும் பிற குடிகளைப் போன்றே குறிப்பிடுவதால் அவர்கள் பிற குடிகளைப் போன்றே எவ்வித உரிமையும் அற்றவராக

இருந்தனர் என்று ஆய்வாளர்கள் கருதுவதற்கு இடமேற்பட்டுவிட்டது.

வேந்தர்களை கீழ் வாழ்பவராகிய குடிகளிடமிருந்து பிரித்து, குடிநாட்டமில்லாத ஆட்சியாளர்களாக மாற்றியதும் இவர்கள் தயவாலே நிகழ்ந்தது. கருவூலங்களை நிரம்பச் செய்து செல்வச் செழிப்பில் வாழ்தலையே அறமாக்கிக் கொண்ட நிலையில் அந்த ஆட்சியாளர்கள் கீழ் வாழ்வாராகிய அடிமைகளால் வீழ்த்தப்பட்டதுதான் களப்பிரர் காலம் என்பதை உணர்த்தும் மறைமுகமான பாடல்களும் கிடைக்கின்றன. இங்கு தனியுடைமை தோன்றியவுடனே பெண்ணடிமைத்தனமும், அடிமையுற்பத்தி முறையும் தோன்றிவிடுகின்றது என்பது உலகம் முழுவதும் காணப்படும் பண்பாகும். எனவே இங்கு மகதப்பேரரசு போன்றதொரு அடிமையுடைமை மீது கட்டமைக்கப்பட்ட பேரரசு தோன்றவில்லை. மூவேந்தர்களின் அரசுகள் வேந்தகங்களே என்ற கருத்தும், இங்கு சமமான வளர்ச்சியின்மையால் நிலவிய கூர்தலற அரசு (Segmentry State) தான் இருந்தது என்பன போன்ற கருத்துக்களும் நிலவுகின்றன.

அரசின் பெரும் பரப்பு, சாதனைகளால் உற்பத்தி முறை தீர்மானிக்கப்படுவதில்லை. இங்கு தனியுடைமை தோன்றியவுடனே, பெண்ணடிமைத்தனமும், அடிமையுற்பத்தி முறையும் தோன்றிவிடுகின்றது என்பது உலகம் முழுதும் காணப்படும் பண்பாகும். சங்கச் சமூகத்திலும் தனியுடைமை தோன்றியவுடன் அடிமை முறையும் தோன்றிவிட்டது. சங்க காலத்தில் தனியுடைமை என்பது அரசனுக்கே உரிய உடைமைப் பொருள் ஆகும். அசையும் அசையாப் பொருட்கள், உயிருள்ள, உயிரற்ற அனைத்தையும் உடைமையாகக் கொண்டவர்கள் வேந்தர்கள் என்ற நிலையே சங்க காலத்தில் இருந்தது. இந்நிலையில் வேந்தர்களின் கருவூலத்திற்கு இணையான கருவூலங்களை கொண்டவராக அயலக வணிகம் மேற்கொண்ட வணிகர்கள் விளங்கினர். ஆட்சியாளர்களுக்கும், வணிகர்களுக்கும் இடையிலான முரண்பாடும் ஆட்சியாளர்களுக்கும் கீழ்வாழ்வாராகிய குடிகளுக்கு இடையிலான முரண்பாடும் இணைந்து ஆட்சியாளர்கள் வீழ்த்தப்பட்டனர். ஆயினும் மீண்டும் பார்ப்பனர்களின் வழிகாட்டுதலில் முன்னிலும் வலிமையான அரசும் சமூக அமைப்பு முறையும் கட்டியெழுப்ப வைதீக பார்ப்பனர்களின் வண்ண சாதிய வழிமுறைகள் பயன்பட்டன. இவற்றை காப்பியங்களும் செப்பேடுகளும் வெளிப்படுத்துகின்றன. இரண்டாம் இயலில் கண்டறியப்பட்ட முடிவுகள் இவையாகும்.

★ தனியுடைமையின் தோற்றமும், அடிமைச்சமூகமும் கட்டமைக்கப்பட்ட நிலையில் அவற்றுக்குச் சார்பான கருத்து நிலை உருவாக்கம், வர்க்கச்சார்பு கருத்தியல்கள், அவற்றுக்கிடையிலான மோதல்கள் உருவாகிவிடுகின்றன. சமூகநீதி,

சமூக அறம், அரசுக்கு முன்பிருந்த இனக்குழு குடி அரசுகளின் செயல்பாடுகளை தமக்குள் உட்கொண்டிருந்த பௌத்தம் முதலிய வைதீகமல்லாத தத்துவங்கள் அடிமைச்சமூகத்துக்கு மாற்றாகத் தமது கொள்கைகளை முன்வைத்தன. ஆயினும் அவை கடந்து முடிந்த தொல்குடி சமூகத்துக்குரிய கருத்தியல்களாக இருந்ததால் வெற்றி பெற முடியவில்லை. இதனை பிற்காலத்தில் உணர்ந்து கொண்டு அடிமை சமூகத்தின் பொருளிய வாழ்நிலைமைக்கு ஏற்ப அவை தமது கருத்துக்களை பார்ப்பனிய கருத்தியலின்படி திருத்தியும் கூட, அடிமை சமூகத்தைக் கட்டமைக்க வழிகாட்டிய வைதீக பார்ப்பனியக் கருத்தியலின் மேலாதிக்கத்தால் அவை வீழ்ந்தன. இங்கு பார்ப்பனியம் வேலைப் பிரிவினைக்காக ஏற்படுத்தப்பட்ட கிராமச் சமுதாயங்களை நிலையானதாக, கட்டிருக்கமானதாக, வண்ணங்களின் அடிப்படையில் பிளவுபடுத்தப்பட்ட சாதிகளாக வளர்த்தெடுக்க முற்பட்டன. இதன் அடிப்படையில் முற்றிலும் புதிய உற்பத்தி உறவுகளுடன் கூடிய வேறொரு சமூகம் மேலெழுந்தது. இது பல்லவர் காலமாகும் என்பது மூன்றாம் இயலின் பெறப்பட்ட முடிவாகும்.

வளர்ச்சி குறைந்த இனக்குழு உற்பத்தி முறையிலிருந்து முன்னேறிய வர்க்கச் சமுதாய அடிமை உடமை உற்பத்தி வளர்ந்ததுடன், அவை நாளடைவில் கட்டிருக்கமான வண்ணங்களின் மீது கட்டமைக்கப்பட்ட சாதிய சமூகமாக மாற்றம் பெற்றது என்பது இவ்வாய்வின் மூலம் பெறப்பட்ட முடிவாகும்.

மேலும் விரிவான பல ஆய்வுக் களங்களை தன்னகத்தே கொண்டுள்ள சங்கச் சமூகமானது, மேலும் பல விரிந்த தளங்களில் ஆய்வு மேற்கொள்ளும் தேவையுடையதாகவே விளங்குகின்றது. அவற்றுள் சில:-

1. சங்க காலத் தொழில்களும் தொழில் நுட்பவியலாளரும்

2. சங்கச் சமூகத் திணைசார் வாழ்வியலும் திணை மயக்குறுதலும்

3. திணைச் சமூகங்களில் உற்பத்தி உறவுகளும், மாற்றங்களும்

4. சங்கச் சமூகத்தில் அறிவியல் சிந்தனைகள்

5. சங்கச் சமூகத்தில் பொருள்முதல்வாதம் சிந்தனைகள்

முதலியனவாகும்.

- - - - -

## முதன்மை நூல்கள்


1. *அகநானூறு,* 1958, மர்ரே எஸ்.ராஜம், சென்னை.

2. *ஆசாரக்கோவை,* பெருவாயின் முள்ளியார், கழகம், 1949, சென்னை.

3. *கலித்தொகை,* 1957, மர்ரே எஸ். ராஜம், சென்னை.

4. *களவியல் என்ற இறையனார் அகப்பொருள்,* நக்கீரர் உரையுடன், 1976, கழகம், சென்னை

5. *குறுந்தொகை,* 1957, மர்ரே எஸ். ராஜம், சென்னை.

6. *குறுந்தொகை,* உ.வே.சாமிநாதய்யர், 2000, உ.வே.சா. நூல் நிலையம், சென்னை - 90.

7. *சங்க இலக்கியம்,* இரண்டு தொகுதிகள், 1967, பாரி நிலையம், சென்னை

8. *சிலப்பதிகாரம்,* அரும்பத உரையும் அடியார்க்கு நல்லார் உரையும், 1968, உ.வே.சா. நூல் நிலையம், சென்னை.

9. *சீவக சிந்தாமணி,* மூலமும், நச்சினார்க்கினியர் உரையும், 1969, உ.வே.சா. நூல் நிலையம், சென்னை - 90.

10. *தமிழ்ச் செவ்வியல் இலக்கியங்கள்,* மூலம் ம.வே. பசுபதி, தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை.

11. *தொல்காப்பியம்,* எழுத்ததிகாரம், கி. இராசா, 2008, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

12. *தொல்காப்பியம்,* சொல்லதிகாரம், கி. இராசா, 2008, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

13. *தொல்காப்பியம்,* பொருளதிகாரம், (இரு தொகுதி) கி. இராசா, 2008, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

14. *நற்றிணை,* மூலம், 1957, மர்ரே எஸ். ராஜம், சென்னை.

15. *நீலகேசி,* விளக்கவுரை, பெருமழைப்புலவர் பொ.வே. சோமசுந்தரனார், 1964, கழகம், நெல்லை.

16. *பத்துப்பாட்டு,* மூலமும் தெளிவுரையும், ச.வே. சுப்பிரமணியன், 2010, மணிவாசகர், சென்னை - 108.

17. *பதிற்றுப்பத்து,* மூலமும் தெளிவுரையும், நாராயண வேலுப்பிள்ளை, 1994, NCBH, சென்னை -98.

18. *பதினெண் கீழ்க்கணக்கு,* 1981, NCBH, சென்னை -98.

19. *பரிபாடல்,* மூலம் 1957, எஸ். ராஜம், சென்னை

20. *புறநானூறு,* மூலம், 1958, எஸ். ராஜம், சென்னை

21. *புறத்திரட்டு,* எஸ். வையாபுரிப்பிள்ளை, 2001, சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை - 5.

22. *பெருங்கதை,* 1968, உ.வே.சாமிநாதையர் நூலகம், சென்னை - 90.

23. *மணிமேகலை,* உ.வே.சாமிநாதையர் உரை, 9ம் பதிப்பு, 2013, உ.வே.சா. நூலகம், சென்னை - 90.

24. *யாப்பருங்கல விருத்தியுரை,* 1998, சென்னை.

**துணைமை நூல்கள்**

1. அம்மன்கிளி முருகதாஸ், *சங்க கவிதையாக்கம் மரபும் மாற்றமும்,* 2006, குமரன் புத்தக இல்லம், கொழும்பு

2. அறவேந்தன், இரா., *பாண்டைத்தமிழர் வாழ்வில் பசிப்பிணி,* 2009, தாயறம், காரைக்குடி.

3. அதியமான், ந., துளசேந்திரன், ஆ., *நிகமம் வணிக வரலாற்றாய்வுகள்,* 2010, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

4. அருணாசலம், மு., ஜெயக்குமார், பா, *தமிழும் உலகச் செம்மொழிகளும்,* முதல் பதிப்பு, 2011, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

5. ஆலால சுந்தரம், ஆர்., *தமிழர் சமூக வாழ்வு,* தமிழில் ம. இளங்கோவன், நிறைச்சுடர் பதிப்பகம், சென்னை - 37.

6. ஆறுமுக சீதாராமன், *சங்க கால காசுகள்,* முதல் பதிப்பு, தனலட்சுமி பதிப்பகம், தஞ்சை.

7. இர்பான் அபீப், *இந்திய வரலாறு குறித்த ஆய்வுரைகள்,* தமிழில் இரா. சிசுபாலன், 2008, NCBH, சென்னை -98.

8. இளங்கோ, க., *பின் நவீனத்துவத்தின் எதிர்காலம்,* 2012, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

9. எங்கெல்ஸ், பிரடெரிக், *குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,* பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

10. கணபதி இளங்கோ, *பண்டைத் தமிழர் வாழ்வியல்,* முதல் பதிப்பு, 2014, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

11. கைலாசபதி, க., *தமிழ் வீரநிலைக்கவிதை,* முதல் பதிப்பு, 2006, (தமிழில் கு.வெ.பா.) 2010, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

12. கைலாசபதி, க., *பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும்,* மறுபதிப்பு, 2010, குமரன் பப்ளிசர்ஸ், சென்னை - 26.

13. கரிகாலன், நை.சி., *பத்துப்பாட்டு ஆய்வுகள்,* 2011, NCBH, சென்னை -98.

14. குழந்தை, புலவர்., *தொல்காப்பியர் காலத்தமிழர்,* முதல் பதிப்பு, 2008, கௌரா ஏஜென்சீஸ், சென்னை - 5.

15. கந்தசாமி, சோ.ந., *இந்தியத் தத்துவக் களஞ்சியம்,* தொகுதி, 2003, மெய்யப்பன் பதிப்பகம், சென்னை - 14.

16. கதிர் மகாதேவன், 1985, *ஒப்பிலக்கிய நோக்கில் சங்க காலம்,* 1985, மூன்றாம் பதிப்பு, மேக்மில்லன், சென்னை.

17. காட்வெல், கிறிஸ்டோபர்., *கானலும் உண்மையும்,* தமிழில் தோதாத்ரி, 2007, NCBH, சென்னை - 98.

18. கோசாம்பி, டி.டி., *பண்டைய இந்தியா,* 1980, NCBH, சென்னை - 98.

19. கோமதிநாயகம், பழ., *தமிழக பாசன வரலாறு*, 2012, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

20. சங்கரன், கி. இரா., *தமிழக வரலாற்றில் நீர் உரிமை*, 2011, NCBH, சென்னை -98.

21. சண்முகலிங்கன், என்., பக்தவத்சல பாரதி, *இலங்கை இந்திய மானுடவியல்*, முதல் பதிப்பு, 2014, NCBH, சென்னை -98.

22. சசிவல்லி, வி.சி., *பண்டைத் தமிழர் தொழில்கள்*, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.

23. சரவணன், சா., நல்லூர், *மாதவ சிவஞான முனிவர் நூற்களஞ்சியம்*, தொகுதி 3, 2010.

24. சதாசிவ பண்டாரத்தார், தி.வை., *பாண்டியர் வரலாறு*, 2013. மூன்றாம் பதிப்பு, பூம்புகார், சென்னை - 108.

25. சீனி வேங்கடசாமி, மயிலை., *பௌத்தமும் தமிழும்*, 2007, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

26. சீனி வேங்கடசாமி, மயிலை., *சமணமும் தமிழும்*, 2008, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

27. சீனி வேங்கடசாமி, மயிலை., *களப்பிரர் ஆட்சியில் தமிழகம்*, 2015, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

28. சீனி வேங்கடசாமி, மயிலை., *சங்க கால வரலாற்றில் சில செய்திகள்*, 2005, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

29. சிவத்தம்பி, கா., *பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் நாடகம்*, 2005, குமரன் புத்தக இல்லம்.

30. சிவத்தம்பி, கா., *பண்டைத் தமிழ்ச் சமூகம் வரலாற்றுப் புரிதலை நோக்கி*, 2010, NCBH, சென்னை - 98.

31. சிவத்தம்பி, கா., *இலக்கணமும் சமூக உறவுகளும்*, 1982, NCBH, சென்னை - 98.

32. சிவத்தம்பி, கா., *தமிழில் இலக்கிய வரலாறு,* 1988, NCBH, சென்னை - 98.

33. சிவத்தம்பி, கா., *தொல்காப்பியமும், கவிதையியலும்,* 2007, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

34. சிவத்தம்பி, கா., *தமிழில் கவிதையியல்,* 2007, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

35. சிவத்தம்பி, கா., *சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும்,* 2009, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.

36. சிவத்தம்பி, கா., *தமிழ்ச் சமூகமும், பண்பாட்டின் மீள் கண்டுபிடிப்பும்,* 1994, NCBH, சென்னை - 98.

37. சிவசுப்பிரமணியன், ஆ., *தமிழகத்தில் அடிமைமுறை,* 2005, காலச்சுவடு,

38. சிவராஜபிள்ளை, கே.என்., *புறநானூற்றின் பழைமை,* 2012, வசந்தா பதிப்பகம்.

39. சிவசுப்பிரமணியன், தி., *தமிழகத் தொல்லியலும் வரலாறும்,* NCBH, சென்னை - 98.

40. சுப்பிரமணியன், கா., *சங்க காலச் சமுதாயம்,* 2008, NCBH, சென்னை - 98.

41. தனிநாயகம் அடிகள், சேவியர், *பண்டைத் தமிழ்ச் சமூகத்தில் கல்வி,* 2009, மாற்று வெளியீடு.

42. திருமலை, ப., செல்வ கோமதி, எஸ்., *தமிழ்நாட்டில் கொத்தடிமைகள், சங்க காலம் முதல் சுமங்கலி திட்டம் வரை,* 2013, சோக்கோ அறக்கட்டளை, மதுரை - 20.

43. துரைசாமி பிள்ளை, சு. ஔவை, *சேரமன்னர் வரலாறு,* 2009, பூம்புகார் பதிப்பகம், சென்னை - 106.

44. துரையரசன், மு., *கல்லணை,* முதல் பதிப்பு, 1994, கீதா பதிப்பகம், சென்னை - 40.

45. துளசிராமன், து., *தமிழகத் தொல்பழங்காலமும் பூண்டி அகழ் வைப்பகமும்,* முதல் பதிப்பு, 2005, தமிழ் நாடு அரசு தொல்லியல் துறை.

46. தெய்வம், இரா., *மூவேந்தர்களின் குடிச்சிறப்புகள்,* 2012, NCBH, சென்னை - 98.

47. தேவி பிரசாத் சட்டோபாத்யாயா, *உலகாயதம்,* 2010, NCBH, சென்னை - 98.

48. தேவி பிரசாத் சட்டோபாத்யாயா, *மதமும் சமூகமும்,* 2009, NCBH, சென்னை - 98.

49. திவிஜேந்திர நாராயண் ஜா., *பண்டைக்கால இந்தியா,* 2011, பாரதி புத்தகாலயம், சென்னை - 18.

50. நடராசன், செந்தீ., *புலைப்பேடி என்றொரு விசித்திர வழக்கம்,* 2012, NCBH, சென்னை - 98.

51. நடராசன், தி.சு., *தமிழகத்தில் வைதீகச் சமயம்,* 2008, NCBH, சென்னை - 98.

52. பத்மாவதி, ஆ., *சைவத்தின் தோற்றம்,* 2002, குமரன் புத்தக இல்லம், வடபழனி, சென்னை - 26.

53. பழனியப்பன், ஆ., *பழந்தமிழ் இலக்கியம் ஓர் ஆய்வு,* 2001, NCBH, சென்னை - 98.

54. பார்த்தசாரதி, ஆர்., *சிந்தனைக் களஞ்சியம்,* 2010, NCBH, சென்னை - 98.

55. பார்த்தசாரதி, ஆர்., *உலகாயதம்,* 2008, NCBH, சென்னை - 98.

56. பார்த்தசாரதி, ஆர்., *சமணம்,* 2009, NCBH, சென்னை - 98.

57. பாண்டுரங்கன், அ., *தொகையியல்,* 2008, தமிழரங்கம், லாசுபேட்டை புதுச்சேரி.

58. பேரின்பன், தேவ., *தமிழும் சமக்கிருதமும்,* 2013, பாண்டிய நாட்டு வரலாற்று ஆய்வு மையம், மதுரை - 10.

59. பேரின்பன், தேவ., *தமிழர் தத்துவம்,* 2006, NCBH, சென்னை - 98.

60. பேரின்பன், தேவ., *தமிழர் தத்துவத்தின் தோற்றமும் வளர்ச்சியும்,* செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்துக்கு அளிக்கப்பட்ட ஆய்வேடு, 2013.

61. பக்தவத்சல பாரதி, *தமிழர் மானுடவியல்*, மெய்யப்பன் தமிழாய்வகம், 2002, சிதம்பரம்.

62. பாக்யமேரி, எஃப்,, *வகைமை நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு*, முதல் பதிப்பு, 2014, பூவேந்தன் பதிப்பகம், சென்னை - 4.

63. பாக்யமேரி, எஃப்,, *தமிழின் செம்மொழிப் பண்புகள்*, 2012, அஞ்சனச்சிமிழ் பதிப்பகம், சென்னை - 4.

64. பிரபாத் பட்நாயக், *உலகமயமாக்கலின் சகாப்தத்தில் தேசிய அரசுகள்*, முதல் பதிப்பு, சவுத் விசன், சென்னை - 4.

65. பூங்குன்றன், ர., *தொல்குடி வேளிர் அரசியல்*, 2001, முதல் பதிப்பு, புது மலர் பதிப்பகம், கோவை - 45.

66. மனோன்மணி சண்முகதாஸ், *சங்க காலத் திருமண நடைமுறைகள்*, 2007, குமரன் புத்தக இல்லம், கொழும்பு.

67. மாதையன், பெ., *சங்க கால இனக்குழுச் சமுதாயமும் அரசு உருவாக்கமும்*, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

68. மாதையன், பெ., *சங்க இலக்கியத்தில் குடும்பம்*, முதல் பதிப்பு, 2010, NCBH, சென்னை - 98.

69. மாதையன், பெ., *சங்க இலக்கியத்தில் வேளாண் சமுதாயம்*, இரண்டாம் பதிப்பு, 2010, NCBH, சென்னை - 98.

70. மாதையன், பெ., *அகத்திணைக் கோட்பாடும், சங்க அகக்கவிதை மரபும்*, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

71. மாதையன், பெ., *தமிழ்ச்செவ்வியல் படைப்புகள் கவிதையியல் சமுதாயவியல் நோக்கு*, 2009, NCBH, சென்னை - 98.

72. மாணிக்கம், வ.சுப., *தமிழ்க்காதல்*, 2009, இந்து பப்ளிகேஷன்ஸ், தி. நகர், சென்னை - 17.

73. மீனாட்சி சுந்தரம், கா., *தமிழின் செம்மொழித் தன்மையும் உலக இலக்கியங்களும்*, 2010, NCBH, சென்னை - 98.

74. மார்க்ஸ், கார்ல்., *மூலதனம்*, தமிழில் தியாகு, 2005, NCBH, சென்னை - 98.

75. முத்தையா, கே., *சங்க காலச் சமுதாயம்*, 2014, பாரதி புத்தகாலயம், சென்னை - 18.

76. முத்துவேலு, மு., *இலக்கியங்களில் சட்டநெறிகள்*, 2008, அருள் பதிப்பகம், சென்னை - 78.

77. இராகவையங்கார், மு., *வேளிர் வரலாறு*, 2004, முல்லை நிலையம், தி. நகர், சென்னை - 17.

78. இராமசாமி, அ., *தொன்மைத்தமிழர் நாகரிக வரலாறு*, முதல் பதிப்பு, 2013, தமிழினி, சென்னை.

79. ராஜன், கா., *தொல்லியல் நோக்கில் சங்க காலம்*, இரண்டாம் பதிப்பு, 2004, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.

80. ராம் சரண் சர்மா, *பழங்கால இந்தியாவில் அரசியல் கொள்கைகள் நிலையங்கள் சில தோற்றங்கள்*, இரண்டாம் பதிப்பு, 2010, தமிழில் சோமலே, NCBH, சென்னை - 98.

81. இராசமாணிக்கனார், மா., *பல்லவர் வரலாறு*, 2013, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.

82. வரதராசன், மு., *பழந்தமிழிலக்கியத்தில் இயற்கை*, இரண்டாம் பதிப்பு, 2006, பாரி நிலையம், பிராட்வே, சென்னை - 108.

83. விஜயலட்சுமி, ர., *தமிழகத்தில் ஆசீவகர்கள்*, 1988, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113.

84. வானமாமலை, நா., *இந்தியத் தத்துவ மரபும் மார்க்சிய இயக்கவியலும்*, கலைகள் வெளியீடு, சென்னை - 24.

85. வேல்சாமி, போ., மார்க்ஸ், அ., *தமிழ் இலக்கிய பாரம்பரியத்தில் சாதி எதிர்ப்புக்குரல்*, 2015, NCBH, சென்னை - 98.

**ஆங்கில நூல்கள்**

1. Caudwall, Christopher., *Illusion and Reality,* 2005, Peoples publishing house, New Delhi.

2. Caudwall, Christopher., *Dying Culture,* 2005, Peoples publishing house, New Delhi.

3. Caudwall, Christopher., *Further Studies in Dying Culture,* 2005, Peoples publishing house, New Delhi.

4. Champakalakshmi, R., *Trade, Ideology and Urbanisation in South India, 300 B.C. to AD 1300,* 1999, Oxford.

5. Debiprasad Chattopathyaya, *What is Living and What is Dead in Indian Philosophy,* 1980, P.P.H., New Delhi.

6. Hart, L. George., *The Poems of Ancient Tamils,* 2000. Mc. Millan.

7. Debiprasad Chattopadhyaya, (Ed.) Sec. of the Budhist, T.W. Rhys Davids, *Studies in history of Indian Philosophy,*

7. Irfan Habib, Introduction: *Marx's Perception of India,* in F. Iqbal Hussian (ed), *Karl Marx on India,* Tulika.

8. Kuppuram, G., *Evolution of Industries and Industrialisation in Primordial Tamilnadu,* I Edition, 1981, Dr. G. Kuppuram, Trichy.

9. Saki, "Making History" Karnatakas peoles and their past, Second Part, 1998, Vimukthi Prakshana, Bangalore.

10. Thapar, Romila, *From Lineage to State,* 1984, Oxford University, New Delhi.

**அகராதிகள்**

1. இராமநாதன், பி., *இருபதாம் நூற்றாண்டு தமிழ்ப் பெயரகராதி,* தென்னக ஆய்வு மையம், 1980, சென்னை - 2.
2. இராசா, கி., *புறநானூற்று அகராதி,* 2009, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 14.
3. மாதையன், பெ., *சங்க இலக்கியச் சொல்லடைவு,* 2007, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

**இதழ்கள்**

வானமாமலை. நா., *ஆராய்ச்சி,* நெல்லை ஆய்வுக்குழு.
பேரின்பன், தேவ., *சமூக விஞ்ஞானம்,* தென்னக ஆய்வு மையம்,
இராசுகுமார், மே. து., நாவாவின் ஆராய்ச்சி, மக்கள் வெளியீடு,
சீனிவாசன், இரா., *புதிய பனுவல்,* சென்னை.
பாண்டியன், தா., *ஜனசக்தி நாளிதழ்,* சென்னை.
*ஆவணம்,* தொல்லியல் துறை வெளியீடு.

- - - - - -

## வேள்விக்குடி செப்பேடு

**கொல்யானை பலவோட்டிக் கூடாமன்னர் குழாந் தவிர்த்த**
**பல்யாக முதுகுடுமிப் பெருவழுதி யெனும்**
**பாண்டியாதி ராசனால்**
**நாகமா மலர்ச் சோலை நளிர்சினை மிசை வண்டலம்பும்**
**பாகனூர்க் கூற்றமெனும் பழனக் கிடக்கை நீர்நாட்டுச்**
**சொற்கணாளர் சொலப்பட்ட கருதிமார்க்கம் பிழையாத**
**கொற்கை கிழா னற்கொற்றன்**
**கொண்ட வேள்வி முற்றுவிக்கக்**
**கேள்வயந்த தணாளர் முன்பு கேட்கவென் றெடுத்துரைத்து**
**வேள்விச் சாலை முன்பு நின்று**

**வேள்விக்குடியென் றப்பதியைச்**
**சீரொடு திருவளரச் செய்தார் வேந்த னப்பொழுதே**
**நீரோடட்டிக் கொடுத்தமையா னீடுபுக்தி துய்த்தபின்**
**அளவரிய ஆதிராசரை யகலநீக்கி யகலிடத்தைக்**
**களப்பரனெனுங் கலியரைசன்**
**கைக்கொண்ட தனை யிறக்கியபின்**

**படுகடன் முளைத்த பருதிபோற்**
**பாண்டியாதிராசன் வெளிப்பட்டு**
**விடுகதி ரவிரொளி விலக வீற்றிருந்து**
**வேலைசூழ்ந்த வியலிடத்துக்**
**கோவுங் குறும்பும் பாவுடன் முருக்கிச்**
**செங்கோ லோச்சி வெண்குடை நீழற்**
**றங்கொளி நிறைந்த தரணி மங்கையைப்**
**பிறர்பாலுரிமை திறவிதினீக்கித் தன்பாலுரிமை நன்கன மமைத்த**

---

நெடுஞ்சுடையன் பராந்தகன் வேள்விக்குடிச் செப்பேடு, பதிப்பு நிலை, சதாசவிப் பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, பக்கம் 167-171, (134 வரிகள் கொண்ட செப்பேட்டில் முதல் 32 வரிகள் இங்கு இடம் பெற்றுள்ளன.

மானம் போர்த்த தானை வேந்தன்
ஒடுங்கா மன்ன ரொளிநக ரழித்த
கடுங்கோ னென்னுங் கதிர்வேற் றென்னன்
மற்றதற்கு மகனாகி மகீதலம் பொதுநீக்கி
மலர்மங்கையொடு மனையர்ந்த
அற்றமில் அடர்வேற் பரவைத்தானை யாதிராச னவனிசூளாமணி
எத்திறத்து மிகலழிக்கு மத்தயானை மாறவர்மன்

# பாண்டியர் செப்பேடு

"அங்கொருநாள் மாடமதிற் கூடற்பாடு நின்றவர் ஆகிரோதிக்கக், கொற்றனேய் மற்றவரைத் தெற்றென நன்குகூவி, என்னேய் நுங்குறை, என்று முன்னாகப் பணித்தருள, மேனாணின் குரவராற் பான்முறையின் வழுவாமை, மாகந்தோய் மலர்ச்சோலைப் பாகனூர்க் கூற்றத்துப் படுவது ஆள்வதானை, அடல்வேந்தேய். வேள்விக்குடி யெனும் பியர்உடையது. ஒல்காத வேற்றானை ஓடாதவேலி உடன்காத்த பல்யாக முதுகுடுமிப் பெருவழுதியென்னும் பரமேச்வரனால் வேள்விக்குடி என்னபப்பட்டது. கேள்வியிற்றப்பட்டதனை துளக்கமில்லாக் கடற்றானை யாய் களப்ர ராலிறக்கப் பட்டதென்று நின்றவன் வஞ்ஞாபஞ் செய்ய... நன்று நன்று என்று முறுவலித்து, நாட்டானின் பழமையாதல் காட்டி, நீ கொள்கவென்ன, நாட்டான் தான் பழமையாதல் காட்டினான் அங்கு அப்பொழுதேகாட்ட மேனாள் எம்குரவரால் பான்முறையால் தரப்பட்டதை எம்மாலும் தரப்பட்டதென்று.."

\- - - - -

பாண்டியர் செப்பேடு பத்து, தமிழ் வரலாற்றுக் கழக வெளியீடு, 1969.